A. E. Arumugam

உ

கணபதி துணை.

சுப்பிரமணியக்கடவுள் வரப்பிரசாதியாகிய

காஞ்சீபுரம்

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்

அருளிச்செய்த

# கந்தபுராணம்

## அசுரகாண்டம்

# மார்க்கண்டேயப்படலம்

மூலமும்,

---

யாழ்ப்பாணத்துச் சாவகச்சேரி

உபாத்தியாயர்

ச. பொன்னம்பலப்பிள்ளை அவர்கள்

இயற்றிய விரிவுரையும்.

---

இவை

வித்தியாபிமானச்செல்வராகிய

கொழும்பு புறேக்கர்

ம. ள. ள. ஸ்ரீ. வே. சங்கரப்பிள்ளை அவர்கள்

பெரும்பொருளுதவியால்

யாழ்ப்பாணம்

"நாவலர்" அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

---

வித்,

இதன்விலை ரூபா-௧வ.

கீலக ௵ வைகாசி மீ.

---

1908

உரையாசிரியர் குரவர்கள் மூவருளொருவராகிய
யாழ்ப்பாணத்து ஆவரங்கால்
உபாத்தியாயர்
ம. ர. ர. ஸ்ரீ. சி. வைத்தியலிங்கமவர்கள்
இயற்றியது
அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சிவம்பூத்த காந்தமெனுங் காதைதன்னுண் மார்க்கண்டச் சிறுவன்காதை
பவம்பூத்த நெறிகெடுக்குங் காலனைவெல் முறைகாட்டும் பத்திவாய்ந்த
தவம்பூத்த வழிகொடுக்கு மதற்கிணையொன்றில்லையென்று தரணியோர்க்காய்
நவம்பூத்த வுரையெழுதித் தானெழுதாவெழுத்த தனிநாட்டியிட்டான்.

சங்கரவேள் பண்டியற்று மிகுதவத்தின் பயனாகத்தரணி தன்னி
லங்குரித்தோன் சிவனடியை யநுதினமுமறவாத வன்பு பூண்டோன்
பொங்குதமிழ் நூல் பலவுமையமறக் கற்றுணர்ந்து பொருவின் ஞானந்
தங்குபொன்னம் பலப்பிள்ளையெனுமியற்பேர் தரித்திடுநற் றலைமையோனே

---

யாழ்ப்பாணத்து நீர்வேலி
ம. ர. ர. ஸ்ரீ, சங். சிவப்பிரகாசபண்டிதரவர்கள்
இயற்றியது
வெண்பா.

மன்னம் புகழ்க்காந்த மார்க்கண்டே யப்படலம்
பொன்னம் பலப்புலவர் புத்துரையை—மின்னும்பார்
மெச்சிநனி யுச்சிகொள மெய்யருளைச் செய்குவர்வேற்
கைச்சிவகு மாரசண்மு கர்.

---

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்
ம. ர. ர. ஸ்ரீ. அ. குமாரசுவாமிப்புலவரவர்கள்
இயற்றியது
அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பத்தியொடு படிப்பவர்க்குங் கேட்பவர்க்கு மிம்மையொடு பரமானந்த
முத்திதருங் கந்தபுரா ணத்தினிடை மார்க்கண்ட முனிவர் கோமான்
உத்தமமாங் காதைசொலும் படலத்தி னுறுங்கவிக ளொருங்கு நாடி
வித்தகமா மிலக்கணத்தி னருவிதியு மேற்கோளும் விளங்கக் காட்டி.

பாவலர்கள் கொண்டாடக் கற்பவர்கள் கற்றெளிதிற் பயன்கள் சேர
மேவரிய மூதுரைபோன் றுயர்வுபெற வுரையொன்று விளங்கச்செய்தான்

யாவனெனிற் கூறுதும்யாழ்ப் பாணமுறுங் குணதிசையி னிலங்கு கின்ற
சாவகநற் சேரிவரு சங்கரவே டவமுயன்று தந்த பாலன். [பூண்டோன்
நன்னெறியிற் செலுங்குணத்தோ னுவலர்க்கும் பாவலர்க்கு நண்பு
தொன்னெறிசே ரிலக்கணமு மிலக்கியமு மாணவர்க்குச் சொல்லு மாசான்
பன்னெறிசேர் கவியியற்றும் பண்புடையோன் சிவசமய பத்தி யுள்ளோன்
புன்னெறிக ணிராகரிக்குஞ் செயற்பொன்னம் பலவனெனும் புலவன்
[மாதோ.

---

மஹாவித்துவான்

## சேனாதிராய முதலியாரவர்கள்

## வழித்தோன்றலும்

யாழ்ப்பாணத்துக்கந்தரோடைவாசருமாகிய

தென்கோவை

## ம.ள.ள.ஸ்ரீ. ச. கந்தையபிள்ளையவர்கள்

## இயற்றியது.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பூமேவுந் தமிழ்நாட்டிற் புலவரெலாம் பெரிதுவந்து புகழ்ந்து போற்றத்
தேமேவும் வடமொழியிற் காந்தபுரா ணக்கட லுட் சிறப்புற்றோங்கும்
நாமேவுஞ் சுடர்வடிவேற் கரப்பெருமான் றிருக்கதையை நயபபான் மிக்க
பாமேவுஞ் செந்தமிழிற் கச்சியப்ப வேதியர்கோன் பகர்ந்தா னன்றே.

அன்னபெருங் காப்பியத்துட் சிவனடியை யருச்சனைசெய் தன்ப னுகித்
துன்னிய கூற் றினைக்கடந்த மார்க்கண்ட முனிவர்செயல் சொல்லுங் கா. . .
மன்னியுறு படலமதற் குரையொன்று விருத்திநலம் வாய்ப்பச் செய்தான்
நன்னர்வளம் பலநிறைந்து பொலிந்துளசா வகச்சேரி நகரவாசன்

உலகுபுக ழாறுமுக நாவலற்கு நன்மருகா யுயர்ந்தோர் கொள்ளும்
புலமைநிறை தருபொன்னம் பலப்பிள்ளை முதலாய புலவர் தம்பாற்
பலவகைய விலக்கணமு மிலக்கியமு மரபினொடு பயின்ற தீரன்
நிலவுலவுஞ் சடைமுடியோ னின்மலஞ்சே ரடியிணைக ணினையு நீரன்.

மன்னுபுகழ்ச் சங்கரவே ளருந்தவத்தில் வருந்தநயன் வாய்மை நன்றி
உன்னுபொறை யொடுமோன முதலாய பெருங் குணங்க ளுற்ற சீலன்
தன்னனைய சிவசமய நெறிவளர்த்து மாணவர்க்குந் தக்க நூல்கள்
பன்னுபொன்னம் பலநாமன் பலர்க்குமுப யோகமுறும் பண்பு தேர்ந்தே.

யாழ்ப்பாணத்துப் புலோலி
கோவிந்தபிள்ளையெனவழங்கும்

## ம.ள.ள.ஸ்ரீ. வ. குமாரசுவாமிப்புலவரவர்கள்

இயற்றியது

### கட்டளைக் கலித்துறை.

கரும்பெனத் தேனெனச் செந்தமிழ் வாணியிற் கச்சியப்பப்
பெருங்கவி ஞன்புரி கந்த புராணப் பிரிவினுட்சீர்
தருந்தரு மத்தையல் பண்புஞ் சிவனடி சார்ந்தபத்தி
விரும்பிய மார்க்கண்ட னுய்ந்ததுந் தண்டகன் வீந்ததுமே.

ஆதிய பல்லற் புதசரி தங்க ளடக்கியினி
தோதிய மார்க்கண்ட நற்பட லத்தை யுணரவல்ல
போதிய விற்பத்தி யில்லாருந் தேரப் புதியவுரை
நீதியல் பற்றிட மேற்கோள் பலவுடன் செய்தவனே.

பூவகச் சேரிந் திரைவணி தங்கும் பொலிவுடனே
காவகச் சேரிள மாவும் பலாவுங் கனியுதிர்க்குஞ்
சாவகச் சேரியிற் சங்கரப் பிள்ளை தவத்துதித்து
நாவகச் சேரினி தீந்தமிழ் தேர நயந்துகொண்டே.

பந்துவில் வாசன் வயித்திய லிங்க மகாநிபுணன்
நந்தலி லாவுரை யாசிரி யபெயர் நண்ணியசீர்
வந்திரு மட்டுவில் வேற்பிள்ளை யாரு மதித்தநல்லைச்
செந்தமிழ்ச் சிந்துபொன் னம்பல வித்வ சிரோமணியே.

என்னுமிம் மூவ ரிடத்திலுங் கற்றறிந் தெய்திய வூர்
தன்ன தெனத்தகுஞ் சாவகச் சேரியிற் சைவமுறை
மன்னுங் களகத்து மூவைந்து வற்சரம் வண்டமிழைப்
பன்னுந் தலைமையு பாத்தியா யத்தொழில் பாங்கினுய்த்தே.

தென்னிந் தியாவிற் சிலவாண் டிருந்து சிவபெருமான்
மன்னுந் தலங்கள் வழிபட்டுப் பத்தி வளர்மனத்தோன்
பொன்னம் பலப்பெயர் விற்பனன் செய்தனன் போற்றுமுறை
வன்னம் பதிக்கு முபகாரி நாமமும் வந்திடுமே.

### நேரிசை வெண்பா.

நீரார் கொழும்பு நிதிநகரி னிற்புரேக்கர்
சீரார் தமிழ்மானச் செல்வனும்—பேரார் நற்
சங்கரப் பிள்ளை தருமுபகா ரப்பொருளால்
இங் கச்சி லிட்டா னிது.

---

யாழ்ப்பாணம் நாவலர் கோட்டம்

## ம.ா.ா.ஸ்ரீ. ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையவர்கள்

இயற்றியது

### வெண்பா.

மன்னுமார்க் கண்டேய மாபடல மாய்ந்துரைசெய்
தின்னமுத மென்ன வினிதளித்தான்—பன்னுமெழிற்
பொன்னம் பலவன் பொருந்து பலகலையுந்
துன்னும் புலவனெனச் சொல்.

---

சைவோதயபானுப் பத்திராதிபரும்
யாழ்ப்பாணத் தமிழ்ச்சங்கப் புலவருளொருவரும்
சுத்தாத்துவித சித்தாந்தசரபமுமாகிய
யாழ்ப்பாணத்து நல்லூர்

## ம. ா. ா. ஸ்ரீ. சு. சரவணமுத்துப்புலவரவர்கள்

இயற்றியது

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பரந்துதிரி யுளத்தையரன் பதத்தே மாறுப்
பரிவினொடு சேர்த்திவிடா திருப்போர் தேசு
கரந்துவரு மறலிவலி கடப்பரென்று
காட்டுமொர்க் கண்டகதை பொருவில் காந்த
விரிந்தபுரா ணத்துளொடுத் துரைசெய் தான்சீர்
விளங்கிசொ வகச்சேரி வாழு மேலோன்
தெரிந்தபல கலையறிவு கொண்டே யாய்ந்து
தெளிந்தபொன்னம் பலப்பிள்ளைத் தகைமை யோனே.

---

# உரைப்பாயிரம்.

—:o:—

"தவஞ்செயவார் தங்கருமஞ்செய்வார் மற்றல்லா ரவஞ்செய்வாராசையுட்பட்டு" என்ற தேவர்வாக்கின்படி நாமெல்லாந் தவந்தானே யின்றியமையாததொன்றென்பதை நன்குணர்ந்து, அநித்தியமான வுடம்பின்பொருட்டுச் செய்யும் வீண்செயல்களிலே முழுதும் பொழுதுபோக்காமல், நித்தியமான வுயிரின்பொருட்டுச் செய்யுந் தவத்தையே கைக்கொண்டனுட்டிக்கவேண்டுமென்பதனையும், அதற்குமிப்படலமானது நினைவுகூரச் செய்வதற்கோரேதுவாக வுள்ளதென்பதனையும், "கூற்றன், மார்க்கண்டன் மாக்கதைபன்னினார் முன்னமும் படர்தற்கஞ்சுமால்" யமன் மார்க்கண்டேயர் புராணத்தைப் படிப்பவர்களது முன்னிலையிற்றானும் போவதற்குப் பயங்கரமடைவானென விப்படலத்திற் கூறியவண்ணம், பொருணடைப் பயிற்சியில்லாதோரும் வாசித்திதனுண்மையை யுணர்ந்தியமவேதனையிற் றப்பி யுய்ந்துகொள்ளவேண்டுமென்பதனையும், ஒவ்வொருவர் வீட்டினு மொவ்வொரு தினத்திலுந் தப்பாமல் வாசித்துவரின் அதனால் பலவகைத்தாய தீமைகணீங்கிப் பெருநன்மைகள் விளையுமென்பதனையுங் கருதி நாம் இப்படலத்திற்கு இவ்வுரையை யெழுதித்தந்தாம்.

"குணநாடிக் குற்றமுநாடியவற்றுண் —மிகைநாடி மிக்ககொளல்" எனவும், "குற்றங்களைந்து குணங்களைந்தொழுகல்—கற்றவர்கடனெனக் கழறிடுமுலகே" எனவும் வருமான்றோர்வாக்குப்போல அறிவாற்றல்படைத்த கல்விமான்களான தக்கோர்கள் குற்றமாகவுள்ளவற்றையுங் குணமாகக்கொண்டு பாராட்டிக்கொள்வர்.

சா. ச. போ.

---

## உரையாசிரியர் குரவவணக்கம்.

### கட்டளைக் கலித்துறை.

நவ்வியபோதன் வயித்தியலிங்கநவில்குரவ
னவ்வியமற்றருளறருவேறபிள்ளையாசிரியன்
செவ்வியபொன்னம்பலப்பிள்ளைவித்வசிரோமணியித்
திவ்வியமுலருமோவாதநாளுமென்சிந்தையரே.

---

# மார்க்கண்டேயப்படலம்.

---

வடமேரு பருவதச்சாரலிற் றவம்புரிந்துகொண்டிருந்த காசிபமுனிவரிடத்தில், காலநேமியென்னும் பழைய அவுணன்மகளான மாயவளென வழங்குஞ் சுரசையென்பவள் சென்று, தெய்வேந்திரன்முதலான தேவர்கள் யாவரையுமேவல்கொண்டு சகலவுலகங்களையு மேகசக்கரத்தின்கீழ் வைத்தரசாளத்தக்க பராக்கிரமசாலிகளான புத்திரரைப் பெறவேண்டுமென்றுகருதி முனிவரைக் காமத்தால் வருந்தச்செய்து தன்வசப்படுத்தி யொருராத்திரியிலவருடன் கலவிசெய்தனள். அவ்வேளையில் முதற்சாமத்திலே சூரபன்மனும், இரண்டாஞ்சாமத்திலே சிங்கமுகாசுரனும், மூன்றாஞ்சாமத்திலே தாரகாசுரனும்,நான்காஞ்சாமத்திலே யசமுகியுமாகநான்குபிள்ளைகளுற்பவித்தார்கள். அங்ஙனமுற்பவித்த சூரபன்மன் முதலான பிள்ளைகள் காசிபமுனிவரை நமஸ்காரஞ்செய்து, பிதாவே! நாங்கள் செய்யத்தக்கது யாதோவென்று வினவாநிற்ப, முனிவர்பெருமான் புதல்வர்களைநோக்கி பிள்ளைகாள்! நீங்கள் செய்யத்தக்கது தவமேயாகும், மற்றவெல்லாமவமேயாகும், உடம்பைவருத்தித் தவம்புரிவோர் உலகம்முழுதுந் தம்மைவியக்கமேலாகிய, பேரின்பத்தைப் பெற்றிருப்பார்களென்றிங்ஙனமுபதேசித்து அதற்குச்சான்றான திருட்டாந்தமாகவெடுத்துக் காட்டினமையேயிப்படலமாகும்.

இப்படலத்தில், இறந்தபெண்ணையுயிர்பெற்றெழச்செய்து யானையாகப்பிறந்திருந்த தருமதத்தனென்னும் வைசியனைத்தேவனாக்கிச் சொர்க்கப்புகச்செய்த குச்சகமுனிவரின்தபோமகிமையும் பிரமவிட்டுணுக்காளாற் புகழப்பட்டமேன்மைத் தன்மையைப்பெற்ற கவுச்சகமுனிவரின்தபோமகிமையும், சீவன்முத்திநிலையையடைந்த மார்க்கண்டேயரென்னும் புதல்வரைப்பெற்ற மிருகண்டுமுனிவரின்தபோமகிமையும், யமனைவென்று இறக்கச்செய்து பதினாறுவயசின் மரணமென்ற ஊழ்வினையைக்கடந்து என்றும் பதினாறுவயசாகவிருக்கும் அமரத்வத்தைப்பெற்ற மார்க்கண்டேயமுனீந்திரரின்தபோமகிமையுமெடுத்துக் காட்டியுபதேசித்தமையுமமைந்திருக்கின்றன

சா. ச. போ

பரமபதி துணை.

# கந்தபுராணம்.

## அசுரகாண்டம்.

### மார்க்கண்டேயப்படலம்.

நச்சகவமிர்தமன்னநங்கையர்நாட்டவைவே
றைச்சகமயக்கல்செய்யாத்தடுப்பருந்தவத்தின்மிக்கா
னிச்சகம்புகழுகின்றவிருபிறப்பாளர்கோமான்
குச்சகனென்னும்பேரோன்கொடிமதிற்கடகம்வாழ்வோன்.

(இதன்பொருள்) நங்கையர்—பெண்களது, நஞ்சு அகம் அமிர்தம் அன்ன—நஞ்சைஅகத்தே கொண்ட அமிர்தத்தையொத்த, நாட்டம்வைவேல் தைத்து—கண்களாகிய கூரியவேற்படை தைத்து, அகம்மயக்கல்செய்யா—தமதுமனத்தைமயக்குதலைச்செய்து, தடுப்பு அரும் தவத்தில்மிக்கான்—தடுப்பதற்கருமையான தவவொழுக்கத்தில் சிறந்தவரும், இச்சகம்புகழுகின்ற இருபிறப்பாளர்கோமான்—இந்த உலகத்தவர்கள் துதிக்கின்ற அந்தணர்களுக்குத் தலைவரும், குச்சகன் என்னும் பேரோன்—குச்சகனென்னும் பெயரையுடையவரும், கொடிமதில்கடகம்வாழ்வோன்—கொடிகள் கட்டப்பட்டமதில்கள் சூழ்ந்த கடகமென்னும் பட்டினத்திலிருப்பவருமாகிய (ஒருவருளர்) என்றவாறு.

முடிக்குஞ் சொல்வருவிக்கப்பட்டது. கருவிழிநஞ்சையும் சுற்றிலுமுள்ளவெள்விழி அமிர்தத்தையுமொத்திருத்தலின், நஞ்சகவமிர்தமன்னநாட்டமென்றார். நைடதத்தில், "அமிழ்தினின் விளைத்துள் நஞ்சினிற்க[illegible]" என்றதும், சிந்தாமணியில், "கருமணியம்பாலகத்துப் பதித்தன்னபடியவாய்" என்றதும் இதுபற்றியென்க. பொதுநோக்காற்றுன்பத்தையும் புணர்ச்சிநோக்காலின்பத்தையும் செய்தலின் நஞ்சையுமமிர்தத்தையு முவ

மித்தாரெனினுமொக்கும். இப் பொருளாதலை, "இருநோக்கிவளுண்கணுள்ள தொருநோக்கு—நோய்நோக்கொன்றந்நோய் மருந்து" என்னுந் திருக்குறளானும், "பிணியுமதற்கு மருந்தும் பிறழப் பிறழ மின்னும்—பணியும் புரைமருங்கிற் பெருந்தோளிபடைக்கண்களே." என்னும் திருக்கோவையாரானுமுணர்க. இனி நச்சகமெனநின்றாங்குவைத்து, ஆடவரைவிரும்புகின்ற உள்ளமெனப் பொருள்கொள்ளினுமாம். இவ்வறத்தின்வழிநின்று புத்திரப்பேற்றின்பொருட்டுத் தன்மனைவியைச் சேர்வதன்றி இச்சைவயத்தராய் நெறிகடந்து பரஸ்திரீகமனஞ்செய்யாத பெருந்தவமுடையரென்பார், நங்கையர் நாட்டவைவேல் தைத் தகமயக்கல் செய்யாத் தடப்பருந் தவத்தின்மிக்கான் என்றார்.

அடிநோக்கி, நஞ்சு, என்னும் மென்றொடர்க் குற்றுகரம், நச்சு, என வன்றொடராயும், தைத்து, என்பது தைச்சு எனப் போலியாயும் நின்றன. சகம்—ஆகுபெயர். ஆடவர்மார்பிற்றைக்குங் கண்ணாகலின். நாட்டவேலெனப்பட்டது. செய்யா, என்னும் ஆகாரவீற்றுடன்பாட்டெச்சம், தப, என்பதனோடுமுடிந்தது. செய்யாத, என ஈறுகெட்டபெயரெச்சமாக்கித் தவத்தோடுமுடிப்பினுமாம். இருபிறப்பாளர்—துவிசத்துவமுடையவர். குத்ஸன்-என்னும் வடமொழி தமிழில் குச்சகனெனத்திரிந்தது. நிறத்தையுவமித்தமையின் பண்புவமையணியும், தொழிலையுவமித்தமையின் தொழிலுவமையணியும், நஞ்சையகத்துக்கொண்ட அமிர்தெனவுவமித்தமையின் இல்பொருளுவமையணியும், நாட்டவேல் என்றமையின் உருவகவணியும், பற்றிவந்த சங்கீரணவணி. இதுமுதற் பதினைந்துசெய்யுட்கள் ஈரசையான்வந்த அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (க)

**அவற்கொருபுதல்வனுண்டாலருமறைபயின்றநாவான்**
**கவுச்சகனென்னும்பேரோன்கரையொருசிறிதுங்காணாப்**
**பவக்கடல்கடக்குமாற்றாற்பராபரமுதல்வற்போற்றித்**
**தவத்தினையிழைப்பவாங்கோர்தண்புனற்றடாகஞ்சார்ந்தான்.**

(இ-ள்) அவற்கு ஒரு புதல்வன் உண்டு—அக்குச்சகமுனிவருக்கு ஒரு புத்திரருளர், கவுச்சகன் என்னும்பேரோர்—கவுச்சகரென்னும்நாமதேயத்தையுடையவர், அருமறை பயின்ற நாவான்—(அவர்) கற்றற் கருமையான வேதங்களைப்பழகிய நாவையுடையவராய், ஒருசிறிதும் கரைகாணா பவம் கடல் கடக்கும் ஆறு—ஒருசற்றும் கரைதெரியாத பிறவிக்கடலை நீந்தும்பொருட்டு, பராபரமுதல்வன் போற்றி தவத்தினை இழைப்ப—முன்னுள்ளபொருளுக்கெல்லாம் முன்னுள்ளபொருளாகிய சிவபெருமானை வணங்கித் தவஞ்செய்ய நினைந்து, ஆங்கு ஓர் தண்புனல்தடாகம் சார்ந்தான்—அவ்விடத்துள்ள ஒரு குளிர்ந்த நீரையுடைய தடாகத்தையடைந்தார். (எ-று)

ஆல் இரண்டுமசை. ஆற்றுலென்பதிலை எதுப்பொருட் டாக்கினு மமையும். றகரம் இரட்டித்தல். பெயரெச்சத்திறுகெட்டது. ஙாவான், முற்றெச்சம். பராபரன் என்பதற்குச் சுத்தமாயாதீதன் என்பினுமாம். பக்குவப்படுந்துணையும் வினைக்கீடாக எண்பத்து நான்குநூறாயிர யோனிபேதங்கடோறும் மாறிமாறிப்பிறக்கும் பிறப்பாகலின், பிறவியைக்கரைகாணுக் கடலென்றும், முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானது திருவடிகளையடைந்தார்க்கன்றி யேனையோர்க்கு அக்கடலை நீந்தல் கூடாதாகலின், பவக்கடல்கடக்குமாறு பராபரமுதல்வற்போற்றித் தவத்தினையிழைப்பவென்றும் கூறினூர். இதனை, "பிறவிப்பெருங்கடனீந்துவர் நீந்தா—ரிறைவனடிசேராதார்." என்னுந் திருக்குறளானுமறிக. கடக்குமாறுபோற்றி இழைப்ப சார்ந்தானென்றியையும். குத்ஸ நென்மகனென்னும்பொருளுடைய கௌத்ஸகன், வடமொழித் தத்திதாந்தப்பெயர். தமிழில் கவுச்சகன் எனத்திரிந்தது. இதனை "குச்சகனளித்தருள் கௌச்சகனென்னுமே, ருற்றிடு புகழ்ச்சுத னருந்தவமியற்றற்குன்னி" என்னுங்கந்தபுராணச் சுருக்கத்தானுமுணர்க. கவுச்சிகனென்பதும் பாடம். பவக்கடல் என்றமையின் உருவகவணி. (உ)

அத்தலையொருசாரெய்தியானினந்தீண்டுகுற்றி
யொத்தெனவசைதலின்றியுயிர்ப்பொரீஇயுலகமெல்லாம்
பித்தெனவுன்னிமாயாப்பேரின்பவளக்கர்மூழ்கி
நித்தனையெழுத்துமன்னுனிலைமையுநினைந்துநோற்றுன்,

(இ-ள்.) அ தலை ஒருசார் எய்தி—அத்தடாகத்தினொருபக்கத்தையடைந்து, உலகம் எல்லாம் பித்து என உன்னி—பிரபஞ்சம் முழுதும் மாயாகாரியமென்று நினைந்து, ஆன் இனம் தீண்டுகுற்றி ஒத்து என அசைதல் இன்றி—பசுவினங்கள் தீண்டுகின்ற ஆவுரோஞ்சிக்குற்றியைநிகர்த்து அசைவில்லாமல், உயிர்ப்பு ஒரீ—சுவாசத்தையடக்கி, மாயா பேர் இன்ப அளக்கர் மூழ்கி—அழியாத பேரின்பமாகியசமுத்திரத்திற் படிந்து. நித்தன் ஐ எழுத்தும்—நித்தியனாகிய சிவபெருமானது ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரத்தையும், அன்னுன் நிலைமையும் நினைந்துநோற்றுன்—அப்பெருமானின் திருவுருவையும் குணங்களையுஞ் சிந்தித்துத் தவஞ்செய்தனர். (எ—று)

ஆனினம் தீண்டுகுற்றி—நீர்க்கரையில் பசுக்கள் சொறியுரோஞ்சுமாறு நாட்டப்படுங்குற்றி. குற்றி—குறுகியது. ஒருவியென்பது ஒரீ இ என அளபெடுத்தது. ஒருவி—நீங்கி. உலகமெல்லாம் பித்தெனவுன்னியென்பதற்கு, உலகத்தோரையெல்லாம் பயித்தியகாரரெனக்கருதி யென்றுரைப்பினும் பொருந்தும். இப்பொருளுக்கு, உலகம் பித்து ஆகுபெயர்கள். இதனை, "தவஞ்செய்வார் தங்கருமஞ்செய்வார் மற்றல்லா-ரவஞ்செய்வாராசையுட்பட்டு"

என்னுந் திருக்குறளானுமுணர்க, பேரின்பம் கடவுளை இடையறாது சிந்தித்து வழிபடுதலாலுண்டாகுமின்பம். மாயா—ஈறுகெட்டது. (௩)

ஓவியமவுன முற்றுங்குணடொடுமுறக்கநீங்கித்
தாவறநோற்கும்வேலைதடமரைகடமையாதி
மேவியவிலங்குசுதத்தமெய்யகண்டேயமியாவும்
போவதுகருதியன்னான்புறத்திடையுரைத்துப்போமால்.

(இ—ள்.) ஆங்கு—அவ்விடத்து, ஓவியமவுனம் உற்று—(உலகப்பற்று) ஒழிந்தமௌனசாதன நிலையைப்பொருந்தி, உணர்வு ஒடும் உறக்கம் நீங்கி—உணவருந்துதலோடு நித்திரைசெய்தலையுந் தவிர்த்து, தா அற நோற்கும் வேலை—குற்றந்தீரத்தவஞ்செயயும்பொழுது, தடமரைகடமை ஆதிமேவிய விலங்குயாவும்—பெரியமரையும் காட்டுப்பசுவும் முதலாக (அத்தடாகத்து நீர்குடிக்க) வந்தமிருகங்களெல்லாம், தத்தம்மெய்யகண்டேயம்போவதுகருதி—தங்கள் தங்கள் தேகத்தின் கண்ணுள்ள தினவு நீங்குவதை நினைந்து, அன்னான்புறத்திடை உரைத்து போம்—அக்கவுச்சகமுனிவனுடைய உடம்பின்கண் உரோஞ்சிக்கொண்டுபோகும். (எ—று.)

ஆல் அசை. தட உரிச்சொல், மெய்ய குறிப்புவினைப்பெயரெச்சம். ஓதல் ஒழிதல். ஓவியம் ஆங்கு, மவுனம் உற்று, எனப்பிரிந்து சித்திரம்போல மௌனம் பொருந்தியெனவும், சித்திரந்தானே மௌனமுற்றாற்போல எனவும், கண்டேயம் யாவும் போவதுகருதி எனக்கொண்டு தினவுமுழுதும் நீக்கக் கருதியெனவும் பொருள்கொள்ளினும் பொருந்தும். மௌனம், ஐம்புலன்களையடக்கி அசைவற இருந்து சிவத்தியானம் பண்ணல். கண்டூயம், தினவு, சொறியென்பன ஒருபொருட்கிளவிகள். (௪)

இப்பரிசியன்றபோழ்தும்யாவதுமுணராஞகி
யொப்பறநோற்கும்வேலையொல்லையிலதனைநாடி
முப்புரஞ்சிதையமேனாண்முனிந்தவனருளிதென்னாச்
செப்பினனிமையோர்சூழச்சேணிடைத்திருமால்சேர்ந்தான்.

(இ—ள்.) இப்பரிசு இயன்ற போழ்தும்—(மிருகங்கள் சொறியுரோஞ்சுதலாகிய) இத்தன்மையானது (நெடுநாளாக) நடைபெற்றுக்கொண்டுவந்தபொழுதும், யாவதும் உணரான் ஆகி— (கவுச்சகமுனிவர்) அஃதொன்றையுமறியாதவராய், ஒப்பு அற நோற்கும்வேலை—சமானமின்றித் தவஞ்செய்யுங்காலத்தில், திருமால் அதனை நாடி—மகாவிஷ்ணுமூர்த்தி அத்தவத்தைக்கண்டு, முப்புரம்சிதையமேல்நாள் முனிந்தவன் அருள் இது என்று செப்பினன்—திரிபுரங்களழியும்படி முன்னளிற் கோபித்த சிவபெருமானு

டைய திருவருட்செய்கை யிதுவாகுமென்று சொல்லிக்கொண்டு, இமையோர் சூழ சேனிடை யொல்லையில் சேர்ந்தான்—தேவர்கள் தமதுபக்கத்திற் சூழ்ந்துவர ஆகாயமார்க்கத்திற் சீக்கிரமாகவந்தருளினார்.

ஒல்லையில் நாடியென்பினுமாம். சிவபெருமானது திருவருளில்லாவிடத்துத் துணைப்பெருந்தவம்புரிதல் கூடாமையின், முப்புரஞ்சிதையமேனாண் முனிந்தவனருளிதென்னாச் செப்பினன் என்றார். திரிபுரதகனம் வெளிப்படை. அரசனைநோக்கிக் குறையிரந்தபிரசையின் குறைபாட்டை, அவன் கீழதிகாரிகள் சென்று விணவித் தீர்க்குமாறுபோல, விஷ்ணுமூர்த்தி சிவசத்தியாகையாலும், காத்தற்றொழிற்குரியராகையாலும், சிவபிரானை நோக்கித் தவம்புரிந்த கவுச்சகமுனிவருக் கருள்புரியுமாறு வந்தாரென்க. (௫)

அற்புதமெய்திமைந்தனருந்தவம்புகழ்ந்துமுன்போ
யெற்படுமவன்றன்மேனியெழின்மலர்க்கரத்தானீவி
வெற்பனமுனிவனின்பேர்மிருககண்டேயனென்னாச்
சொற்பயினாமஞ்சாத்தவெழுந்துகைதொழுதுநின்றான்.

(இ—ள்.) மைந்தன்முன்போய்—(அங்ஙனம் வந்த விஷ்ணுமூர்த்தி) முனிகுமாரராகிய கவுச்சகரது முன்பாகப்போய், அற்புதம் எய்தி அரும் தவம் புகழ்ந்து—ஆச்சரியப்பட்டு அருமையானதவத்தை நன்குமதித்து, அவன் தன் எல்படும்மேனி எழில் மலர் கரத்தால் நீவி—அவருடைய ஒளிபொருந்திய தேகத்தை (தமது) அழகியதாமரைமலர்போன்ற கையினால் தடவி, வெற்பு அனமுனிவ—மலைபோன்றமுனிவனே, நின்பேர் மிருககண்டேயன் என்னா—(மிருகங்கள் கண்டேத்தையுரோஞ்சிய காரணத்தால்) உனதுபெயர் மிருககண்டேயனென்றுசொல்லி, சொல்பயில் நாமம் சாத்த—புகழமைந்த பெயரையிட, எழுந்துகைதொழுது நின்றான்—(அம்முனிவர் (உடனே) எழுந்து வணக்கஞ்செய்து நின்றனர். (எ—று)

அன்ன—அனவென இடைகுறைந்தது. அருந்தவமாகலின், அற்புதம் எய்தியென்றும், புகழ்ந்து என்றும், தவத்தாற் சூழ்ப்புற்றொளியேறிய மேனியாகலின், எல்படும் மேனியென்றும், மழை, பனி, காற்று, வெய்யிலாகிய இவற்றாற் சலியாமையும், பெருமையுமுடையராகலின், வெற்பனமுனிவ என்றும், தவங்காரணமாகவந்த நாமமாகலின், சொல்பயில் நாமம் என்றும் கூறினார். சொல் புகழ். கைதொழுதல் வணங்கல். (௬)

தொழுதெழுமுனியைநோக்கித்தூமதிச்சென்னியோன்றன்
முழுதுறுகருணையின்பான்முற்றுகமுன்னஞ்செய்த
பழுதனைநீங்கவென்னாப்பரிவுசெய்தருளிவானோர்
குழுவுடனுவணவூர்திகொம்மெனமறைந்துபோனான்.

(இ—ள்.) தொழுது எழும் முனியை—வணக்கஞ்செய்தெழுந்த கவுச்சக முனிவரை, உவண ஊர்தி நோக்கி—கருடவாகனரான விஷ்ணுமூர்த்திபார்த்து, தூமதிசென்னியோன்தன்—சுத்தமான சந்திரகலையைச்சூடிய சிவபெருமானது, உறு கருணை முழுதும் நின்பால் முற்றுக—மிகுந்ததிருவருட்பிரசாதம் முழுதும் உன்னிடத்துண்டாகக் கடவது, முன்னம்செய்த பழுது நீங்க என்று—(நீ) பூருவசென்மத்திற்செய்த பாவங்களெல்லாம் நீங்கிப்போகக்கடவது என்று சொல்லி, பரிவுசெய்து அருளி—கிருபைபாலித்தருளி, வானோர் குழுவுடன் கொம்மென மறைந்துபோனான்—தேவர்குழாத்தோடு விரைவில் மறைந்து போயினார். (எ—று)

அவை—பகுதிப்பொருள்விகுதி. நீங்க—அகரவீற்று வியங்கோள். சிவபிரானது திருமுடியிலிருக்கும் ஞானரூபமானமதியென்பது போதர, தூமதியென்றார். சுவர்ணன், என்னும் வடமொழி உவணன் எனத் திரிந்தது. பொன்னிறமானவன், என்பது பொருள். கொம்மென—விரைவுக்குறிப்பு. மறைந்துபோதல்—அந்தர்த்தானமாதல். (எ)

போனபின்முனிவர்மேலோன்புரமெரிபடுத்தமுக்கண்
வானவனருளினாலேவல்விரைந்தேகித்தாதை
யானவன்முன்னரெய்தியடிமுறைவணங்கவன்னான்
றானுளமகிழ்ந்துகண்டாங்கெடுத்தனன்றழுவிக்கொண்டான்

(இ—ள்) போனபின்—(விஷ்ணுமூர்த்தியங்கு நின்றும்) போனபின்பு, முனிவர்மேலோன்—முனிவர்களிற்சிறந்தவரான மிருககண்டியோர், புரம் எரிபடுத்த முக்கண் வானவன் அருளினால்—முப்புரங்களில் அக்கினியிட்ட மூன்று கண்களையுடைய சிவபெருமானது திருவருளினால், வல்விரைந்து ஏகி—மிகவிரைந்துசென்று, தாதை ஆனவன் முன்னர் எய்தி—தமதுதந்தையான குச்சகமுனிவரின் முன்னிலையையடைந்து, முறை அடிவணங்க—முறையானே பாதங்களை நமஸ்கரிக்க, அன்னான்—அந்தக் குச்சகமுனிவர், கண்டு உளம் மகிழ்ந்து எடுத்தனன் தழுவிக்கொண்டான்—(புத்திரனைப் பார்த்து மனமகிழ்ச்சியடைந்து எடுத்தணைத்துக்கொண்டனர். (எ—று)

ஏ, தான், ஆங்கு, அசைகள், வல் விரைவுப்பொருளுணர்த்து மோரிடைச்சொல். வல்விரைந்து, ஒருபொருட் பன்மொழி. எடுத்தனன், முற்றெச்சம். முக்கண்—சூரியன்வலக்கண்ணும், சந்திரன் இடக்கண்ணும், அக்கினி நெற்றிக்கண்ணுமாகிய மூன்றுகண். (அ)

தலத்திடையுற்றதன்மைமொழிகெனத்தனயன்றானு
முவப்புறுதாதைகேட்பவுள்ளவாறுரைத்தலோடு

நிவப்புறுமுவகைமிக்குநின்குலத்தவர்க்குணின்போ
லெவர்க்குளதினையநோன்மையாதுநிற்கரியதொன்றே.

(இ-ள்) தவத்திடை உற்ற தன்மை மொழிக என—(அவ்வாறு அணைத்துக்கொண்ட குச்சகமுனிவர்) மகனே நீ புரிந்ததவத்தின்கண் •சம்பவித்ததன்மைகளைச் சொல்லுகவென்று வினவ, தனயன்தானும்—புத்திரரானவருகக்கண்டேயரும், உவப்பு உறு தாதை கேட்ப—(தம்மீது) மகிழ்ச்சிகொள்ளுகின்ற தந்தையானவர் கேட்கும்பொருட்டு, உள்ள ஆறு உரைத்தலோடும்—(நடந்தசெயல்களையெல்லாம்) உள்ளபடி சொல்லுதலும், நிவப்பு உறும் உவகைமிக்கு— அப்புதல்வன்மேல், மேலும் மேலும்) பொங்கியெழுதலைப்பொருந்திய மகிழ்ச்சியதிகரித்து, நின்குலத்தவர்க்குள்—(மகனே) உனது மரபிலுள்ளவர்களுக்குள், நின்போல் இனையநோன்மை எவர்க்கு உளது—உனக்குப்போல இத்தன்மையான தவப்பேறு மற்றுருக்குண்டு, (ஒருவருக்குமில்லையென்றபடி) நிற்கு அரியது ஒன்றுயாது—(இங்ஙனஞ் செயற்கரிய காரியத்தைச் செய்துமுடித்த) உனக்கு (இனிமேல்) அருமையான ஒன்று என்னை, (ஒன்றுமில்லையென்றபடி) (எ-று)

ஏ, ஈற்றசை. மொழிகென, ஈறுதொகுத்தல். யாவது என்னுமெதிர்மறைவினை வினைக்குறிப்பு யாது என இடைக்குறைந்து நின்றது. நினக்கு என்பது, அகரச்சாரியை தொக்கு, நிற்கு என நின்றது. வியப்புச்சுவையென்னுமணி. இது முதன்மூன்று செய்யுட்கள் குளகம். (௬)

பாருளார்விசும்பின்பாலார்பயனுகர்துறக்கமென்னு
மூருளாரல்லாவேனையுலகுறுமுனிவர்தம்மி
லாருளார்நின்னையொப்பாரையநீபுரிந்தநோன்மை
காருளார்கண்டத்தெந்தையன்றிமற்றெவரேகாண்பார்.

(இ-ள்) பார் உளார்—பூமியிலுள்ளவர்களும், விசும்பின்பாலார்—ஆகாயத்திலுள்ளவர்களும், பயன் நுகர் துறக்கம் என்னும் ஊர் உளார்—புண்ணியப்பயனையனுபவிக்கின்ற சுவர்க்கமென்னுமூரிலுள்ளவர்களும், அல்லா—இவைகளையல்லாத, ஏனை உலகு உறும் முனிவர் தம்மில் – (பாதலம்முதலான) மற்றையவுலகங்கடோறு மிருப்பவருமாகிய முனிவர்களுக்குள், நின்னை ஒப்பார் ஆர் உளார்—உன்னை நிகர்த்தவர் யாவருளர், (ஒருவருமிலரென்றபடி) ஐய—மகனே, நீ புரிந்த நோன்மை—நீ செய்ததவத்தை, கார் உள் ஆர் கண்டத்து எந்தை அன்றி—நஞ்சு உள்ளே பொருந்திய திருக்கண்டத்தையுடைய எம்பிதாவான சிவபிரானொருவரேயல்லாமல், மற்று எவரே காண்பார்—வேறுயாவர்தான் காணத்தக்கவர் (ஆருமில்லை யென்றபடி.)

அல்லா—ஈறுகெட்டது. கார்—ஆகுபெயர். ஏகாரந் தேற்றம். ஆர் எவர் என்பன எதிர்மறைக்கண்வந்தன. ஐய, "உவப்பினு முயர்வினும்" என்ற விதிபற்றிவந்தமரபு வழுவமைதி. பூவுலக முதலான வுலகங்கடோறு மிருந் தீட்டிய புண்ணியப்பயனை அநுபவிக்குமிடம் துறக்கமாகையின், பயனுகர் துறக்கமென்றார். நஞ்சுண்டது வெளிப்படை. தாமுந் தங்குலத்தாருஞ் செய்யாத அருந் தவஞ்செய்து திருமாலைப் பிரத்தியக்ஷத்திற்கண்டு அவராற் கொடுக்கப்பட்ட நாமத்தையும், வரப்பேற்றையும் பெற்ற புத்திரனாகலின் இங்ஙனம் விதந்து கூறினாரென்க. (௰)

**எனப்பலபுகழ்ந்தமேலோ டுமிவன்வழிமரபுதன்னின்**
**மனப்படுமொருசேய்பின்னாண் மறலியைக்கடக்குங்கூற்றால்**
**வினைப்பகையியல்புநீக்கும் விமலனதருளால்வேறோர்**
**நினைப்பதுவரலுந்தாதை நெடுமகற்குரைக்கலுற்றான்.**

(இ-ள்). எனபலபுகழ்தமேலோ(ன்)— (குச்சகமுனிவர்) என்றுபலவாறு கொண்டாடிக்கொண்டிருக்கையில், இவன்வழிமரபுதன்னில்—இந்த மிருககண்டேயரது பிற் சந்ததியில் உள்ள, மனம்படும் ஒருசேய்—மனம் ஒருவழிப்படும் ஒருபுத்திரர், பின் நாள்—பிற்காலத்தில், வினைப்பகை இயல்பு நீக்கும் விமலன் அது அருளால்—தீவினையாகிய பகையைநீக்குகின்ற சிவபிரானது திருவருளினால், மறலியைக்கடக்கும் கூற்றால்—இயமனை வெல்லுமூழிருந்தமையால், வேறு ஓர் நினைப்பு வரலும்—பிறிதொரு எண்ணந் தமக்குத் தோன்றுதலும், தாதை நெடுமகற்கு உரைக்கல் உற்றான்—தந்தையான அக்குச்சகமுனிவர் பெருமைபொருந்திய மிருககண்டேயரென்னும் புத்திரருக்குச் சொல்வாராயினர். (எ-று)

ஆல், ஈரிடத்துமேதுப்பொருட்டு. கடத்தற்கு அருளும், நினைத்தற்குக்கூற்றும் ஏதுவாயின. நினைத்தற்குக் கூற்றேதுவாகலை, "விதியேமதியாய்விடும்" என்னும் நன்னெறியானுமறிக. அது பகுதிப்பொருள்விகுதி. கூற்று—ஊழ், வழி—பின். வழிமரபு என்பதற்கு, வழிப்பட்ட சந்ததியென்பினுமாம். விமலன்—மலமில்லாதவன். மறலி—கொடுமையுடையவன். (௧௧)

**கிளத்துவதுனக்கொன்றுண்டாற்கேள்மதியையமேனா**
**ளளப்பருமறைகளாதியறைந்தனையாவரேனுந்**
**தளத்தகுபரிசுமன்றாற்சால்புடையந்தணாளர்**
**கொளப்படுகடனேயாகுநாற்பெருங்கூற்றதன்றே.**

(இ-ள்) ஐய—மகனே, உனக்கு கிளத்துவது ஒன்று உண்டு—(நான்) உனக்குச் சொல்லுவதான செயல் ஒன்று உளது, கேள்—(அதனைக்) கேட்

பாய். மேல்நாள்—முன்னைநாளில். அளப்பு அரும் மறைகள் ஆதி அறைந்தன—அளவைசெய்தற் கருமையான வேதங்கள்முதலான சாத்திரங்கள் சொல்லியிருக்கின்றன, யாவரேனும் தளதகுபரிசும் அன்று—எத்துணைப் பெரியர் சிறியர்க்கென்றாலும் விலக்கத்தக்க தன்மையை யுடையதுமல்ல, சால்பு உடை அந்தணாளர் கொளப்படுகடனே ஆகும் —பெருமையையுடைய பிராமணர்கள் கைக்கொள்ளத்தக்க முறைமையேயாகும், நால் பெரும் கூற்று— அஃது) நான்கு பெரும் பகுப்பையுடையது. (எ—று)

ஆல், இரண்டும், அன்றும், ஏயும், அசைகள். மதி, முன்னிலை யசை. கிளத்துவது, வினையாலணையும் பெயர். தளத்தகு, கொளப்படு—என்பன. இடைக்குறை, ஏகாரந் தேற்றம். நீளம், அகலம், ஆழந்தெரியாத கடல் போலும் பொருளையுடையது வேதமாகலின், அளப்பரும்மறைகளெனப்பட்டது. "பொருட்பெருங்கடலாம் வேதம் புடைதொறு மலைப்ப" என மேற்கூறியிருத்தலானுமுணர்க. மனைவியோடுகூடி யறம்புரிய நூல்கூறுதலின், மறைகளாதியறைந்தன, என்றும், அது எல்லாருக்குமொப்ப முடிந்ததொன்றாகலின், யாவரேனுந் தளத்தகுபரிசுமன்று, என்றும், ஏனைவருணத்தாரையும் தீமைதீர்த்து முத்திநெறியிற் புகுத்தும் சடங்குகளை யில்லறம் பூண்ட அந்தணரே யியற்றவேண்டுதலின், அவர்க்கேயது சிறப்புடைத்தென்பது போதரத்தேற்றேகாரங் கொடுத்து அந்தணாளர்கொளப்படு கடனேயாகும், என்றுங் கூறினர். அந்தணாளர்—அழகிய தண்ணளியை ஆழ்பவர். ஆதி, என்றது ஆகமம், புராணம் முதலியவற்றை. (௧௨)

உனற்கரும்பிரமந்தன்னிலொழுகலில்லறத்தினிற்றல்
வனத்திடைச்சேறல்பின்னர்மாதவத்துறவில்வாழ்த
லெனப்படுமவற்றினுதியியற்றினையின்றுகாறு
நினக்கதுபுகல்வதென்னோநீயலையறிதியன்றே.

(இ—ள்) உனற்கு அரும் பிரமம் தன்னில் ஒழுகல்—சிந்திப்பதற்கருமையான சிறப்பமைந்த) பிரமசரியத்தில் ஒழுகுதல். (பிரம்சரியம்) இல் அறத்தில் நிற்றல்—இல்லறத்தில் ஒழுகுதல், (கிருகஸ்தாச்சிரமம்) வனத்து இடை சேறல்—வானப்பிரத்தத்தில் ஒழுகுதல், (வானபிரஸ்தாச்சிரமம்) பின்னர்—பின்பு. மாதவம் துறவில் வாழ்தல்—மகாதவத்திற்குரிய துறவறத்தில் ஒழுகுதல், (சந்நியாசம்) எனப்படும் அவற்றில்—என்றுசொல்லப்படும் இந்த நான்கு நிலைகளுள், இன்று காறும் ஆதி இயற்றினை—இன்றையவரைக்கும் முதலிலுள்ள பிரமசரியத்தை அநுட்டித்தாய், நினக்கு அது புகல்வது என்னோ— நான்) உனக்கு அதனைக்குறித்து சொல்லவேண்டுவ

து என்னை, (ஒன்றுமில்லையென்றபடி) நீ அவை அறிதி அன்றே—நீ அந் நிலைகளை அறிவாயல்லவா. (எ—ள்)

அன்றே. தேற்றம். ஓகாரமெதிர்மறை. உனற்கு—இடைக்குறை. அன்று, ஏ, அசையென்பினுமாம். சகல நூல்களையுங் கற்று விதிவிலக்குக ளையுணர்ந்த கலைஞானி நீயென்பார், நான் சொல்லவேண்டுவதில்லையென் பது போதர, நினக்கதுபுகல்வதென்னோ நீயவையறிதி, என்றார்.

பிரமசரியம்—பாலியவயது தொடுத்துக் கன்னிகாகல்யாணகாலம்வரை யும், அல்லது மரணாந்தம்வரையும் விரத நியமித்துத் துறவு பூணல்.

கிருகஸ்தாச்சிரமம்—பிரமசரியத்தைக் கழித்தபின்பு விதிப்படியொரு கன்னிகையைக் கல்யாணஞ் செய்து அவளுடன் விருந்தினரை யுபசரித் தல் முதலான பலதருமங்களைச் செய்தல், விரதங்களையநுட்டித்துக்கொண் டு கிருகத்தில்வாழ்தல்.

வானப்பிரஸ்தாச்சிரமம்—இல்லை விட்டு மனைவியோடாயினுந் தனித்தா யினும் வனத்திற்சென்று பொறிகளையடக்கிச் சிவபூசை அக்கினிகாரியம் குருபூசையென்னு மிவைகளைச் செய்துகொண்டிருத்தல்.

சந்நியாசம்—வனத்திலே தனித்து மரத்தினிழலே தானிருக்குமிடமா கக்கொண்டு மாணுக்கர்களைத்தேடி அவர்களுக்கு நூல்களைக்கற்பிப்பதும் தண்டுகமண்டலந்தரிப்பதுமின்றி, மணல் முதலிய க்ஷணிகலிங்கத்தையே பூசைபண்ணிக்கொண்டு, பாணியே பாத்திரமாக இரந்து புசித்து, வே றொருவியாபாரமுமின்றி மௌனியாயிருத்தல். (கங)

**பின்னவையிரண்டும்பின்னர்ப்பேணுதல்பேசவொண்ணா**
**முன்னதுமியற்றலாலேமுற்றியதிடையின்வைத்துச் [யோ**
**சொன்னதோர்கடனிஞான்றுதொடங்கியவேண்டுந்தூ**
**யன்னதனிலைமைதன்னையாற்றினைகோடியென்றான்.**

(இ—ள்) பின்னவை இரண்டும்—(இந்நான்கு நிலைகளுள்) பிற்சொல்ல ப்பட்ட (வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்னும்) அவைகளிரண்டும், பின் னர்பேணுதல்—பிற்காலத்தில் கைக்கொள்ளுதற்குரியவை, பேச ஒண்ணா முன்னதும்—சொல்லுதற்கு அருமையான (சிறப்பமைந்த) பிரமசரியமும், இயற்றலாலே முற்றியது—(இதுவரையும் நீ) அநுட்டித்தலினாலே நிறை வேறிற்று, இடையில்வைத்து சொன்னது ஓர்கடன்—(இவைகட்கு) இ டையில் இரண்டாவதாக வைத்துச் சொல்லப்பட்டதாகிய ஒப்பில்லாத கி ருகஸ்தாச்சிரமத்தை, இஞான்றுதொடங்கியவேண்டும்—இந்நாளில் (நீ) அநுட்டிக்கத்தொடங்கவேண்டும், தூயோய்—பரிசுத்தத்தையுடையமகனே,

அன்னதன்னிலைமைதன்னை ஆற்றினை கோடி என்றான்—அந்தக் கிரகஸ்தா ச்சிரமத்துக்குரிய விவாகத்தை செய்துகொள்ளக்கடவாயென்று (குச்சகமு னிவர்) கூறினர். (எ—று)

பேணுதல், ஈண்டுவினைமுற்று. ஒண்ணு—ஈறுகெட்டது. ஏகாரம், தே ற்றம். தொடங்கிய—செய்யிய என்னும் வாய்பாட்டெதிர்காலவினையெச்சம் (தொடங்க) கோடி. ஏவலொருமைவினைமுற்று. கொள், பகுதி. ஆற்றி னை—முற்றெச்சம். அன்ன—சுட்டுமரூ, சுட்டிஞல், நிலைமை, கிருகஸ்தாச் சிரமத்தை யுணர்த்திற்று. எவர்க்கும் அங்கீகரித்துத் தீர்க்கக் கடவதொரு கடன்போறலின், விவாகத்தை, கடன், என்றார். (கச)

முனிவரனிதனையாங்கண்மொழிதலுமிதனைக்கேளா
வினியதோருறுதிசொற்றாரெந்தையாரெனக்கீண்டென்று
மனமுறமுறுவல்செய்துமதலையாமொருவற்கீது
வினையறுதவத்தினீரும்விளம்புதன்மரபோவென்றான்.

(இ—ள்) முனிவரன் ஆங்கண் இதனைமொழிதலும்—முனிசிரேட்டரா ன குச்சகர் அவ்விடத்து இந்த வார்த்தையைச்சொல்லுதலும், இதனைகே ளா— மிருககண்டியர் இந்தவார்த்தையைக் கேட்டு, எந்தையார்—எமது த ந்தையார். எமக்கு ஈண்டு இனியது ஓர் உறுதிசொற்றார் என்று—எனக்கு இவ்விடத்து இன்பத்தையுடையதொரு உறுதியானவார்த்தையைச் சொன் னரென்று, மனம் உற முறுவல் செய்து—(வருத்தமாய் உள்ளே மிகச்சி ரித்துக்கொண்டு. மதலை ஆம் ஒருவற்கு— பிதாவைநோக்கி) புத்திரரான ஒருவருக்கு,ஈது-இந்தவார்த்தையை, வினை அறு தவத்தினீரும் விளம்புதல் மரபோ என்றான்—தீவினைதீர்தற்கேதுவான தவத்தையுடையீரான தேவ ரீரும் சொல்லுதல்முறைமையோ? என்று (பரிந்து) சொன்னார். (எ—று)

ஆங்கண், ஈண்டு, ஈது-என்னுஞ்சுட்டுக்கணீண்டன—என்னை, "தூக் கிற் சுட்டு நீளும்." என்பது விதியாகலின். ஆங்கண், ஈண்டு—என்பவற்றிற் கு—அப்பொழுது, இப்பொழுது, எனப் பொருள்கூறினும் பொருந்தும். ஓகாரம்—எதிர்மறையில் வந்த வினு. உறுதி—ஆகுபெயர். இனியதோருறுதி சொற்றார், என்பது இலக்கணை. சொற்றார், எந்தையார், என்பதன்கண் ஆர்விகுதிகளுயர்த்தற்கண் வந்தன. அத்து, இன், சாரியைகள். உம்மை, உயர்வு சிறப்பு. தவத்தினீர், வினையாலணையும்பெயர். மதலையாமொருவற் கு, தன்மையிற்படர்க்கைவழுவி "ஓரிடம் பிறவிடந் தழுவலுமுள" என்னு ம் விதியானமைதியாயிற்று.

நித்தியமானவீடு பேற்றிற்குரிய வொன்றைச்சொல்லாது, அநித்தியமான பிரபஞ்சத்தளையைப் பூணச்சொன்னமையின், புகழ்ச்சிபோலிகழ்ச்சிடாக, இனியதோருறுதிசொற்றார், என்றும், இவரதறிவின்மை யிருந்தபடியென்னையென்பது தோன்ற உள்ளே சிரித்தமையின் மனமுற முறுவல்செய்து, என்றும், சாமானிய மாந்தரைப்போலாகாது தீவினையொழியச்செய்த பெருந்தவத்தையுடைய வுமக்கிது தகாதென்பார், வினையறுதவத்தினீரும் விளம்புதல் மரபோ, என்றுங்கூறினார்.

மனமுறமுறுவல்செய்து, இது புன்னகையாகிய உள்நகை. (கடு)

வேறு.

பேதைப்படுக்கும்பிறவிக்கடனீந்து
மோதித்திறத்தையுணர்ந்துடையோனாதலினாற்
காதற்புதல்வன் கவுச்சகனென்போன்றனது
தாதைக்கிளையபரிசுதனைச்சாற்றுகின்றான்.

(இ-ள்) காதல் புதல்வன் கவுச்சகன் என்போன்—(பிதாவினிடத்தில்) அன்புள்ளபுத்திரரானகவுச்சகரென்று விதந்துசொல்லப்படுபவர், பேதைபடுக்கும்—அறியாமையிலகப்படுத்தும், பிறவி கடல் நீந்தும்—சநநமாகிய சமுத்திரத்தைக்கடக்கும், (தெப்பமான) ஓதி திறத்தை உணர்ந்துடையோன்—சிவஞானத்தின்தன்மையை அறிந்துள்ளவர், ஆதலினால்—ஆதலால், தனது தாதைக்கு—தமதுதந்தையாராகிய குச்சகமுனிவருக்கு, இளையபரிசுதனை சாற்றுகின்றான்—இப் பெற்றித்தானவார்த்தையைச் சொல்லுகின்றனர். (எ-று)

ஓதி—ஞானம். பிறவியைக்கடலென்றும், அதனையொழித்தலை நீந்துதலென்றுங் கூறினதற்கேற்ப, ஓதியைத்தெப்பமென்றுருவகஞ் செய்யாமையின் இஃது ஏகதேசவுருவகம். பிறவிக்கடல் என்றமையின் உருவகவணி. இதுமுதற் பதினொன்கு செய்யுட்கள். நாற்சீரும், காய்ச்சீரும் மாச்சீரும் விளச்சீரும் விரவி அளவடிநான்கு கொண்ட தரவுகொச்சகக்கலிப்பாக்கள். கலிவிருத்தம் என்பாருமுளர். (கசு)

முன்னருளபாசமுயக்கறுக்கவேண்டியநான்
பின்னுமொருபாசம்பிணிக்கப்படுவேனோற்
றன்னிகரிலீசன்றனையெவ்வாறெய்துவன்யா
னின்னலெனுமாழியிடைப்பட்டுலைவேனே.

(இ-ள்) முன்னர் உளபாசம் முயக்கு அறுக்கவேண்டியநான்—ஆதியில் (என்னுடன்) சகசமாகவுள்ள கன்மமலத்தின் கட்டையறுத்துக்கொள்ளவே

ண்டியவனாகிய நான், பின்னும் ஒருபாசம் பிணிக்கப்படுவேன் எல்—(அத்துடன்) பின்னரும் பிரபஞ்சமென்னுமொரு பாசத்தினால் கட்டப்படுவேனாயில், யான்—நான், தன்நிகர் இல் ஈசன் தனை எ ஆறு எய்துவன்—தமக்கு ஒப்பாரும் மிக்காருமில்லாத சிவபெருமானை யெவ்விதமாகச் சென்றடைவேன். இன்னல் எனும் ஆழி இடைபட்டு உலைவேனே—துன்பமென்கின்ற கடலினிடத்தகப்பட்டு (ஒருபோதும் மீட்சியில்லாமல்) வருந்துவேனல்லவா. (எ—று)

ஈற்றேகாரம்—தேற்றம். பிணிக்கப்படுவேனேல், என்பது, எய்துவன், உலைவேன், என்னுமிரண்டனோடும் இயையும். பாசம்—முன்னையது, கன்மமலம். பின்னையது, பிரபஞ்சம், அது, விவாகம். முயக்கு—கட்டு. முன்னர்—முற்பிறப்பு. ஈசன்—ஐசுவரியமுடையவன். பிறவிக்கு வித்துக் கன்மமலமாகலின் முன்னருளபாசமென்றார், கன்மமலத்தை. கிடைத்தற்கரியமானுடசரீரங் கிடைத்தபொழுது அதனைத்துணையாகக்கொண்டு மூலமலத்தைக் கெடுப்பதற்கேதுவான துறவறத்தைப் பூணுதலே அறிஞர்க்குக் கடனென்பார், "முன்னருளபாசமுயக்கறுக்க வேண்டியநான்," என்றும், இல்லறமானது, முழுதுமுலகவியாபாரமாகிய மாயையிலகப்படுத்தி மீளவும் விளையையீட்டுதற் கேதுவாக இருப்பதென்பார், கிரகஸ்தாச்சிரமத்தை, "பின்னுமொருபாசம் பிணிக்கப்படுவேனேல்," என்று வெறுத்துங் கூறினார். (கஎ)

மொய்யானதில்லாமுடவனொருவன்றனது
கையானவையிரண்டுங்கந்தாத்தவழ்தருவா
னையாவதற்குமரும்பிணியொன்றெய்தியக்கா
லுய்யானேயானுமுவன்போற்றளர்வேனே.

(இ—ள்) ஐயா—பிதாவே! தனது கை ஆனவை இரண்டும் கந்து ஆ தவழ்தருவான்—தன்னுடையகைகளிரண்டையும் பற்றுக்கோடாகக்கொண்டு தவழ்ந்துசெல்லுகின்றவனான, மொய் ஆனது இல்லா முடவன் ஒருவன்—(கிஞ்சித்தும்) வலிமையில் லாதமுடவனாகியவொருவன், அதற்கும்—அக்கைகளுக்கும், அரும்பிணி ஒன்று எய்தியக்கால்—(தீர்த்தற்கு) அருமையானநோயொன்று சம்பவித்தால், உய்யானே—உயிர்வாழமாட்டானல்லவோ. யானும் உவன்போல் தளர்வேனே—நானும் (கல்யாணம்) செய்துகொண்டு, அந்தமுடவனைப்போல வருத்தமுறுவேனே. (எ—று)

ஈற்றேகாரம்—எதிர்மறை. ஏகாரம்—தேற்றம், இல்லா—ஈறுகெட்ட எதிர்மறைக் குறிப்புவினைப்பெயரெச்சம். ஆ—ஈறுகெட்டது, தருவான்—முற்றெச்சம், ஆனது, ஆனவை—எழுவாயின் சொல்லுருபுகள். எய்தியக்கால்

—எதிர்கால வினையெச்சம், அதற்கு—என்றது—சாதியொருமை, உவன்—அவனென்னும் சுட்டுப்பொருளில்வந்தது. மோனைநோக்கி அவனென்னது உவனென்றார் போலும், கந்து—தூண். அஃதீண்டுப்பற்றுக்கோடென்னும் பொருடந்தது.

முடவனுக்கு, நடந்துபோதற்குக் கால்களில்லாதவாறுபோல, முத்திநெறியிற்செல்லுதற்குச் சத்திநிபாத மில்லாத யான், அவன் பற்றுக்கோடாகக்கொண்டுதவழுங்கைகளுக்குப் நோய்வந்தா லுய்யமாட்டாதவாறுபோல, தவவொழுக்கிற் சிறிது முயலும்பொழுது அதற்கிடையூறான கல்யாணத்தைச்செய்து கொள்வேனாயின் யாதொருவாற்றானு முய்யமாட்டேனென்று, முடவனை யுவமைமுகமாகவைத் துணர்த்தினானென்பதாம். மொய்—சதுரப்பாட்டையும், முடவன்—தம்மையும், கை—தவத்தையும், பிணி—கல்யாணத்தையும், குறிப்பினாற் காட்டிநின்றன.

இச்செய்யுள் விரியுவமாலங்காரம். (கஅ)

மொய்யுற்றிடவேமுயலுந்தவத்தினன்றிப்
பொய்யுற்றவில்லொழுக்கம்பூண்டுவினைபோக்குவது
மெய்யுற்றிடுதுகளைமிக்கபுனலிருக்கச்
செய்யற்சின்னீரிடத்துத்தீர்க்குஞ்செயலன்றே.

(இ—ள்) மொய் உற்றிட முயலும் தவத்தின் அன்றி—மேன்மைபொருந்தச்செய்யுந் தவத்தினாலல்லாமல், பொய் உற்ற இல்லொழுக்கம் பூண்டு வினைபோக்குவது—பொய்ம்மைபொருந்திய இல்லாச்சிரமத்தைக் கைக்கொண்டு (அதுவாயிலாக கன்மத்தைத்தீர்ப்பது, (எதுபோலுமெனின்) மெய் உற்றிடுதுகளை—தேகத்திற்பொருந்தியிருக்குமழுக்கை, மிக்கபுனல் இருக்க—மிகுதியானநீரிருக்கவும் (அந்நீரினால் கழுவாமல்) செய்யல்சில்நீரிடத்து தீர்க்கும் செயல் அன்றே—சேற்றோடுகலந்த அற்பநீரில் கழுவுந் தன்மை போலாகுமல்லவா. (எ—று)

அன்றே—தேற்றம். ஏ—அசை. இன்—ஐந்தனுருபு, ஏதுப்பொருட்டு. மொய்—ஞானவலியுமாம், பொய்யுற்ற இல்லொழுக்கம் என்பது—பொய்யன் புக்கிடமான இல்லொழுக்கம், நிலையாமையுள்ள இல்லொழுக்கம், என்னும் பொருள்களுக் கிடமாய் நின்றது. செய்யல்—சேறு. சில்—சிறிது. "விராவு சில்லுணு மிசைந்தனர்:" என மேற்கூறுமாற்றானுமறிக.

நிறைந்த நீரிருப்ப குறைந்த சேற்றுநீரினழுக்கைத் தீர்க்கப்புகி னஃது மேலுமழுக்கைக் கொடுத்தல்போல, வினையை யிலேசானே தீர்த்துக் கோடற்கான துறவறமிருக்க வதனையொழித்து இல்லறத்தைப்பூணுகி லஃது மேலும் வினையைத்தானே யீட்டுமென்றானென்பதாம்.

துறவறத்தினுயர்வு தோன்ற மொய்யுற்றிட முயலுந் தவமென்றும், இல்லறத்தினிழிவுதோன்ற பொய்யுற்ற இல்லொழுக்கமென்று மடைகொடுத்தார். (௧௯)

மண்ணுலகிலுள்ளவரம்பில்பெரும்பவத்தைப்
பெண்ணுருவமாகப்பிரமன்படைத்தனனா
லண்ணலஃதுணர்தியன்னவரைச்சிந்தைதனி
லெண்ணவரும்பாவமெழுமையினுநீங்குவதோ.

(இ—ள்) அண்ணல்—பெருமையிற்சிறந்த தந்தையே! பிரமன்—பிரமதேவன், மண்ணுலகில் உள்ளவரம்பு இல் பெரும் பவத்தை—பூவுலகின்கணுள்ள எல்லையில்லாத பெரும்பாவங்களை, பெண் உருவம் ஆகபடைத்தனன்—(திரட்டி பெண்வடிவமாகச் சிருட்டித்தான், அஃது உணர்தி—அதனை நீர் அறிந்துகொள்வீராக, அன்னவரை— பாவரூபமான) அந்தப்பெண்களை, சிந்தைதனில் எண்ணவரும் பாவம் எழுமையினும் நீங்குவதோ— (பரிசித்தலின்மாத்திரமன்று மனதின்கட் சிந்திக்கவருகின்ற பாவமானது எழுபிறப்பினுந் தீருந்தன்மையையுடையதா. (எ—று

ஆல்—அசை. ஓகாரம்—எதிர்மறை. அண்ணல்—இயல்பின்வந்த முன்னிலைவிளி. பெரும்பாவங்களையே பெண்ணுருவமாகப் படைத்தானென்பதை, "சீறும் வினையது பெண்ணுருவாகித் திரண்டுருண்டு—கூறு முலையுமிறைச்சியுமாகிக் கொடுமையினாற்—பீறுமலமு முதிரமுஞ் சாயும் பெருங்குழிவிட்—டேறுங்கரை கண்டிலே னிறைவா கச்சி யேகம்பனே." என்பதனானும், பெண்களைச் சிந்திக்கவரும் பாவம் எழுமையுந் தொடருமென்பதை, "பெண்ணென்றுரைக்கிற் பிறப்பேழுமாந்துய, ரெண்ணென்றநல்லோர் சொலெண்ணலையே." என்பதனானுமறிக. (௨0)

ஆதரவுகொண்டேயலமந்தவைம்புலமாம்
பூதவகையீர்க்கப்புலம்புற்றபுன்மையினேன்
மாதரெனுங்கணமும்வந்தெனைப்பற்றியக்கா
லேதுசெய்கேனந்தோவெனக்கோவிதுவருமே.

(இ—ள்) ஆதரவுகொண்டு அலமந்த—ஆசைகொண்டு சுழலுகின்ற, ஐம்புலம் ஆம் பூதவகை ஈர்க்க—ஐம்புலன்களாகிய பூதகணங்களிழுத்தலால், புலம்பு உற்ற புன்மையினேன்—வருத்தமடைகின்ற இழிவையுடையவனாகிய நான், மாதர் எனும் கணமும் வந்து என்னை பற்றியக்கால்—மகளிரென்னும் பேய்களும் வந்து என்னைப் பிடித்துக்கொண்டால், ஏதுசெய்கேன்

—என்னசெய்வேன், அந்தோ—ஐயோ! இது எனக்கோவரும்—இந்த வருத்தமானது எனக்கோ வருவது. (எ—று)

ஈற்றேகாரமும், கொண்டே யென்பதன் கணேகாரமும்—அசைகள். ஓகாரம்—இரக்கம். ஏதுப்பொருட்டாலுருபு, விரிக்கப்பட்டது. செய்கேன்-என்பதிற் ககரஇடைநிலை யெதிர்காலமுணர்த்திற்று. அந்தோ—இரக்கத்தில்வருமோர் துணுவச்சொல். புலம்—போலி. மாதர்—விருப்பம், ஆகுபெயர். கணம்—பேய். ஐம்புலன்களாவன—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். மாதர்கள் பேயேயாமென்பதை, "பெண்ணாகி வந்தொரு மாயப்பிசாசம் பிடித்திட்டென்னைக்—கண்ணால் வெருட்டி முலையான்மயக்கிக் கடிதடமாம்—புண்ணாங் குழியிடைத் தள்ளியென்போதப் பொருள்பறிக்க—வெண்ணாது னைமறந் தேனிறைவா கச்சியேகம்பனே," என்பதனானுமறிக. பேயுந்தன்னாற் றீண்டப்பட்டுள்ளாரை யவர் வசமழித்துத் தன்வசமாக்கிப் பிறிதொன்றனையுஞ் செய்யவொட்டாது அகோராத்திரமு மலைக்குமாறு போல, மாதரும் தம்மைவிரும்பினாரை யவர்வசமழித்துப் பேரின்பத்திற்குரிய வொன்றனையுஞ் செய்யவொட்டாது முழுதுந் தன்வசமாக்கிச் சிற்றின்பத்தின்கட் புகுத்துகின்றமையின், "மாதரெனும், கணமும்" வந்தென்னைப் பற்றியக்கால், என்றார். இச்செய்யுள் அவலச்சுவையென்னுமணி. (உக)

புன்னாளும்பாரிற்பருவரலின்மூழ்குவிக்கும்
பின்னாணிரயப்பெரும்பிலத்தினூடுய்க்கு
மென்னாளிலாண்டகையோர்க்கின்பம்பயந்திடுமோ
மின்னார்கடம்மைவிழைவுற்றவேட்கையதே.

(இ—ள்) மின்னார்கள்தம்மை விழைவுற்றவேட்கை அது—மாதர்களை விரும்பிய விருப்பமானது, ஆண்தகையோர்க்கு—ஆடவர்களுக்கு, பாரில் பல் நாளும் பருவரலில் மூழ்குவிக்கும்— இம்மையில்) பூவுலகிற் பலநாளும் வருத்தத்திலழுந்துவிக்கும், (ஆகையினாலும்) பின் நாள் நிரயம் பெரும் பிலத்தின் ஊடு உய்க்கும்—(மறுமையாகிய) பிற்காலத்தில் நரகமாகிய பெரியபிலத்துவாரத்தின் கட்செலுத்தும், (ஆகையினாலும்) எ நாளில் இன்பம் பயந்திடுமோ—(நாமறிய) எந்தக்காலத்தி லின்பத்தைக் கொடுக்குமோ, (எந்தக்காலத்துந் துன்பத்தையேகொடுக்குமென்றபடி.) (எ—று)

ஈற்றேகாரம்—அசை. ஓகாரம்—எதிர்மறை. நிரயப்பெரும்பிலம்—இருபெயரொட்டு. வேட்கை-என்பதில், கை தொழிற்பெயர்விகுதி, பன்னாளும்—என்பதனும்மை முற்றும்மை. பார்—பார்க்கப்படுவது. அல்லது, பருமையையுடையது.

பெண்களின்மேற்கொள்ளுங் காமவிருப்பமானது, இருமையுங் கேட்டை விளைவிக்குமென்பது கருத்து. இதனை, "அம்மிதுணையாக வாறிழிந் தவாறொக்குங், கொம்மைமுலைபகர்வார் கொண்டாட்ட—மிம்மை, மறுமைக்குநன்றன்று மாநிதியப்போக்கி, வெறுமைக்குவித்தாய்விடும்." என்று மல் வைவாக்கானுமறிக. (உஉ)

துன்பநுகரும்வினையின்றொடர்ச்சியினோ
ரின்பநுகர்வார்போலேந்திழையார்கட்பட்டார்
தன்பன்மிகநடுங்கஞாளிதசையில்லா
வென்புகறித்திட்டாலிருஞ்சுவையும்பெற்றிடுமோ.

(இ—ள்) ஞாளி—நாயானது, தன்பல்மிகநடுங்க—தனதுபற்கள் மிகவு மசைவெடுக்கும்படி, தசை இல்லா என்பு கறித்திட்டால்—(சிறிதும்) தசைப்பற்றில்லாத வெற்றெலும்பைக்கடித்தால், இரும் சுவையும் பெற்றிடுமோ—மிக்கரசத்தையும் பெறுமா, (அதுபோல) துன்பம் நுகரும் வினையின்தொடர்ச்சியினோர்—துன்பத்தையனுபவிக்கவேண்டிய தீவினையின் சம்பந்தத்தையுடையவர்கள், இன்பம் நுகர்வார்போல்—இன்பத்தையநுபவிப்பவரைப்போன்று, (பொய்மையான) ஏந்து இழையார் கண்பட்டார்—ஏந்திய ஆபரணங்களையுடைய பெண்கள்வசத்திலகப்பட்டார்கள். (எ—று)

ஓகாரம்—எதிர்மறை. சதை—தசையென எழுத்து நிலை மாறிற்று, இலக்கணப்போலி. சுவையும்—என்பதன் கணும்மை—உயர்வுசிறப்பு. ஏந்திழையார்கண்பட்டார்—என்பதற்கு பெண்களது கண்ணுகியவலையிலகப்பட்டார் எனப்பொருள்கொள்ளினும் பொருந்தும். இல்லா—ஈறுகெட்டது.

இன்பத்தையநுபவிக்கும் நல்வினைப்பயனுடையோர் மணஞ்செய்ய விரும்பார் என்பார், "துன்ப நுகரும் வினையின்றொடர்ச்சியினோர்." என்றும், இன்பத்தைத்தருவதுபோலக் காட்டித் துன்பத்தைத் தரும் பொய்மையின்பமே மாதரிடத்தநுபவிக்கும் சிற்றின்பம், என்பார், "இன்பநுகர்வார் போலேந்திழையார் கட்பட்டார்," என்றும் அதனாற்பெருங்கேடு விளையுமன்றி நன்மைவிளையாது என்பார், திருட்டாந்தமாக, "தன்பன்மிகநடுங்க ஞாளிதசையில்லா வென்புகறித்திட்டா லிருஞ்சுவையும் பெற்றிடுமொ," என்றுங்கூறினர்.

மாதர்களதின்பத்திலகப்பட்டோரும் நாயும் சமமாகுமென்பது கருத்து. எடுத்துக்காட் டுவமையணி. வேற்றுப்பொருள் வைப்பென்பாருமுளர்.(உ௩)

அஞ்சனவைவேற்கணரிவையர்தம்பேராசை
நெஞ்சபுகின்றொருவர்நீங்குநிலைமத்தோ

வெஞ்சல்புரியாதுயிரையெந்நாளுமீர்ந்திடுமா
னஞ்சமினிதம்மவோர்நாளுநலியாதே.

(இ—ள்) அஞ்சனம் வைவேல் கண் அரிவையர் தம்பேராசை—மையெழுதியகூரியவேல்போலுங் கண்களையுடைய பெண்களின் மேற்கொள்ளும் பேராசையானது, ஒருவர்நெஞ்சுபுகின்—ஒருவர் மனதிற் குடிகொள்ளுமாயின், நீங்கும் நிலைமைத்தோ— (மீளவவர்மனதைவிட்டு) போகுந்தன்மையையுடையதோ, எஞ்சல்புரியாது உயிரை எந்நாளும் ஈர்ந்திடும்—குறைந்துபோகாமல் வரவர அதிகரித்து) பிராணனை எந்தக்காலமு மரிந்துகொண்டேயிருக்கும்,நஞ்சம் இனிது ஓர் நாளும் நலியாது—(ஆகலி னதைக்காட்டினும்) நஞ்சு நன்மையையுடையது. (அதுபோல) ஒவ்வொருநாளும் வருத்தாது. (உண்டவுடன் கொன்றுவிடுமென்றபடி) (எ—று)

ஈற்றேகாரம், ஆல், அம்ம—அசைகள். ஓகாரம்—எதிர்மறை. நஞ்சு—நஞ்சமெனப்போலியாயிற்று. மாதர்மேல்வைக்கும் பேராசை நித்தியமும் வைத்துவருத்துதலானும், நஞ்சு ஒருநாளாவதுவருத்தாது உண்ட வுடன்கொல்லுதலானும், நஞ்சினுங் காமங் கொடிதென்றாரென்பதாம். வேற்றுப் பொருள் வைப்பென்னுமணி. (உச)

கள்ளுற்றகூந்தற்கனங்குழைநல்லார்கருத்திற்
கொள்ளப்படுமெண்குணிக்குந்தகைமையதோ
தள்ளற்கரிதாகித்தம்மொடுபன்னாட்பழகி
யுள்ளுற்றதேவுமுணர்தற்கரிதன்றோ.

(இ—ள்) கள் உற்ற கூந்தல்—மலர்த் தேனமைந்த கூந்தலையும், கனம் குழை—கனத்தகாதணியையுமுடைய, நல்லார்கருத்தில் கொள்ளப்படும் எண்—பெண்கள்மனதில் நினைக்கப்படுகின்ற எண்ணமானது, குணிக்குந்தகைமையதோ— (இத்தன்மையதென்று எவராலும்) அறியுந்தன்மையையுடையதா, தள்ளற்கு அரிது ஆகி—நீக்குதற்கு அருமையாய், தம்மொடுபல்நாள்பழகி—அவர்களோடு பலநாளும் பழகிக்கொண்டு, உள் உற்ற தேவும்—மனத்திற் (கூட) இருக்குங் கடவுளும், உணர்தற்கு அரிது அன்றோ—(அவ்வெண்ணத்தை) அறிந்துகொள்ளுதற்கருமையாகுமல்லவா. (எ—று)

ஓகாரம்—எதிர்மறை. அன்றோ—தேற்றம். உம்மை—உயர்வு சிறப்பு குழை—காதணி, குண்டலம். தே—கடவுள். தம்—என்றது மாதரை.

பெண்களதெண்ணமொருவழிப்படாது அடிக்கடி பலபேதமாக மாறுபடுதலின், "நல்லார்கருத்திற் கொள்ளப்படு மெண்குணிக்குந் தகைமையதோ." என்றும், எண்ணெய்போல, சிவான்மாவோடு விரவுமாவும் நீக்க

யன்றிப் பண்டுதொட்டுக் கூடப்பயிறலின், "தன்னற்கரிதாகித் தம்மொடு பன்னாட்பழகி யுள்ளூற்ற." என்றும், எல்லாமறியு மக்கடவு ளறியாததொன்றில்லையாயினும், அப்பெண்களதெண்ணத்தி னாழமும், வஞ்சனையும் மிகப் பெரிதென்பது போதர, "தேவுமுணர்தற் கரிதன்றே" என வுயர்வு சிறப்பும்மை கொடுத்துங்கூறினார். மகளிர்கள் மனத்தெண்ணுமெண்ணமொருவருமறிதல் கூடாதென்பதை, "அத்திமலரு மருங்காக்கை வெண்ணிறமுங், கத்துபுனன்மீன்பதமுங் கண்டாலும்—பித்தரே, கானார்தெரியற் கடவுளருங் காண்பரோ, மானார்விழியார் மனம்." என்னும் நீதிவெண்பாவானும், "மடக்கொடிநெஞ்சமும் வானினீளமுங், கடற்குளினாழமுங் கண்டதில்லையால்." என்னுமிராமாயாணச்செய்யுளானு முணர்க. (௨௬)

ஓதலுமொன்றுவுளமொன்றுச்செய்கையொன்றுப்
பேதைநிலைமைபிடித்துப்பெரும்பவஞ்செய்
மாதர்வலைப்பட்டுமயக்குற்றாரல்லரோ
சாதல்பிறப்பிற்றடுமாறுகின்றாரே.

(இ—ள்) ஓதலும் ஒன்று ஆ—சொல்லுவதொன்றாகவும், உளம் ஒன்று ஆ—மனம்வேறொன்றாகவும், செய்கை ஒன்று ஆ—செய்வது மற்றொன்றாகவும், பேதை நிலைமைபிடித்து பெரும் பவம்செய்—அறியாமைத் தன்மையைக் கைக்கொண்டு பெரும்பாவங்களைச் செய்கின்ற, மாதர்வலை பட்டு—பெண்களது ஆசையாகிய வலைக்குள்ளாகி, மயக்கு உற்றார் அல்லரோ—மனமயக்கமடைந்தவர்களல்லவா, சாதல் பிறப்பில் தடுமாறுகின்றார்—மரணசநநங்களி லலைந்துகொண் டிருக்கின்றார்கள். (எ—று)

ஏகாரம்—இரக்கம். அல்லரோ—தேற்றம். ஆக—என்னும் வினையெச்சங்கள் ஈறுகெட்டு நின்றன. சாதல் பிறப்பு—உம்மைத்தொகை. செய்மாதர்—முக்காலவினைத்தொகை. மாதராசையிற் பட்டென்னாது, மாதர்வலைப்பட்டென்றார், அகப்பட்டோரைத் தப்பவிடாதென்பது போதர.

நினைப்பதொன்றும், பேசுவதொன்றும், செய்வதொன்றும் ஆகத்திரிகரணங்களாலும் வேறானபெண்களினாசையிலகப்பட்டவர்கள், ஒருபோதும் வீடுபேற்றையடையாமல் எக்காலமும் பிறந்திறந்துகொண்டே திரிவரென்பது கருத்து. எப்போதும் பிறந்திறப்பரென்பதை, "நாட்பட்டகமலமன்னவிதயமேவுநாதனேதுன்மார்க்கரிமார்கண், வாட்பட்டகாயமிந்தக் காயமென்றேவன்கூற்றமுயிர்பிடிக்கவருமந்நீதி." என்னுந்தாயுமானார் திருவாக்கானும், "ஈட்டுறும் பிறவியும் வினைகள்யாவையுங், காட்டிய இனைய தோர்காமமாதலின், வாட்டமில் புந்தியான் மற்றதனோயினை, வீட்டினரல்லரோ வீடுசேர்ந்துளார்." என இதிற்பின்னர்க்கூறுமாற்றானுமுணர்க. (௨௭)

ஆனுலுலகிலருங்கற்பினையுடைய
மானாரிலரோவெனவேவகுப்பீரேற்
கோனுனதங்கள்கொழுநனியல்வழுவாத்
தேனூர்மொழியாருமுண்டுசிலர்தாமே.

(இ-ள்) ஆனல்-ஆயின், உலகில்-உலகத்தில், அரும் கற்பினை உடையமானார் இலரோ—(காப்பதற்கு) அருமையான கற்புநெறியுடைய பெண்களில்லையோ, எனவகுப்பீரேல்—என்றுகேட்பீராயின், தங்கள்கோன் ஆனகொழுநன் இயல்வழுவா—தங்கள் தலைவனாகிய நாயகனது சொல்லிற்றவருத, தேன் ஆர் மொழியாரும் சிலர் உண்டு—தேன்போலும் மதுரமான சொற்களை வசனிக்கும் பெண்களும் சிலருளர். (எ-று)

ஏகாரங்கள், தாம்-அசைகள். தாமே-என்பதுதேற்றமுமாம். ஓகாரம்-வினா. வழுவா-ஈறுகெட்டபெயரெச்சம். ஆர்-உவம உருபு. மானார்-மான்போலும்நோக்குடையவர். சிலர், என்றார் பலர் இல்லையென்பது போதர. "குலமகட்குத்தெய்வம் கொழுநனே" என்னு மான்றோர்வாக்கின்படி, "கோனுனதங்கள் கொழுநன்." என்றார், இதனை, "தெய்வந்தொழா அள்கொழுநற்றொழுதெழுவாள்" என்னுந் தேவர்வாக்கானுமுணர்க. "கொழுநனியல் வழுவா" என்பதற்கு நாயகனதுகுறிப்பில் வழுவாத, எனப்பொருள்கொள்ளினும் பொருந்தும், இதனை. "கொண்டான்குறிப்பறிவாள் பெண்டாட்டி" என்பதனுனறிக. வகுப்பீரேல், உண்டுசிலர்தாமே, எனத் தாமே சல்லாபமாகக் கூறினரென்க. சல்லாபம்-வினவும் விடையும். (உஎ)

உற்றவுலவையிடையோர்புலிங்கமூட்டியக்காற்
கற்றைவிசுடர்மீக்கான்றுகனன்மிக்குப்
பற்றுதல்செல்லாதபலவினும்போய்ப்பற்றிடுமா
லற்றெனலாமீங்கோரரிவைமுயங்காதரமே.

(இ—ள்) உலவை உற்ற இடை—காற்றுவீசிக்கொண்டிருக்கின்ற இடத்தில், ஓர் புலிங்கம் மூட்டியக்கால்—ஒரு அக்கினிப் பொறியை மூட்டினல், கற்றைவிசுடர் மீ கான்று—கூட்டமாக விடுகின்றசுவாலைகளை மேலாகக் கக்கி, கனல்மிக்கு—அக்கினியதிகப்பட்டு, பற்றுதல் செல்லாத பலவினும்—பற்றக்கூடாத பல பொருள்களினும், போய்பற்றிடும்—சென்று பற்றிக்கொள்ளும், ஈங்கு ஓர் அரிவை முயங்கு ஆதரம்—இவ்வுலகத்தில் ஒருபெண்ணைத் தழுவுகின்ற (காம) ஆசையும், அற்று எனல் ஆம்—அத்தன்மைபோலாகுமென்று சொல்லலாம். (எ-று)

ஏ, ஆல்—அசைகள். ஆல்—தேற்றமுமாம். கால்—வினையெச்சவிகுதி. விடுசுடர் முக்கால வினைத்தொகை. பல—ஆகுபெயர். அரிவை—பருவங்குறியாது பெண்களைக்குறித்தது. உலவை—என்பதற்குக் காய்ந்தமரம் எனப் பொருள் கொள்ளினும் பொருந்தும். ஊட்டியெனப் பதம் பகுத்து முற்றுமோனையாக்கினுமாம். காற்றில் மூட்டிய வோரக்கினிப் பொறி சுவாலித்து விரிந்து, தக்கது தகாதது என்று பாராமல் எல்லாவற்றையு மொருங்கு தகித்து விடுதல்போல, ஓரேயொரு பெண்ணைத் தழுவுகின்ற காமாக்கினியும், குணம், குலம், ஒழுக்கம், கல்வி, செல்வம் முதலான வெல்லாவற்றையுந் தகித்து, கொலை, களவு, கள்ளு, முதலான எல்லாப் பாவங்களுக்கு மேதுவாகி மறுமையில் நரகத்தையும் சேர்க்குமென்றூரென்பது கருத்து, இதனை, "அணங்குநோ யெவர்க்குஞ் செய்யு மனங்களு லலைப்புண்டாவி—யுணங்கினு ருள்ளஞ்செல்லு மிடனறிந் தோடிச் செல்லா—குணங்குல மொழுக்கங்குன்றல் கொலைபழி பாவம் பாரா—விணங்குமின் னுயிர்க்குமாங்கே யிறுதிவந் துறுவ தெண்ணு." எனவும், "காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்ணோடாத—காமமே களவுக்கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சுங்—காமமே கள்ளுண் டற்குங் காரண மாதலாலே—காமமே நரகபூமி காணியாக் கொடுப்ப தென்றூன்." எனவும் வருந் திருவிளையாடற் புராணச் செய்யுட்களானும், "நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்துக்-கொண்ட கருவளிக்குங் கொள்கைபோ—லொண்டொடி-போதந் தனங்கல்வி போன்றவருங் காலமயல்—மாதர் மேல் வைப்பார் மனம்." என்னுமவ்வைவாக்கானு முணர்க. (உஅ)

சந்திரற்குநேருவமைசாலுந்திருமுகத்துப்
பைந்தொடிக்கைநல்லார்பலரும்புடைசூழக்
குந்தமொத்தநாட்டத்துக்கோதமனார்பன்னியினு
லிந்திரற்குநீங்காவிடர்ப்பழியொன்றெய்தியதே.

(இ—ள்) சந்திரற்கு நேர் உவமை சாலும் திருமுகத்து—சந்திரனுக்கு ஒப்பான வுவமையமைந்த அழகிய முகத்தையும், பைந்தொடிக்கை—பசும் பொன்னாற் செய்த வளையல் தரித்த கைகளையுமுடைய, நல்லார் பலர் புடைசூழவும்—அழகான பெண்கள் பற்பலர் பாங்கரிற் சூழ்ந்திருக்கவும், குந்தம் ஒத்த நாட்டத்து கோதமனார் பன்னியினுல்—வேற்படைபோன்ற கண்களையுடையளான கௌதமவிருஷியின் மனைவியாகிய அகலிகையென்பவளால், இந்திரற்கும்—தெய்வேந்திரனுக்கும், நீங்கா இடர் பழி ஒன்று எய்தியது ஏ—(ஒருகாலத்தும்) நீராத துன்பத்தோடு கூடிய பழி யொன்று சம்பவித்ததல்லவா. (எ—று)

ஏகாரம்—தேற்றம். அசையுமாம். ஆல்—ஏதுப்பொருட்டு. இந்திரற்கும்—என்பதன்கணும்மை யுயர்வு சிறப்பு. கோதமனுர்—என்பதன்கணுர்-உயர்த்தற்கண் வந்தது. மைவிகுதியோடு நடுநின்ற சுகரவுயிர் மெய்யுங்கெட்டு முதலகர மைகாரமாக விகாரப்பட்ட பசுமையென்னும் பண்புப்பெயர். ஆகுபெயர். பலரும்—என்பதனும் ௐ பிரித்துக் கூட்டப்பட்டது. தொடி—வட்டம். நல்லார்—அழகுடையவர். சந்திரனுக்கொப்பான வுவமையமைந்த திருமுகமென்றூர், சந்திரனுக்கு மிவர் முகத்திற்கும் சிறிதும் வேற்றுமையில்லையென்பதும், குந்த மொத்த நாட்டமென்றூர், இந்திரனை யீடழிக்குங் கண்ணென்பதும், கோதமனுரென் றுயர்த்தி யார்விகுதி கொடுத்தார், தப்பாத சாபவாக்குடைய ரென்பதும் போதர.

கட்டழுகுடைய ரென்பார், "சந்திரற்கு நேருவமை சாருந் திருமுகத்துப் பைந்தொடிகளை நல்லார்," என்றும் இந்திராணி, அரம்பை, மேனகை, ஊர்வசி, முதற்பலு மாதரென்பார், "பலரும்" என்றும், காமநுகர்ச்சியின் பொருட்டவாவிக்கொண் டருகிலிருந்தன ரென்பார், "புடைசூழ" என்றும், அதுவும் பற்றுதென்றகலிகையிடத் தத்தாரத்திரியிற் சென்று, கௌதம விருஷியாற் சபிக்கப்பட்டு இன்றைக்கும் மாறுத யோனிக்குறிகளைத் தேகமெங்குமுளனென்பார், "கோதமனுர் பன்னியினு னீங்காவிடர்ப்பழியொன் றிந்திரற்கு மெய்தியது," என்றுங் கூறினுர். மேலைச் செய்யுளுக்கிஃது தாரணமாயிற்று.

தெய்வேந்திரனகலிகையோடு கள்ளப் புணர்ச்சி செய்துகொண்டிருக்கையில், முன்னமே பொழுது விடிந்ததென்று பூப்பறிக்கச் சென்றிருந்த கௌதமமுனிவர், பொழுது விடியாமையால் மீளவுந் தமதில்லத்திற்கு வர, அது கண்ட இந்திரன் பூனையுருக்கொண்டு பலகணியிற் பாய, முனிவர், ஞானநோக்காலி வனிந்திரனென்று கண்டு ஒரு யோனிக் காசையுற்றமையாலுனது தேகமெங்கும் யோனியாகக் கடவதென்று சபித்துவிட்டனர், பின்பு தெய்வேந்திரன் றவம்புரிந்து சிவபெருமானது திருவருளினுல், எண்ணில்லாதவைகளை யாயிரமாகவும், பிறர் கண்களுக்குக் கண்களாகவுந் தனது கண்களுக்கு யோனிகளாகவும் பெற்றுக்கொண்டனன். இதனை இராமாயணம் அகலிகை சாபந் தீர்த்த படலத்திற் காண்க.

## வேறு.

கூன்முகத்திங்கணெற்றிக்கோதையர்குழுவுக்கெல்லாந்
தான்முதலிறைவியாகத்தன்கையாற்சமைக்கப்பட்ட

மான்முகநோக்கிமுன்னோர்மலரயன்மையலெய்தி
நான்முகனானானென்பநாமுணராததன்றே.

(இ-ள்) கூன்முகம் திங்கள் நெற்றி—வளைந்தமுகமுள்ளதான பிறைச் சந்திரன்போன்ற நெற்றியையுடைய, கோதையர்குழுவுக்கெல்லாம்—பெண்கள் கூட்டத்துக்கெல்லாம், தான் முதல் இறைவி ஆக—(அழகிற்கு) அவள் தானே முதற்றலைவி யாகும்பொருட்டு, தன்கையால்சமைக்கப்பட்ட—தனதுகையினாற் சிருட்டிக்கப்பட்ட, மான்முகம் நோக்கிமுன்—மானது பார்வை போலும் பார்வையையுடைய திலோத்தமையி னிடத்து, ஓர் மலர் அயன் மையல் எய்தி—ஒருபதுமாசனனாகிய பிரமன் ஆசை கொண்டு, நான்முகன் ஆனான் என்ப—நான்கு முகங்களை யுடையவ னாயினானென்று (அறிந் தோர்) சொல்லுவர், நாம் உணராதது அன்று—(அது) நாங்களறியாத தொன்றல்ல. (எ-று)

ஏகாரம்—ஈற்றசை. கூன்முகம்—என்பதின்முகம். முனை. வடிவ மென் பாருமுளர். மான்முகம். என்பதின் முகம் ஆகுபெயர். முன்-ஏழனுருபு. "கற்றார்முன் தோன்றா கழிவிரக்கம்" என்றதிற்போல. மையல். போலி —ஓர் மலரயனென்றது. பல மலரயருண்மையின். அயன்—அழியாதவன். நீரு மறிவீரென்பார். நானென்றொருமையாற் கூறாது நாமெனப் பன்மையாற் கூறினார்.

அகலிகையா லிந்திரனாயிரங் கண்களைப்பெற்றது போல, பிரமாவும் சரஸ்வதி, காயத்திரி சாவித்திரி முதலிய பெண்களிருந்தும், திலோத்தமையால் நான்கு முகங்களைப் பெற்றானென் றிதுவு மதற்கோருதாரணங் காட்டியவாறும்.

இதுமுதற் பதினான்கு செய்யுட்கள் ஈரசையான்வந்த அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தங்கள்.

பிறரால் வெல்லக் கூடாத மிக்க பராக்கிரமசாலிகளும், ஒருவயிற்றுப் பிறந்தவருமாகிய சுந்தன், உபசுந்தன் என்னு மிரண்டசுரர்களை மயக்கி யவர்க்குட் பகைமையுண்டாக்குமாறு, பிரமதேவர் தன்னிடத் தடைக்கலம் புகுந்த தேவர்கள் முன்னிலையில் பேரழகுடையளாக வோர் பெண்ணைப் படைத்து திலோத்தமையென்று பெயருமிட்டு நீ யவ்வசுரர் மாட்டுச் செல்லக் கடவையென் றனுப்பும் போது, அவள் பிரதக்ஷிணஞ் செய்கையில், அவருள்ளீடழிந் தவளழகைப் பார்க்கவேண்டுமென்னு மாசையால், திரும்பித் திரும்பி நோக்குமிற் றேவர் நகுவரென்று, கீழ்த்திசையை நோக்கிப் படைத்துக்கொண் டிருந்த அவர், அவள் தெற்கே வரும்போது ஒருமுக

மும், மேற்கேவரும்போது ஒருமுகமும், வடக்கே வரும்போது ஒருமுகமுமாக நான்கு முகங்களையுண்டாக்கினரென்பது சரித்திரம். இதனை இந்நூலில், "வெள்ளைக்கமலத்தியை மெய்யுறவுந்—தெள்ளூற்றணிசெய்த திலோத்தமைபால்—உள்ளப்புணர் வுற்றிடவும் முனைநான்" எனவும், "கிளியின் மேற் செலுங்கேள் கிளரோதிமம்." எனவும் கூறியிருத்தலானும், சிந்தாமணியில், "பெரும்பெயர்ப் பிரமனென்னும் பீடினாற் பெரிய நீரா—னரும்பிய முலையினளுக் கணிமுக நான்கு தோன்ற—விரும்பியாங் கவளை யெய்தான் விண்ணக மிழந்ததன்றித்—திருந்தினாற் கின்று காறுஞ் சிறுசொல்லாய் நின்றதன்றே." எனக் கூறியிருத்தலானு முணர்க. (௩௰)

**மற்றுளமுனிவர்தேவர்மாயமாங்காமந்தன்னா**
**லுற்றிடுசெயற்கையெல்லாமுரைப்பினுமுலப்பின்றாமா**
**லற்றெலாநிற்கயானவ்வாயிழைமடந்தைகூட்டம்**
**பெற்றிடுமொழுக்கந்தன்னைப்பேணலன்பிறப்புநீப்பேன்.**

(இ—ள்) மற்று உள முனிவர் தேவர்—(இந்த இந்திரனும் பிரமனுமன்றி) மற்றுமுள்ள விருஷிகளும் தேவர்களும், மாயம் ஆம் காமம் தன்னால்—மாயமாகும் காமத்தினால், உற்றிடு செயற்கை எல்லாம்—அடைந்த செய்கைகள் முழுதும், உரைப்பினும் உலப்பு இன்று ஆம்—சொல்லுகினும் முடிவு போகாததாகும், அற்று எலாம் நிற்க—அத்தன்மைகளெல்லாமிருக்க, யான்—(தேவரீரது காதற்புதல்வனாகிய) நான், அ ஆய் இழைமடந்தை கூட்டம் பெற்றிடும்—அந்தத் திருத்தமான வாபரணங்களைத் தரித்த மாதர்கள் சேர்க்கையைப் பொருந்தும், ஒழுக்கம் தன்னை பேணலன்—இல்லறவொழுக்கத்தைக் கைக்கொள்ளமாட்டேன், பிறப்பு நீப்பேன்—(துறவறவொழுக்கத்தின்கணின்றேனது) பிறவியைத் தீர்ப்பேன். (எ—று)

ஆல்—அசை. அற்று—தொகுதியொருமை. அற்றெலாம்—ஒருமைப்பன்மைமயக்கம். 'ஒருமையிற் பன்மையு மேற்றிடம் பிறவிடந் தழுவலுமுள" என்பதிலக்கணமாகலின். "மாயமாங்காமம்," என்றார் இன்பத்தைச்செய்வதுபோற் காட்டித் துன்பத்தைச் செய்வதென்பது போதர. கண்ணுவன், விசுவாமித்திரன், காசிபன் முதலான முனிவர்களும், திருமால், சூரியன், சந்திரன் முதலான தேவர்களும், மாதரோடு கூடியிடர்ப்பட்ட விவ்வாறன்ன பலவுளவென்பார், "முனிவர் தேவர் மாயமாங்காமந்தன்னா லுற்றிடு செயற்கையெல்லா முரைப்பினு முலப்பின்றாம்," என்றும், அவைகளைக் கூறுவதிற் பயனின்றென்பார், "அற்றெலாநிற்க" என்றுங் கூறினார், (௩௧)

பூண்டகுவிலங்கற்றிண்டோட்புரந்தரன்முதலோர்சீரும்
வேண்டலனில்வாழ்வென்னும்வெஞ்சிறையகத்தும்வீழேன்
மாண்டகுபுலத்தின்மாயுமயக்கொரீஇத்தவமென்றோது
மீண்டியவெறுக்கைமேவியின்பமுற்றிருப்பனென்றான்.

(இ-ள்) பூண்தகும் விலங்கல் திண்தோள்— (நான்) ஆபரணங்களை யணியத்தகும் மலைபோன்ற திண்மையான புயங்களையுடைய, புரந்தரன் முதலோர்சீரும்வேண்டலன்—தெய்வேந்திரன் முதலான தேவர்களுடைய (சுவர்க்கபதச் செல்வம்முதலிய) செல்வங்களையும் விரும்பேன், இல்வாழ்வுஎன்னும் வெஞ்சிறைஅகத்தும் வீழேன்—இல்லறவாழ்க்கையென்கின்ற கொடிய மறியலினிடத்து மகப்படமாட்டேன், மாண்தகுபுலத்தில்—மாட்சிமையினால் மேம்பட்ட ஐம்புலன்களால், மாயும்மயக்கு ஒரீஇ—அழிகின்ற அஞ்ஞானத்தை நீங்கி, தவம் என்று ஓதும் ஈண்டிய வெறுக்கை எய்தி—தவமென்று சொல்லப்படும் நிரம்பிய செல்வத்தை யடைந்து, இன்பம் உற்று இருப்பன் என்றான்— அதன்காரியமாகிய மோக்ஷ இன்பத்தைப் பெற்றிருப்பேனென்று (தாதைக்கூற்றுக்குடன்படாது மிருககண்டயோர் மறுத்துக்) கூறினார். (எ-று)

ஒருவியென்பது—ஒரீஇயென அளபெடுத்தது. வெறுக்கை—(ஞானிகளால்) வெறுக்கப்படுவது. புரந்தரன்—பகைவருடம்பைப் பிழப்பவன், பகைவர் நகரங்களையழிப்பவன்.

மனிதரின்பத்தினும் தேவரின்பமும் தேவரின்பத்தினும் தெய்வேந்திரனின்பம் மேம்பட்டதாகலானும், அதுவும், பொன்விலங்குபோற் பிறவிக்கேதுவாக நிற்றலானும், "புரந்தரன்முதலோர் வாழ்வும் வேண்டலன்" என்றும், இல்வாழ்க்கை, தன்னிடத்தகப்பட்டவரை யப்புறமகல விடாது மறியல்போலகப்படுத்தும் கொள்கையையுடைமையால் "இல்வாழ்வென்னும் வெம்சிறையகத்தும் வீழேன்" என்றுங் கூறினார். அருட்செல்வத்தையுடையோர்கள் இந்திரச்செல்வம் முதலான பொருட்செல்வங்களைக் கிஞ்சித்தும் விரும்பாரென்பதை, "கொள்ளேன் புரந்தரன்மாலயன் வாழ்வு குடிகெடினு—நள்ளே னினதடி யாரொடல் லானர கம்புகினு—மெள்ளேன் றிருவருளாலேயிருக்கப் பெறினிறைவா—வுள்ளேன் பிறதெய்வ முன்னையல்லாதெங்க ளுத்தமனே." என்னுந் திருவாதவூரடிகள் திருவாக்கானும், "கோலநீடிய நிதிபதிவாழ்க்கையுங் குறியேன்—மேலையிந்திர னரசினைக் கனவினுங்வெஃகேன்—மாலயன்பெறு பதத்தையும் பொருளெனமதியேன்—சாலநின்பதத் தன்மையேவேண்டுவன் றமியேன்." என இந்நூலின்மேற் கூறுமாற்றானு முணர்க. (௧௨)

இவைபலவுரைத்தலோடிருந்தகுச்சகன்றனிந்தக்
குவலயமதிக்குமாற்றாற்கூறுமில்லொழுக்கந்தன்னை
நவையெனவிகழாநின்றானான்மறைத்துணிவுங்கொள்ளா
னவமயல்பூண்டானென்னாத்துயர்கொடுசாற்றலுற்றான்.

(இ—ள்) இவைபல உரைத்தலோடும்—(மிருகண்டுமுனிவர்) இவை கள் பலவற்றைச் சொல்லுதலும், இருந்தகுச்சகன்— செவிகொடுத்துக் கொண்டிருந்த குச்சகமுனிவர், இந்த குவலயம் மதிக்கும் ஆற்றால் கூறும் இல் ஒழுக்கம் தன்னை—இந்தப் பூவுலகத்தவர்கள் நன்குமதிக்கும்பொருட்டினால் விதந்து சொல்லுகின்ற இல்லறவொழுக்கத்தை, நவை என இகழாநின்றான்—குற்றமுடையதென்று நிந்திக்கின்றான், நால்மறை துணிவும் கொள்ளான்—(இவன்) நான்குவேதங்களின் முடிபான பொருளையு மங்கீகரிக்கமாட்டான், தவம்மயல் பூண்டான் என்று—தவத்திலே யாசை கொண்டிருக்கின்றானென்றெண்ணி, துயர்கொடுசாற்றல் உற்றான்—(தனது சந்ததியற்றுப்போகப்போகின்றதேயென்று) வருத்தங்கொண்டு சொல்லுகின்றனர். (எ—று)

தான்—அசை. குவலயம்—ஆகுபெயர். ஆநின்று—நிகழ்கால இடைநிலை. துணிவு—நிச்சயப்படுத்தும்பொருள், சித்தாந்தம். மயல்—ஆசை. நான்குவேதங்களாவன—இருக்கு, யசுர், சாமம், அதர்வணம். மறை—மறைவாக உள்ளது.

இல்லறமானது, உலகத்திற்கின்றியமையாத் துணையாகி மதிப்பையுங் கொடுத்தலால், "குவலயம் மதிக்குமாற்றாற் கூறுமில்லொழுக்கம்" என்றும், பிரமசரியத்தை யநுட்டித்ததன்மேல் கிருகஸ்தாச்சிரமத்தைய நுட்டித்ததன்மேற் றுறவுபூணவேண்டுவது வேதநூற்கொள்கை யாதலால், "நான் மறைத்துணிவுங்கொள்ளான்," என்றுங் கூறினார். (௩௩) னின்

புலத்தியன்போலுமேலாய்பொருவின்மங்கலஞ்சேர்பொன்
கலத்தியல்வதுவைபூண்டோர்கன்னியைக்கலத்தல்செய்து
குலத்தியன்மரபிற்றோம்பக்குமரரைப்பயந்தேயன்றோ
நலத்தியறவத்தையாற்றிநண்ணருங்கதியிற்சேரல்.

(இ—ள் புலத்தியன்போலும் மேலாய்—(அறிவு தவம் முதலியவற்றால்) புலத்தியமுனியை யொக்கும் மேன்மையுள்ள மகனே! பொருவு இல் மங்கலம்சேர்—ஒப்பில்லாத மங்கலஞ்சேர்ந்த, பொன்கலத்து இயல்—இலக்குமியாகப்பாவித்தியற்றப்படும் திருமங்கலியத்தா லியைந்த, வதுவை பூண்டு—கல்யாணத்தைச்செய்து, ஓர்கன்னியை கலத்தல் செய்து—ஒரு கன்னிகை

யைத் தழுவி, குலத்து இயல் மரபு ஓம்ப—(தனது) குலத்துக்குரிய முறைகளைப் பாதுகாக்கும் பொருட்டு, குமரரை பயந்தே யன்றோ—புத்திரரைப் பெற்று வைத்துவிட்டே யல்லவா, நலத்து இயல் தவத்தை ஆற்றி—நன்மையாற் றகுதிவாய்ந்த தவத்தைச் செய்து, நண்ண அரும் கதியில் சேரல்—அடைதற்கருமையான மோக்ஷத்தைச் சேர்தல். (எ—று)

ஏகாரமும், ஓகாரமும்—தேற்றம். பொன்னின்—என்பதன்கணின்னும், மரபின்என்பதன்கணின்னும்—சாரியை. நண்ணரும்—ஈறுதொகுத்தல். பொன் இலக்குமி. கலம்—திருமங்கலியம். கன்னி—மணமாகாத பெண்.

புலத்தியமுனிவர், இளமையிலே வைராக்கியம் பூண்டு மேருமலைச் சாரலில் நெடுங்காலந் தவம்புரிந்தவராதலானும், திருணபிந்து என்னும் ராசமுனிவரின் வேண்டுகோளினு லவர் புதல்வியை மணஞ்செய்து புத்திரனைப் பெற்று வைத்துவிட்டு மீளவுந் தவஞ்செய்யப் போனவராதலானும், அங்ஙனமே நீயுஞ் செய்யக் கடவையென்பதைக் குறிப்பிப்பார், மிருககண்டேருக்குப் புலத்தியமுனிவரை யுவமையாக வைத்து விளித்தார்.

"பொருவின் மங்கலஞ்சேர் பொன்னின்கலத்தியல் வதுவை" என்பதற்கு, ஒப்பில்லாத மங்கலம்பொருந்திய பொன்னாற்செய்த திருமங்கலியத்தானாய வதுவை, எனப் பொருள் கூறுவாருமுளர். இலக்குமி, எப்பொழுதுஞ் சுமங்கலியாகலின், "பொருவின் மங்கலஞ்சேர் பொன்" என்றடை கொடுத்தார், இதனை, "மலர்மென் பாவை, முழுதுள திருவுமென்று முடிவின்மங்கலமுமெய்த, விழுமிதி னேற்றுப் பெற்ற வியன்றிருவானூர் கண்டான்," என இந்நூலிற் கூறியிருத்தலானும், இலக்குமிதானே திருமங்கலிய மாகுமென்பதை, "மானணிநோக்கி நல்லார் மங்கலக் கழுத்துக்கெல்லாந்—தானணியாயபோது தனக்கணியாது மாதோ," என்னுமிராமாயணச் செய்யுளானுமுணர்க. (௬௪)

மன்பதையுலகமேபோன் மாலுறுமயங்குகாம
வின்பநீநுகர் தற்கேயோ விசைத்தனனிறந்தமேலோர்
துன்பமுநிரயஞ்சேர்வுந் துடைத்திடுந்தொன்மைநோக்கி
யன்புறுபுதல்வர்க்காகவரிவையைக்கோடியையா.

(இ—ள்) ஐயா—மகனே! உலகம்மன்பதை ஏ போல்—உலகத்தின்கணுள்ள (சாமானிய) மாந்தர் கூட்டம்போல, நீ—நீயும், மால் உறு—ஆசையுற்று, மயங்கு காம இன்பம் நுகர்தற்கு ஏ ஓ—மயங்குதற்குரிய காமவின்பத்தை யநுபவித்தற்காகவேயோ, இசைத்தனன்—(உன்னைக் கல்யாணஞ் செய்யச்) சொன்னேன். (அதற்கன்று வேறெதற்காக வென்றபடி)

இறந்த மேலோர்—இறந்துபோன (எங்கள்) முன்னோர்களுடைய, நிரயம் சேர்வும் துன்பமும்—நரகத்திற் சேருதலையும் (மற்றுமுள்ள) வருத்தங்களையும், துடைத்திடும் தொன்மைநோக்கி— சிராத்தம்முதலிய வாயிலாக நீக்கிவிடும் பழைய நூன் விதியைப்பார்த்து, உறு அன்பு புதல்வர்க்கு ஆதரிவையைகோடி—மிக்க அன்புள்ள புதல்வரைப் பெறுதற்காக ஒரு பெண்ணைக் கல்யாணஞ் செய்து கொள்ளக்கடவை. (எ—று)

உலகமே யென்பதன்க ணேகாரம்—தேற்றம். நுகர்தற்கே யென்பதன் கணேகாரம்—தேற்றத்தோடிழிவு சிறப்பு. ஓகாரம். எதிர்மறை. உறு—ஆகரவீற்றுடன்பாட்டு வினையெச்சம். தொன்மை—ஆகுபெயர். அரிவை—கன்னிகையையுணர்த்திநின்றது. இடு, துணிவுப்பொருளுணர்த்திற்று.

உலகத்தாரைப்போல இச்சையின் பொருட்டன்று, இறந்த முன்னோர்களின் நரகயாதனையையும், மற்றுமெக்கதியிற் றுன்பங்களையும், சிராத்தம, தருப்பணம் முதலிய வாயிலாகத் தீர்க்கும் புத்திரரின்பொருட்டுக் கல்யாணஞ் செய்யென்றாரென்பது கருத்து. புத்திரர்தாமே பிதிர்களுக்கு துன்பத்தைத்தீர்த்து இன்பத்தைக் கொடுப்பவரென்பதை, தம்பொருளென்ப தம்மக் களவர்பொருட்டந்தம் வினையால் வரும்," எனவும் "பெறுமவற்றுள் யாமறிவ திலலையறிவறிந்த—மக்கட்பேறல்ல பிற." எனவும், "எழு பிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்—பண்புடை மக்கட் பெறின்." எனவும் வருந் திருக்குறளுரைகளானும், "பொறியிலாக் கொடியேற்கென்னே புதல்வனையளித்தா னெந்தை, யறநெறி திறம்புகின்றேற் கருமகவிருக்குங் கொல்லோ, மறுகுபுன் னரகினின்று மற்றினி யெடுப்பாரியாரென், றுறுதுயர்க் கடலின் வீழ்ந்து கரைபெறா துழல்கின் றானே."என்னுங் காசிகாண்டச் செய்யுளானுமுணர்க. (௩௫)

சித்திரமிலகுசெவ்வாய்ச்சீறடிச்சிறுவர்தம்மைப்
புத்திரரென்னுஞ்சொற்குப்பொருணிலையயர்த்திபோலா
மித்தகவதனைநாடியில்லறம்பூண்டுநிற்ற
லுத்தமநெறியேயாகுந்தவத்தினுதொழுக்குமன்னே.

(இ—ள்) செவ்வாய்—சிவந்த வாயையும், சீறு அடி—சிறிய கால்களையுமுடைய, சித்திரம் இலகு சிறுவர்தம்மை—சித்திரப் பாவைபோல விளங்கும் பிள்ளைகளை, புத்திரர் என்னும் சொற்கு—புத்திரரென்று வழங்கப்பட்டு வருகின்ற சொல்லுக்குள்ள, பொருள் நிலை அயர்த்திபோல் ஆம்—பொருளினுண்மை நிலையை மறந்துவிட்டாய் போலும், இதகவு அதனைநாடி—இந்தப்பெயரின் பொருளாகிய வதனையுற்று நோக்கி, இல்லறம் பூண்டு நிற்றல்—இல்லறவொழுக்கத்தைக் கைக்கொண் டொழுகுதல், உத்தமம்

நெறியே ஆகும்—உத்தமமான மார்க்கமேயாகும், தவத்தினது ஒழுக்கும் அஃது ஏ—தவத்துக்குரிய மார்க்கமும் அத்தன்மையாம். (எ—று)

ஏகாரங்கள்—தேற்றம். போல்—ஒப்பில் போலி. ஆட்—அசை. சிறுமை யென்னும் பண்புப்பெயர். ஈறுகெட்டு முதனீண்டது. அயர்த்தி—முன்னி லையிறந்த காலவினை முற்று. இகரச்சுட்டு பெயரையும், தகவு அப்பெ யர்ப்பொருளையும் குறித்து நின்றன. சித்திரம் இலகு என்பதற்கு அழ கு விளங்குகின்ற, எனவும், இத்தகவு, என்பதற்கு இல்லறத்தின் தகுதி எனவும் பொருள்கூறினும் பொருந்தும். புத். ஓர். நரகவிசேடம். திரா காப்பவர் எனவே, புத்திரரென்பதற்கு இறந்துபோன தங்குலத்து முன் னோர் களைநரகத்து நின்றுங் காப்பவரென்பது பொருளாம். தேற்றே காரமுங் கொடுத்து, "தவத்தினதொழுக்க மஃதே," என்றார். கிருகஸ்தாச் சிரமத்தை யநுட்டித்ததன்மேல், துறவறமாகிய தவத்தைச் செய்யவேண் டுமென்பது நூன்விதியாகலின். (௩௬)

குவவுறுநிவப்பின மிக்ககோடுயர்குடுமிக்குன்றி
னிவர்வுறுகாதலாளரியற்படிசாரலெய்தித்
திவவொடுபோதலன்றிச்சேணுறவுகழுந்தன்மைக்
குவமையதாகுமின்னேயுயர்தவத்தொழுகவுன்னல்.

(இ—ள்) இன்னே உயர்தவத்து ஒழுக உன்னல்—(நீ இல்லறத்தை யநுட்டித்ததன் வழியாகத் துறவறத்திற் பிரவேசிக்கக் கருதாமல், பிரம சரியத்து நின்றவழியும்), இப்பொழுதிற்றானே உயர்வுடைய துறவறமா கிய தவத்தின்கணொழுகுமாறு சிந்தித்தல், (எதுபோலுமெனின்) குவவு உறுநிவப்பின் மிக்க—பருமையினாலும் மிக்க உயரத்தினாலும் மேற்பட்ட, குன்றின் கோடு உயர் குடுமி—மலையினது சிகரமாகிய உயர்ந்த உச்சியில், இவர்வுறு காதலாளர்—ஏறவேண்டிய விருப்பத்தையுடையவர்கள், இயல்ப டு சாரல் எய்தி—ஒழுங்குபொருந்திய சாரலையடைந்து, திவவு ஒடு போ தல் அன்றி—அதன்படியினாலேறிப்போவதையல்லாமல், சேண் உறஉகழும் தன்மைக்கு உவமை ஆகும்—ஆகாயத்திற்பொருந்த (எழுந்து) பாயுந்தன் மைக்குச் சமானமாகுமல்லவா. (எ—று)

குவவு—பருமை. திவவு—படி, அது பகுதிப்பொருள் விகுதி. உயர்தவம்—முக் காலவினைத்தொகை. "ஊசியொடு குயின்றதூசும்பட்டும்."என்புழிப்போல ஒடுவுருபு கருவிப்பொருட்குமாலுருபின்கண் வந்தது. மலையினுச்சியிற் போக விரும்புவோர் அதற்கு வழியாகிய படியினாலேறிப்போகாது அடியினின் றும் பாய்ந்துபோகக் கருதுவரேல், உச்சியிற் போதலுங் கூடாது அவர்

தமக்குங் கேடாய் முடிதல்போல, இல்லறத்தையிடையில்விட்டு அதன் மேனிலைக்கணுள்ள துறவறத்துப் பிரவேசிப்பாயாயின், துறவறமுங் கை கூடாது காமத்தின்கண்ணு மகப்பட்டு வருத்தமுறவேண்டியும் வருமென்றாரென்பது இதன்கருத்து. எடுத்துக்காட்டுவமையணி. (௬௭)

**தருவினில்விலங்கிலன்ன தகையனபிறவிற்சால**
**வருபயன்கோடற்கன்றே மற்றவைவரைதல்செய்யார்**
**பெருகுமில்லறத்தினோடும்பெருமகப்பொருட்டானீயு**
**மரிவையைமணந்துபின்னாளருந்தவம்புரிதியன்றே.**

(இ-ள்) தருவினில்—மரங்களிலும். விலங்கில்—மிருகங்களிலும், அன்னதகையனபிறவில்—அத்தகையதான பிறவற்றிலும், சாலவருபயன் கொள்தற்குஅன்றே—மிகவும்வருகின்ற உபயோகங்களைப் பெற்றுக்கொள்ளுதற்காகவல்லவா, அவைவரைதல்செய்யார்—உலகத்தார் அவைகளை விலக்கிவிடாமற் பாதுகாப்பர், நீயும்—(அதுபோல என்மகனே!) நீயும், பெருகும் இல்லறத்தினோடும்—(தருமங்கள்) விருத்தியாகு மில்லறமாகிய தருமத்தோடும், பெரும் மக பொருட்டு ஆல்—பெருமையான புத்திரப்பேற்றின் பொருட்டினால், அரிவையை மணந்து—ஒருபெண்ணைக் கல்யாணஞ்செய்து, (இல்லறத்தை முடித்த) பின்னாள்—பிற்காலத்தில், அரும்தவம் புரிதி—செய்தற்கருமையான தவஞ் செய்யக்கடவை. (எ-று)

அன்று, ஏ, மற்று—அசைகள். அன்றே—தேற்றம். அன்ன—சுட்டு மருஉ. ஆல்—ஏதுப்பொருட்டு. ஆலையசையாக்கி, அறத்தினோடும் மகப் பொருட்டு, என முடிப்பினுமாம். ஓடும், உம்பெற்று வந்த எண்ணோடு. பொருட்டு—நிமித்தகாரண காரியத்தில் வந்த நான்காவதன் சொல்லுருபு. மணந்து, என்னுஞ் செய்தென்னும் வாய்பாட்டு வினையெச்சத்தின் முடிக்குஞ்சொல் அவாய்நிலையால் வருவிக்கப்பட்டது. வரைதல்—கொள்ளல், நீக்கலென்னும் பொருள்களைத்தரும் பதமாகலின், செய்யாரென்பதையெழுவாயாக்கியும், வரைதல் என்பதைப் பயனிலையாக்கியும் செம்மையானவர்களேற்றுக்கொள்ளுதலெனப் பொருண்முடிபு செய்தலுமொன்று. பெறு மக—என்பதும் பாடம். ஆதுலர்க்கன்னமிடுதலாதிய முப்பத்திரண்டு தருமங்களும் வளர்ந்து விர்த்தியாதற்கேது, இல்லறமென்பார், "பெருகுமில்லறம்" என்றும், சற்புத்திரனையே பெறவேண்டுமென்பார், "பெருமக" என்று மடைபுணர்த்திக் கூறினார். அறிவுடைய சற்புத்திரனையே பெறவேண்டுமென்பதை, "பெறுமவற்றுள் யாமறிவ தில்லையறிவறிந்த-மக்கட்பேறல்லபிற." என்னுந் தேவர்குறளானுமுணர்க. உலகத்தார், மரங்களையும், மிருகங்களையும் பாதுகாப்பது அவைகளை விரும்பியன்று, அவைகளால்

வரும் பலன்களை விரும்பியேயாம், அதுபோல நீயும், ஒருபெண்ணைப் பாதுகாத்தற்பொருட்டன்று. அவளோடுமிணைந்து பெறற்பாலதான இல்லறமாகிய தருமத்தின் பலனையும் மகப்பேறாகிய பலனையும் பெறுதற்பொருட்டுக் கல்யாணஞ் செய்துகொள்ளுதியென்றா ரென்பது கருத்து. இதுவும் மேலையணி. (௩௮)

இந்நலன் னிலைமேனாளேயெண்ணிலையிந்நாள் காறு
முந்துசெய் கடனதாற்றிமுற்றினை முறையேபன்னாட்
சிந்தனைசெய்தவானோர்க்கவிமுதற்சிறப்புச்செய்யாய்
மைந்தநீயின்னேநோற்கும்வண்ணமேயெண்ணற்பாற்றோ.

(இ-ள்) மைந்த நீ—மகனே! நீ, இந்த நல்நிலைமேல்நாளே எண்ணிலை—இந்த நல்ல வில்லற நிலையை முன்னாளிற்றானே செய்யவேண்டுமென்று கருதாதவனாய், இந்நாள் காறும்—இற்றைத் தினம்வரைக்கும், முந்துசெய் கடன் முறையே ஆற்றிமுற்றினை—முதலிலநுட்டிக்கும் பிரமசரியத்தை முறைமையாகவேயநுட்டித்துமுடித்தாய், பலநாள் சிந்தனை செய்த—இனி (பலநாளாக எப்போ நமக்கவியைத் தருவான் தருவானென்று ஆவலோடும் சிந்தித்துக்கொண்டிருக்கின்ற, வானோர்க்கு—தேவர்களுக்கு, அவிமுதல் சிறப்பு செய்யாய்—(வேள்வியுணவாகிய அவிகொடுத்தல் முதலான சிறப்புகளைச் செய்யாதவனாய், இன்னே நோற்கும்வண்ணமே எண்ணல் பாற்றோ—இப்பொழுதே தவம் செய்யும்படியாக நினைத்தல் தகுதியா. (எ-று)

ஓகாரம்—எதிர்மறை. ஏகாரங்கள்—தேற்றம். அது—பகுதிப்பொருள் விகுதி. எண்ணிலை, செய்யாய் என்னும் முற்றுக்கள் எச்சமாக்கப்பட்டன. செய்த—காலமயக்கம். எண்ணிலையென்பதற்கு எண்ணுகின்றிலையெனவும், செய்யாய் எ பதற்கு செய்கின்றிலை, எனவும் முற்றாக்கினுமாம். இனிச் செய்யாய், என்பதற்கு, அவிமுதற்சிறப்பைக் கொடுப்பாய் என்றுரைப்பினுமமையும். முறையே என்பதை நின்றாங்குவைத்து, இது முறைமையே, எனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். சிறப்பு—விழா. "சிறப்பொடுபூசனைசெல்லாது." என்னுந் திருக்குறளுரையானுமறிக. எண்ணிலை முற்றினையெனவும், செய்யாய் நோற்குமெனவுமியையும். வானோர்—பிதிர் தேவராதித்தேவர். இல்வாழ்வானே, பிதிர்தேவராதியர்க்கு அவிமுதற்சிறப்புச் செய்பவனென்பதை, "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக் கறானென்றாங்—கைம்புலத்தாறோம்பறலை." என்னுந்திருக்குறளானுமுணர்க. பிரமசரியத்தைப் பேணாதுவிட்டு, இளமையிற் கிருகத்தாச்சிரமத்தை நடாத்தித் துறவுபூண்பவருமுளரென்பார், அவர்போலாகாது முறையாக ஒழுக

வேண்டுமென்னும் நன்னெறியையுடையவன் நீ யென்பது போதர, "இந்த நன்னிலை மேனுளே யெண்ணிலையிந்நாள் காறு முந்துசெய் கடனதாற்றி முறையேமுற்றினே." என்றும், பிரமசரியத்தை நடாத்திமுடித்தவாறுபோலத், தேவர்கடனைத்தீர்க்கு மில்லறத்தையும் நடாத்தி முடிக்கவேண்டுமென்பார், "சிந்தனைசெய்தவாஞோர்க் கவிமுதற்சிற ப்புச்செய்பாய்."என்றும, அதற்குமுன் தவம சிந்திக்கவுந் தக்கதொன்றல்லவென்பார், "இன்னே நோற்கும் வண்ணமேயெண்ணற்பாற்றே" என்றுங் கூறினார். ௩௩)

இந்திரர்புகழுந்தொல்சீரில்லறம்புரிந்துளோர்க்குத்
தந்தமதொழுக்கந்தன்னிற்றகுமுறைதவறிற்றேனுஞ்
சிந்திடுந்தீர்வுமுண்டாற்செய்தவர்க்கனைய சேரி
னுய்ந்திடலரிதால்வெற்பினுச்சியிற்றவறலொப்ப.

(இ—ள்) இந்திரர் புகழும் தொல்சீர் இல்லறம் புரிந்துளோர்க்கு—இந்திரர்களாற் புகழப்படும் பழமையான சிறப்பமைந்த இல்லறத்தை இயற்றுகின்றவர்களுக்கு, தம்தமது ஒழுக்கம் தன்னில்தகும்முறை—தங்கள் தங்களுடைய வருணாசாரங்களின் தக்கமுறைமைகள், தவறிற்று எனும்—தவறிப்போயிற்றென்றாலும், சிந்திடும் தீர்வுமுண்டு—அக்குற்றத்தையொழித்துவிடும் பிராயச்சித்தங்களுமுண்டு, செய்தவர்க்கு அனையசேரின்—தவஞ்செய்வோர்க்கு அக்குற்றம் சம்பவிக்கின், வெற்பின்உச்சியில் தவறல்ஒப்ப—மலைச்சிகரத்தினின்றுந் தவறிவிழுதலைப்போல, உய்ந்திடல் அரிது—கடைத்தேறுதலின்மையாகும். (எ—று)

ஆலிரண்டும். அசைகள். "தவறிற்றேனும்" என்றவும்மையால் அதுவுந் தவறக்கூடாதென்பது பெறப்பட்டது. தீர்வு—கழுவாய், பிராயச்சித்தம். இந்திரர்புகழுமெனவே யேனைத்தேவர் புகழ்தல்தானே யமைந்தது. "இந்திரர்" எனப் பன்மையாற் கூறினர் அவரும் பலராதலின். இதனை, "அந்தமின்றியென் ஞானையின்மாண்டிடு மிந்திரன்றனை யெண்ணிடலாகுமோ," என இப்படலத்துமேற் கூறுமாற்றானும், "பிலமென்றிலடைந் தவச்சிரக்கைவாசவர்களொருநால்வரைக் காட்டினனே," என்னும்பாரதச் செய்யுளானுமுணர்க. அனைய—பெயர். "உறற்பாலநீண்டாவிடுதலரிது." என்ற நாலடியார்ச்செய்யுளிற்போல, ஈண்டு அரிது என்பது இன்மை குறித்து நின்றது, இல்லறங்கீழ்நிலைக்கணுள்ளதாகலினதிற் றவறுநேர்ந்தாலஃது கழுவாயாற்றீருமென்பதும், மிக வுன்னதமான மலைச்சிகரத்து நின்று தவறுவோரையமின்றி யிறந்துவிடுதல்போல, மேனிலைத்தாகுந் துறவறமாகிய தவநெறிக்கணொழுகுவோர் குற்றம்புரியிற் கழுவாயின்றித் தப்பாது மீளாநரகத்துப் புகுவரென்பதும் போதர. "இல்லறம் புரிந்து

ளோர்க்குத் தீர்வுமுண்டு." எனவும், "செய்தவர்க்குவெற்பினுச்சியிற்றவற லொப்பவுய்ந்திடலரிது." எனவுங் கூறினர். வெற்பினுச்சி—துறவறத்திற் குவமை. (௪௦)

சுழிதருபிறவியென்னுஞ்சூழ்திரைப்பட்டுச்சோர்வுற்
றழிதருதுயரநேமியகன்றிடல்வேண்டுமேனுங்
கழிதருநாளானல்லாற்கதுமெனத்துறக்கலாமோ
வழிமுறைநம்முன்னோரின்மற்றதுபுரிதியன்னே.

(இ-ள்) சுழிதரு—(மகனே) சுழிகளைத்தருகின்ற, பிறவிஎன்னும் சூழ்திரைபட்டு—பிறபபென்றுசொல்லும் சூழ்ந்த அலையிலகப்பட்டு, சோர்வு உற்று அழிதரு—அயர்ச்சியுற்றுக் கெடுகின்ற, துயரம் நேமி அகன்றிடல் வேண்டும் எனும்—துன்பசாகரத்தைக் கடத்தல்வேண்டுமாயினும், கழி தரும் நாளான் அல்லான்—அநேககாலத்திலல்லாமல், (முதுமையிலென்றபடி) கதுமென துறக்கல் ஆமோ—அதிவிரைவாகத் துறவுபூண்டுவிடலாமா, (இளமையிலென்றபடி) வழிமுறை—பழைய வழக்கப்படி, நம்முன்னோரின்—உனது மேலையோர்களைபபோல, அதுபுரிதி—(இல்லறத்தை நடாத்தியபின்பே) அத்துறவத்தை நடாத்தக்கடவாய். (எ-று)

மன், ஒ, மற்று—அசைகள். ஆமோ—என்பதனோகாரம்—எதிர்மறை. இன்—ஒப்புபபொருளில்வந்த ஐந்தாம்வேற்றுமையுருபு. சுழி—நீர்ச்சுழி. பிறவியைத் திரையென்றும், அதனாலாய துன்பத்தை நேமியென்று முருவகப்படுத்தியதற்கிசையச் சுழிதரு, என்றடைகொடுத்தார். கழி—உரிச்சொல். அது என்னுஞ் சுட்டு இல்லறத்திற்காயினுமாம். நீர்த்திரைபோலப் பிறப்பு மாறிமாறி வருவதென்பார், "பிறவியென்னுஞ் சூழ்திரை" என்றும், அப் பிறப்பாலாகிய துன்பத்திற் கெல்லையில்லையென்பார், "துயரநேமி" என்றும், இளமை கழிந்த முதுமையிற் றுறக்கவேண்டுமென்பார், "கழிதரு நாளானல்லாற் கதுமெனத்துறக்கலாமோ" என்றும், உன் முற்குலத்துள்ளாரது பழையவழக்கமுமப்படியேயென்பார், "வழிமுறைநம்முன்னோரின்." என்றுங் கூறினர். துயரநேமி என்றமையின், உருவகவணி. (௪௧)

தேவருமுனிவர்தாமுஞ்செங்கண்மாலயனுமற்றும்
யாவருமடந்தைமாரோடில்லறத்தொழுகுந்தன்மை
மேவரப்பணித்தானன்றேவிமலையோடணுகிமேனாட்
டாவரும்புவனமாதிசராசரம்பயந்தானும்.

(இ-ள்) மேல் நாள்—முற்காலத்தில், விமலையோடு அணுகி—பரமேஸ்வரியோடுங் கலந்து, தா அரும் புவனம் ஆதி சராசரம் பயந்தானும்—

அழிவில்லாத உலகம்முதலான சராசரப்பொருள்களைப் படைத்துத் தந்த சிவபெருமான், தேவரும்—தேவர்களும், முனிவர்தாமும்—இருடிகளும், செம் கண் மால் (உம்) சிவந்த கண்களையுடைய விட்டுணுவும், அயனும்—பிரமனும், மற்றும்யாவரும—மற்றுமுள்ள வெல்லவரும், மடந்தைமாரோடு—தங்கள்தங்கள் மனைவிமாரோடு கூடி, இல்லறத்து ஒழுகும் தன்மைமேவர பணித்தான்அன்றே—இல்லாச் சிரமத்தில் நடக்குந் தன்மையைப் பொருந்துமாறு கற்பித்தருளினரல்லவா. (எ—று)

அன்றே—தேற்றம். உம்மை—மாலுக்குங் கூட்டப்பட்டது. விமலை—மலமில்லாதவள். தாணு—அழிவில்லாதவன். சராசரம்—தீர்க்கசந்தி. சரம்+அசரம். சரம்—இயங்குதிணை. அசரம்—இயங்காத்திணை. அருமை—ஈண்டுமின்மை குறித்துநின்றது. நாமில்லறத்தை வெறுக்கவேண்டுவதென்னை, சுத்த சித்த முத்தராகிய சிவபிரானு மந்நிலைக்கணிருந்துலகத்தை யுய்யச்செய்தாரென்பார், "விமலையோடணுகிச் சராசரம்பயந்ததாணு," என்றும், எல்லாம்வல்ல கடவுளங்ஙனமாயி னஃதெமக்கு மாமோவெனின், அற்றன்று, அஃது மவரதாணையேயாகுமென்பார், "யாவரும்மடந்தைமாரோடில்லறத்தொழுகுந்தன்மை மேவரப்பணித்தானன்றே." என்றுங் கூறினர். சிவபெருமா னுமையோடுகூடியது இச்சையின்பொருட்டன்று உலகத்தின் பொருட்டேயாம். அஃது, "தென்பாலுகந்தாடுந் தில்லைச்சிற்றம்பலவன்—பெண்பாலுகந்தான் பெரும்பித்தன்காணேடீ—பெண்பாலுகந்திலனேற் பேதாயிருநிலத்தோர்—விண்பாலியோகெய்தி வீடுவர்காண்சாழலோ." எனவும், "சிவஞ்சத்தியோடுறிற் செகம்விரிந்திடும்—சிவஞ்சத்திநீங்கிடிற் செகமதில்லையே." எனவும் வரும் திருவாக்குக்களா னினிது விளங்கும் (௪௨)

மறுக்கலையன்றான்செய்தவரம்பினை வழியைவேண்டி
வெறுக்கலையெனதுகூற்றை நிலைக்கலையுலகின்செய்கை
செறுக்கலையிகலுமாற்றாற்செப்பலைசிறிதுமாற்றந்
துறக்கலையெமரையின்னே தொன்முறையுணர்ந்ததூயோய்.

(இ—ள்) தொல்முறையுணர்ந்ததூயோய்—பழமையான முறைமைகளைத் தெரிந்துள்ள பரிசுத்தத்தையுடையமகனே! வழியைவேண்டி—தபோமார்க்கத்தைவிரும்பிக்கொண்டு, அவன்தான்செய்த வரம்பினை மறுக்கலை—அச்சிவபெருமான் தானுகவியற்றிய வில்லறமார்க்கத்தை மறுக்காதே, எனது கூற்றைவெறுக்கலை—எனது வார்த்தையை வெறுக்காதே, உலகின்செய்கை விலக்கலை—உலகத்தாருடைய நடக்கையைவிலக்காதே, இகலும்ஆற்றால் செறுக்கலை—பகைக்கும்படியாகக் கோபங்கொள்ளாதே, சிறிதுமாற்றம் செப்பலை—சிறிது எதிர்வசனங்களைப் பேசாதே, எமரை இன்னே துறக்கலை—எங்களையிப்பொழுதே துறந்துவிடாதே. (எ—று)

"யாளமுன்னாராவோவாதலுஞ்செய்யுளுளரித்தே." என்னும் விதி நோக்கி, தூயாய், தூயோயெனநின்றது.

வழி—தபோமார்க்கம். வரம்பு—கிரகஸ்தாச்சிரமமார்க்கம், வழியை வேண்டி—என்பதற்குச் சந்ததியை விரும்பியெனவும், வரம்பு—என்பதற்கு வரையறையெனவும் பொருள்கூறுவாருமுளர். இவையெல்லாவற்றிற்கு மேது, வழியை விரும்பியதாகலின், அதனை முதலிலந்நுவயஞ்செய்தாம். கிரகஸ்தாச்சிரமநெறியை யநுட்டித்தே துறக்கவேண்டுமென சிவபிரான் தாமே கூறியிருத்தலின், "அவன்தான்செய்த வரம்பினை மறுக்கலை,"என்றும், "தந்தைசொன்மிக்கொரு மந்திரமில்லை," ஆகலின், "எனது கூற்றை வெறுக்கலை" என்றும், இளமையிலெம்மைப் பிரியாதேயென்பார், "எமரையின்னே துறக்கலை," என்றுங்கூறினர். "அவன்வழியைவேண்டிச் செய்தவரம்பினை" என அந்நுவயஞ்செய்யினுமாம். (சக)

## வேறு.

ஆடகவனப்புடையருந்ததியைநீங்கான்
மாடுறவிருத்தியும்வசிட்டமுனியென்போ ட
னீடுதவநோன்மைகொடுநின்றனனதன்றிப்
பீடுகெழுஞாலமிசைபெற்றபழியுண்டோ.

(இ—ள் வசிட்டமுனி என்போன்—வசிட்டமுனியென்று எவராலும் விசேடித்துச் சொல்லப்படும் மகாமுனிவர், ஆடகம்வனப்பு உடை அருந்ததியை—பொன்போன்ற அழகையுடைய அருந்ததியென்னுந் தன்மனைவியை, நீங்கான்மாடு உற இருத்தியும்—(எந்நேரமும்) விட்டகலாதவராய்ப் பாகத்தில் வைத்துக்கொண்டும், நீடுதவம் நோன்மை கொடுநின்றனன்—மிக்கதவவிரதத்தைவிடாமற் கைக்கொண்டு (அதில்) நிலைத்திருந்தனர். அது அன்றி—அஃதொன்றல்லாமல், பீடுகெழும் ஞாலம்மிசை—பெருமைபொருந்திய பூமியின்கண், பெற்றபழிஉண்டோ— அவர் இல்லறத்தால்) அடைந்த குற்றங்களும் (ஏதாயினு) முளதா. (எ—று)

ஓகாரம்—எதிர் மறை. உம்மை—சிறப்பு. ஆடகம்—ஓர் பொன்னின்விசேடம் ஆடகவனப்பென்பதற்கு, இலக்குமிபோலுமழகு எனப் பொருள் கோடலுமொன்று. நோன்மை—வலிமையுமாம். வசிட்டன்—ஞானத்திற் குடிகொண்டிருப்பவன். வசிட்டமுனிவர் அருந்ததியைத் தவநிலையினும், நட்சத்திரநிலையினும் விட்டுப்பிரியாது தன்னுடன்கொண்டிருப்பவரென்க. இதனால், மிருககண்டேர் ஒரு பெண்வாயிலாகப் பல பாவங்களேறிடுமென்ற அக்கூற்று மறுக்கப்பட்டது.

இதுமுதற் பதினான்குசெய்யுட்கள் பெரும்பான்மை. ஈற்றுச்சீர் மாச்சீரும்,ஒழிந்த மூன்றுசீரும் விளங்காய்ச்சீருமாகிய அளவடி நான்கினால்வந்த கலிவிருத்தங்கள். (சச)

துயக்குறுபவத்திடைதொடர்ச்சியறுதூயோர்
நயப்பொடுவெறுப்பகலினாளுமடமாதர்
முயக்குறினுமாதவமுயன்றிடினுமன்னோர்
வியத்தகுமனத்துணர்வுவேறுபடுமோதான்.

(இ-ள்) துயக்கு உறுபவத்திடை—தளர்வுபொருந்தும் பிறவியின்கண், தொடர்ச்சிஅறுதூயோர்—சம்பந்தமற்றபரிசுத்தவான்கள், நயப்பு ஒடு வெறுப்பு அகலின்—விருப்பத்தோடு வெறுப்பையும் விட்டிருப்பாராயின், நாளும்—தினந்தோறும், மடம் மாதர் முயக்கு உறினும்—அறிமடத்தையுடைய பெண்கள் சையோகத்தையநுபவித்தாலும், மாதவம் முயன்றிடினும்—மகாதவத்தை 'முயன்றுசெய்தாலும், அன்னோர்வியத்தகுமனத்து உணர்வு—அவர்களது அதிசயிக்கத்தக்க மனத்தின்கணுள்ள அறிவானது, வேறுபடுமோ—(ஒரேதன்மையாக விருக்குமன்றி) வேற்றுமையுமடையுமா.(எ-று)

மடம். மகளிர் நாற்குணத்தொன்று, அஃது அறிந்துமறியார்போறல் இளமையுமாம்.

தான்—அசை. ஓகாரம்—எதிர்மறை. வேறுபடுதல்—தடுமாறுதல்.

பிறவியின்கட்சம்பந்தமற்ற ஞானிகள் விருப்பு வெறுப்பற்றிருத்தலால், பெண்கள்போகம் கிடைத்ததேயென் றின்பத்தையும், தவஞ்செய்கையிற் றுன்பத்தையுமடையாது எந்நேரமுமோரேமனமாக விருப்பரென்பது கருத்து. இதனை, ''சாக்கிரத்தேயதீதத்தைப்புரிந்தவர்களுலகிற்சர்வசங்கநிவிர்த்திவந்ததபோதனர்களிவர்கள் – பாக்கியத்தைப்பகர்வதுவென்னிம்மையிலேயுயிரின்பற்றறுத்துப்பரத்தையடைபராவுசிவரன்றே– வாக்குமுடிகவித்தரசாண்டவர்களரிவையரோடனுபவித்திங்கிருந்திடினுமகப்பற்றற்றிருப்பர் – நோக்கியிதுபுரியாதோர்புறப்பற்றற்றாலுநுழைவர்பிறப்பினில்வினைகணுங்கிடாவே' என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானுமுணர்க. (சரு)

மேனவியல்பான்வரையுமெல்லியலைமேவிற்
றூனமுளதாகுமிதானதவமாகும்,
ப 7 வானமுளதாகுமிவண்மண்ணுமுளதாகு
மூனமிலதாகுமிதொன்றுமிலையன்றே.

(இ-ள்) மேனஇயல்பான்வரையும்—மேன்மையையுடைய (கற்பாதிய) நற்குணநற்செய்கைகளான் (இல்லறத்திற்குரியனென்று) நிச்சயிக்கப்

படுத்தும், மெல்லியலேமேவின்—ஒருபெண்ணை (மணஞ்செய்து) கூடுகின், தானம் உளது ஆகும்—(அங்ஙனங் கூடியவருக்கு) தானமுமுண்டாகும், அரிது ஆன தவம் ஆகும்—அருமையான தவமுமுண்டாகும், வானம் உளது ஆகும்—(மறுமைப்பயனாகிய) சுவர்க்கபோகம் முதலான போகங்களுமுண்டாகும். இவண் மண்ணும் உளது ஆகும்—இவ்விடத்தநுபவிக்குமிம்மைப்பயனுமுண்டாகும். ஊனம் இலது ஆகும்—யாதொரு குற்றமுமில்லையாகும். அரிது ஒன்றும் இலை—கிடைத்தற்கருமையானதேதொன்றுமில்லை. (எ—று)

அன்று, ஏ—அசைகள். மேன—குறிப்புவினைப்பெயரெச்சம். வரைதல், நிச்சயப்படுத்தலென்னும்பொருளில் வருதலை. "இன்றுனக்குநின்ற பாதியான் வரைந்து தருகுவன்" என்னும் பாரதச்செய்யுளானுமறிக. வானம், மண் ஆகுபெயர்கள். ஊனம்—துன்பமுமாம். தானம்—தருமநெறியான்வந்த பொருளைத் தக்கார்க்குக்கொடுத்தல். தவம்—வாட்டுதல், எனவே, மனம் பொறிவழிபோகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல் முதலாயின. "மேனவியல்பானவரையும்." என்பதற்கு பழமையான முறைப்படி மணஞ்செய்யும், எனப் பொருள்கோடலித்துணைச்சிறப்பின்று. பதிவிரதையோடு கூடிச் செய்யுமில்லறத்தால் தானமும், தானத்தால் தவமும் தவத்தாலிருமையின்பமும் சித்திக்குமென்பதும், அவர்க்குக் குற்றம் சம்பவியாதென்பதும், அரிதானதொன்றின்றென்பது மிதனானிச்சயிக்கப்பட்டது. இவைமுறையே காரணகாரியமாகவிருத்தலை, "கருமத்தான் ஞானமுண்டாங் கருமத்தைச் சித்தசுத்தி—தருமத்தா லிகந்தசித்த சுத்தியைத் தருமஅல்கு—மருமைத்தாந் தருமத்தாலே சாந்தியுண்டாகுமான்ற—பெருமைத்தாஞ் சாந்தியாலே பிறப்பதட்டாங்கயோகம்." என்னுந் திருவிளையாடற்புராணச்செய்யுளானும், "தருமமே போற்றிடி னன்புசார்ந்திடு—மருளெனுங் குழவியு மணையுமாங்கவை—வருவழித் தவமெனும் மாட்சியெய்துமேற்—றெருளுறு மவ்வுயிர் சிவனைச்சேருமால்." என இப்படலத்துமேற் கூறுமாற்றானும், எல்லாம் சித்திக்கும், குற்றமுமரியதுமில்லையென்பதை, "இல்லதெ னில்லவுண் மாண்பானாலுள்ளதெ—னில்லவண் மாணாக்கடை." என்னுந் தேவர்வாக்கானும், "இல்லாளகத்திருக்க வில்லாததொன்றில்லை." என்னு மவ்வைவாக்கானுமுணர்க. (௪௬)

காண்டகைய தங்கணவரைக்கடவுளார்போல்
வேண்டலுறுகற்பினர்தமெய்யுரையினிற்கு
மீண்டையுளதெய்வதமுமாமுகிலுமென்று
லாண்டகைமையோர்களுமவர்க்குநிகரன்றே.

(இ—ள்) காண்தகைய—எவரும்விரும்பிப்பார்க்குந் தகுதியுள்ள, தம் —— தங்கள்நாயகரை, கடவுளார்போல்வேண்டல் உறு—(தாங்கள்)

வழிபடுகின்ற தெய்வங்களைப்போலக்கொண்டு விரும்புதல்செய்யும், கற்பி னார்தம்மெய் உரையில்— கற்புடைமாதர்களது உண்மையான வாக்கில், ஈண்டு உள தெய்வதமும் மாமுகிலும் நிற்கும் என்றால்—இவ்வுலகத்துள்ள தெய் வமுங் கருமையான மேகமுங் கட்டப்பட்டடங்கிநிற்குமென்று சொல்லு கில், அவர்க்கு—அப்பதிவிரதைகளுக்கு, ஆண்தகைமையோர்களும் நிகர் அன்று—ஆடவர்களுமீடல்ல. (எ—று)

ஏகாரம்—ஈற்றசை. ஈண்டை—ஐ—சாரியை. தைவதம்—என்னும்வட மொழி—தமிழில்தெய்வதமென்றாயிற்று. மா—கருமை. "மாக்குரல்" என்ப திற்போல, மழைமுகிலென்பது போதரமாமுகிலென்றார். பிறதெய்வம் வணங்காது கொழுநரைத் தெய்வமாக வணங்குவோரே கற்புடைமாதரென் பதும், அவரொன்றுசொல்லி னச்சொல்லின் வழிப்பட்டடங்கி நடக்குந் தெய்வமும் முகிலுமென்பதும், ஆடவரைக்காட்டினுஞ் சிறந்தவரவரென்பது மிதனால்நிச்சயிக்கப்பட்டது. கற்புடைமாதர் கணவனைவணங்குவ ரவரே தெய்வமென்பதை, "குலமகட்குத்தெய்வங்கொழுநனே." என்னுங் குமர குருபர சுவாமிகள் திருவாக்கானும், "தெய்வந்தொழா அள்கொழுநற் றொ ழுதெழுவாள்" என்னுந் தேவர்வாக்கானும், தெய்வமவர்சொற்படி நிற்ற லை, இக்குறளுக்கு, "தெய்வந்தானேவல்செய்யும்" எனப் பரிமேலழகரு ரைத்தவுரையானும், முகில்நிற்றலை, "பெய்யெனப்பெய்யுமழை" என்பத னானும், "கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி கொண்டன—செய் வகை செய்வான் றவசி கொடிதொரீஇ—நல்லவை செய்வா னமைச்சனிவர் மூவர்—பெய்யெனப் பெய்யுமழை. என்னுந் திரிகடுகத்தானும், பிற, "வாள் விழிக்குலமங்கைய ரன்பர்பொற்—றாள்விளக்கிய தண்புனல்கங்கையக்—கேள் வரேகிளர் தேவர்கண்மூவரி—லாளுமெய்மை யடிகளென்றெண்ணுவார்." என்னுங் காசிகாண்டச்செய்யுளானும், "மேன்மைசேர் கற்புமிக்க மெல் லியலாரைக்காணிற்—பானுவெண் மதிசெந்தீயும் படரொளி மழுங்கும்." என்னுந் திருநெல்வேலிப்புராணச்செய்யுளானுமுணர்க. கற்பு—கணவன் சொற்கடவாத்தருமம். அஃது, "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" என்னு மவ்வைவாக்கானும், "கொழுநன்சொற் கடவா துறைகொள்கை யே—வழுவினல்லறம்." என்னுங் காசிகாண்டச்செய்யுளானு மினிதுபுலப்ப டும். (சஎ)

ஆயிழையொடின்புறமறக்தமுதலாற்றாய்
தூயதவநன்னெறிதொடங்கல்புரிவாயேன்
மாயமிருகாமவிடம்வந்தணுகினம்மா
மேயவிதிகாக்கினும்விலக்கியிடலாமோ.

(இ-ள்) ஆய் இழை ஒடு இன்பு உறும்—(மகனே! நீ.) தெரிந்த ஆபரணங்களைத் தரித்த பெண்களோடின்பத்தைத் துய்க்கும், அறத்தை முதல் ஆற்றாய்—இல்லறத்தை முதலிலநுட்டியாதவனாய், தூயதவம் நல்நெறி தொடங்கல் புரிவாயேல்— சுத்தமான நல்ல தவமார்க்கத்தை (இளமையிற்றானே) தொடங்குதலைவிரும்புவாயாயின், மாயம் மிகுகாமம் விடம் வந்து அணுகின்—(அப்பொழுது) மாயையால் மேற்பட்ட காமமென்னும் விஷமானதுவந்து (உன்னை) யடையுமென்றால், அம்மா—ஐயோ! மேயவிதி காக்கினும் விலக்கியிடல் ஆமோ—தகுதியுள்ள சிருட்டிகர்த்தாவாகும் பிரமன் தான் தடைசெய்தாலுந் தடைப்படுத்தல் கூடுமோ. (கூடாதென்றபடி.) (எ-று)

ஓகாரம்—எதிர்மறை. அம்மா—இரக்கத்தில்வந்ததொரிடைச்சொல், ஆயிழை—பண்புத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை ஆற்றாய்—முற்றெச்சம். உம்மை—உயர்வு சிறப்பு. தொடங்கல் புரிவீயேல், என்பதற்குத் தொடங்குதலைச்செய்வாயேயென்பினுமமையும். நஞ்சுபோன்றுயிரைநலிதலின், "காமவிடம்" என்றார். விதியென்னும் பதத்தையே பிரயோகித்தார், காமமூழையும் வெல்ல வல்லதென்பது போதர. இல்லறத்தையாற்றித் துறவாதுதுறக்கின், பின்னர்க்காமத்தா விடர்ப்படவேண்டுமென்றாரென்பது கருத்து.

காமத்தையநுபவியாது விடினிச்சை தவிராது மீள வதன்க ணகப்படவேண்டுமென்பதை, "உண்டவர்க்கன்றி யுட்பசியோயுமோ—கண்டவர்க்கன்றிக் காதலடங்குமோ – தொண்டருக்கெளியா னென்றுதோன்றுவான்—வண்டமிழ்க்கிசை யாகமதிக்கவே." என்னுந் தாயுமானு ரருள்வாக்கா னறிக. காமவிடமென்றமையி னுருவகவணி. (௪௮)

துறந்தவர்கள்வேண்டியதொர் துப்புரநல்கி
யிறந்தவர்கள்காமுறுமிருங்கடனியற்றி
யறம்பலவுமாற்றிவிருந்தோம்புமுறையல்லாற்
பிறந்தநெறியாதுளதொர்பேருதவியாதோ.

(இ-ள்) துறந்தவர்கள்வேண்டிய ஓர் துப்புரவுநல்கி—துறவறத்தின்கணுள்ளவர்கள் விரும்பிய வொப்பற்ற பொருள்களைக் கொடுத்து, இறந்தவர்கள் காமுறும் இரும் கடன் இயற்றி—இறந்த பிதிரர்கள் விரும்பும் (சிராத்தமுதலிய) பெருங் கடன்களைச்செய்து, அறம் பலவும் ஆற்றி—(மற்றும்) பல படித்தாய தருமங்களையும் புரிந்து, விருந்து ஓம்பும் முறை அல்லால்—விருந்தினரை யுபசரிக்கும் (இல்லறமாகிய) நன்மையைத்தவிர,

பிறந்தநெறியால் உள ஓர் பேர் உதவியாது—(மானுடராகப்) பிறந்த (விசேடித்த) தன்மையினுலுள்ள பெருநன்மை என்ன இருக்கின்றது. (ஒன்றுமின்றென்றபடி) (எ—று)

ஒகாரம்—ஈற்றசை. து. இரண்டுஞ் சாரியை. யாவது என்னும் எதிர்மறைவிஞ விஃனக்குறிப்பு யாதுஎன நின்றது. துப்புரவு—ஐம்புலநுகர்ச்சிக்குரியபொருள். நல்கி, இயற்றி, ஆற்றி ஓம்புமுறையென்றியையும். விசேடமான மக்கட்பிறப்பெடுத்தது, துறவிகட்குவேண்டிய கொடுத்தற்கும், இறந்தோர்க்குக்கடன்களியற்றற்கும், விருந்தினரையுபசரித்தற்கும், பேரறங்களைப் புரிதற்குங் காரணமான இல்லறத்தை நடாத்தவன்றி மற்ருென்றற்கல்லவென்ருரென்பது கருத்து.

துறந்தார்க்கும், இறந்தார்க்கும் இல்வாழ்வான் துணை, என்பதை, ''துறந்தார்க்குந் துவ்வாதவர்க்கு மிறந்தார்க்கு—மில்வாழ்வா னென்பான்றுணை.'' எனவும், அறம் புரிதற்கும், விருந்தோம்புதற்கும், அவன்ருனே துணையாதலை ''இருந்தோம்பியில்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி—வேளாண்மைசெய்தற்பொருட்டு.'' எனவும், ''தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கலுனென்ருங்—கைம்புலத்தாருேம்பறலை.'' எனவும் வருந் திருக்குறள்களாலுணர்க. ''துறந்தார் என்பதற்குக்கணைகளுணவராற் றுறக்கப்பட்டாரெனவும், இறந்தார் என்பதற்கு ஒருவருமின்றித் தன்பால்வந்திறந்தார், எனவும் பொருள்கொள்ளினுமமையும். (சக)

மெத்துதிறலாடவருமெல்லியனல்லாருஞ்
சித்தமுறநன்கினொடுதீதுசெயலூமே
யுய்த்தபடியல்லதிலையாமுழவரோண்செய்
வித்துபயனேயலதுவேறுபெறலாமோ.

(இ—ள்) மெத்து திறல் ஆடவரும்—மிக்கவலியையுடைய ஆடவர்களும், மெல் இயல்நல்லாரும்—மென்மைத்தன்மையையுடைய பெண்களும், சித்தம் உற நன்கின் ஒடு தீதுசெயல்—மனமொருப்பட நன்மையோடு தீமையைச்செய்தல், ஊழ் ஏ உய்த்தபடிஅல்லது இலை ஆம்—ஊழ்தானே கூட்டிய தன்மையல்லாமல் வேறென்றில்லையாகும், (அஃதெதுபோலவெனில்) உழவர்ஒண் செய்வித்து பயனே அலது—உழவர்கள் நல்ல வயலின்கண் விதைத்த அந்த வித்தின்பிரயோசனமே பெறுவாமல்லாமல், வேறு பெறல் ஆமோ—வேறு பிரயோசனத்தைப் பெறுதல் கூடாது. (அதுபோல) (எ—று)

ஒகாரம்—எதிர்மறை. ஏகாரங்கள். பிரிநிலை. உழவர்—மருதநிலமாக்கள் ஆம்—தேற்றம். வயலின்கண்விதைத்த அவ்வித்தின்பயனைத்தானே பெறு

தல்போல, ஆடவர் பெண்களாகிய வெல்லவரும் தங்கள் தங்கள் ஊழின் படி போகங்களைத் துய்ப்பார்களாகலின், உனக்கும், நல்லூழிருக்குமாயின் இல்லறமும் நன்மையைப்பயக்கு மஃதின்றேற் றுறவறமுந் தீமையைத்தா னே பயக்கு மிதற்காச்சிரமங்க ளேதுவாகமாட்டாவென்றுரென்பது கருத் து. இஃதிப்பன்மையாதலே, "உள்ளதொழிய வொருவர்க்கொருவர்சுகங்-கொள்ளக்கிடையா." என்னு மவ்வைவாக்கானறிக. எடுத்துக்காட்டுவமை யணி. (௰)

நற்றவமதாகுமிலறந்தனைநடாத்திச்
சுற்றமறநீங்குதுறவேதுறவதம்மா
மற்றதுபுரிந்திடினுனக்குநவைவாரா
வற்றதுமறுத்துரையலாணைநமதென்றான்.

(இ-ள்) நல்தவம் ஆகும் இல் அறந்தனை நடாத்தி—(மகனே யேனைத் தவங்களுள்) நல்ல தவமாகவுள்ள இல்லறத்தை யநுட்டித்து, சுற்றம் அற நீங்கு துறவே துறவு—(அதன்பின்பு) சுற்றப் பற்றறத் துறக்கின்ற துற வறமே சிறப்பித்துச் சொல்லப்படும் துறவறம், அதுபுரிந்திடின்உன க்கு நவைவாரா— ஆகலின், அந்த இல்லறத்தை யநுட்டித்தா லதனு லுனக்குக் குற்றம் சம்பவியாது, அற்று அது—அத்தன்மையான வில்ல றத்தை, நமது ஆணை மறுத்து உரையல் என்றான்—நம்மேற் சத்தியமாகத் தடுத்துச் சொல்லாதேயென்று (குச்சகமுனிவர் மிருககண்டேயருக்கு) ஆணை யிட்டுக் கூறினர். (எ-று)

அது. இரண்டும் பகுதிப்பொருள்விகுதிகள். அம்மா, மற்று—அசை கள். சுற்றம்—ஆகுபெயர். இலறம்—செய்யுள்விகாரம். வாரா—ஆகாரவீற்று டன்பாட்டு வினைமுற்று. உரையல்—அல், எதிர்மறைவிகுதி.

வனத்தின்கணிருந்துடம்பைவாட்டிச் செய்யுந் தவத்தினும், மனையின் கண் மனைவியோ டிருந் தின்பத்தை யநுபவித்துத் தருமஞ் செய்தலாகிய தவஞ் சிறப்புடைத்தென்பார், "நற்றவமதாகுமிலறம்" என்றும், காமப் பற்றற்றுப் பூணுந்துறவே இடையிற் கேடு பயவாத மாசற்ற துறவற மென்பார், "இல்லறந்தனைநடாத்தி நீங்குதுறவே துறவு." என்றும், மீட் டும் மறுக்காதுடன்படுத்தற்குக் கடவாச்சொல்லே வேண்டுமென்பார், "மறு த்துரையலாணைநமது." என்றுங் கூறினர். தவத்து ளில்லறமே சிறந்த தொன் றென்பதை, "இல்லற மல்லது நல்லறமன்று." என்னு மவ்வை வாக்கானும். "தனதில்லாளொடுமுத்தழல்வேள்விசெய்—தினதினல்லறமாற் றியிருப்பனேல்—மனைவியோடும்வனத்திடைவைகிய—புனிதர்தம்மிற்புகழின னுவனல்." என்னுங் காசிகாண்டச்செய்யுளானுமுணர்க. (௰௧)

அன்னபலமாமுனியறைந்திடலுமோரா
முன்னமறையாதியமொழிந்ததுணிவென்றூர்
பன்னகமணிந்திடுபரன்பணியுமென்றூ
ரென்னினியுரைப்பதெனவெண்ணியிளைகின்றூன.

(இ—ள்) மாமுனி—மகி மதங்கிய குச்சகமுனிவர், அன்னபல அறைந்திடலும்—(மேலாயுள்ள) அவ்விதமான வநேகம் நீதிகளைச் சொல்லுதலும், ஓரா—(மிருககண்டேயர் அவைகளைக்கேட்டு) ஆலோசித்து, முன்னம்மறை ஆதிய மொழிந்த துணிவுஎன்றூர்—(எனது தந்தையார்) ஆதியில் வேதம்முதலான சாத்திரங்கள் சொன்னபொருளாகுமென்றுஞ் சொன்ஞர், பன்னகம் அணிந்திடு பரன் பணியும் என்றூர்—சர்ப்பங்களைத் தரித்த சிவபெருமானது கட்டளையும் (அங்ஙனம்) ஆகுமென்றுஞ் சொன்ஞர், இனி என் உரைப்பது என எண்ணி இளைகின்றூன்—(நான்) இனிமேலென்ன சொல்லப்போவதென்று கருதி வருத்தமுறுவாராயினர். (எ—று)

அன்ன—சுட்டுமெஞ்உ. ஆதிய—வினையாலணையும்பெயர். துணிவு—சித்தாந்தம். அஃதாகுபெயர். எதிரதுதழீயவெச்சவும்மை தொக்கது. பணியும், என்னுமும்மை யிறந்தது தழீயவெச்சம். ஓரா, என்னுமுடன்பாட்டெச்சம் எண்ணியென்பதஞேடியையும். பந்நகம்—பாதத்தாற்செல்லாதது. பத்—பாதம். ந—இன்மை. கம்—செல்வது. (இஉ)

தத்தமதருட்குரவர்தாவில்வளநீங்கி
யத்தியிடையாழ்கெனினுமன்பினதுசெய்கை
புத்திரர்கடங்கள்கடனும்புதுமையன்றே
யித்திறமறுக்கலனிசைந்திடுவன்யானும்.

(இ—ள்) தம்தமது—தங்கள்தங்களது, அருள்குரவர்—அன்புள்ள அன்னைதந்தையர்கள், தா இல் வளம் நீங்கி—அழிவில்லாத செல்வங்களைக் கைவிட்டு, அத்தி இடை ஆழ்க எனினும்—கடலின்கண் விழக்கடவையென்று கட்டளைசெய்தாலும், அன்பின் அது செய்கை—அன்பிஞேடுமதனைச்செய்தல், புத்திரர்கள் தங்கள் கடன் ஆம்—புத்திரர்களாகவுள்ளவர்களின் கடமையேயாகும், புதுமை அன்று—இது நூதனமானதொன்றல்ல, யானும்—(ஆகையால் புத்திரஞகிய) நானும், இ திறம் மறுக்கலன் இசைந்திடுவேன்—(பிதாவின் வேண்டுகோளாகிய) இச்செயலை மறுதலிக்காமலுடன்படுவேன். (எ—று)

ஏகாரம்—அசை. தேற்றமெனினுமாம். தத்தமது—வலித்தல்விகாரம். ஆழ்கெனினும். ஈறுதொகுத்தல். கை—தொழிற்பெயர்விகுதி. குரவர்—அன்னைதந்தையர், முதியோர், குருமார். அத்தி—நீர்தங்குமிடம்.

பெற்றோரெதனைச்சொன்னாரோ அதனைச் செய்யவேண்டுவது பிள்ளைகளின் கடமையாகுமென்றாரென்பது கருத்து. தந்தைதாயரின் சொல்லைக் கடவாதொழுகவேண்டு மதுவே சிறந்ததொன்றென்பதை, "தந்தைசொன்மிக்கமந்திரமில்லை," எனவும் "தாயிற்சிறந்ததொரு கோயிலுமில்லை," எனவும் வருமவ்வைவாக்குக்களானுமுணர்க. (௫௩)

தந்தைசொன்மறுப்பவர்கடாயுரைதடுப்போ
ரந்தமறுதேசிகர்தமாணையையிகந்தோர்
வந்தனைசெய்வேதநெறிமாற்றினர்கண்மாறாச்
செந்தழலவாயநிரயத்தினிடைசேர்வார்.

(இ—ள்) தந்தைசொல் மறுப்பவர்—(தங்கள்) பிதாவினது சொல்லைக் கடப்பவர்களும், தாயுரை தடுப்போர்—மாதாவினது சொல்லைக் கடப்பவர்களும், அந்தம் அறு தேசிகர்தம் ஆணையை இகந்தோர்—மயக்கமில்லாத குருமாரது கட்டளையைக் கடந்தவர்களும், வந்தனைசெய் வேதநெறி மாற்றினர்கள்— எவரும்) வழிபாடுசெய்கின்ற வேதமார்க்கத்தை விலக்கினவர்களும், மாறா—(ஒருகாலத்தும்) தீராத, செம் தழல ஆய—சிவந்த அக்கினியையுடையதான, நிரயத்தின் இடைசேர்வார்—நரகத்தின்கட் சேர்வார்கள். (எ—று)

மாறாதவென்னும் பெயரெச்சத்தீறுகெட்டது. தழல, குறிப்புவினைப் பெயரெச்சம். தழலவாய, என்பதற்கு அக்கினியைத் தருகின்ற வாயையுடையவெனப் பொருள்கூறினும் பொருந்தும். இப்பொருட்கு, வாய, எனப்பதம்பிரிக்குக. "மாறாச்செந்தழலவாயநிரயம்," என்றது, தம்மிடத் தகப்பட்டோரை மீளவும்விடாத அக்கினிநரகத்தை. சகலசாத்திரங்களையுங் கற்றுணர்ந்துண்மையைக்கண்டவரே குருவாகலின், "அந்தமறுதேசிகர்" என்றும், ஆதிபரமாப்தவாக்கியமான முக்கியமுடையது வேதமாகலின் "வந்தனைசெய்வேதநெறி" என்றும் விசேடித்தார். அந்தம்-மயக்கம்

பிதாமாதாக்களது சொல்லைக்கடப்பவர்களும், குருமாரது கட்டளையைக்கடப்பவர்களும், வேதமார்க்கத்தை விலக்கினவர்களும், மீளாதவெரிவாய் நரகத்தில் வீழ்வரென்பது, "ஒப்பிலி யனாதிமுத்த னோதியபனுவலோர்ந்து—தப்பறச் சாற்றுமாசான் றன்னையு மிகழ்ந்துசாற்றில்—வெப்பெரி நிரயந்தன்னில் வீழ்ந்துவெந் துருகியீயா—ரெப்பொழு தேறுவாமென் றினைத்திளைத் தேங்குவாரே," எனவும், "ஆதியமலனருளானனகனருள்

செயாகமத்தை— யோதியதனையொழிப்பானுமொளிசேரழலையோம்பானும்—மாதாவுடனும்பிதாவுடனுமாறுயவர்சொன்மறுப்பானு — மோதாவுரையையுரைத்தானென்றற்றேநடவொயுரைப்பானும்,'' எனவும், ''ஈட்டும்ந்த வினைத்தொகையாவையு—மீட்டிடும்படி வெய்யநமன்றமர்—காட்டிடுந்துய ராக்கைகலந்து போய்—வாட்டுமொரிர யத்துள்வதிவரே,'' எனவும் வருஞ் சிவதருமோத்தாச் செய்யுள்களானினிதுவிளங்கும்.

மறுப்பவர், தடுப்போர், இகந்தோர், மாற்றினர் என்னும் பலசொற்கள் விலக்கினவரென்னு மொருபொருளை மாத்திரந் தருதலினிச் செய்புள் பொருட் பின்வருநிலையென்னு மலங்காரம். (௫சு)

ஆதலின் விலக்கன் முறையன் றெனவலித்துக்
கோதறுகுணத்தின் மிகுகுச்சகர்தமம்பொற்
பாதமிறைஞ்சிமுனியேல்பணியினிற்ப
னோதுவதுனக்குளதெனக்கழறலுற்றான்.

(இ—ள்) ஆதலின்—ஆகையினால், விலக்கல் முறை அன்று என வலித்து—(பிதாவினது சொல்லை) தள்ளுதல் நீதியல்லவென்று (மிருககண்டியர்) உடன்பட்டு, கோது அறு குணத்தில் மிகு—குற்றமில்லாத குணங்களான் மேற்பட்ட, குச்சகர்தம் அம்பொன்பாதம் இறைஞ்சி—குச்சகமுனிவரது அழகிய பொலிந்த பாதங்களை நமஸ்கரித்து, முனியேல்—(நமதுவாக்கை மறுத்தேனென்றடியேன்மீது) கோபங்கொள்ளற்க. பணியில் நிற்பன்—(தாங்கற்பித்த) கட்டளையின்படி ஒழுகுவேன், உனக்கு ஓதுவது உளது என—(அடியேன்றமக்கு) சொல்லவேண்டியதொன்றுண்டென்று, கழறல் உற்றான்—(அதனைச்) சொல்லுகின்றனர். (எ—று)

அது. பகுதிப்பொருள் விகுதி. முனியேல்—எதிர்மறையேவலொருமை. வலித்தல்—உடன்படல். பொன், என்பதற்கு அருமையெனப் பொருள் கூறினுமாம். (௫௫)

தன்னுரைகொளாதமனை வாழ்க்கையது தன்னின்
வெந்நிரயம்வீழும்வகையேசிழுமிதம்மா
வன்னரொடுமேவியமராடவர்தமக்குப்
பின்னுமொருகூற்றுமுளதோபிணியுமுண்டோ.

(இ—ள்) தன் உரை கொளாதமனை வாழ்க்கையது தன்னின்—(கணவனுகவுள்ள) தனது சொல்லைக் கேளாத மனையாளோடு வாழு மில்வாழ்க்கையினும், வெம் நிரயம் வீழும் வகையே விழுமிது—கொடிய நரகத்து விழுவதே சிறப்புடையது, அம்மா—ஐயோ! அன்னர் ஒடும் மேவி அமர்

ஆடவர்தமக்கு—அந்தச் சொற்கேளாத பெண்களோடுங் கூடி வாழ்கின்ற ஆண்மக்கட்கு, பின்னும் ஒரு கூற்றும் உளதோ பிணியும் உண்டோ—(அவர்தாமே, யமனும் நோயுமன்றி; வேறுமொரு யமனுமிருக்கின்றானா, நோயுமிருக்கின்றதா. (இல்லையென்றபடி) (எ—று)

ஒகாரம்—இரண்டுமெதிர்மறை. ஏகாரம், தேற்றம். அம்மா—இரக்கக்குறிப்பு. மனை—ஆகுபெயர். நரகயாதனையினுஞ் சொற்கேளாப் பெண்டிர் வாழ்க்கையிறப்பவுந் தீமையைப் பயக்கின்றமையின், "உரைகேளாத மனைவாழ்க்கையது தன்னின், வெந்நிரயம் வீழும்வகையே விழுமிது." என்றும், அத் தீயொழுக்குடைய வவர்தாமே கணவனுக்குக் கொலையையும், நோயையுஞ் செய்பவராகலின், "அன்னவரொடுமேவியமராடவர்தமக்கு பின்னுமொருகூற்றுமுளதோபிணியுமுண்டோ," என்றுங் கூறினார். சொற்கேளாப்பெண்டிர்தாமே கணவனுக்கு இயமனும் நோயுமாகவிருக்கின்றாரென்பதை, "மெல்லிய வாழைக்குத் தானீன்றகாய்கூற்றங் கூற்றமே—யில்லிற்கிசைந்தொழுகாப் பெண்," எனவும், "பத்தாவுக்கேற்ற பதிவிரதையுண்டானால்—எத்தாலுங்கூடி யிருக்கலாம்—சற்றேனும்—மேறுமாறாக விருப்பளேயாமாகிற்—கூறாமற் சந்யாசங்கொள்" எனவும்வருமவ்வையார்க்குக்களாலும்,

"மங்கையர் பொருட்டா லெய்தும் மாந்தர்க்கு மரணமென்றல்—சங்கையின் றுணர்திவாலி செய்கையிற் சாலுமின்னும்—மங்கவர் திறத்தினாலே யல்லலும் பழியுமாத—லெங்களிற் காண்டியன்றே யிதற்குவே றுவமையுண்டோ." என்னு மிராமாயணச்செய்யுளாலுமுணர்க.

கூற்று—அஃறிணையீறுபோல்வந்த வுயர்திணை. அஃது, "உயர்திணையீறுபோலஃறிணைவருதலு மஃறிணையீறுபோலுயர்திணைவருதலும்" என்னு மிலக்கணத்திரட்டு விதியானமைந்தது. அரசு அமைச்சு, இன்னபிறவுமன்ன. தன், என்றது நாயகனை. (௫க)

ஏன் னுரையினிற் சிறிது மெஞ்சலிலவாகி
மன் னுமியல்பெற் றிடுமடந்தையுளளேலக்
கன்னிதனையான் வரைவல்காயெரிமுனென்றுச்
சொன்னமொழிகேட்டுமகிழ்வுற் றமுனிசொல்லும்.

(இ—ள்) என் உரையினில் சிறிதும் எஞ்சல் இலவாகி மன்னும் இயல் பெற்றிடும்—(பிதாவே) எனதுசொல்லிற்கிஞ்சித்துங் குறைவில்லாததாகிப் பொருந்து மிலக்கணங்களைப் பெற்றிருக்கும், மடந்தை உளள் எல்—கன்னிகையிருப்பாளாயின், அ கன்னிதனை—அந்தக்கன்னிகையையே, யான்—நான், காய் எரிமுன்வரைவல்என்று சொன்னமொழிகேட்டு—சுடுகின்ற அக்கினிக்குமுன் (சாக்ஷியாக) மணஞ்செய்வேனென்று (மிருககண்டர்)

சொன்ன வார்த்தையைக்கேட்டு, முனி மகிழ்வு உற்று சொல்லும்—குச்சகமுனிவர் சந்தோஷமடைந்து சொல்லுகின்றனர். (எ—று)

பிரிநிலையேகாரந் தொக்கது. வரைவல்—என்பதில், அல்—உயர்திணைத் தன்மையொருமை விகுதி, மடந்தைபருவங்குறியாஉ பெண்ணையுணர்த்திற்று, அதற்கீண்டேற்புழிக்கோடலால் கன்னிகையெனப் பொருள் கூறப்பட்டது. எண்வகைமணங்களுள் முதன்மணமாகிய பிரமமணத்தையே செய்வேனென்பது போதர, "கன்னிதனைக் காயெரிமுன்வரைவலென்றூர். பிரமமணமாவது, பிரமசாரிக்குக் கன்னிகையைத் தீமுன்னர்க்கொடுப்பது. காய் எரி—சுடுகின்றவக்கினி "என்பிலதனைவெயில்போலக் காயும்" என்பதிற்போல. (ருஎ)

## வே று.

யானுமுய்ந்தனனென்கிளையுய்ந்தனவினையதானினையீன்ற
டானுமுய்ந்தனடவங்களுமுய்ந்தன தண்ணளியதுமற்றால்
வானுமுய்ந்தனமண்ணுலகுய்ந்தனவாசவனெனவாழுங்
கோனுமுய்ந்தனனென்னுரைமறுமலுட்கொண்டனையதனாலே

(இ—ள்) என்உரைமறுமல் உட் கொண்டனை அதனாலே—(மகனே நீ) எனதுசொல்லைக் கடவாமலேற்றுக்கொண்டாயதனால், யானும் உய்ந்தனன்—நானுமீடேறினேன், என்கிளை உய்ந்தன—எனது சுற்றத்தாருமீடேறினர் இனையதால்—இந்தத் தன்மையினால், நினை ஈன்றாள் தானும் உய்ந்தனள்—உன்னைப்பெற்ற மாதாவுமீடேறினள். தவங்களும் உய்ந்தன—தவங்களுமீடேறின, தண்ணளி அதும் அற்று—கிருபையுமத்தன்மைத்து. (ஈடேறின) வானும் உய்ந்தன—விண்ணுலகத்தாராகிய தேவர்களுமீடேறினர். மண் உலகுஉய்ந்தன—மண்ணுலகத்தாராகிய மானுடர்களு மீடேறினர். வாசவன் என வாழும் கோனும் உய்ந்தனன்—தெய்வேந்திரனென்று சிறப்புற்று வாழுகின்ற தேவராசனு,மீடேறினன். (எ—று)

ஈற்றேகாரம். தேற்றம். ஆல்—அசை. வான், ஆகுபெயர். மண்ணுலகு—இருபெயரொட்டாகுபெயர். கிளை—அஃறிணைபோல்வந்த உயர்திணை. புதல்வனை வசீகரப்படுத்தற்கு மீட்டு மினையதால், என வேண்டாது கூறினர். "வினையதால்" எனப்பிரித்து நல்வினைவயத்தினாலெனக் கண்ணழிப்பினுமமையும். இனையதால். இந்த இல்லறத்தால் எனலுமாம்.

புத்திரனில்லறங் கடைபோதற்குடன்பட்ட அது, தனக்கும், மாதாவுக்கும் ஞாதிகட்கும், இம்மைக்குமின்றியமையாத துணையாய், சிரார்த்தம் தருப்பணம் முதலியவற்றான் மறுமைக்குந் துணைநின்றீடேற்றுதலின்,

"யானுமுய்ந்தனனென்கிளையுய்ந்தனவின்றுடானுமுய்ந்தனன்" என்றும், தவநெறிக்கணுள்ளாரையும் வேண்டிய கொடுத்துபசரித்தத் தவத்தை யீடேறச்செய்தலின், "தவங்களுமுய்ந்தன." என்றும், இல்லறம் இனிது நடத்தலும் பிறவுயிர்கண்மேல் அருள்பிறத்தலும் அன்பின் பயனாகலின், அவ்வன்மையுமாட்சிபண்ணி யீடேறச்செய்தலின், "தண்ணளியதுமற்று." என்றும், ஈட்டியவற்றுளொருகூறுகொடுத்துத் தேவர்களையீடேறச்செய்தலின், "வானுமுய்ந்தன" என்றும் அறங்களைப் புரிந்தும், விருந்தோம்பியுமிவ்வுலகத்தாரையீடேறச்செய்தலின்; "மண்ணுலகுய்ந்தன." என்றும், வேள்விகளைப்புரிந்தவிகொடுத் திந்திரனையீடேறச்செய்தலின், "வாசவனெனவாழுங் கோனுமுய்ந்தனன்." என்றும், இவையெல்லாமொருதலையாகலின், இறந்தகாலத்தால், "உய்ந்தனன், உய்ந்தன." என்றுங் கூறினார். இல்லறம் இனிது நடத்தலும், பிறவுயிர்கள்மேல் அருள்பிறத்தலும் அன்பின் பயனாகும், ஆகலின் இல்வாழ்வான் மனைவிமேல் அன்புவைக்கவேண்டுவதாயிற்று, அஃதில்லாவிடத்து இல்லறம் முடிவுபெறாதென்பதை, "அறவோர்க்களித்தலு மந்தணரோம்பலுந்—துறவோர்க்கெதிர்தலுந் தொல்லோர்சிறப்பின—விருந்தெதிர்கோடலுமிழந்தவென்னை." எனவருஞ் சிலப்பதிகாரத்தானுணர்க.

இதுமுதற் பதினேழுசெய்யுட்கள். பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும். இறுதிச்சீர் மாங்காய்ச்சீரும், ஒழிந்த நான்கும் விளச்சீர்களுமாய் வந்த அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தங்கள். (ருஅ)

வேண்டும்வேட்கையையுரைத்தியான்மைந்தநீவிளம்பியவிய
ல்பெல்லாம், பூண்டுகுற்றமோர்சிறிதுமில்லாததோர்பூவை
யைப்புவியின்பாற், றேண்டிநின்வயிற்புணர்க்குவனங்கதுசெய்
கலாதொழிவேனேல், மாண்டிறந்திடுகுறைமதிக்கதிரென
மாய்கவென்றவமென்றான்.

(இ—ள்) மைந்த—மகனே! வேண்டும்வேட்கையை உரைத்தி—விரும்புகின்ற விருப்பத்தைச் சொல்லு, நீ விளம்பிய இயல்பு எல்லாம் பூண்டு—(அங்ஙனமே) நீ சொல்லிய விலக்கணங்களெல்லாம் பொருந்தி. ஓர் சிறிதும் குற்றம் இல்லாத ஓர் பூவையை—ஒரு சற்றுங் குற்றமென்பதில்லாதவொருபெண்ணை, யான—நான், புவியின்பால் தேண்டி—பூவுலகின்கண் தேடி, நின்வயின் புணர்க்குவன்—உன்மாட்டுச் சேர்த்துவைப்பேன். அது செய்கலாது ஒழிவேன் எல்—அதனைச் செய்யாமல்விடுவேனாயின், என் தவம்—எனது தவமானது, மாண்டு இறந்திடு குறைமதி கதிர்என மாய்க என்

ருன்—தேய்ந்தழிகின்ற அபரபக்கச்சந்திரனதுகலைபோலழியக்கடவதென்றுசபதங்கூறினார். (எ—று)

ஆங்கு—அசை. த—சாரியை. பூவை—ஆகுபெயர் தேண்டி—விரித்தல்விகாரம். என—உவமையிடைச்சொல் உரைத்திஆல்-என்பதனுலையசையாக்கினும், பூவையென்பதற்கியை துவ்வையஃறிணையொருமைவிகுதியாககினுமமையும் தன்னுடையசொல்லை வேதவாக்காககொண்டுடன்பட்ட புத்திரருக்கு வேண்டியவாறு புரிதல், தந்தைக்கோர் பெருங்கடனுதலின்,"அதுசெய்கலாதொழிவேனேல்—மாண்டிறந்திடுகுறைமதிக்கதிரெனமாய்கவென்றவம்" என்று குச்சகரும வஞ்சினங் கூறினரென்பதாம். (ருக)

இனையபான்மையிற்குச்சகன் சூழுரையியம்பலுந் திருமாலுமுன், புனையுமெய்ப்பெயர் தரித்தசேயாங்கவன் பொலங்கழற்றனைப்பூண்டோர், தனயனுய்பொருட்டாலிதுபுகன்றனை தவத்தினிற்றலையான, முனிவநீயுனக்கரியதாயொருபொருள்முச்சகந்தனிலுண்டோ.

(இ—ள்) குச்சகன்—குச்சகமுனிவர், இனையபான்மையின் சூழ்உரை இயம்பலும—இவ்வாறாகச் சபதவாக்கைச் சொல்லுதலும், முன்திருமால் புனையும்மெய்பெயர் தரித்தசேய்—முன்னமே மகாவிட்ணுகொடுத்த (மிருககண்டேயர் என்னும்) உண்மையான பெயரைபெற்ற புதத்திரரானவர், ஆங்கு—அப்பொழுது, அவன்பொலம் கழல்தனை பூண்டு—அத் தந்தையினது பொலிவானபாதங்களை நமஸ்கரித்து, தவத்தினில் தலையான முனிவ—தவத்தில் முதன்மைபெற்ற முனிவரே, நீ ஓர் தனயன் உய்பொருட்டால் இது புகன்றனை—நீர் ஒரு புத்திரனீடேறும் நிமித்தமாக (கடுமையான) இச்சபதவாக்கைக் கூறினீர். உனக்கு அரிதாய் ஒருபொருள் முச்சகம் தனில் உண்டோ—(ஆனல்) தங்களுக்குத் தேடற்கருமையானதாய் ஒருபொருள் இந்த மூன்றுலகத்திலுமிருக்கின்றதா. (இல்லையென்றபடி) (எ—று)

ஓகாரம்—எதிர்மறை. ஆங்கு—அசையெனினுமாம். ஆல்—ஏதுப்பொருட்டு. அசையெனினுமாம். "ஓர் தனயன்" தன்மையிற் படர்க்கை வழுவி. "ஓரிடம் பிறவிடந் தழுவலுமுள" என்னும் விதியானமைதியாயிற்று. இச்செய்யுளில், இயம்பலும், சேய், பூண்டு, என்னும் மூன்றும் மேலே"இனையதன்மையதாகிய."என்னுஞ் செயயுளினீற்றிலுள்ள,"என்றான் "என்னும் முற்றுவினையோடுசென்றியையும். சூழ்—சபதம் முச்சகம்—சுவர்க்கம், பூமி, பாதலம். தவமுடையார்க்கு விரும்பியவெல்லாந் தாமே கைகூடலின், "ஆணக்

கரியதாயொருபொருள் மூச்சகத்தனிலுண்டோ," என்று வியந்து கூறினர். நவத்தா விரும்பியது பெறுவரென்பதை, "வேண்டியவேண்டியாங் கெய்தலாற்செய்தவ – மீண்டு முயலப்படும்." என்னுந் திருக்குறளானு முணர்க. (க0)

ஆவதேனுமியானுரைப்பதுண்டத்தனையற்றவரருளும்யாய்
சாவதாயினர்தன்னையரில்லவர்தங்கையரிலரானோர்
காவலாடவர்தம்முடனுதித்திடார்காசினிதனிலன்னோர்
வீவதாயினர்பெருங்கிளையில்லவர்வியத்தகுதிருவற்றோர்.

(இ–ள்) ஆவது எனும் — (உமக்குத் தேடற்கரியது ஒன்றுமில்லையே) ஆனாலும், யான் உரைப்பது உண்டு — அடியேன் சொல்லற்பாலதுளது. (அஃதென்னையெனின்) அத்தனை அற்றவர் — தந்தையையிழந்தவர்களும், அருளும் யாய் சாவது ஆயினர் — பெற்றதா யிறக்கப்பெற்றவர்களும், தன்னையர் இல்லவர் — தமக்கைமாரில்லாதவர்களும், தங்கையர் இலர் ஆனோர் — தங்கைமார்களில்லாதவர்களும், காவல் ஆடவர் தம்முடன் உதித்திடார் — தம்மைப் பாதுகாக்கின்ற ஆண்சகோதரரோடு பிறவாதவர்களும், காசினிதனில் அன்னோர் வீவது ஆயினர் — பூமியிலவ்வுடன் பிறந்தோர்கள் இறக்கப்பெற்றோர்களும், வியத்தகு திரு அற்றோர் — (யாவரும்) வியக்கத்தக்க செல்வமில்லாதவர்களும்.

தன்னை – தமக்கை, பெண்பிள்ளைகளை யன்னைதந்தைபோல் காப்பதற்கு ஆண்சகோதரருமுரியராகலின் "காவலாடவர்" என்றார். காசினி– காசிபமுனிக்குப் பரசுராமன் தத்தஞ்செய்த காரணத்தாற் பூமிக்கோர் காரணக்குறியாயிற்று, திருவென்பதற்கழகெனினுமமையும்.

இருபத்தொருதலைமுறையிலுள்ளாரை நற்கதியிற்சேர்க்கும் சற்புத்திரனைப் பெறுதற்குப் பிரமமணம் வேண்டியதாகலானும், அம்மணத்திற்கும் தந்தைதாய் சுற்றம் வேண்டியதாகலானும், "அத்தனையற்றவர், யாய் சாவதாயினர், கிளையில்லவர் கூடாதென்றார். இதனை, "கருதுமுற் பிரம மொருவனையழைத்துக் கலனுடுங் கன்னியையளித்த–லருளுமத்தெரிவைபயந்தசேய் மூவேழ்குலமுநற்கதியுறவளிக்கும்." என்னுங் காசிகாண்டச்செய்யுளானும், சகோதரருள்ளோரையே மணப்பது வேதவிதியாகலின், "தன்னையரில்லவர், தங்கையரிலரானோர், ஆடவர் தம்முடனுதித்திடார், அன்னோர் வீவதாயினர்," கூடாதென்றார், இதனை, "சமைகொண்மைந்தர்கள் பலரொடு பிறந்ததங்கையளாய்க்–கமழுமெய்யுடைக் கன்னியைவேட்பது கடனும்." என்னுந் திருநெல்வேலிப்புராணச்செய்யுளானும், "பனிசெய் வெண்மதிமுகத்தளாய் மைந்தர்கள் பலரோடும் பிறந்தாளாய்த்–துனியிலாத

கற்கன்னியைவேட்டிடல் தொன்மறைவழக்காமால்.'' என்னுங் காசிகாண்டச்செய்யுளானும், (சாமுத்திரிகாநூலிற் சொல்லப்பட்ட) அழகற்ற பெண்களை மணப்பின் (அறிவிழந்து)எரிவாய்நரகம் புகுதலுமுண்மை நூற்றுணிபாகலின், ''வியத்தகுதிருவற்றோர்'' கூடாதென்றார், இதனை, ''பொன்னனையவர் கவினுடை வடிவெல்லா—மொழிந்தநூல் வழிந்துபோகு நல்லுணர் வழுனிரயமுமாங் கவர்க்கணித்தாமால்,'' என்னுங் காசிகாண்டச்செய்யுளானுமுணர்க.

இதுமுதற் பன்னிருசெய்யுட்கள் குளகம், என்னை, ''குளகம்பலபாட்டொருவினைகொள்ளும்.'' என்பதுவிதியாகலின். (௧௧)

குடிப்பிறந்திலர்பிணியுறுமிருமுதுகுரவர்பாற்குறுகுற்றோர்
கடுத்தயங்கியமிடற்றிறையாதியாங்கடவுளர்பெயர்கொள்ளா
தடுத்தமாக்கடம்பெயர்பெறுபீடிலரலகைதன்னாமத்தோர்
படித்தலந்தனிற்புன்னெறிச்சமயமாம்படுகுழிப்பட்டுள்ளோர்.

(இ—ள்) குடிபிறந்திலர்—உயர்குடியிற் பிறவாதவர்களும், பிணி உறும் இருமுதுகுரவர்பால் குறுகுற்றோர்—நோய்வாய்ப்பட்ட அன்னைதந்தையரிடத்துப பிறந்தவர்களும், கடு தயங்கிய மிடற்று இறை ஆதியாம் கடவுளர் பெயர்கொள்ளாது—நஞ்சுவிளங்கிய திருக்கண்டத்தையுடைய சிவபெருமான் முதலான தேவர்களுடைய பெயரைப்பெறாது, அடுத்த மாக்கள் தம் பெயர்பெறு பீடு இலர்—பொருந்திய மிருகங்களினது பெயரைப்பெற்ற பெருமையில்லாதவர்களும், அலகைதன் நாமத்தோர்—பேயின்பெயரையுடையவர்களும், படிதலம் தனில்—பூவுலகத்தில், புல்நெறி சமயம் ஆம் படுகுழிபட்டு உள்ளோர்—தீயொழுக்கையுடைய மார்க்கமென்னும் படுகுழியின்கணகப்பட்டவர்களும். (எ—று)

படித்தலம். இருபெயரொட்டு. மாக்கள்-மாந்தருமாம். படுகுழி-யானையையகப்படுத்தும் பொறிக்கிடங்கு. அறிவாற்றலுடையாரையும் மயக்கித் தமக்குளகப்படுத்திக்கொள்ளுகின்றமையின், அத்தீச்சமயங்களைப் படுகுழியென்றார். குடிப்பிறவாதவரைமணந்தால், அவர்க்கு நரககதியுண்மையின் ''குடிப்பிறந்திலர்'' கூடாதென்றார், இதனை, ''தன்குலத்தினுக்கிசைவின்றி மேற்பட்டோர்தாழ்ந்த-வன்குலத்தினில் வழிமுறைவரைவின்றியிழிந்த-புன்குலத்தினிற் பூவையரழகெனப் பொருந்தி-நன்குறத் தழுவிடிலவர்நரகிடையடைவார்.'' என்னுந் திருநெல்வேலிப்புராணச் செய்யுளானும், நோய்வாய்ப்பட்டவன்னைதந்தையரிடத்துப்பிறந்தவரையும், தெய்வப்பெயரைப் பெறாது விலங்குமுதலியவற்றின் பெயரைப்பெற்றோரையும், மணப்பது விதிவிலக்காகலின் அதுவுங், கூடாதென்றார், இதனை, ''உடலி, னரிய

வெம்பிணியுற்றவரலர் மொழிவழியோர்-பரியு மாண்பெறுப்பாவையர் வழி யினாபணியுள்-வரைவின் மீனதிப்பேருளார் வரைந்திடலாகா'' என்னுந் திருநெல்வேலிப்புராணச்செய்யுளானும், ''நலிதரு பிணியுற்றோர்-பெண் ணலாதுயர் நன்மகப்பெறுகிலாப்பேதையர் வழிவந்தோர் - மண்ணினின்ற வான்பழிபடுமரபினுள்வந்துளோர் வரைபாந்தள்-விண்ணின் மீனதிபறவை யின்பெயருளோர்வேட்டிடல் விதியன்றே.'' எனவும்வருங் காசிகாண்டச் செய்யுளானும், சைவசமயமொழிந்தமற்றைச்சமயங்கள் பொய்ச்சமயமாகலி ன், ''புன்னெறிச்சமயமாம் படுகுழிப்பட்டுள்ளோர்'' கூடாதென்றார், இ தனை, ''சைவசமயமேசமயஞ் சமயாதீதப்பழம்பொருளைக் - கைவந்திடவே மன்றுள்வெளிகாட்டுமிந்தக்கருத்தைவிட்டுப்-பொய்வந்துழலுஞ் சமயநெறிபு குதவேண்டாமுத்திதருந்-தெய்வச்சபையைக்காண்பதற்குச்சேரவாருஞ் செ கத்தீரே.'' என்னுந் தாயுமானார் திருவாக்கானுமுணர்க. (கூஉ)

பிணியர்மூங்கை பர்பங்கினர்செவிடினர்பிறர்மனை தனிற்செல்வோ
கணிகைமாதரின் விழிப்பவர்பன்முறைகாளையர்தமைநோக்கி [ர்
நணியகாதலான் முன்கடைநிற்பவர்நலம்பெறப்புனைகின்றோர்
தணிவிலுண்டியர் துயின்மிகுமியல்பினர்தன்னினுமூப்புற்றோர்.

(இ-ள்) பிணியர்—நோயாளர்களும், மூங்கையர்—ஊமையர்களும், பங்கினர்—முடவர்களும், செவிடினர்—செவிடர்களும், பிறர்மனைதனில் செல்வோர்—அயலார்வீட்டிற்போகின்றவர்களும், கணிகைமாதரின் விழிப் பவர்—(பொதுநோக்குப்புணர்ச்சிநோக்குநோக்கும்) தாசிப்பெண்களைப்போ ற்பார்ப்பவர்களும், பன்முறைகாளையர்தமைநோக்கி—பலதரமும்(அழகுள்ள) காளைப்பருவமுடைய ஆடவர்களைப் பார்த்துக்கொண்டு, நணியகாதலால்— அவர்மேற்பொருந்திய ஆசையினால், முன்கடைநிற்பவர்—முதல்வாய்தலில் நிற்பவர்களும், நலம்பெறபுனைகின்றோர்—அழகுண்டாகும்படி அலங்கரித்து க்கொள்ளுகின்றவர்களும், தணிவு இல் உண்டியர்—அதிகவுணவை யுடை யவர்களும், துயில் மிகும்இயல்பினர்—அதிகநித்திரையையுடையவர்களும் தன்னினும் மூப்பு உற்றோர்—கணவனினும் மூப்பையுடையவர்களும்.(எ-று)

நணிய-இடைக்குறை. தன் என்றது, கணவனை. பிறர்மனையிற்செல் வோரும், தன்னையாடையாபரணங்களாலலங்கரிப்பவரும் பதிவிரதைகளா கமாட்டாராகலின், ''பிறர்மனைதனிற்செல்வோர், நலம்பெறப்புனைகின்றோ ர்,'' கூடாதென்றார், இதனை, ''எய்துமிற்றுறந்தேகலரில்லகல்—தையலார் முகங்காணினுஞ்சாம்புவார்.'' ''எரிமணிப்பொலம் பூண்சுமந்தின்னுயிர்க்—கு ரியகேள்வருவப்ப முன்னெய்துவார்—பிரியுங்காலையிற் பெய்கலன்யாவையு—

மொருவிமாசடலுண்டிடவைகுவார்" என்னுங் காசிகாண்டச் செய்யுட்களாலும், அதிகவுணவையுடையவர்களும் நித்திரையையுடையவர்களும், மடியுட்நோயுமுடையராவரன்றிப் பதிவிரதையுமாகமாட்டாராகலின், "தணிவிலுண்டியர், துயின்மிகுமியல்பினர்." கூடாதென்றார். இதனை, "உண்டிசுருங்குதல் பெண்டிற்கழகு," எனவும், "அணந்தலாடேல்" எனவும் வருமவ்வைவாக்குக்களாலும், "பெருமைசேர்கணவனுண்ட பின்புதானுகர்தலன்றே—னிருவிழிதுயிலிற்றுஞ்ச லெழுதன்முனெழுதல்கேள்வ-னருகுறிற் பணிகள்பூணலகலிலப்பணிகணீத்தல்—பொருவில் கற்புடைய மேண்மைப் பூவையர்செய்கையாமால்." எனவும், "உலைதமக்கென்றுவையா ரொருகையாற்பாணிநல்கார்—கலைபலர்நடுவினிர்ற முதறிடார்கற்புள்ளோரே." எனவும் வருந்திருநெல்வேலிப்புராணச்செய்யுட்களாலும், தன்னின் மூத்தாளைமணப்பது வேதவிலக்காகலின், "தன்னினும்மூப்புற்றோர்" கூடாதென்றார். இதனை, "இனியமென்மொழியுடையாளாய்த் தன்னினுமிளையளாயெவரோடு—துனியிலாதநற் கன்னியைவேட்டிடல் தொன்மறைவழக்காமால்." என்னுங்காசிகாண்டச்செய்யுட்களாலுமுணர்க. பிற வெளிப்படை. (சுங)

ஒருமைதங்கியகோத்திரமரபினருயர்ந்தவர்குறளானோர்
பருமைதங்கியயாக்கையர்மெல்லுருப்படைத்தவர்பயனில்லாக்
கருமைதங்கியவடிவினர்பொன்னெனக்கவின்றெழுகாயத்தோ
ரிருமைதங்கியபசப்பினர்விளர்ப்பினரெருவையினுருமிக்கோர்.

(இ—ள்) ஒருமைதங்கிய கோத்திர மரபினர்—(கணவது கோத்திரத்தோடு) ஒன்றாகப்பொருந்திய கோத்திரமுறையுடையவர்களும், உயர்ந்தவர்—நீண்டவர்களும், குறள் ஆனோர்—குறுத்தவர்களும், பருமைதங்கியயாக்கையர்—பருமைபொருந்திய தேகமுள்ளவர்களும், மெல் உரு படைத்தவர்—மெல்லியதேகமுள்ளவர்களும், பயன் இல்லா—(விரும்புதலாகிய) பயனற்ற, கருமைதங்கிய வடிவினர்—கருமைநிறம் பொருந்திய தேகத்தையுடையவர்களும், பொன் என கவின்று எழுகாயத்தோர்—பொன்போலப் பிரகாசித்து விளங்குகின்ற தேகத்தையுடையவர்களும். இருமைதங்கியபசப்பினர்—பெருமைபொருந்திய பச்சைநிறமுள்ளவர்களும், விளர்ப்பினர்—வெண்ணிறமுடையவர்களும், எருவையின் உரு மிக்கோர்—இரத்தம்போல செந்நிறம் மிக்கவர்களும். (எ—று)

பொன்மைவெண்மைபோற் சிறப்புடைத்தன்றாகலின் "பயனில்லாக் கருமை" என்றார். பசப்பு—தேமலுமாம். எருவையின்—என்பதற்குக் கழுகுபோலெனப் பொருள்கோடலுமொன்று. "தெரிமாண்டமிழ் மும்மைத்தெ

ன்னம் பொருப்பன்" என்புழிப்போல ஒருமையென்பதன்மை விகுதி, தன்மைப்பொருளில் வாராது ஒன்று என்னு மெண்ணுப்பொருளில்வந்தது. ஒருகோத்திரத்துப்பிறந்தாரை மணப்பின், பின்னுமவியாகப் பிறந்து வருத்தமுறவேண்டுதலானும், வேதவிதியன்றாகலானும், "ஒருமைதங்கியகோத்திரமரபினர்" கூடாதென்றார். இதனை, "ஒருகுடிப்பிறந்தாள்போக முவந்தவனூர்நாயாவான்." என்னுஞ் சிவதருமோத்தரச்செய்யுளானும், "உரியகோத்திரமொன்றினிலுதித்துளோர், வரைந்திடலாகா" என்னுந் திருநெல்வேலிப்புராணச்செய்யுளானும், "நண்ணுகோத்திரமொன்றினி லுதித்துளோர், வேட்டிடலாகா." என்னுங்காசிகாண்டச்செய்யுளானு முணர்க.

யாக்கை, உரு, வடிவு, காயம், என்னும்பலபெயர்க ளொருபொருளில் வந்தமையின், பொருட்பின்வருநிலையென்னுமலங்காரம். (கூச)

நாணிலாதவராடவர்புணர்ச்சியினணியவர்நகைக்கின்றோ
ரேணிலாதவர்பெருமிடல்சான்றவரிருமுதுகுரவோர்த
மாணைநீங்கினர்சினத்தினரிகலினரடுதிறமுயல்கின்றோர்
காணவேண்டினர்நடமுதலாயினகாமனாற்கவல்கின்றோர்

(இ-ள்) நாண் இலாதவர்—வெட்கமில்லாதவர்களும், ஆடவர் புணர்ச்சியின்நணியவர்—ஆடவர்சையோகத்திற் பற்றுள்ளவர்களும், நகைக்கின்றோர்—(என்னேரமும்)சிரிக்கின்றோர்களும், ஏண் இலாதவர்—வலியில்லாதவர்களும், (பலவீனமானவர்கள்) பெரும்மிடல்சான்றவர்—பெருவலியில் மேற்பட்டவர்களும், இருமுதுகுரவோர் தம் ஆணைநீங்கினர்—தந்தைதாயாரின்கட்டளையைக்கடந்தவர்களும், சினத்தினர்—கோபமுள்ளவர்களும், இகலினர்—பகைமையுடையவர்களும், அடுதிறம் முயல்கின்றோர்—கொலைத்தொழிலில்முயலுகின்றவர்களும், நடம்முதலாயின காணவேண்டினர்—கூத்துமுதலியவற்றைப் பார்க்கவிருப்பமுள்ளவர்களும், காமன் ஆல் கவல்கின்றோர்—காமத்தினால் வருந்துகின்றவர்களும். (எ-று)

நீங்கினவர், வேண்டினவர், நீங்கினர், வேண்டினரெனக் குறைந்து நின்றன. அடுதிறம்—சண்டையுமாம். காமன்—ஆகுபெயர். பார்த்தபொழுதெல்லாஞ் சிரிப்பவளாற் குற்றஞ்சம்பவிக்குமாகலின், "நகைக்கின்றோர்" கூடாதென்றார். இதனை, "சொல்லுமாறலதுநகைபுரிந்திடிற்றோமுறும்." என்னுங் காசிகாண்டச்செய்யுளானும், "சொன்னவகையலதுநகைபுரிந்திடில் வெந்துயரினுறும்" என்னுந் திருநெல்வேலிப்புராணச்செய்யுளானும், தாய்தந்தையரின் சொற்கேளாதவர் ஒழுக்கமற்றுத் தவமில்லாதவராவாராகலின், இருமுதுகுரவோர் தமாணைநீங்கினர்." கூடாதென்றார், இதனை

"தந்தைதாய் பணித்தசெய்யுந் தவமலாற்றவம்வேறில்லை" என்னுங்காசிகாண்டச்செய்யுளானும், நாடகம்முதலிய காணவிருப்புடையவர் கற்புடையராகாராகலின், "நடமுதலாயின காணவேண்டினர்." கூடாதென்றார். இதனை, "பகர்விழ வணிகளேறக்கல்" எனவும், "வனைசலன் மாற்றுட்கீயின் மிகவுமன்புறுவார்சாலி மீனெனுங்கற்பினரே." எனவும் வருந் திருநெல்வேலிபுராணச் செய்யுட்களானுமுணர்க. ஏனையவுந்துணர்க.

நாண்—பெண்டிர்க்கியல்பாகியகுணம். (௬௫)

ஈசனன்பிலர்பெருந்தகைமுனிவரையிகழ்பவருயிர்மீது
நேசமென்பனவில்லவர் தங்குலநெறிதனினில்லாதோர்
மாசுதங்கியகுணத்தினர்நிறையிலார்மனமெனுங்காப்பில்லோர்
தேசிகன்றனைமனிதனென்றுன்னினர்தேவரைச்சிலையென்றோர்.

(இ—ள்) ஈசன் அன்பு இலர்—சிவபெருமானிடத்தன்பில்லாதவர்களும், பெருந்தகைமுனிவரை யிகழ்பவர்—பெருந்தன்மையமைந்த முனிவர்களை நிந்திப்பவர்களும், உயிர்மீது நேசம் என்பன இல்லவர்—பிறவுயிர்களின்கண் கருணையென்பவை யில்லாதவர்களும், தன்குல நெறிதனில் நில்லாதோர்—தங்கள்குலதுக்குரிய வொழுக்கத்தி லொழுகாதவர்களும், மாசுதங்கியகுணத்தினர்—குற்றம்பொருந்திய குணத்தையுடையவர்களும், நிறை இலார்—கற்பில்லாதவர்களும், மனம் எனும் காப்பு இல்லோர்—மனமென்று விசேடித்துச் சொல்லபபடுங் காவலில்லாதவர்களும், தேசிகன்தனை மனிதன் என்று உன்னினர்—ஆசாரியரை (இவரும் நம்போலொரு) மனிதன்றானேயென்று நினைக்கின்றவர்களும், தேவரை சிலையென்றோர்—தேவர்களதிட்டித்து நிற்கும் விக்கிரகங்களைக் கல்லென்றுசொல்லுகின்றவர்களும். (எ—று)

உயிர்பலவாகலின் நேசமென்பனவெனப்பன்மையாற்கூறினர். தேவர் என்றது, தேவர்கணிலைக்களமாகக் கொண்டுறையும் விக்கிரகங்களை, அஃதாகுபெயர். பிறவுயிர்கண்மேலன்பில் வழியில்லறங் கடைபோகாமையானும், அவர்க்கு வீடு பேறின்மையானும். "உயிர்மீதுநேசமென்பனவில்லவர்" கூடாதென்றார், இதனை, "அல்லலருளாள்வார்க்கில்லை வளிவழங்கு-மல்லல்மாஞாலங்கரி." என்னுந்திருக்குறளானும், மேற்காட்டியவாற்றானும், மனக்காவலன்றி மதிற்காவலுடையவர் கற்புடையரல்லராகலின், "மனமெனுங்காப்பில்லோர்" கூடாதென்றார். இதனை, "சிறைகாக்குங் காப்பெவன்செய்யுமகளிர்—நிறைகாக்குங்காப்பேதலை." என்னுந் திருக்குறளானுமுணர்க. ஏனையவுந்துணர்க. (௬௬)

பத்தின்மேற்படுமாண்டினர்பூத்திடுபருவம்வந்தணுகுற்றோ
ரொத்தபண்பிலரச்சமின்மனத்தினருருமெனவுரைசெய்வோ
ரத்தனன்னையீந்தருளுமுன்னொருவர்பாலார்வமுற்றவர்ச்சேர [ர்,
வைத்தசிந்தையர்பெருமிதமுற்றுளோர்மடமொடுபயிர்ப்பில்லோ

(இ-ள்) பத்தின்மேல்படும் ஆண்டினர் பூத்திடும் பருவம்வந்து அணுகுற்றோர்—பத்துக்குமேற்பட்ட வயசையுடையவராகிய பூப்புவருதற்குரிய பக்குவம்வந்துசேரப்பெற்றவர்களும், ஒத்த பண்பு இலர்— (யாவருக்கும்) ஒத்த ஒழுகுதலாகியகுணமில்லாதவர்களும், அச்சம் இல் மனத்தினர்—(அஞ்சவேண்டியவற்றிற்கு) அஞ்சாதமனத்தை யுடையவர்களும், உரும் என உரைசெய்வோர்—இடிபோல (வெடித்தசொல்லால்) வார்த்தையாடுகின்றவர்களும், அத்தன் அன்னை ஈந்தருளுமுன்—பிதாவும் மாதாவும் ஒருவர்க்குக்கல்யாணம் பண்ணிக்கொடுத்தற்கு முன்னம், ஒருவர்பால் ஆர்வம் உற்று—ஒருஆடவன்மேலாசைவைத்து, அவர்சேரவைத்த சிந்தையர்—அவனைத்தழுவவைத்த மனத்தையுடையவர்களும், பெருமிதம் உற்றுளோர்—செருக்குற்றவர்களும், மடம் ஒடு பயிர்ப்பு இல்லோர்—மடம் பயிர்ப்பு என்னுங் குணங்களில்லாதவர்களும். (எ—று)

வந்தணுகலொருசொன்னீர்மை. "பதினோராண்டும் பத்துத்திங்களும்புக்காளாக."எனத்திருக்கோவையாருரையாசிரியர், பூப்பிற்குக் காலவரையறைகூறியிருத்தலானும், "பத்தின்மேற்படுமாண்டினர்" எனவே பூத்திடுபருவம் அதனுள்ளடங்குமாதலானும், "பத்தின்மேற்படு மாண்டினராகிய பூத்திடுபருவம்வந்தணுகுற்றோரெனக் கூட்டிமுடிவுசெய்தாம். பூப்பு நிகழ்ந்தபின் மணப்பதாற் றோஷமுண்டென்பது வெளிப்படை; ஈண்டுவிரிப்பிற்பெருகும். மகளிர்க்குரியநாற்குணங்களுள் மேலே நாணைக்கூறியீண்டு, அச்சம், மடம்,பயிர்ப்பென்னும் முக்குணங்களுங் கூறினார். அச்சம்—காணாத தொன்று கண்டாற் பெண்மையிடத்து நிகழ்வது. மடம்—கொளுத்தக்கொண்டுங் கொண்டதுவிடாமை, அறிந்துமறியார்போறல். பயிர்ப்பு—நாயகனையல்லாத பிறர்தேகந் தனதுதேகத்துப் படினருவருப்புறுதல். ஒத்தபண்பு—அவ்வவர்குணத்திற்கேற்பவொழுகல், "பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்," என்றார் கலித்தொகையினும். ஏனையவுந்துணர்க.(௬௭)

பிறப்பினெல்லையில்விழியிலார்தோற்றியபின்றையேயிழக்கின்
றோர், மறுப்பயின்றிடுகண்ணினர்படலிகைவயங்கியநோக்கத்
தார், குறிப்பின்மெல்லவெஃகியேவிழித்திடுங்குருடர்சாய்ந
யனத்தோர், சிறப்பில்பூனையேயிணைக்கண்ணினிற்றிரிதரு.
செங்கண்ணோர்.

(இ-ள்) பிறப்பின் எல்லையில் விழி இலார்—பிறந்தபொழுதிற் கண்ணில்லாதவர்களும், (பிறவிக்குருடர்) தோற்றியபின்றையே இழக்கின்றோர்—பிறந்தபின்பே (கண்களை) யிழந்திருக்கின்றவர்களும், மறு பயின்றிடுகண்ணினர்—மாசுபொருந்திய கண்களையுடையவர்களும், குறிப்பின்—குறிப்பாக, மெல்லென வெஃகி விழித்திடும்—மெல்லவாய் விரும்பிப் பார்க்கும், குருடர்—குருட்டுக் கண்களை யுடையவர்களும், சாய்நயனத்தோர்—ஒருபுறத்துச்சாயும் கண்களையுடையவர்களும், (வாக்குக்கண்) சிறப்பு இல்பூனையின் நாட்டத்தர்—சிறப்பில்லாத பூனைக்கண்களையுடையவர்களும், கணத்தினில்திரிதரும் செம்கண்ணோர்—பேய்களின் கண்கள்போலச் சுழலுகின்ற சிவந்தகண்களையுடையவர்களும். (எ-று)

படலிகையென்பதற்கு, வட்டமெனவும், கணத்தினில் திரிதருமென்பதற்கு,' கணப்பொழுதிற் சுழலுமெனவும், பொருள்கூறினுமாம். படலிகை-பூ, கூசுகண் குருடோடொக்குமாகலின், "வெஃகியேவிழித்திடுங்குருடென்றார்." ,

ஈங்குக்காட்டிய விழிகளையுடையாரை மணப்பின் தீமைசம்பவிக்குமாகலிற் கூடாதென்றார். இதனை, "படையனைய விழியுயரி ளுயுள்போம் வட்டமெனிற்பலரைச்சேரும்" எனவும், "அடையுமென்புறா நிறமேனன் குணங்கள் வாய்ந்திடாதறவேசேப்பினுடன் கணவனுயிருண்ணும்." எனவும், "மாறுகண்ணுயிருந்திடினும் பொலிவிழக்குமிடப்பானோக்கிலாய தூய ரசதியுறு மலதுவலப்பானோக்கின்மலடதாகும்." எனவும், வருந்திருநெல்வேலிப்புராணச்செய்யுட்களானும், "வட்டமேற்கலந்திடும் பலரோடு." எனவும், "வண்ணமென்புறா நிறமெனினற்குணம்வாய்ந்திடாதறச்சேப்பினுண்ணுங்காதலனுயிரினை." எனவும், "மாறுகண்ணுகியுமிருந்திடிற் பொலிவிலளிடப்பாலி-னேன்றுநோக்குறிற் சிலதியாம்வலப்புறத்தியைந்திடின் மலடாகும்." எனவும் வருங்காசிகாண்டச்செய்யுட்களானு முணர்க.

பொருட்பின்வருநிலையென்னுமலங்காரம். (சுஅ)

**தூறுசென்னியர்நரைமுதிர்கூந்தலர்துகளுறுமைம்பாலார்
வீறுகோதையர்சின்னமார்குழலினர்விரிதருமளகத்தோ
ரீறில்செம்மயிர்ப்பங்கியர்இலனிடையிறக்கியகேசத்தோ
ரூறுசேர்தருமோதியர்விலங்கெனவுரமிகுகுராலுள்ளோர்.**

(இ-ள்) தூறு சென்னியர்—அடர்ச்சியான கூந்தலையுடையவர்களும், நரைமுதிர்கூந்தலர்—நரைமுதிர்ந்த கூந்தலையுடையவர்களும், துகள் உறும் ஐம்பாலார்—அழுக்குப்படிந்த கூந்தலையுடையவர்களும், வீறுகோதையர்—அதிகமான கூந்தலையுடையவர்களும், சின்னம் ஆர் குழலினர்—சிறுமை

பொருந்திய கூந்தலையுடையவர்களும், விரி தரும் அளகத்தோர்—விரிந்த கூந்தலையுடையவர்களும், ஈறு இல் செம்மயிர் பங்கியர்—அளவுக்கு மேற்பட்ட சிவப்பமைந்த கூந்தலையுடையவர்களும், நிலன் இடை இறக்கிய கேசத்தோர்— மிகுதியாக வளர்ந்து நிலத்தின்கணிறக்கிய கூந்தலையுடையவர்களும், ஊறு சேர்தரும் ஒதிபர்— கழலுதலாகிய) குற்றமமைந்த கூந்தலையுடையவர்களும், விலங்கு என உரம்மிகுகுரல் உள்ளோர்—மிருகங்களின் மயிர்போல வரமமிக்க கூந்தலையுடையவர்களும். (எ—று)

சென்னி, விலங்கு—ஆகுபெயர்கள். மயிர்ப்பங்கி—ஒருபொருட்பன்மொழி. பங்கியென்பது ஆண்மயிராயினும், சிறப்புப்பெயர், பொதுப்பெயராய்ப் பெண்மயிருக்கு வந்தது. செம்மயிர்பங்கி—செம்பட்டமயிர், கேசம். இருபான்மயிர்க்கும் பொதுப்பெயர். ஐம்பால், ஐவகையாக முடித்தலால் வந்ததோர்காரணப்பெயர் தூறு-என்பதற்கு, சடை எனவும், ஊறு-என்பதற்கு, தனி இழிந்த எனவும் பொருள் கொள்ளினுமாம். விலங்கெனவரமிகு குரலுள்ளோர், என்பதற்கு மிருகம்போல உரமமிக்க சத்தமுடையவரெனப் பொருள்கொள்ளல், பிரக்கிரமபங்கமென்னுங் குற்றத்திற்கிடமாகும். இக்குற்றத்தின் பாற்பட்ட கூந்தலையுடையளாயி னில்லறங் கடைபோகாதிடர்படவேண்டுதலிற் கூடாதென்றார், இதனை, "இவ்வகைதானின்றிவளர் கடைபிளந்து வெளிவெளியா யிடையிற்றேன்றி—பவ்வியல்பி னெருசெருண்டு குழைவின்றி வடிவமின்றி யறவுநீண்டு—வெவ்விய செந்நிறத்ததாய்ப் பொன்னிறமதாயிடில்வெந் துயரினுழும்." என்னுந் திருநெல்வேலிப்புராணச் செய்யுளானும், "கரியமையினைநூற் றெனவளர்ந்தமென் கடைகுழன்றற—முருகுவாய்மடுத்தளிநிறம் பூத்தற முறைமுறை நெறிப்பாகி—பெருகநீளுதல்குறுகுதல் வளர்கடை பிளந்திடலிவைபன்றி—பொருவில் மேன்மையாய் நெறி திடலளிமலர்ப பூங்குழலினிதாரால்," எனவும், "சடைபிளந்திடை வெளிவெளியாயறக் கடினமாய்க் குழைவின்றி—வடிவமின்றிமற்றுலறுசெந்நிறத்ததாய் வயங்குபொன்னிறமாகிற்—கொடியவெந்துயர் நிரப்புறும்." எனவும் வருங் காசிகாண்டச்செய்யுட்களானுமுணர். இதுவும் மேலையலங்காரம். (௬௬)

சிறுதுகண்ணினர் மிகநெடுந் துண்டத்தர் சேர்ந்திடுபுருவத்தோர்
குழியகாதினருயர் தருமெயிற்றினர் கோணுறுகண்டத்தோர்
மறுவிராவியமுகத்தினர்சுணங்குறுமணிமுலைமார்பத்தோர்
வெறியதாகிய நசுப்பிலர்சிலையென வியன்மிகுவயிறுள்ளோர்.

(இ—ள். சிறுதுகண்ணினர்—சிறுத்த கண்களையுடையவர்களும், மிகநெடுந்துண்டத்தர்—மிக நீண்ட மூக்கையுடையவர்களும், சேர்ந்திடு புரு

வத்தோர்— ஒன்றோடொன்று) சேர்ந்த புருவங்களையுடையவர்களும், குறியகாதினர்—சிறிய காதுகளையுடையவர்களும், உயர்தரும் எயிற்றினர்—நீண்ட பற்களையுடையவர்களும், கோண் உறுகண்டத்தோர்—வளைவுபொருந்திய கழுத்தையுடையவர்களும், மறு விராவிய முகத்தினர்—மறுப்படிந்த முகத்தையுடையவர்களும், சுணங்கு உறா மணிமுலை மார்பத்தோர்—தேமல்படராத அழகிய ஸ்தனங்களமைந்த மார்பையுடையவர்களும், வெறிது ஆகிய நுசுப்பு இலர்—சிறிதாகிய இடையில்லாதவர்களும், சிலைஎன வியன் மிகு வயின் உள்ளோர்—கற்போல (இறுகி) மிகப்பெருத்த வயிற்றையுடையவர்களும். (எ—று)

வெறியது—என்பதின் அகரஞ் சாரியை. வெறிது—சிறிது சிலை—கல். சிறிய கண்ணுடையோர் கூடாதென்பதை, "கடகரியின் விழிநிகர்க்கின சற்றிடுதல் குணனுகும்." என்னுந் திருநெல்வேலிப்புராணச் செய்யுளானும், நீண்டமூக்குடையவர் கூடாதென்பதை, "இலகுபொற் கொடிமூக்கி னென்புட்சிறிதுயர்ந்துசேந்தியலெள்ளின் மலரின்வண்ணமாய் நீண்டுதாழ்ந்திராது." என்னுங் காசிகாண்டச்செய்யுளானும், சேர்ந்தபுருவங் கூடாதென்பதை, "அலங்குகதிர்க் கொடிப்புருவமொன்றோடொன்று றுதாகி லெழகதாகும்." "ஒன்றோடொன்றதுறிலருந்துயரமே விடும்." என்னுந் திருநெல்வேலிப்புராணச்செய்யுளானும், உயர்ந்தபல்லுடையவர் கூடாதென்பதை, "அணரிமேயபல் லுயர்ந்திடிற் றுயுயிரழிந்திடும்." என்னுங் காசிகாண்டச்செய்யுளானும், கோணிய கழுத்துடையவர் கூடாதென்பதை, "செய்யசிறு புறத்தினரம் பெழில்மயிர்கள் செறிந்தீண்டில் சிதறிக்கோணிளைவுற்றிடிற்றீது." என்னுந் திருநெல்வேலிப்புராணச் செய்யுளானும், மறுப்பொருந்திய முகமுடையவர் கூடாதென்பதை, "ஒளியுமிழ்ந்துநல்வட்டமாயெழிறிகழுவாமதியெனத்தோன்றி—நளினமொர்மணம் வீசுவாண் முகமெனினன்று." என்னுங் காசிகாண்டச் செய்யுளானும், சிறிய விடையில்லாதவர் கூடாதென்பதை, "இடுகுநுண்ணிடை வறுமையெய்திடிற்றிருவெய்திடும்" பெரிதாகிற் படருழந்திடும்." என்னுங் காசிகாண்டச்செய்யுளானும், பருத்தவயிறுடையவர் கூடாதென்பதை, "குடமெனமுழவெனப்பருத்திடுமெனினுளு—முயிர்ப்பவிந்துயிருலந்திடுமனசிரப்புற்றுவெந்துயர்கூரும்."என்னுங் காசிகாண்டச்செய்யுளானுமுணர்க வனையவு மினைய. (௭௦)

காயநூன்முறையுரைத்திடுமியல்பிலாக்கடிநடயிதயப்பத்தோர்
வாயுமங்கையுநகமுமுள்ளடிகளுட்வளைப்புறுசிவப்பில்லோர்
மேயசின்மயிர்பரந்திடுபதத்தினர்மென்சிறைவிகனம்போற்
றாயநன்னடையில்லவரங்குலிநெடல்புனிதோயாதோர்.

(இ-ள்) காயநூல் முறை உரைத்திடும் இயல்பு இலா—சாமுத்திரிகா லக்கணநூலில் முறைப்படி சொல்லப்படும் இலக்கணங்களில்லாத, கடிதடம் நிதம்பத்தோர்—அரையின்கட் புடைப்பாகவுள்ள அல்குலையுடையவர்களும், வாயும்—இதழ்களும், அங்கையும்—உள்ளங்கைகளும், நகமும்—நகங்களும், உள் அடிகளும்—உள்ளங்கால்களும், வனப்பு உறு சிவப்பு இல்லோர்—அழகுபொருந்திய சிவப்புநிறமில்லாதவர்களும், சில் மயிர்மேய பரந்திடு பதத்தினர்—சிறியரோமங்கள்பொருந்திய அகன்ற கால்களையுடையவர்களும், மெல்சிறை எகினம் போல் தூயநல் நடை இல்லவர்—மெல்லிய சிறகுகளையுடைய அன்னத்தின் நடைபோலுஞ் சுத்தமான நல்ல நடை இல்லாதவர்களும், அங்குலி தொல்புவி தோயாதோர்—கால் விரல்கள் பழமையான பூமியிற் படிய நடவாதவர்களும். (எ-று)

("அகமுனர்ச் செவிகைவரினிடை யனகெடும்" என்னும் விதிநோக்கி அகங்கை அங்கையென நின்றது. வாய் எகினம்—ஆகுபெயர்கள். காயநூல்—சாமுத்திரிகாநூல். இது அங்கலக்கணங்களைக் கூறுவது. கடிதடமென்பதற்கு அரையின்கட் புடைப்பாகவுள்ளவிடமென்பர் நச்சினார்க்கினியர். கடி—அரை. தடம்—புடைப்பு. கடிதடந்தப்பமென்பதை ஒருபொருட்பன்மொழியென்பாருமுளர். இடையே மயிர்நரம்பின்றி ஆறு, அல்லது நான்கு விரலளவாகி வட்டமாய்ச் சிறுத்து யானைமத்தகமும் ஆமைமுதுகும் போன்ற வல்குலே உத்தமமென்று நூல் கூறியிருத்தலின் அவற்றிற் குறைவும் மிகையுமுள்ளது கேட்டிற்குக் காரணமாகவுள்ளதாகலிற் கூடாதென்றார், இதனை. "எண்ணுமங்குலமோராறு நான்கதா மெழில்பெறுங் கடிநன்றாம்." என்னுங் காசிகாண்டச்செய்யுளாலும், இதழும், உள்ளங்கையும், (நகங்களும்) உள்ளங்காலும், சிவப்பில்லாதொழியிற் கேட்டுக்கேதுவாமாகலிற் கூடாதென்றார் இவற்றை, "கீழிதழ்சேந்துவளர் செழுந்துகிர்க்கடிகைபோல்." எனவு, அரத்தமூட்டியசெய்ய பொற்றாமரையகவிதழெனச்சேந்து', எனவும், "துப்புறுசிவப்புள்ளடியமைந்துதோன்றும்." எனவும், "கூருகிர்நீண்டிடிற் சிவந்திடிற்சிறப்பாகும்" எனவும், "பொன்மையாய்படவுள்ளபாய்விளர்ப்புற்றுற்றுயருழந்திடும்." எனவும், "அரக்கெறிந்தசெந்தாமரையெனச்சிவந்து.". எனவும், வரும் மேற்பிரமாணநூற் செய்யுட்களாலும், மயிர்பொருந்தி யகன்றகால்களை யுடையவர் பொய்மையும் வேசித்தன்மையுமுடையராகலிற் கூடாதென்றார், இதனை, "கிளர்பன்மயிர்கள்செறிந்திடிற் பொய்கிளத்துந்தாசியாய்ப்பெலிவாள்." என்னுந் திருநெல்வேலிப்புராணச்செய்யுளாலும், அன்ன நடையில்லாது இடறிநடக்கும் நடையையுடையவர் மூன்றுகுலத்தையுங் கெடுக்குங் கேட்டையுடையராகலிற் கூடாதென்றார், இதனை, "தகவெழுவேநடக்கிலிறக்குங்குலமூன்றும்." என்னு

ங் திருநெல்வேலிப்புராணச் செய்யுளானும், விரல் நிலத்துப்பொருந்தப்பெ ற்றவர் கணவனுக்கு மரணத்தைவிளைவிப்பராகலின் அவருங் கூடாதென் றார். இதனை, "விரனிலத்திற் றுன்னபொருந்தாதெனின் மணந்தோன் றுஞ்சும்." என்னுந் திருநெல்வேலிபபுராணச் செய்யுளானும், "கடைவிர னிலத்திடைபொருந்திடாதெனிற் காதல்பெருகுகேள்வரையொறுத்திடும்," என்னுங் காசிகாண்டச்செய்யுளானுமுணர்க. (எக)

இனைய தன்மையராகிய மாதர்களினைபரிவர்யாரும்
புனையுமங்கலமாகிய கடிவினை புரிதரவரையாதோ
ரனையரேயெனின் வேண்டலன் முழுவது மவரியலணுகாத [றான்.
வனிதையுண்டெனின் வேண்டுவன் றேர்ந்தனைமரபினிற்றருகென்

(இ-ள்) ஆகிய இனையதன்மையர் மாதர்கள்—ஆகிய விந்தக்குற்றமா ன விலக்கணங்களையுடைய பெண்களும, இனையர் இவர் யாரும்—(இதுபோ ன்றகுற்றங்களமைந்த) இனையபெண்களுமாகிய விபபாலாரெவரும், புனை யும்மங்கலம் ஆகிய—செய்யபபடும மங்கலததன்மையான, கடிவினைபுரிதர வரையாதோர்—மணச் சடங்கு செய்ய விலககபபட்டவராவர், அனையரே எனின் வேண்டலன்—(ஆகலின்) அக்குற்றங்களுள்ள பெண்களாக விரு க்குமென்றால் விரும்பமாட்டேன், அவர் இயல்முழுவதும் அணுகாத வனி தை உண்டு எனின் வேண்டுவன்—அவர்களுடைய தன்மை முழுதுமடை யாத பெண்ணுண்டேயாயின் (அவரையே) விரும்புவேன், தேர்ந்தனைம ரபினில் தருக என்றான்—(எனககு மணம் புணர்த்துவது தமக்குக்கருத் தாயினபெண்ணையே) தேடி முறைபபடிமணஞ்செய்து தாககடவீரென் று (மிருககண்டேயர்) கூறினர். (எ-று)

முழுவதும்—விரித்தல், தருகென்றான்—ஈறுதொகுத்தல். தேர்ந்தனை— முன்னிலையொருமை யிறந்தகாலமுற்றெச்சம். கடி—மணம். "ஆவீறையும்" என்னும் விதியான், "வநிதா" என்னும் வடமொழி வனிதையெனவையீ றுபெற்றது, வடமொழித்திரிபு. இனைய தன்மையராகிய மாதர்கள் இனை யர், எனநின்றுழிங்கு நிறுத்தி மற்றுமென்னு மோரிடைச்சொல்லைத் தந்து மற்றுமித்தன்மையையுடையவர்களாகிய பெண்களுமெனப் பொருள்கொ ள்ளினுமாம். இனையரென்றது மேலேகாட்டிய பிரமாணங்களுள் அவ்விட த்திற்கு மிகையாக வந்தனவும், இன்னுங்காசிகாண்டம், திருநெல்வேலிப் புராணம், சாமுத்திரிகாதூல் முதலியவற்றிற் கூறப்பட்டதுமான குற்றங் களை யுடையாளையென்க. அவற்றையாங்காங்குகாண்க. மேலே, ஆவதேனுமென்னுஞ் செய்யுள்தொடக்கமாகவந்த, அற்றவர், ஆயினர் இ

ல்லவர், இலராஞேர், உதித்திடார், வீவதாயினர், இல்லவர், அற்ருேர், இலர், உற்ருேர், பீடிலர், நாமத்தோர், பட்டுள்ளோர், பிணியர், மூங்கையர், பங்கினர், வெதிரினர், செல்வோர், விழிப்பவர், நிற்பவர், இன்ருேர், உண்டியர், இயல்பினர், உற்ருேர், மரபினர், உயர்ந்தவர், ஆழேனர், யாக்கையர், படைத்தவர், வடிவினர், காயத்தோர், பசடபினர், விளர்ப்பினர், மிக்கோர், இலாதவர், சணியவர், இன்ருேர், இலாதவர், சான்றவர், நீங்கினர், சினத்தினர், இகலினர், இன்ருேர், வேண்டினர், இன்ருேர், இலர், இகழ்பவர், இல்லவர், நில்லாதோர், குணத்தினர், இலார், இல்லோர், உன்னினர், என்ருேர், உற்ருேர். இலர், மனத்தினர், செய்வோர், சிந்தையர், உற்றுளோர், இல்லோர், இலார், இன்ருேர், கண்ணினர், நோக்கத்தார், குருடர், நயனத்தோர், நாட்டத்தர், கண்ஞேர், சென்னியர், கூந்தலர், ஐம்பாலார், கோதையர், குழலினர், அளகத்தோர், பங்கியர், கேசத்தோர், ஓதியர், உள்ளோர், கண்ணினர், துண்டத்தர், புருவத்தோர், காதினர், எயிற்றினர், கண்டத்தோர், முகத்தினர், மார்பத்தோர், நுசுப்பிலர், உள்ளோர், நிதம்பத்தோர், இல்லோர், பதத்தினர், இல்லவர், தோயாதோர், என்னும் முற்றெச்சங்கள் இச்செய்யுளிஞெகிய மாதர்களென்பதனேடு முடிந்தன.

இதுவரையுங் கூறியவிதஞல், துறவற மில்லறமாகிய விருவகையறங்களும், ஒன்றற்கொன்று சிறப்புடைத்தென்பதும், துறவறமோ வைராக்கிய நிலையையுடையதென்பதும், இச்சையையநுபவித்துத் தொலைத்தபின்பே துறவுபூணவேண்டுமென்பதும், அநுபவியாத துறக்கின் பின்னரிச்சையின்வசப்பட்டுப் பாவியாக வேண்டுமென்பதும், அதற்குரியது முதுமையே யாமென்பதும், அந்நிலை வழுவுகிற் கழுவாயில்லையென்பதும், இல்லறமோ, வைராக்கியமில்லாததென்பதும், இலேசானேயநுட்டிக்கத்தக்கதொன்றென்பதும், துறவுக்கும் துணையாகவுள்ளதென்பதும், போகங்களுக்குரிமையுடைத்தென்பதும், ஆதுலர்க் கன்னங்கொடுத்தல் முதலிய முப்பத்திரண்டுதருமங்களாகிய புண்ணியங்களே யுடையதென்பதும், தென்புலத்தாரதுநரக யாதனையையொழிப்பதென்பதும், சந்ததியைக் குன்றிப்போகாமல் நிலைப்படுத்துவதென்பதும், இவற்றிற்குக்காரணமான பெறுதற்கரிய பேருகிய புத்திரப்பேற்றையுடைத்தென்பதும், கிடைத்தற்கரிய மானுடசரீரங் கிடைத்ததஞற் செய்யத்தக்கததுவேயென்பதும், அதிற்றவறு நேரிடிற் கழுவாயுண்டென்பதும், எந்நிலைக்கணின்ருலும் வீடுபேறடைதல் வினைவிச்சமென்பதும், நற்குணநற்செய்கைகளே யுடையாளேயே மணஞ்செய்ய வேண்டுமென்பதும் பெறப்பட்டன. (எஉ)

காட்டினின்றிடுகுற்றியினோற்புறுகவுச்சகனிவைகூறக்
கேட்டுமூரலுமுவகையுங்கிடைத்தனன்கேடில்சீருலகுள்ள
‘‘நாட்டகந்தனினாடிநல்லியல்புளநங்கையைநின்பாலிற்
கூட்டுகின்றனன்மாணுதலொழிகெனக்குச்சகனுரைசெய்தான்.

(இ—ள்) காட்டில் நின்றிடுகுற்றி இல் நோற்புறு கவுச்சகன் இவைகூற—காட்டின்கணிற்கும் மரக்குற்றியைப்போல (துரியராகவிருந்து) தவம் புரிந்த மிருககண்டுயோ இவைகளைச்சொல்ல, குச்சகன்கேட்டு—அவற்றைத் (தாதையாகிய) குச்சகமுனிவர்கேட்டு, மூரலும் உவகையும் கிடைத்தனன்—சிரிப்பையுஞ் சந்தோஷத்தையுமடைந்து, கேடு இல் சீர் உலகு உள்ள நாடு அகம் தனில் நாடி—அழிவில்லாத சிறப்பமைந்த பூவுலகத்துள்ள நாடுகளினிடத்து விசாரித்து, நல் இயல்பு உள நங்கையை—(நீசொன்ன) நல்லிலக்கணங்களுள்ள சிறந்த பெண்ணை, நின்பாலில் கூட்டுகின்றனன்—(நான்) உன்னிடத்திற்சேர்த்துவைக்கின்றேன், மாணுதல் ஒழிக என உரைசெய்தான்—(நீ அதிற்கொண்டிருக்கும்) சந்தேகத்தைத் தவிருகவென்று கூறினார். (எ—று)

ஒழிகென—ஈறுதொகுத்தல் நாட்டகம்—பண்புத்தொகை. நங்கை—மகளிருட்சிறந்தவள். ‘‘நாடிய நம்பியோடு நங்கையென்றிரண்டாண்பெண்ணைத் தேடியகவிகளெல்லாஞ் சிறப்பிக்குநாமமாமே.’’ என்னுஞ் சூடாமணி நிகண்டானுமறிக. சலனமின்றி யோகநிலைக்கணின்று தவம்புரிந்தோராகலின், ‘‘காட்டினின்றிடுகுற்றியினோற்புறுகுச்சகன்.’’ என்றாசிரியர் விதந்தோதினார்.

தோன்றியநாட்டொடங்கித் தவம்புரிந்துகொண்டிருந்த புத்திரனுக்கு மகளிரிலக்கணம் முழுதுந்தெரிந்தது அற்புதமாகலின், சிரிப்பையும், தன்னுடையசொல்லைமறுக்காமற் கைக்கொண்டமையின் மகிழ்ச்சியையுமடைந்தனரென்க. தேகலக்கணங்களாலும், குணாதிசயங்களாலும், ஒரு குறைவேனுமில்லாத பெண்ணுமொன்றுண்டோ, உண்டேயாயினும் மணம்புணர்த்துதல் கூடுமோ, என்னுமோரையமுன்னிடத்து நிகழுமென்பார், அப்பெற்றித்தாய பெண்ணுமுண்டென்பதும், உனக்குமணம்புணர்த்துதலெனக்கரிதன்றென்பதும் போதர, ‘‘மாணுதலொழிகெனவுரைசெய்தான்.’’ என்றார். மாணுதல்—ஐயமுறுதல். (௭௩)

உரைத்தகுச்சகன்மைந்தனைநிறுவியேயொல்லைசென்றகிலத்திற்
றிருத்தகுஞ்சுடர்மலிதருசெம்பொனிற்செய்ததோரணிநாப்ப

[ன்
ணருந்திசேர்தரக்குயிற்றிடவேண்டியோரருமணிதனைக்கொள்வா
கருத்திலுன்னுபுதெரிபவன்போலொருகன்னியைத்தேர்கின்ருன்

(இ-ள்) உரைத்தகுச்சகன்—(இவ்வாருகச்) சொன்னகுச்சகமுனிவர்; மைந்தனை நிறுவியே—புத்திரனை (அவ்விடத்திலே) இருக்கவைத்து, ஒல் லெனசென்று— அதிசீக்கிரமாகபபோய், அகிலத்தில்—நிலவுலகத்தின்கண். திருத்தகும் சுடர் மலிதரு செபபொனின் செய்த ஓர் அணி நாப்பண்—அழகுதக்க ஒளி நிரம்பிய மாற்றுயர்ந்த பொன்னினுற்செய்த ஒரு ஆபரணத்தின் மத்தியில், அருத்திசேர்தாகுயிற்றிட வேண்டி—'கண்டவர்க்கு' விருபபமுண்டாகுமாறு பதிககவிருப்பி, ஓர் அரும் மணிதனைகொள்வான்—ஒரு அருமையான இரத்தினத்தை வாங்கும்படி, கருத்தில் உன்னுபு தெரியவன்போல்—மனத்தில் நினைத்துத்தேடுகின்ற வொருவனைப்போல, ஒருகன்னியை தேர்கின்ருன்—(தன்மகன்விரும்பிய) ஒரு கன்னிகையைத்தேடுகின்றனர். (எ—று)

து—சாரியை, வானீற்றுவினையெச்சம் உன்னுபு என்பதனேடும், புவீற்றுவினையெச்சம் தெரிபவன் என்னும் வினையோடும் முடிந்தன. அகில த்திற்றேர்கின்ரு னென்றியையும். அகிலத்திற் சென்றெனை மாற்றினுமாம். அருத்தி அழகுமாம் குயிற்றல்—அழுத்தல், மணியென்பதற்கு மாணிக்கமெனப்பொருள்கோடலுமொன்று. "திருத்தகுஞ்சுடர்மலிதரு செம்பொனிற் செய்ததோரணி" என்ருர், மிகவும்விசேடமான ஆபரணமென்பதும்,"அருத்திசேர்தரக்குயிற்றிடவேண்டியோரருமணி" என்ருர், மாசுதீர்ந்தவிலை மதிப்பில்லாரத்தினமென்பதும் போதர.

இரத்தினப்பரீட்சையில் தேர்ச்சியுடையவர் ஒரு ஆபரணத்தின் நடு நாயகமணியை யெவ்வளவருமையாகத்தேடுகின்ருரோ அதுபோல, குச்சகமுனிவர் புத்திரர் கூறிய குற்றங்களில்லாத பெண்ணை யருமையாகத் தேடுகின்ருரென்பதுகருத்து." (எச)

வேறு.

அன்னவன்றன்னேர் முனிவரர்சிலர்வந்தனுகலுமவரொடுவினு
விச், சென்னிதன்றேய்ந்தநாமமென்னுஞ்செயிரிலாவளத்துச
த்தியன்பாற், கன்னிகையிருந்தலுணர்ந்துமற்றவன்பாற்கதுமெ
னச்சேறலுங்காணூஉக், தன்னடிவணங்கவெதிருறத்தொழுது
தழுவியேயவனெடுஞ்சார.

(இ-ள்) அன்னவன்—(அவ்வாறுதேடிச்செல்லுங்) குச்சகமுனிவர், தன்னோர்முனிவரர் சிலர்வந்து அணுகலும்—தமக்கெதிரில் சிலமுனிசிரேட்டர்கள் வந்து கிட்டுதலும், அவர் ஓடும் வினவி—அவர்களோடும்விசாரித்து, சென்னிதன் தேயத்து—சோழனது தேசத்தில், அநாமயம் என்னும் செயிர் இலாவனத்து உசத்தியன்பால்— அநாமயமென்னும் பெயருள்ள குற்றமில்லாத வனத்தின் கணிருக்கு முசத்தியமுனிவரிடத்தில், கன்னிகை இருத்தல் உணர்ந்து—(தாம்தேடிய) கன்னிகையிருத்தலையறிந்து, அவன்பால்கதுமெனசேறலும்— அவரிடத்து விரைவாகப்போதலும், காணா தன் அடிவணங்க—(அவர்தம்வருகையைக்) கண்டு தமதுபாதங்களை (எதிர்கொண்டு) நமஸ்காரஞ்செய்ய, எதிர் உற தொழுது தழுவி அவனொடும் சார—தாமுமெதிரிற் பொருந்த நமஸ்கரித்துத் தழுவிக்கொண்டு அவ்வுசத்தியமுனிவனுடன் செல்ல. (எ-று)

அன்ன—சுட்டுமொழி, மற்று—அசை, காணா, செய்யூ என்னும் வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம் இதினளபெடையியல்பு, ஏ—தேற்றம். தன், என்றது குச்சகனை. அநாமயம்—நோயில்லாமை. அநாமயவனம்—நோயில்லாத வனம். அதுபற்றிச் செயிரிலாவனமென்றடைகொடுத்தார். சென்னி—சோழன், மூவேந்தரின் முதலாகவுள்ளவன். கதுமெனல்-விரைவுக்குறிப்பு மாசிலாமணிபோலும் மாது எங்கிருக்கின்றாளோவென்று கவலையோடுசென்றாராகலின், உசத்தியரிடத்திருக்கின்றாளென்பதை யறிந்தவுடன் கிடைத்துவிட்டதென்னும் பேராவலோடுந் தரியாது மிகுவிரைவிற் சென்றாரென்பார், சேறலுமென்னாது, "கதுமெனச்சேறலும்" என்றார், (குளகம்)

இது முதனான்குசெய்யுட்கள் பெரும்பாலும் இரண்டும் நான்கும் ஏழுமாகிய சீர்கள் மாச்சீர்களும், மற்றை நான்குசீர்களும் விளச்சீர்களுமாகி வந்த எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (எ௫)

மாசறவியன்றவுறையுளிற்கொடுபோய்வரன்முறைவழாமலேய
மைத்த, வாசனத்திருத்திக்கன்னிகையொடுதன்பன்னியையாயி
டையழைத்துத், தேசிகனுற்றான்பணியினீரென்றுச்சென்னியா
லிறைஞ்சவித்துரிய, பூசனைபுரிந்துநகையொடுமுகமன்புகன்றன
னளவிலன் புனிதன்.

(இ-ள்) புனிதன்—பரிசுத்தரான வுசத்தியமுனிவர், மாசு அற இயன்ற உறையுளிற் கொடுபோய்—குற்றந்தீரச் செய்யப்பட்ட தமதில்லின்கணழைத்துக் கொண்டு சென்று. வரன்முறை வழாமலே—(அதிதிக்குச் செய்யவேண்டிய) நியமந் தவறாமலுக்கு. அமைத்த ஆசனத்து இருத்தி- வருத்தப்ப

ட்ட ஆசனத்தின்கணிருக்கவைத்து, ஆயிடை—அவ்விடத்தில், கன்னிகை ஓடு தன் பன்னியை அழைத்து—தன்மகளோடு மனைவியையும் வரச்செய்து, தேசிகன் உற்றான் நீர் பணிமின் என்று—(அடியேங்களை யுய்யச்செய்யும்) ஆசாரியரெழுந்தருளியிருக்கின்றார், (அவரை) நீங்கள் நமஸ்காரம் பண்ணுங்களென்று சொல்லி, சென்னி ஆல் இறைஞ்சுவித்து—தலையினால் நமஸ்காரஞ்செய்வித்து, உரிய பூசனை புரிந்து—இஷ்டமான உபசாரங்களையும் செய்து, நகை ஒடும் முகமன் புகன்று—முகமலர்ச்சியோடும் சன்மான வார்த்தைகளையும் பேசி, அளவளாயினன்—மனங் கலந்திருந்தனர். (எ—ரு)

எகாரம் தேற்றம். ஆயிடை—சுட்டுநீண்டது. யகரந்தோன்றல். சார, கொடுபோய, இருத்தி, அழைத்து, என்று, இறைஞ்சுவித்து, புரிந்து, புகன்று, அளவளாயினன் என மேலைச்செய்யுளோடு கூட்டி முடிக்க. தேசிகன்—குரு, ஆசாரியர். அளவளாவுதல், ஒருவர்க்கொருவர் சுகக்ஷேமங்களை விசாரித்துக்கலத்தல். மகளிர்க்கு அட்டாங்கநமஸ்காரமின்மையின் "சென்னியாலிறைஞ்சுவித்து." என்றார். (எ௬)

**அறுசுவைகெழுவுநறியசிற்றுண்டியமுதினிற்றூயனவருந்திக்**
**குறைவறுமடிகட்கென்னிடைவேண்டுங்கொள்கையதென்னெ**
**னக்கூற, மறுவறுதவத்துக்குச்சகமுனிவன்மகிழ்ந்துநீமாதவ**
**ம்புரிந்து, பெறுமகடன்னையெனதொருமகற்குப்பேசுவான்பெ**
**யர்ந்தனனென்றான்.**

(இ—ள்) தூயன அமுதினில்—(மீளவுசத்தியமுனிவர்) சுத்தமான திருவமுதிலும், அறுசுவை கெழுவு நறிய சிற்றுண்டி—அறுசுவையோடமைந்தநல்ல சிற்றுணாக்களிலும், அருத்தி—(குச்சகமுனிவரை) உண்பித்து, (அதன்பின்பு) குறைவு அறும் அடிகட்கு—(எதொன்றானும்) குறைபாடில்லாத தேவரீருக்கு, என்னிடை வேண்டும் கொள்கையது என் எனகூற—அடியேனிடத்தில் பெறற்பாலதாகவுள்ளது என்னையோவென்று வினவ, மறு அறு தவத்துக் குச்சகமுனிவன் மகிழ்ந்து—குற்றமற்ற தவத்தையுடைய குச்சகமுனிவர் களிப்படைந்து, நீ மாதவம் புரிந்து பெறும் மகள் தன்னை—நீர் பெருந் தவஞ்செய்து பெற்றெடுத்த புதல்வியை, எனது ஒருமகற்கு பேசுவான் பெயர்ந்தனன் என்றான்—எமது ஓரேயொரு புதல்வனுக்கு மணம்பேசும்படியாக வந்தேமென்று கூறினர். (எ—ரு)

அடிகள்—தேவரீரென்னும் பொருட்டு. அறுசுவை—கைப்பு, புளிப்பு, தித்திப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு. மகளிரிலக்கணமெல்லாமமை

யப்பிறப்பதும் புண்ணியவசமாகலின், "தவம்புரிந்துபெறுமகள் என்" றார். (எஎ)

இனையசொல்லினவிமுனிவரன் மகிழாவென் மகள்விருத்தைதனை யியல்சேர், றுனதுமைந்தற்குநல்கமுனசெய்தவுயர் தவமெனவோ லென்றுரைத்து, மனமுறநகையுமுவகையுங்கிளரமணவினையி சைந்துமாதவத்துப், புனிதனையங்கட்சிலபகலிருத்திப்போற்றி செய்தொழுகுறும்பொழுதின்.

(இ-ள்) இனையசொல் வினவி—(குச்சகமுனிவர் கூறிய) இந்த வார்த்தையைக்கேட்டு, முனிவரன் மகிழா—முனிசிரேட்டரான உசத்திய மனக்களிப்படைந்து, என்மகள் விருத்தையை—அடியேனது புதல்வியான விருத்தையை, இயல்சேர் உனது மைந்தற்கு நல்க—நற்குணங்களமைந்த தேவரீரது புதல்வருக்கு மணஞ்செயதுதர, முன்செய்த உயர்தவம் என் என்று உரைத்து—(நான்) முற்பிறப்பிற் செய்துவைத்தமேதக்க தவம் யாதோவென்று உபசாரவார்த்தைசெல்லி, மனம் உற நகையும் உவகையும் கிளர—மனத்தின்கண் மிக மலர்ச்சியும் களிப்பும் மிக்கூர, மண வினை இசைந்து—மணச்சடங்கிற்குச் சம்மதித்து, மாதவத்து புனிதனை—பெருந் தவத்தையுடைய சுத்தரான குச்சகமுனிவரை, அங்கண் சிலபகல் இருத்தி—அவ்விடத்தில் சிலநாளிருக்கச்செய்து, போற்றிசெய்து ஒழுகுறும் பொழுதின்—பரிபாலித்து வழிபட்டுக்கொண்டிருக்குங் காலத்தில். (எ-று)

சொல்-அசை. போற்றி-தொழிற்பெயர். இ-தொழிற்பெயர்விகுதி. இயல்-கல்வியும், நற்குணமும், விசேடலக்கணமுமாம். மணவினை இசைதல்-மணத்திற்கோம்படல். (எஅ)

வேறு.

பங்கமிலுசத்தியன் பன்னியாகிய
மங்கலைவிடுத்திடமகள்விருத்தைதா
னங்குளவிருளையராயந்தன்னுடன்
செங்கயல்பாய்புனற்றிளைப்பப்போயினள்.

(இ-ள்) பங்கம் இல் உசத்தியன் பன்னி ஆகிய மங்கலை விடுத்திட—குற்றமில்லாத உசத்தியமுனிவரது மனைவியாகிய மங்கலாதேவி (மகளே நீ சென்று நீராடிக்கொண்டு வாவென்று அநுமதிகொடுத்து) அனுப்புதலால், மகள் விருத்தைதான்—அவரது புதல்வியாகிய விருத்தை, அங்கு உள இருளையர் ஆயம் தன்னுடன்—அவ்விடத்துள்ள தோழிப்பெண்

கள் கூட்டத்தோடு, செம் கயல் பாய் புனல்திளைப்பப் போயினாள்—சிவந்த கயல்மீன்கள் ஓடிக்கொண்டிருக்கின்ற கான்யாற்றில் நீராடச்சென்றனர் (எ-று)

இளை-தோழி. ஆயம்-பெண்கள்கூட்டம். "பொழுதின்" "விருத்தைதான் போயினாள்" என மேலைச்செய்யுளோடு கூட்டிமுடிக்க, கன்னிகைகள் மாதாவின்சொற்படி தோழியரோடு கூடியல்லது நீராடன்முதலிய விளையாட்டிற்குச் செல்லுதலாகாதாகலின்; "மங்கலைவிடுத்திட மன் விருத்தைதா—னங்குள விளையாயர்தன்னுடன் புனறிளைப்பப்போயினாள்" என்றார் இதனை, "நீ போய்விளையாட்சொல்லயாங்கள்போய்த் தெய்வகுன்றிடத்தேதமபல்லாருமொருங்குவிளையாடாநின்றேமாக." என்னும் திருக்கோவையார் அறத்தொடுநிற்றற்றுறையிலுரையானுமுணர்க.

சிவசத்தியின் திருப்பெயராகிய "விர்த்தா" என்னும் வடமொழி, தமிழில், "ஆவினையும்" என்னும் விதிப்படி "விருத்தை" என்றாய் இம்மாதுக்குத் தெய்வப்பெயராயிற்று பராசத்தியை அபிராமியந்தாதியில், "கறைக்கண்டனுக்கு மூத்தவளே" என்றதும், சிவசத்திகளுளோர்சத்தியாகிய காடுகிழாளைத் திருமுருகாற்றுப்படையில், "இழையணி சிறப்பிற் பழையோள்" என்றதும் பற்றியென்க. விர்த்தா, மூத்தாள், பழையோளென்பன வொருபொருட் கிளவிகள்.

இதுமுதற் பன்னிரண்டு செய்யுட்கள் கலிவிருத்தங்கள். (௭௧)

காடுறவந்திடுகலுழிமாண்புன
லாடினண்மகிழ்சிறந்தணங்கனாரொடு
மாடுறுபொதும்பர்போய்மலர்கொய்தன்னவை
சூடினளிருந்தனடொடலையாற்றியே.

(இ-ள்) அணங்கு அனார் ஒடும்—(அங்குஞ்சென்ற விருத்தை) தெய்வப்பெண்களை நிகர்த்த தோழியரோடும், காடு உற வந்திடு கலுழிமாண் புனல் ஆடினள்—(அநாமயமென்னும்) அக்காட்டிற் பொருந்தப் பாய்ந்து கொண்டிருக்குங் கான்யாற்றினுள்ள சிறப்புற்றநீரிலே ஸ்நானஞ்செய்து, மகிழ் சிறந்து—(அதனால்) மகிழ்ச்சிமீக்கூரப்பெற்று, மாடு உறு பொதும்பர்போய்—(அவ்வாற்றின்) பக்கத்துள்ள சோலையிற் சென்று, மலர்கொய்து—பூக்களையாய்ந்து, அன்னவை தொடலை ஆற்றி சூடினள் இருந்தனள்—அப்பூக்களை மாலைசெய்து (குடுமிக்கு) அணிந்துகொண்டிருந்தனர். (எ-று)

ஏகாரம், ஈற்றசை. அனார்—இடைக்குறை. சூடினள், சூடினள்—முற்றெச்சங்கள். அணங்கு—விருத்தையுமாம். கலுழி—முல்லைக்கான்யாறு. பொதும்பர்—போலி. அன்னவை சூடினள், தொடலை ஆற்றி இருந்தனள் என நிறுத்தி, அப்பூக்களைச் சூடி விளையாடலைச் செய்துகொண்டிருந்தனரெனப் பொருள் கொள்ளினும் பொருந்தும். தொடலை. மகளிர்விளையாட்டு. மாலையென்னும் பொருளுக்கு, ஐ. செயப்படுபொருள்விகுதி, அன்னவை சூடினள் தொடலை ஆற்றி, இருந்தனள், அப்பூக்களைச்சூடி மாலையுங்கட்டியிருந்தனரென்பாருமுளர் (அ0)

பாசிழைமங்கையர்பண்ணையோடெழீஇ
யாசறுபொதும்பினுமணங்கையன்னவள்
மாசறுதாரகைமரபிற்சூழ்தருந்
தேசுறுமதியெனத்திரும்பும்வேலையே.

(இ—ள்) அணங்கை அன்னவள்—தேவமாதை ஒத்தவளாகிய விருத்தையென்பவர், மாசு அறு தாரகை மரபின் சூழ்தரும் தேசு உறும் மதி என—களங்கமற்ற நட்சத்திரங்கள் முறையாகச் சூழப்பட்டுள்ள பிரகாசம் பொருந்திய சந்திரனைப்போல, பாசு இழை மங்கையர் பண்ணை ஓடு எழீஇ—பொன்னாற்செய்த ஆபரணங்களையணிந்த தோழிப்பெண்கள் கூட்டத்தோடு மெழுந்து, ஆசு அறு பொதும்பினும்—குற்றமில்லாத சோலையினின்றும், திரும்பும்வேலை—(வீட்டுக்கு வருமாறு) திரும்புகின்ற சமையத்தில். (எ—று)

ஏகாரம், ஈற்றசை. பாசிழை—மேற்காண்க. எழீஇ, சொல்லிசையளபெடை. இன்—உப்பெற்றுநீக்கப் பொருளின்வந்த ஐந்தனுருபு. அணங்கு. இலக்குமியுமாம், மதியெனவெழீஇத் திரும்பும்வேலையென வினையும். நட்சத்திரங்களாகிய வுவமைக்குத் தோழியர்கூட்டமும், சந்திரனாகிய வுவமைக்கு விருத்தையுமுவமேயமாயின. உவமையணி. (அக)

உருகெழுகனையொலியுருமுக்கான்றிடுங்
கருமுகிலஃதெனக்கனன்றுகாய்கனல்
சொரிதருமிழியதுசூர்த்தமெய்யது
பெருமதகரியொடுபெயருகின்றதே.

(இ—ள்) உருகெழு கனை ஒலி உருமு கான்றிடும்—(உலகத்தார்க்கு) அச்சத்தைவிளைவிக்கும் மிக்கமுழக்கத்தோடு இடியையுங்கக்குகின்ற, கருமுகில் இஃது என—கருமையானமேகம் இதுவென்று (உவமையாற்கண்டோர்) சொல்லும்படி, கன்று—கோபித்து, காய்கனல்சொரிதரும் விழி அது—சுடுகின்ற வக்கினியைப் பொழிகின்ற கண்களையுடையதும், சூர்த்

தமெய் அது—பயங்கரத்தை யுண்டாக்குகின்ற உடம்பையுடையதும், பெரு ம்மதம் நதி ஒழி பெயருகின்றது—பெரியமதமாகிய யாற்றோடு செல்லுகின் றதும். எ—று.

ஏகாரம்=ஈற்றசை, தொல்காப்பியத்து, "உரு உட்காக்கும்" என்ற சூத்திரத்தால் "உருகெழு"என்பதற்கு அச்சத்தைவிளைவிக்குமெனவும், சீ வகசிந்தாமணியில், "கனைகடுங்கதழ் பரிக்காலசக்கரமும்போல்" என்றசெ ய்யுளின் நச்சினார்க்கினியருரையால், "கனையொலி" என்பதற்கு மிக்க வொலியெனவும் பொருள் கூறப்பட்டன. கெழு, காய்-வினைத்தொகைகள். சூர்த்த-பண்படியாகப்பிறந்த பெயரெச்சம். சூர்—பகுதி. கனை ஒலி—என்ப தற்குக் கனைக்கின்ற வொலியென்பாருமுளர். பஞ்சபூதங்களின் கலப் பேழுகிலாகையானும், குதிரை, யானைபோன்று தானேயதுசெய்தல் கூ டாமையானும், அதுகருத்தன்று. கரிய முகிலாகிய வுவமைக்கு, யானை யின்கரிய பெரிய தேகமும், ஒலியோடு கூடிய விடியாகிய வுவமைக்கு, பி ளிறொலியும், மின்னலாகிய வுவமைக்கு, கண்கள் காலுங் கோபத்தீயும், மழையாகிய வுவமைக்கு, மதநதியுமுவமேயமென்க. குளகம், (௮௨)

தாழுறுகரத்ததுதடத்தின்சால்பெனக்
காழுறுமெயிற்றதுகறைகொள்காலதா
யேழுயர்குறும்பொறையிபமொன்றேற்றெதிர்
பாழியவரைதுகள்படுத்துச்சென்றதே.

(இ—ள்) தாழ் உறு காத்தது—(நிலம்வரையுந்) தாழ்ந்த துதிக்கை யையுடையதும், தடத்தின் சால்பு என காழ் உறும் எயிற்றது—மலையின் றன்மைபோல வயிரம்பொருந்துங் கோடுகளையுடையதும், கறைகொள் காலது—உரல்போலுங் கால்களையுடையதும், ஆய்—ஆகி, எழ் உயர் கு றும்பொறை இபம் ஒன்று—எழுமுழமுயர்ந்த காட்டானையொன்று, பாழி யவரை எற்று துகள் படுத்து—பெரிய மலைகளையெதிர்ந்து துகளாக வழி த்துக்கொண்டு, எதிர்சென்றது—(அப்பெண்கள்கூட்டத்துக்கு) எதிர்முக மாக வந்தது. (எ—று)

ஏகாரம், ஈற்றசை. காலதால் என்பதும் பாடம். கொள்—உவமஉரு பு. எழ் எண்ணலளவாகுபெயர். தடம்—மலை. குறும்பொறை—காடு, எழு யர்—என்பதற்கு எழிடமுயர்ந்தவெனப் பொருள்கோடலுமொன்று. அத னை, "எழுமுப்புத்தாழ்ந்த" என்னும் பாரதச்செய்யுளானுமுணர்க. "ஏற் றெதிர்" என்பதைப் பின்முன்னாக மாற்றி. "இபமொன்று எதிரேற்று பாழியவரை துகள்படுத்துச்சென்றது." யானையொன்று எதிரில்வந்து பெ

ரிய மலைகளைத் துகளாக்கிவிட்டுப் போயினது, எனப் பொருள்கோடலு மொன்று. இவ்வியானை, விழியாலும், மெய்யாலும், மதத்தாலும், கரத்தாலும், எயிற்றாலும், காலாலும் விசேடப்பெற்ற வுத்தமயானையாகலின் "எழுயர்" என்பதற்கு எழுமுழமுயர்ந்த, எனப் பொருள்கொள்ளப்பட்டது. இதனை, "சேணுயா போதா வெழுமுழமுடையது தெவ்வரஞ்சுமவ் வேழம்" என்னும் பாரதச்செய்யுளானும், "எழுயர் போதக மினத்தொடேற்றதே." என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளானுமுணர்க.

மேலே "பாசிழை" என்னுஞ் செய்யுளி னிறுதிக்கணுள்ள "திரும்பும்வேலை" என்னுமெச்சம் இச்செய்யுளினிறுதிக்கணுள்ள "சென்றது" என்னும் முற்றுவினைகொண்டது. விழியதும், மெய்பதும், மெயருகின்றதும், கரத்ததும், எயிற்றதும், காலதும், "ஆய்இம்மொன்று" என மேற்செய்யுளோடு கூட்டிமுடிக்க. (அ௩)

காண்டலும்வெருவினர் கவன்றவ்வா றுசெல்
லாண்டகையோர்களு மகன்றுசிந்தினார்
நீண்டிடுகடலிடைநிமிர்ந்தவெவ்விட
மீண்டலும்பிரிந்தபுத்தேளிரொனவே.

(இ—ள்) நீண்டிடு கடல் இடை நிமிர்ந்தவெவ்விடம் ஈண்டலும்—நீண்டிருக்கின்ற திருப்பாற்கடலின்கணெழுந்த வெய்ய நஞ்சானது நெருங்கிய வளவில், இரிந்தபுத்தேளிர் என்ன—(அதனைக்கண்டு) பயந்தோடிய தேவர்களைப்போல, அ ஆறுசெல் ஆண்டகையோர்களும்—அந்தமார்க்கத்தில் சென்றுகொண்டிருந்த வீரர்களும், காண்டலும் வெருவினர் கவன்று சிந்தினார்—கண்டமாத்திரத்திலச்சங்கொண்டு கலக்கமடைந்து சிதறியோடினார்கள். (எ—று)

ஏகாரம், ஈற்றசைகள். விகுதிமேல்விகுதி. வெருவினர்—முற்றெச்சம். உம்மை—உயர்வு சிறப்பு. இந்த யானையைக்கண்ட பெண்பாலார் யாதுசெய்வாரென்பார், எதுக்கு மொருசற்று மஞ்சாத திண்மையையுடைய, "ஆண்டகையோர்களு மகன்றுசிந்தினார்" என வுயர்சிறப்பும்மை கொடுத்துக் கூறினார். உவமையணி. (அச)

தன்னிகைவிருத்தையாள்கண்டுதன்புறு
வன்னமென்னடையினரகன்றுசிந்தலு
மென்னினியிழைப்பதென்றிரங்கியேங்கியே
யுன்னருங்கடுப்பினிலுனற்றியோடலும்.

(இ—ள்) அன்னம் மெல் நடையினர்—அன்னத்தின் நடைபோலும் மென்மையான நடையழகுள்ள தோழிமார்கள், கண்டு துன்பு உறூ அகன்று சிந்தலும்—(யானை வருவதைக்) கண்டு துன்படைந்து தம்மைப் பிரிந்து சிதறியோடுதலும், கன்னிகை விருத்தை ஆள்—'அப்பொழுதிற்' கன்னிகைப்பருவத்தையுடைய விருத்தையென்பவர், இனி என் இழைப்பது என்று இரங்கி ஏங்கி—(தோழியாரு முதவாமற்போனமையின்) (நான்) இனி யாதுசெய்வதென்று பரிதபித்து அச்சங்கொண்டு, உன் அரும் கடுப்பினில் உருற்றி ஓடலும்—நினைத்தற்குமருமையான அதிவேகத்துடன் முயற்சித்து ஓடியவளவில். (எ—று)

ஏகாரம்—அசை. அன்னம்—ஆகுபெயர். உன்னரும்—சுறும்தொகுத்தல். ஆள் பெண்பால் விகுதி. "ஓடலும்" என்னு மும்மீற்றெச்சம் கீழ்ச்செய்யுளில் "வீழ்ந்தனள்" என்னு முற்றெச்சத்தோடியையும். உறூ—ஆகாரவீற்றுடன்பாட்டெச்சம். "உருற்றி" என்பதை உருற்றவென்த் திரிந்து கால்கள் தடக்குண்ணவெனப் பொருள்கூறலுமொன்று.

அச்சச்சுவையென்னுமலங்காரம். (அகு)

வீழ்ந்தறைபோகியகிளைஞரெனத்
தாழ்ந்திடுபசும்புதல்செறியத்தான்மறைந்
தாழ்ந்திடுகூவலொன்றணுகவன்னதில்
வீழ்ந்தனளழுந்தினள்விளிவுற்றாளரோ.

இ—ள்) கீழ்ந்து—இழிவாகி, அறைபோகிய கிளைஞர் என தாழ்ந்திடு—உள்ளே பகையைவைத்துப் புறத்தில் நட்புக்காட்டி யொழுகுமுறவினர் போல விருக்கின்ற, பசும்புதல் செறிய—பசுமையான (நாணல்முதலிய) புற்கள்மூடிக்கொண்டடர்ந்திருக்க, தான்மறைந்து ஆழ்ந்திடு கூவல் ஒன்று அணுக—(அப்புற்களினுள், தோற்றாமல்) மறைந்துகொண்டாழத்தையுடைத்தாயிருக்குங் கிணறொன்று எதிர்ப்பட, அன்னதில்—அந்தக் கிணற்றினுள், வீழ்ந்தனள் அழுந்தினள் விளிவு உற்றாள்—விழுந்து அமிழ்ந்தியிறந்தனர். (எ—று)

அரோ, ஆம். அசைகள். புதல்-போலி. வீழ்ந்தனள், அழுந்தினள்—முறெச்சங்கள். கூவல்—கூபமென்னும் வடமொழித்திரிபு. தாழ்தல்—தங்குதல், இருத்தல்—"என தாழ்ந்திடுபசும்புதல்" என்க, அறைபோதல்—கீழறுத்தல், அஃது, உள்ளேநின்று துணைச்செய்யு முற்றவன்போலத் தன்னைக் காண்பித்தொழுகிச் சதிசெய்தல். உள்ளே வஞ்சனையைவைத்துக்கொண்டு புறத்திற் றண்ணளியோடும் நட்பைக்காட்டிச் சமையம்வந்தழித்தப்பாது

கேடுசூழ்ந்துவிடும், படிற்றொழுக்குடையவுறவினர்போல், கொலையைப்பயக்குங் கிணற்றை யுள்ளே வைத்துக்கொண்டதனைபுறத்திற் சிறிதுங்காட்டாது பரந்து மூடிக்கொண்டிருந்தது புல்லாகலின், புல்லை, "அறைபோகிய கிளைஞராமெனத் தாழ்ந்திடு பசும்புதல்" என்றும், உள்ளொன்று புறம்பொன்றாய் நடித்துக்கெடுத்தல், பூரியர்செய்கையாகலின், "கீழ்ந்தறைபோகிய" என்றடைகொடுத்துங் கூறினார். கிளைஞரென்னுமுவமைக்கு, புதலும், அறைபோதலென்னுமுவமைக்கு, கூவலும் உபமேயமாயிறறு. இககருத்துப்பற்றியே, திருவள்ளுவநாயனாரும், வெளிப்பகையாகவுள்ளவரை நட்பினும், உறவினர்போல மறைந்தொழுகும் பகைவரை நம்பலாகாதென்றார், அஃது, "வாள்போற் பகைவரை யஞ்சற்கவஞ்சுக—கேள்போற் பகைவர் தொடர்பு" என்பதனாலும், உட்பகையதிகாரத்தில், உள் நின்று தமர் போலறுத்தலின், அவரை, "தமர்" என்றதனாலுமுணரத்தக்கது. (௮௬)

முடங்குளையலங்குறுமுதியபூநுதன்
மடங்கலினேறெதிர்வரினுமாறுகொள்
கடங்கலுழ்மால்கரிகல்லென்னார்ப்பொடு
நடந்ததுமலையமானாடுசாரவே.

(இ-ள்) முடங்கு உளை அலங்குறும் முதிய பூநுதல்—வளைந்த மயிர்களசைந்துகொண்டிருக்கும் பேரழகுள்ள நெற்றியையுடைய, மடங்கலின் ஏறு எதிர்வரினும்—ஆண்சிங்கமானது (தனக்கு) முன்பாக வந்தாலும், மாறுகொள்—(அதனோடு) பகைத்துப் பொரத்தக்க, கடம் கலுழ் மால் கரி—மதம்பொழிகின்ற அந்தப் பெரிய யானையானது, கல்லென் ஆர்ப்பு ஒடு—கல்லென்றொலிக்கும் ஆரவாரத்தோடு, மலையமா நாடுசார நடந்தது—சேரதேசத்தை நோக்கிப் போயினது. (எ-று)

ஏகாரம்—ஈற்றசை உம்மை—உயர்வுசிறப்பு கல் ஒலிக்குறிப்பு. மலையமான்—சேரன். மலையமான்நாடு—மலைநாடு, மலையாளம். உச்சியினின்றும் வளர்ந்து மடிந்த வொருசிகை மயிரசைந்துகொண்டிருக்கும் நெற்றியையுடைய ஆண்சிங்கமென்க பூநுதலென்பதற்கு, கரும்பின்பூப்போலும் நெற்றியென்பினுமமையும்.

சிங்கத்தைக் கனவிற் காணினுங் கலங்கியீடழியும் யானைகளாயினும், இந்தயானை, ஆண்பெண்ணென்னு மெய்பாலாராயினுங் கண்டுழிக் கலங்கியீடழிந்தோடுதற்கேதுவான பெருருவும் பெருவலியுமுடைய யானையாகலின், "மடங்கலினேறெதிர்வரினு மாறுகொள்மால்கரி" என்றார். (௮௭)

இரிந்திடுமகாரர்யாண்டுமாகியே
விரிந்திடுவோர்குழீஇவியர்க்குமேனியர்
சரிந்திடுகூந்தலர்தளருநெஞ்சினர்
பிரிந்திடுமுவகையர்பெயர்ந்துநாடினார்.

(இ-ள்) இரிந்திடு மாதரார்—(அந்த யானைக்குப்) பயந்தோடிய மாதர்ப்பெண்கள், யாண்டும் ஆகி விரிந்திடுவோர்—எவ்விடங்களிலுமாகப் பரந்தவர்கள், வியர்க்கும் மேனியர்—வெயர்க்கின்ற சரீரத்தையுடையவரும், சரிந்திடு கூந்தலர்—(குலைந்த) சரிந்த கூந்தலையுடையவரும், தளரும்நெஞ்சினர்—சோருகின்ற மனத்தையுடையவரும், பிரிந்திடும் உவகையர்—நீங்கிய மகிழ்ச்சியுடையவரும், (மகிழ்ச்சியில்லாதவர்) பெயர்ந்து குழீஇ—(ஆகி) வந்தொருங்குகூடி, நாடினார்—(தலைவியாகிய விருத்தையைத்) தேடினார்கள். (எ-று)

மகாரம்—அசை. மாதரார்—ஆர்-விகுதி பெயர்விகுதி. ஆசையையுடையவர் என்னும் பொருளையுடைய சொற்பகுதிக்குமேல். பன்மைப்பொருளில் வந்ததெனினுமாம். குழீஇ—அளபெடை. குழுவி. ஒருங்குகூடி, பிரிந்திடுமுவகையர். "வீதராகர்." என்பதுபோல. உம்மை—முற்றுப்பொருளது. (அஅ)

தண்டமெங்கணுந்தானஞ்சிந்திடக்
கொண்டலினெய்தியகோட்டுமாதிரங்
கண்டிலர்கன்னிகைதனையுங்காண்கில
ருண்டிலையெனவுயிர்ப்புநீங்கினார்.

(இ-ள்) தண்டம் எங்கணும் தானம் சிந்திட—தான்சென்ற வழிமுழுதும் மதசலஞ் சிந்துகின்ற, கொண்டலின் எய்திய—கருமுகில்போல வந்த, கோட்டுமாதிரம் கண்டிலர்—அக் கொம்பன்யானையைக் காணாதவர்களாகி, கன்னிகை தனையும் காண்கிலர்—(தலைவியாகிய) விருத்தையையுங் காணாதவர்களாய், உயிர் உண்டு இலை என—(தம்மைக்கண்ட பிறர் இவர்க்கு) உயிருண்டோ இல்லையோவென்று சொல்லும்படி, உயிர்ப்பு நீங்கினார்—மூர்ச்சையாயினார்கள். (எ-று)

அது—பகுதிப்பொருள்விகுதி. உம்மை—இறந்தது தழீயவெச்சம். இலை—தொகுத்தல். தண்டம்—யானைபோமார்க்கம். கண்டிலருவகையினும், காண்கிலரவலத்தினும் வந்தன. (அக)

மண்ணிடையாரெலவழிக்கொண்டேகவே
கண்ணிணைபுனலுகக்கலுழ்ந்துசேர்வுறத்

துண்ணென வுணாவுறத்துளங்கிச்சூழ்கனல்
புண்ணுறுவோரெனப்புலம்பன் மேயினர்.

(இ—ள்) மண்இடை யாறு என வழிக்கொண்டு ஏக—பூமியின்கண் நதி போல பிரவாகித்துப் பாயும்படி, கண்இணை புனல் உக—இரண்டு கண் களினின்று நீர்சொரிய, கலுழ்ந்து சோர்வுஉற—அழுது மூர்ச்சையாகி, துண்ணென உணாவு உற— பின்னர் சீக்கிரத்திலறிவுவந்துசேர, துளங் கி—கலக்கமுற்று, புண் சூழ் கனல் உறவோர் என—புண்ணின்கண் சூழு கின்ற வக்கினிபடப்பெற்றவர்போல, புலம்பல் மேயினர்— வாய்விட்டு) அ ழத்தொடங்கினர்கள். (எ—று)

ஏகாரம்—அசை. ஏகவென்னுமெச்சம். உகவென்னுமெச்சத்தோடு மு டிந்தது, துண்ணெல், விரைவுக்குறிப்பு. முன்பு யானையைக்கண்ட வருத் தத்தின்மேல் விருத்தையைக்காணாத வருத்தத்தை யடைந்தமையின், "க னல்புண்ணுறுவோரென" என்றார். (கo)

வே று.

பெண்ணுக்கணிகலமேபேரழகுக்கோருருவே
கண்ணுக்கணியேகமலத்துசெந்திருவே
மண்ணிற்புனல்படிந்தாய்வானதியுமாடுவதற்
கெண்ணித்துணிந்தோவெமைவிட்டுப்போயினையே.

(இ—ள்) பெண்ணுக்கு அணிகலமே—பெண்களுக்கு அணியப்படுமா பரணமாகவுள்ளவரே, பேர் அழகுக்கு ஓர் உருவே—விசேடமான அழகினுக் கு (உவமைசொல்லத்தக்க) ஒரு வடிவமாகவுள்ளவரே, கண்ணுக்கு அணி யே—(பார்ப்பவரது) கண்களுக்கு அழகாகவுள்ளவரே, கமலத்து செம் தி ருவே—தாமரைப்பூவிலிருக்கின்ற அழகிய விலக்குமியாகவுள்ளவரே, மண் ணில் புனல் படிந்தாய்—பூவுலகத்தின்கணுள்ள கான்யாற்றில் நீராடிய நீர், வான்நதியும் ஆடுவதற்கு எண்ணி துணிந்தோ—(அமைமையாதென்று) தேவவுலகத்துள்ள கங்கையினும் நீராடுவதற்குக் கருதி நிச்சயித்துத்தானோ, எமைவிட்டு போயினை—எங்களைவிட்டு (தனிமையாகப்பிரிந்து) போயி னீர். (எ—று)

ஈற்றேகாரம். இரக்கம். ஓகாரம். இரக்கத்தோடுவினா. ஏனையேகாரங் கள்—தேற்றம். அணிகமுலம், ஒருருவும், அணியும், திருவும்போன்றவரை, அவையாக விளித்தக்கூறியது உபசாரம். படிந்தாய்—பெயர்.

இம்மாது, பெண்களுக்கெல்லாந் தானுத்தமலக்கணமுடைமையின் "பெண் ணுக்கணிகலமே" என்றும், அழகென்று விதந்துகூறப்பட்டவதற்கு இது

வே யொருவடிவமாகவிருத்தலின், "பேரழகுக்கோருருவே" என்றும், பார்த்த கண்களுக்கு விருந்தழகாயிருத்தலின், "கண்ணுக்கணியே" என்றுங் கூறினார். கலம்—சற்பாத்திரமுமென்றபடி. "மண்ணிற்புனல்படிந்தாய்" என்பதற்கு பூவுலகின்கணுள்ள தீர்த்தங்களிற் படிந்தனையெனப் பொருள்கூறின், ஒருவர்கைப்படாக் கன்னிகை யிலக்கணத்திற்கு மாறென்க.

இதுமுதற் பத்துச்செய்யுட்கள் நாற்சீர் நான்கடித்தரவு கொச்சகக்கலிப்பாக்கள். (கக)

வண்ணப்புனலாட்டிவல்லேபுறங்காத்தெந்
மின்னைத்தருதிரெனவேவிடைகொடுத்த
வன்னைக்கென்சொல்வேமடுகளிற்றின்முன்னாக
வுன்னைத்தனிவிட்டுயிர்கொண்டுபோந்தனமே.

(இ-ள்) அடுகளிற்றின் முன் ஆக—கொலையைச்செய்கின்ற யானைக்கு முன்பாக—உன்னை தனிவிட்டு—உன்னைத் தனிமையாக விட்டுவிட்டு, உயிர்கொண்டு போந்தனம்—எங்களுயிரைமாத்திரம் பாதுகாத்துக்கொண்டு போனவராகிய நாங்கள், என் மின்னை—எனது காதற்புதல்வியை, வண்ணம் புனல் ஆட்டி—அழகிய நீரில் மூழ்குவித்து, புறம் காத்து வல்லே தருதிர் என—பக்கத்திற் பாதுகாத்து அதி விரைவிலழைத்துத் தந்துவிடுங்களென்று சொல்லி, விடைகொடுத்த அன்னைக்கு என்சொல்வேம்—அனுமதிசெய்தனுப்பிய வுமது மாதாவாகிய மங்கலைக்கு (எனதுமகளெங்கேயென்று வினவுகினதற்கு) என்ன விடையைச் சொல்லுவோம். (எ-று)

ஈற்றேகாரம்—இரக்கம். ஏனையேகாரங்கள்—தேற்றம். மின்—ஆகுபெயர். அடுகளிறு—வினைத்தொகை. போந்தனம்—வினையாலணையும்பெயர். புறம்—தமிழ் உபசர்க்கமாகலின், புறங்காத்தென்பதற்கு நன்குபாதுகாத்தென்னினுமாம். நக்கீரன், என்பதுபோல. (கஉ.)

ஐயருசத்தியருமன்னையெனுமங்கலையும்
வையம்பரவுகின்றமாதுலராங்குச்சகருங்
கையறவின்மூழ்கக்கரந்தாயினியொருகாற்
செய்யமுகமுந்திருநகையுங்காட்டாயோ.

(இ-ள்) ஐயர் உசத்தியரும்—(தலைமகளே) தந்தையாராகிய வுசத்தியமுனிவரும், அன்னை எனும் மங்கலையும்—தாயாராகிய மங்கலையம்மையாரும், வையம் பரவுகின்ற மாதுலர் ஆம் குச்சகரும்—உலகத்தார் துதிசெய்கின்ற மாமனாராகிய குச்சகமுனிவரும், கையறவின் மூழ்க—துன்பசாகரத்திலழுந்தும்படி, கரந்தாய்—மறைந்துவிட்டீர், இனி ஒருகால்—இன்

றுமொருமுறை, செய்யமுசமும் திருநகையும் காட்டாயோ—(நீர் உடந்த) செப்பமான முகத்தையும் அழகிய சிரிப்பையும் (நாங்கள் பார்க்கும்படி) காட்டமாட்டீரோ. (எ—று)

ஓகாரம். இரக்கம் வையம்—ஆகுபெயர். மாதுலன். மாதாவோடுடன் பிறந்தவன் என்னும் பொருளையுடையதோர் வடமொழி. அஃது கணவனது தந்தையையுங் குறித்தலால் சண்டு மாமனுரை மாதுலர் என்றார் ஆசிரியர் கம்பரும். "நம்பன்மாதுலன்." என்றார். இஃதிலக்கணை. (கங

என்னபலவும்புலம்பியிரங்குற்றே
யுன்னற்கருஞ்சீருசத்தியன்றனற்றவத்தின்
மன்னுற்றதெய்வவனத்தின்மனைவாழ்க்கைப்
பன்னிக்கிவையுரைத்தாப்பாவைநல்லாராவலித்தார்.

(இ—ள்) பாவை நல்லார்—சித்திரப்பாவைபோன்ற வழகுள்ள தோழிப்பெண்கள், என்ன பலவும் புலம்பி இரங்குற்று—என்று பலவாறாகச் சொல்லி யழுது பரிதபித்து, உன்னற்கு அருஞ்சீர் உசத்தியன் நல்தவத்தில் மன்னுற்ற—நினைத்தற்கருமையான சிறப்புவாய்ந்த வுசத்தியமுனிவர் மேலான தவத்தில் நிலைபெற்றிருக்குமிடமான, தெய்வவனத்தில்—தெய்வீகமுள்ள (அநாமயமென்னும்) வனத்தில் (வந்து), மனைவாழ்க்கை பன்னிக்கு இவை உரைத்து ஆவலித்தார்—(அவரது) இல்வாழ்க்கைக்குரிய மனைவியாகிய மங்கலையம்மையாருக்கு நிகழ்ந்த செய்திகளைச் சொல்லி யழுதார்கள். (எ—று)

ஏகாரம்—அசை. தான்—சாரியை. தெய்வவனம்—புண்ணியக்ஷேத்திரம். ஆவலித்தல்—புலம்பல். இரங்குற்று, மன்னுற்ற என்பவற்றில் உறு—துணைவினை. இவையென்னு மஃறிணைப்பன்மை, நீராடல், மலர்கொய்தல், மாலைசெய்துவிளையாடல், யானையினெதிர்ப்படல், தாம் தனித்தனியோடுதல், பின் விருத்தையைக்காணுமை, ஆம். (கச)

கேட்டிடலுமன்னைவயிறதுக்கிக்கேள்கிளர்தீ
யூட்டரக்கேயென்னவுருகிமனமறுகி
வாட்டடங்கணீர்குதிப்பவாய்வெரீஇத்தன்கணவன்
றாட்டுணையில்வீழ்ந்துபுகுந்தபடிசாற்றினளால்.

(இ—ள்) கேட்டிடலும்—(மகளைக் காணுமென்று தோழியர் சொன்னமையைக்) கேட்டவளவில், அன்னை (விருத்தையின்) மாதாவாகிய மங்

கலை, வயிறு அதுக்கி—வயிற்றிலடித்து, கேள்கிளர் தீ யூட்டு அரக்கே என்ன—ஒளிவிளங்குகின்ற அக்கினியிற் சேர்த்தும் மெழுகு (உருகுதல்)போல, உருகி பனம் மறுகி—(தேகம்) நெகிழ்ந்து மனங் கலங்கி, வாள் தடம் கண் நீர் குதிப்ப—வாட்படைபோலும் பெரிய கண்களினின்று நீர் துளிக்க, வாய்வெரீ—வாய்குளறி, தன் கணவன் துணை தாழ் வீழ்ந்து—தமது நாயகருடைய இரண்டு பாதங்களிலும் (போய்) விழுந்து, புகுந்தபடி சாற்றினள்—சம்பவித்த சம்பவத்தைச் சொன்னார். (எ—று)

ஆல்—அசை. ஏகாரம்—பிரிநிலை. வெரீஇ—சொல்லிசையளபெடை. வாய்குளறியென்பதை "வெருவி" யென்றது காரியத்தைக் காரணமாகக் கூறியவுபசாரம். "அதுக்கி" பிசைந்துமாம். (௯)

ஒன்றுபுரிகாட்சிமுனிவனுரைகேட்டுக்
கன்றுபிரிதாயிற்கவன்றரற்றிக்கன்னியொடு
சென்றுபிரிவுற்றோரைநோக்கிச்சினக்களிறு
கொன்றதுவோவஞ்சாதுகூறுமெனச்செப்புதலும்.

(இ—ள்) ஒன்றுபுரி காட்சிமுனிவன் உரை கேட்டு—(புலன்களை) யொன்றாகச்செய்யுந் தவச்சிறப்பையுடைய வசத்தியமுனிவ ரச்சம்பவங்களைக்கேட்டு, கன்றுபிரிதாயின் கவன்று அரற்றி—தன்கன்று பிரியப்பெற்ற தாய்ப் பசுவைப்போல வருத்தப்பட்டுக் கதறியழுது, கன்னி ஓடு சென்று பிரிவு உற்றோரை நோக்கி—தன்புதல்வியோடு (நீராடப்)போய் (பின்னர்ப்) பிரிந்துவந்தவராகிய தோழிமார்களைப் பார்த்து, சினக்களிறு கொன்றதுவோ—(பெண்காள், எமதுமகளைக்) கோபத்தையுடைய யானை கொன்றுதான் விட்டதா, அஞ்சாது கூறும் என செப்புதலும்—(சற்றும்) பயப்படாது சொல்லுங்களென்று வினவவும். (எ—று)

ஓகாரம்—இரக்கத்தோடுவினா. அவையென்னுஞ் சுட்டுப்பொருளை, "உவை" என்றார் மோனைவழுவாது. "கொன்றதுவோ" என்பதிற் குற்றியலுகரம். "உயிர்வரினுக்குறண்மெய்விட்டோடும்" என்பதில் விட்டுக்கெடுமென்றது ஓடுமென்றமையின், சிறுபான்மை "இஈ ஐவழி" என்னும் விதிப்படி வகரவுடம்படுமெய்பெற்றியல்பாயிற்று. "ஒன்றுபுரிகாட்சி" ஐம்புலன்களை யொருவழிப்படுத்தும் நிட்டைச்சிறப்பு.

நீராடிக்கொண்டு வருகையில், யானை வரக்கண்டு சிதறுண்டு பின்னர் விருத்தத்தைக் கண்டிலமென்கின்றாரென்று மங்கலை சொன்னமையால், யானை மகளைக்கொன்றது நிச்சயமெனவும், உண்மைகூறற்கு அஞ்சுகின்றாரெனவும், முனிவர் துணிந்தாராகலின், "சினக்களிறு கொன்றதுவோ,'

எனவும், "அஞ்சாதுகூறும்." எனவும், வற்புறுத்திக் கேட்டாரென்க. காட்சி—அறிவுமாம். (கசு)

தூயபுனலாடித்துறைபுகுந்துசூழ்பொதும்பி
லாயமுடனாடியகன்றிங்குவந்திடலுங்
காயுமழல்வெங்கட்கடகளிறுவந்ததுகண்
டோயுமுணர்வெய்தியெல்லோமுமோடினமால்.

(இ-ள்) எல்லோமும்—(ஐயா! நாங்கள்) எல்லோரும், ஆயம் உடன்—கூட்டத்துடன், தூயபுனல் ஆடி துறைபுகுந்து—சுத்தமான கான்யாற்றில் ஸ்நானஞ்செய்து கரையேறி, சூழ் பொதும்பில் ஆடி—அவ்வாற்றின்) பக்கத்திலுள்ள மலர்ச்சோலையில் (பூக்கொய்து) விளையாடி, அகன்று இங்கு வந்திடலும்—அவ்விடத்தைநீங்கி இங்கே வரும்பொழுதில், காயும்—(எதிர்ப்பட்டவரைக்) கொல்லுகின்ற, அழல் வெம் கண் கடகளிறு வந்தது—அக்கினிப்பொறியுமிழும் குரூரமான கண்களையுடைய மதயானையொன்று வந்தது, கண்டு—அதனைக்கண்டு, ஓயும் உணர்வு எய்தி ஓடினம்—தளர்ந்த வறிவையுடையவர்களா யோடினோம். (எ-று)

ஆல்—அசை. கடகளிறு—வடமொழியாகலினியல்பாயிற்று. எல்லோம்—தன்மைப்பன்மைப்பெயர். "வந்திடலு"மென்னு மும்மீற்றுவினையெச்சம் "வந்தது" என்னு மிறந்தகாலவினைமுற்றோடியையும். ஓயுமுணர்வெய்தல்—அறிவுகெடுதல். யாருமஞ்சத்தக்க யானையென்பது போதர, "காயுமழல் வெங்கட் கடகளிறு." என்றார். (கஎ)

ஓடியுலையாவொருவர்நெறியொருவர்
கூடலிலதாவணியின்குழாஞ்சிந்திச்
சாடுமதகரியிற்றப்பிவிருத்தைதனைத்
தேடியங்ஙன்காணாதுசென்றனம்யாமென்றிடலும்.

(இ-ள்) ஓடி உலையா—(அவ்வாறு) ஓடி வருத்தமுற்று, ஒருவர் நெறி ஒருவர் கூடல் இலது ஆ—ஒருவர் போன வழியில் மற்றொருவர் போய்க் கூடுதல் இல்லாமல், அணியின் குழாம் சிந்தி—ஆபரணக்கூட்டத்தையும் (ஓடுகின்ற வேகத்தால்) போக்கி, சாடும் மதகரி இன் தப்பி—கொல்லுந்தன்மையுள்ள மதயானையினின்றுந் தப்பிப் பிழைத்து, விருத்தைதனை தேடி—(பின்பு) விருத்தையைத் தேடிப்பார்த்து, அங்ஙன் காணாது—அவ்விடத்திற் காணாமல், யாம் சென்றனம் என்றிடலும்—நாங்கள் வந்தோமென்று (தோழிமார்கள்) சொன்னவளவில். (எ-று)

இன்—நீக்கப்பொருளின்வந்த ஐந்தனுருபு. உலையா—ஆகாரவீற்றுடன்பாட்டு வினையெச்சம். அங்ஙன்—அங்ஙனமென்பதன் விகாரம். "இலதா" என்னும் செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். "தப்பி" என்னும் எச்சவினைகொண்டது. "ஒன்றுபுரிகாட்சி" என்னும் மேற்செய்யுளினிறுதிக்கணுள்ள "செப்புதலும்" என்னுமெச்சவினை: இச்செய்யுளினிறுதிக்கணுள்ள, "என்றிடலும்." என்னுமெச்சவினையோடியையும். "யாமங்ஙன் காணாது சென்றனம்" என்றது, ஈண்டுவைத்திருக்கவுங் கூடுமென்பதும் தோன்ற. (௯௮)

சென்றாங்கவ்வெல்லைதனிற்றேடித்தியங்குற்று
நின்றான்மகடனிறங்கிளரும்பொற்கலனோ
ரொன்றாகவெவ்வேறொருநெறியிற்சிந்திடக்கண்
டென்றாய்படர்ந்தநெறியீதுகொல்லென்றேறுற்றான்.

(இ—ள்) அ எல்லைதனில் சென்று—(உசத்தியமுனிவர், கான்யாறும் மலர்ச்சோலையுமுள்ள) அந்த இடத்திற்போய், தேடி—(தம்மகளைத்) தேடி, தியங்குற்று நின்றான்—(அங்குக் காணாமையால்) பிரமித்து நின்று, மகள் தன் நிறம் கிளரும் பொன் கலன் ஓர் ஒன்று ஆக—புதல்வியினது ஒளி விளங்கும் பொன்னாபரணங்கள் ஒவ்வொன்றாக, ஒரு நெறியில் வெவ்வேறு சிந்திட கண்டு—ஒரு வழியில் தனித்தனி சிதறிக்கிடக்கக்கண்டு, என் தாய் படர்ந்தநெறி ஈது என்று எம் உற்றான்—எனது தாயானவள் போனவழி யிதுதானென்று மயக்கமடைந்தனர். (எ—று)

ஆங்கு, கொல்—அசைகள். ஆங்கு—அப்பொழுதெனவும், கொல்—ஐயமெனவும், பொருள்கொள்வாருமுளர். நின்றான்—முற்றெச்சம். வெவ்வேறு—வேறு வேறு என்பதன் மரூ. எம்—எமம் என்பதன் விகாரம். மகளைத் தாயென்றது, "சொற்றொறு மிற்றிதன் பெற்றி." என்னும் புறனடையால் இரக்கத்தின்கண்வந்த மரபுவழுவமைதி. மேலைச்செய்யுளோடு கூட்டி, "என்றிடலும், சென்று, தேடி, நின்று, கண்டு, என்று, எமுற்றான், என முடிக்க. (௯௯)

பூண்போகியநெறியேதொட்டுப்புதல்விதனைக்
காண்போமெனவேகனங்குழையாரோடேகி
மாண்போயகூவலொன்றுவந்தணுகவாங்கதனிற்
சேண்போயதன்மகளைக்கண்டுதெருமந்தான்.

(இ—ள்) பூண்போகிய நெறியே தொட்டு—(அங்ஙனம் மயங்காநின்ற வுசத்தியமுனிவர்) ஆபரணங்கள் சிதறிக்கொண்டு போயிருக்கின்ற வழி

யையே (அறிகுறியாகப்) பிடித்து, புதல்வியினை காண்போம் எனவே—மகளைப் பார்ப்போமென்று துணிந்து, கனம் குழையார் ஓடி எதி—பாரமான காதணியையுடைய தோழிப்பெண்களோடு சென்று, மாண்போய கூவல் ஒன்று விரைந்து அணுக—மாட்சிமையிழந்த (பாழான) கிணறொன்று வந்து எதிர்ப்பட, அதனில்—அப்பாழ்ங்கிணற்றின்கண், சேண்போய தன் மகளை கண்டு—(இறந்து) விண்ணுலகம்போன தமது மகளின் பிரேதத்தைப் பார்த்து, தெருமந்தான்—மனங் கலங்கினார். (எ—று)

ஆங்கு—அசை, ஏகாரம்—முன்னையது பிரிநிலை, பின்னையது தேற்றம். "கூவல் வந்தணுக" என்பது, "இயங்குன போலவும்—இயற்றினை மருங்கிறு மறையப்படுமே." என்னும் விதிபற்றி வந்த மரபு வழுவமைதி. சண்டுடைக வென்றது இலக்கணை. மாண்போயகூவல்—பாழ்ங்கிணறு. சேண்போய—என்பதற்கு, மிக ஆழத்திற் கிணற்றினுட் போயவெனப் பொருள் கோடலுமொன்று. (சOO)

வேறு.

கூவலுறுவதுநோக்கிநெடிதுயிர்த்துவிழிவழிநீர்குதிப்பக்குப்புற்றுவலியாமகளையெடுத்தகன்கரையின்பாற்படுத்தியழுங்கலோடும்
பாவையர்கடழீஇக்கொண்டுபுலம்பினாரலதுகேட்டுப்பயந்த
நற்றாய், காவிலுறுகோகிலம்போனெடிதரற்றிப்பெருந்துயரக்
கடலுட்பட்டாள்.

(இ—ள்) கூவல் உறுவது நோக்கி—(உசத்தியமுனிவர், தம்மகள்) கிணற்றின்கட் கிடப்பதைப் பார்த்து, நெடிது உயிர்த்து—பெருமூச்செறிந்து, விழிவழி நீர்குதிப்ப—கண்களினின்று நீர்சொரிய, குப்புற்று—(கிணற்றின்கட்) குதித்து, ஆவலியா—ஆவலுற்று, மகளை எடுத்து அகன்கரையின் பால்படுத்தி அழுங்கலோடும்—புதல்வியை எடுத்து விசாலமான (அக்கிணற்றின்) கரையின்கண் வளர்த்தி துன்பப்பட்டுக்கொண்டிருக்கவும், பாவையர்கள் தழீஇ கொண்டு புலம்பினார்—தோழிப்பெண்கள் (விருத்தையினுடம்பை)த் தழுவிக்கொண்டழுதார்கள், அதுகேட்டு—அவ்வழுகைக்குரலைக் கேட்டு, பயந்த நல்தாய்—பெற்ற நற்றாயாகிய மங்கலையம்மையார் (வந்து), காவில் உறு கோகிலம்போல் நெடிது அரற்றி—சோலையில்வாழுங் குயில்போல, (இனிமையான மெல்லிய குரலைவிட்டு) மிகவுமழுது, பெரும் துயரம் கடலுள் பட்டாள்—மிகவும் பெரிய துன்பமாகிய சமுத்திரத்தில் மூழ்கினார். (எ—று)

ஆல்—அசை. வழி—எழுனுருபு தழீஇ—சொல்லிசையளபெடை. கோ இலம்—ஆகுபெயர். "பாவையர்கடழீஇக்கொண்டு புலம்பினர்." பெண்களொருவரையொருவ ரணைத்துக்கொண்டழுதனரெனப் பொருள்கோடலுமொன்று. "அதுகேட்டுப்பயந்த" அதனைக்கேட்டு அஞ்சியவென்பாருமுளர். அதுகண்டு என்பதும் பாடம். பயித்தல்—வளர்த்தல். இதுமுத லைந்து செய்யுட்கள் அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தங்கள். (க0க)

**தன்பால்வந்தவதரித்தநங்கைதன்னைக்கைவிட்டுத்தரியாளாகி
யன்பாலேயுயிர்பதைப்பவயிறதுக்கியாகுலியாவரற்றியேங்கி
மின்பாலோர்மின்படிந்ததன்மையெனவவளாகமிசையேவீ
ழ்ந்து, தென்பாலிற்புகுந்தனையோவோமகளேயெனப்புலம்
பித்தேம்பலுற்றாள்.**

(இ—ள்) தன்பால் வந்து அவதரித்த நங்கைதனை கைவிட்டு—(மங்கலையம்மையார்) தம்மிடத்துவந்தருமையாகப் பிறந்த (மகளேக்களுட் சிறந்த) மகளையிழந்து, தரியாள் ஆகி—பொறுக்கமாட்டாதவளாய், அன்பாலே—(புதல்விமாட்டு வைத்த) அன்பினாலே, உயிர்பதைப்ப—உயிர் துடிக்க, வயிறு அதுக்கி—வயிற்றிலடித்து, ஆகுலியா—துன்பப்பட்டு, அரற்றி எங்கி—கதறியழுது, மின்பால் ஓர் மின்படிந்த தன்மை என—ஒரு மின்னற்கொடியின்மேல் வேறொரு மின்னற்கொடி படிந்த தன்மைபோல, அவள் ஆகம் மிசை வீழ்ந்து—விருத்தையி னுடம்பின்மேல் (தாம்) விழுந்து, ஓ மகளே—ஐயோ! எமதருமைப்புதல்வியே, தென்பாலில் புகுந்தனையோ—(நீ) யமலோகத்திற் போய்விட்டாயோ, என புலம்பி தேம்பல் உற்றாள்—என்றுசொல்லி யிரங்கி யழுவாராயினர். (எ—று)

மிசையே-என்பதன்க ணேகாரம்—அசை. அன்பாலே-என்பதன்கணேகாரம்—தேற்றம். ஓகாரங்களிரண்டும்—இரக்கம். யமலோகத்தை "தென்பால்" என்றார் அஃதத்திசைக்கணுள்ளதாகலின். உத்தமலக்கணமெல்லா மொருங்கமையப்பெற்றபெண்ணாகலின், "நங்கை."என்றும், சாமானியவன்புபோலாகாது விசேடவன்பாய் நஞ்சுபோன்றுயிரை நலிதலின், "அன்பாலே யுயிர்பதைப்ப."என்றும், மின்னற்கொடிக்கும், மங்கலைக்கும், விருத்தைக்கும் பேதமின்மையின், "மின்பாலோர் மின்படிந்த தன்மையென வவளாக மிசையே வீழ்ந்து." என்றுங் கூறினார். உவமையணி. (க0உ)

**அன்னேயோவன்னேயோவாகொடியதறனையோஅறியேனந்தோ, முன்னேயோநெடுங்காலங்குழவியின்றிப்பெருநோன்புழுயன்றுபெற்ற, மின்னேயோவுயிரிழந்துவெள்ளிடையிற்**

கிடந்திடுமால்விதியார்செய்கை, யின்னேயோயானொருத்தி பெண்பிறந்துபெற்றபயனிதுவேயன்றே.

(இ—ள்) அன்னே ஓ அனனே ஓ—எமது தாயே ஐயோ! எமது தாயே ஐயோ! ஆ அறனே ஓ கொடியது—ஐயோ! தருமந்தானே கொடுமையையுடையது, அந்தோ அறியேன்—ஐயோ! (இதனை நான் இதுவரையும்) அறியேன், முன்னே ஓ நெடும் காலம் குழவி இன்றி—முன்னே யனேககாலம் பிள்ளைப்பேறில்லாமல், பெருநோன்பு முயன்று பெற்ற—பெருந் தவஞ்செய்து (நான்) பெற்றெடுத்த, மின்னே ஓ உயிர் இழந்து வெள்ளிடையில் கிடந்திடும்—மின்னல்போன்ற மகள்தானே உயிரையிழந்து வெளியிடத்திற் கிடப்பவர், விதியார் செய்கை இன்னே ஓ—பிரமனாது செய்கை இப்படித்தானே, யான் ஒருத்தி பெண்பிறந்து பெற்றபயன் இதுவே அன்றே—நானொருத்தி பெண்ணாகப்பிறந்து எடுத்துக்கொண்ட இலாபமிதுதானல்லவா. (எ—று)

ஆல்—அசை. அன்றே—தேற்றம். ஓ, ஆ, அந்தோ என்பன—இரக்கம். அன்னே—என்பதன்கணேகாரங்கள்-அன்னையென்னு மைகாரங்களின் றிரிபு. முன்னேயோ—என்பதன்கணேகாரம்—தெரிநிலை. ஏகாரம்—திரிபு. மின்னேயோ—என்பதன்கணேகாரம்—உயர்வு சிறப்பு. ஏகாரம்—தேற்றம். இன்னேயோ—என்பதன்கணேகாரம்—வினா. அறனே—என்பதன்கணேகாரமும் வினா. அறன்—போலி. மின்—ஆகுபெயர். மகளை, "அன்னை" என்றது மரபு வழுவமைதி. ஆர்—விகுதியிழித்தற்கண்ணும், அடுக்கு அவலத்தின்கண்ணும்வந்தன.

தான், தருமம்புரிந்துகொண்டிருக்கவும், அஃதில்லாதார்க்கு விளையுங் கேடு தனக்கு விளைந்தமையின் "கொடியதுஅறனேயோ." என்றும், நெடுங்காலம் பிள்ளைப்பேறின்றித் தருமநெறிக்கணின்று பெருந்தவம் புரிந்த வெனக்குப் பூரணாயுசுவுடைய புதல்வியை விதியாது, அவமிருத்துடைய புதல்வியை விதித்த பிரமனும் பிரமனுவென்பார் இழித்தற்கணார் விகுதிகொடுத்து "விதியார்" என்றுங் கூறினர்.

ஆண்பெண்ணென்னு மிருபாற்சகோதரரோ டென்பிறந்தாளாயிருத்தல்வேண்டுமென மேலே மிருககண்டியர் விதிகூறினாராயினும், "நீ மாதவம் புரிந்து பெறுமகடன்னை" என்றமையானும், "முன்னேயோ நெடுங்காலங் குழவியின்றிப் பெருநோன்பு முயன்றுபெற்ற, மின்னேயோ" என்றமையானும், விருத்தை சகோதரரோ டென்பிறவாத வோரேயொரு மகளென்பது, ஈண்டுத்தெள்ளிதிற் புலப்படுகின்றமையின், அவர்மேற்

கூறிய விதிவழுவாகாதேவெனின், சகோதரமில்லாதாளை மணத்தல் சிறப்புடைத்தன்றென்பது வேதவிதியாகிய பொதுவிதியாகலானும், மணக்கலாகுமென்பது ஸ்மிருதிவிதியாகிய சிறப்புவிதியாகலானு மது வழுவாகாதென்க.

அவலச்சுவையென்னுமலங்காரம். (௧௦௩)

புலிக்கணங்கடிரிகானிலொருமானை வளர்த்ததனைப் போக்கிநின்
றே, பலக்கணுறுவோரெனவேனைகைவிட்டுத் தமியேனுமழுங்
கானின்றேன், மலர்க்கமலத் திருவனையகரென் மகளைக் கொல்லிய
முன்வந்ததந்தக், கொலைக்களிற்றின் வடிவன்றேகொடியேன்
செய்வெம்பாவத்தின் கோலமன்றே.

(இ-ள்) புலி கணங்கள் திரிகானில்—புலிக்கூட்டங்களுலாவித் திரிகின்ற கானகத்தில், ஒரு மானை வளர்த்து—ஒரு மான்குட்டியை வளர்த்து, அதனை போக்கி நின்று அலக்கண் உறுவோர் எனவே—அதனைக் கை நழுவவிட்டுநின்று துன்பப்படுகின்றவர்களைப்போலத்தானே, தமியேனும் கைவிட்டு அழுங்காநின்றேன்—தமியளாகிய நானும் உன்னையிழந்து வருந்துகின்றேன், கமலம் மலர் திருவை நிகர் என்மகளை—தாமரைப்பூவின்கணிருக்கின்ற இலக்குமியையொத்த நமது புதல்வியை, கொல்லிய முன் வந்தது—கொல்லும்படி முன்பாக வந்தது, அந்த கொலைகளிற்றின் வடிவு ஓ அன்று—கொலைத்தொழிலைச் செய்கின்ற அந்த யானைவடிவமோவல்ல, கொடியேன்செய் வெம்பவத்தின் கோலம் அன்றோ—கொடியவளான நான் செய்த கொடிய பாவத்தினது வடிவமல்லவா. (எ-று)

அன்றோ—தேற்றம். நின்றே, அன்றேயென்பதன்கணேகாரங்களசை— எனவே—என்பதன்கணேகாரம்—பிரிநிலையோடு தேற்றம். கொல்லியசெய்யியவென்னும் வாய்பாட்டெச்சம். அடிநோக்கி கமலமலரென்பது—மலர்க்கமலமென நிலைமாறிற்று. மேலும், "வாகத்துநேமி" என்றார். கமலம்— நீரிலலர்வது. "தமியேன்" என்றது மகளையிழந்தமையின்-உபமேயத்திற்கியைய மான்குட்டியென்றும்.

புலியினங்கள் வாசம்பண்ணுங் காட்டகத்தில் மானை வளர்ப்போர் அகோராத்திரமுந் தம்மருகிற் பாதுகாப்பாக வைத்துக்கொள்ளாது, புறத்திற் போகவிட்டு புலிவிழுங்க புலிகோட்பட்டதென்று பின்னதற்கிரங்குமறிவிலிகள்போல, நானுமுன்னை யென்னருகிற் பாதுகாப்பாக வைத்துக்கொள்ளாது துட்டமிருகங்கள் வாசம்பண்ணுங் காட்டகத்தில் நீராடிக்கொண்டு வாவென்றனுப்பி யிப்போ கையிழந்து கவலைப்படுகின்றேனே யெ

ன்பார், "புலிக்கணங்க டரிகானி லொருமானை வளர்த்ததனைப் போக்கி நின்றே—யலக்கணுறு வோரெனவே கைவிட்டுத் தமியேனு மழுங்காநின் றேன்." என்றும், தாஞ்செய்தவினையே தமக்குக் கேடு பயக்குமன்றிப் பி றிதொன்றாற் கேடெய்துவாதென்பார்,"என்மகளைக் கொல்லிய முன்வந்த த ந்தக்கொலைக்களிற்றின் வடிவமன்று கொடியேன் செய்வெம்பவத்தின் கோ லமன்றே." என்றுங் கூறியழுதாரென்பதாம். தம்வினையே தமக்குக் கெட் டைப் பயந்துவிடுமென்பதை, "தாந்தாமுன் செய்தவினை தாமேயநுபவிப் பார்." என்னு மவ்வைவார்க்கானும், "தன்வினை தன்னைச்சுடு மோட்டப் பம் வீட்டைச்சுடும்." என்னும், பட்டணத்தடிக ளருளியவாக்கானு மு ணர்க.

உவமையணியும், அவலச்சுவையென்னு மணியும். (கo௪)

அறங்காட்டிற்சென்றதுவோதெய்வதமுமிங்கிலையோவரிதாமு
த்தித், திறங்காட்டுந்தவநெறியும்பொய்த்ததுவோகலியுமினி
ச்சேர்ந்ததேயோ, மறங்காட்டும்வனக்களிறுவந்தடர்க்கவீ
ண்டெனதுமாதுமாண்டு, புறங்காட்டிற்கிடந்திடுமோவென்
னேயென்னேயிதுவோர்புதுமையாமே.

(இ—ள்) அறம் காட்டில் சென்றதுவோ—தருமமானது (எம்மை விட் டகன்று) காட்டிற் போய்விட்டதோ? தெய்வதமும் இங்கு இலையோ—தெ ய்வமும் இவ்விடத்தில் இல்லாமற் போனதோ?, அரிது ஆம் முத்தி தி றம் காட்டும் தவநெறியும் பொய்த்ததுவோ—(கிடைப்பதற்) கருமையான மோக்ஷநிலையைக் காண்பிக்கும் தவமார்க்கமும் பொய்மையாய் போயின தோ?, கலியும் இனி சேர்ந்ததேயோ—கலிகாலமும் இப்போது வந்துவிட் டதோ? மறம் காட்டும் வனம் களிறு வந்து அடர்க்க—கொலையைச் செய் கின்ற காட்டானை வந்து நெருக்க, ஈண்டு எனது மாது மாண்டு புறம் காட்டில் கிடந்திடுமோ—இத்தன்மையாக எமது புதல்வி யிறந்து (இனி) மயானத்திலுங் கிடக்கப் பெறுவாளோ? என்னே என்னே—(இப்படி வரு வதற்கு) காரணம்யாது! காரணம்யாது! இது ஓர் புதுமை ஆமே—இந்தத் தன்மையொரு அற்புதமாக விருந்ததல்லவா. (எ—று)

ஈற்றேகாரம்—இரக்கத்தோடு தேற்றம். ஓகாரங்கள்—இரக்கம். அடுக்கு அவலம்பற்றியது. இலை—விகாரம். தெய்வதம்—வடமொழித்திரிபு. இனி, ஈண்டென்னு மிடைச்சொற்கள் முறையே இப்பொழுது இவ்வண்ண மென்னும் பொருள்களைப் பயந்துநின்றன. அறம்—தருமதேவதை. மறங்

காட்டுமென்பதில் காட்டுதல்—செய்தலென்னும் பொருட்டு. புறங்காடு—ஊர்க் குப்புறத்திலுள்ள காடுமாம்.

தருமமுந் தேவசகாயமுந் தவமுமுள்ளவிடத் துற்பாதமின்மை யுண் மையாகவும், தாம் தருமத்தை யிடையறாது செய்தும், தெய்வத்தைத் து ணையாய்க்கொண்டும், தவத்தையியற்றியும், பயனின்றி, தம்மகளுக்கு அவ மிருத்தாகிய மரணஞ் சம்பவித்துவிட்டமையின், "அறங்காட்டிற் சென் றதுவோ, தெய்வதமுமிங்கிலையோ, தவநெறியும்பொய்த்ததுவோ." என் றும், பாபயுகமாகிய கலியுகத்திலன்றி, மற்றைப் புண்ணியயுகங்களி லவ மிருத்து நிகழாமையின், "கலியுமினிச் சேர்ந்ததேயோ." என்றும், இதற்கு முன்னிதுபோன்ற துன்மரணஞ் சம்பவியா திப்போது சம்பவித்த தற்பு தமாக விருந்தமையின், "இதுவோர்புதுமையாமே."என்றுங் கூறிப் புலம் பினரென்பதாம். (௯0௫)

வேறு.

என்றிவைபலவும்பன்னியிடருழந்தரற்றும்வேலை
மன்றலங்குழலின்மாதர்வளைந்தனரிரங்கிமாழ்க
வொன்றியகேளிரல்லாரியாவருமுருகிநைந்தா
ரன்றவணிகழ்ந்தபூசலாகுலமறைதற்பாற்றோ.

(இ—ள்) என்று இவைபலவும் பன்னி—(மங்கலையம்மையார்) என்று இன்னோரன்ன பலவற்றையுஞ் சொல்லிச்சொல்லி, இடர் உழந்து அரற் றும் வேலை—(புதல்வியை இழந்த துன்பத்தினால்) வருத்தமுற்று அழு கின்ற சமையத்தில், மன்றல் அம் குழலின் மாதர்—வாசனையமைந்த அழ கிய கூந்தலையுடைய தோழிப்பெண்கள், வளைந்தனர் இரங்கி மாழ்க—(வி ருத்தையினுடம்பை) சுற்றியிருந்து அழுது மயக்கமடைய, ஒன்றிய கேளிர் அல்லார் யாவரும் உருகி நைந்தார்—நெருங்கிய வுறவினரும் அவ ரையல்லாத பிறருமான வெல்லோரும் மனமுருகி வருத்தமுற்றார்கள். அன்று அவண் நிகழ்ந்த பூசல் ஆகுலம்—அன்றைய தினத்தி லவ்வீட்டுண் டான பேரொலியோடு கூடிய துன்பம், அறைதல்பாற்றோ—(இவ்வள வையுடைத்தென்று) சொல்லுந்தன்மையையுடையதோ, (உடைத்தன் றெ ன்றபடி,) (எ—று)

ஓகாரம்—எதிர்மறை. யாவரும், என்பதன்கணும்மை—முற்றும்பொரு ளும், இறந்தது தழுவியவெச்சப்பொருளும். அம்—சாரியையுமாம். கேளி ரைக் கூறுமையின், "கேளிரல்லாரியாவரும்." என்பதற்கு உறவினரை யல்லாத வெல்லவருமெனப் பொருள்கோடல் பொருந்தாது. கேளிரல்

லார்—உம்மைத்தொகை. மாழ்க, நைந்தார்—ஒருவினை நிகழாநிற்பப் பிறிதொரு வினைநிகழ்ச்சி. வரம்பிகந்தோ ரொருங்குகூடி நெட்டொலியெழவாய் விட்டழுதமையின், "பூசலாகுலம்." என்றார் அவலச்சுவையென்னு மலங்காரம்.

இதுமுத லெட்டுச்செய்யுட்கள் அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தங்கள். (கoசு)

கோட்டமில்சிந்தையோனும் குச்சகன் குறுகியங்க
ணாட்டநீர் பனிப்பச்சோருநங்கையர் தம்பா லெய்தி
மீட்டினித்தருவன் மாதை விம்மலிரென்றுவேறோர்
மாட்டுறவிருந்த தந்தைக்கினையன வகுத்துச்சொல்வான்.

(இ—ள்) கோட்டம் இல் சிந்தையோனும் குச்சகன் குறுகி—(அவா வெகுளி இன்னாச்சொல்லும்) அழுக்காறுமில்லாத நன்மனத்தையுடையவரான குச்சகமுனிவர் வந்து, அங்கண் நாட்டம் நீர் பனிப்பசோரும்—அவ்விடத்தில் (அன்பினாற்) கண்ணீர் துளிக்க வழுது வாட்டமுறும், நங்கையர் தம்பால் எய்தி—சிறப்பமைந்த பெண்கள் பக்கலையடைந்து, மாதை இனி மீட்டு தருவன் விம்மலிர் என்று—இறந்த இப்பெண்ணை யினி யுயிரை மீட்டுத் தருகுவேன் நீங்களழவேண்டாமென்று கூறி, வேறு ஓர் மாட்டுற இருந்த தந்தைக்கு இனையன வகுத்து சொல்வான்—வேறொரு பக்கமாகவிருந்த பிதாவாகிய வுசத்தியமுனிவருக்கு இன்னோரன்னவற்றை விவரித்துச் சொல்வாராயினர். (எ—று)

கோட்டம்—அழுக்காறு. அவா, வெகுளி, இன்னாச்சொல்லும், "ஒருமொழிதன்னினங்கொளற்குரித்தே." என்னு முபலக்கணத்தால் வருவிக்கப்பட்டன, இனி, நன்னெறியிற் கோடுதலில்லாதவெனவும், நடுவுநிலையிற் கோடுதலில்லாதவெனவுங் கூறுதலுமாம். அன்பை, அனுமானவளவையா னன்றிக் காட்சியளவையாற் காட்டுவது கண்ணீராகையாலும், உண்மையன்பின்வரய்ப்பட்டழுதமையாலும், "நாட்டநீர்பனிப்பச் சோருநங்கையர்" என்றார், இதனை, "அன்பிற்குமுண்டோ வடைக்குந்தாழார்வலர்—புன்கணீர் பூசறரும்." என்னுந் திருக்குறளானுமுணர்க. மீட்டுத்தருவன்—பிழைக்கச் செய்துதருவன். (கoஎ)

முறைமுதலாய நுண்ணூன் மருளறவுணரா மாக்கள்
சிறியரோமுதியர்பாலர்சேயிழைமகளிரின்னோ
ருறுவதோரவலஞ்செய்தாயூழ்வினைமுறையுமோரா
யறிவநீயின்னேயாயினிரிதுதணிக்கற்பாலார்.

(இ-ள்) மறைமுதல் ஆய நுண் நூல் மருள் அற உணரா மாக்கள்—வேதம் முதலான நுண்ணிய பொருளையுடைய சாஸ்திரங்களை மயக்கந் தீரக் கற்றறியாத (அறிவிலிகளான) மனிதர்களும், சிறியரே—கீழ்மக்களும், முதியர்—வயோதிபர்களும், பாலர்—குழந்தைகளும், சேய் இழை மகளிர்—செம்மையான ஆபரணங்களையணிந்த பெண்களுமாகிய, இன்னோர் உறுவது ஓர் அவலம் செய்தாய்—இவர்களடைகின்றதுபோன்ற ஒரு வருத்தத்தையடைந்தீர், ஊழ்வினை முறையும் ஓராய்—பழவினையின் தன்மையையு மறியீர்போலும், அறிவ—அறிவையுடையவரே, நீ இன்னே ஆயின்—நீரே யிவ்வாறு வருத்தமுறுவீரென்றால், இது தணிக்கல் பாலார் ஆர்—இவ்வருத்தத்தைச் சகித்துக்கொள்ளத்தக்கவர் வேறுயாவர், (ஒருவருமிலரென்றபடி.) (எ-று)

ஏகாரம் எண். முதியராதியரோடுஞ்சென்றியையும். உணராதவென்னும் பெயரெச்சம் உணராவென வீறுகெட்டது. உம்மை-உயர்வுசிறப்பு. ஆர்—எதிர்மறைவினைவினைக்குறிப்பு. பொருளின் நுண்மையை முதலாகிய நூலுக்கேற்றி நுண்ணூலென்றார். மருள்—பிறவியும், வினைப்பயன்களுங் கடவுளுமில்லையென்றும், இதுபோன்ற பிறவில்லையென்றுஞ் சாதிக்கும் பொய் நூல்வழக்குக்களை யுண்மையெனக்கொள்ளல், அஃது, இப்பியை வெள்ளியென்றும், பழுதையைப் பாம்பென்றும், கானலைநீரென்றுங் கருதுமாறு போல. "நூல்மருளறவுணராமக்க"ளென்னாது, "மாக்கள்" என்றார், கல்விஞானமில்லாதவர் மிருகமேயாமென்பது போதர. "மாவும் மாக்களும் ஐயறிவினவே." "மக்கள்தாமே ஆறறிவுயிரே" எனவருந் தொல்காப்பியச் சூத்திரங்களுட்காண்க.

உண்மையறிவாளரான நீரே னிதற் கிரங்கவேண்டியதென்பார், அவ்வறிவிலிகளுக்கே யஃதுண்டென்பது போதர, "நூலுணராமாக்கள்—சிறியரே முதியர்பாலர்மகளிரின்னோருறுவதோரவலஞ்செய்தாய்" என்றும், எமக்கு வருவதெல்லாம் விதியின்வசமென்பார், "ஊழ்வினைமுறையுமோராய்" என்றும், நூல்களைக் கற்றுணர்ந்த வுண்மைஞானிகளுங் கலங்குகில், மற்றோர்தான் கலங்காரென்பார், "அறிவநீ யின்னேயாயி னிதுதணிக்கற்பாலார்," என்றுங் கூறினார். (கo௮)

தேனையா மனத்திற் றுன்பங்களைத் தலைகேடுநீங்கி
நீளயாவுயிர்த்தார்போலிந்தேரிழைக்கன்னிதன்னை
நாளையான்விளித்துநின்பாலைக்குவனல்கநீங்
காளையானவற்குப்பின்னுட்கடிமணம்புரிதியன்றே.

(இ—ள்) ஐயாகேள்—பெரியோரே (நான் சொல்வதைக்) கேட்பீராக! மனத்தில் துன்பங்களைத்தலை— மனத்தில் துன்பத்தை யதிகரிப்பியாதொழிக, கேடுநீங்கி—(மரணமாகிய) கேட்டில்நின்றும் நீங்குவித்து, நீள் அயாவுயிர்த்தார்போல்—மிக்க வருத்தத்துநின்றும் பிழைத்தெழுந்தவர்போல, இநேர் இழை கன்னிதன்னை—இந்தத் தகுதியான ஆபரணங்களையணிந்த பெண்ணை, யான்—நான், நாளை விளித்து நின்பால் நல்குவன்—நாளைக்கு அழைத்து உம்மிடத்துத் தருகுவேன், நல்க—(அங்ஙனம்) தர, நீ—நீரும், பின் நாள்—அடுத்தநாளில், நம் காளை ஆனவற்கு கடிமணம் புரிதி—நமது புதல்வனுக்கு அழகிய மணஞ்செய்து வைப்பீராக. (எ—று)

அன்றுமேயும்—அசைகள். நீங்கி—நீங்குவித்து, பிறவினை விகுதி தொகுத்தல், அந்தர்ப்பாவிதணிச் சென்பர்வடநூலார். அயா—வருத்தம். உயிர்த்தல். விடுதல். நித்திரைதெளிந்தெழுதலுமாம். கடி—அழகு நம்—தனித்தன்மைப்பன்மை. தன் மனைவியையுங் கூட்டிய வுளப்பாட்டுத்தன்மைப் பன்மையெனினுமொக்கும். (கOக)

ஐயமென்றுளத்திலுன்னியழுங்கலைவிதியுமற்றே
மெய்யுணர்வதனாற்கண்டாம்விருத்தைதன்யாக்கைதன்னை
மொய்யுறுதயிலத்தோணிமூழ்குவித்திருத்தியின்றே
யொய்யெனநோற்றுமீட்டுத்தருகுவனுயிரையென்றான்.

(இ—ள்) ஐயம் என்று உளத்தில் உன்னி அழுங்கலை—(இறந்தோரைப் பிழைப்பிக்குமீது) சந்தேகத்துக்கிடமாகுமென்று மனத்தில் நினைந்து வருத்தமுறுதீர், விதியும் அற்றே—ஊழு மம்படியேயிருக்கின்றது, மெய் உணர்வு அதனால் கண்டாம்—(அவ்வூழப்படியிருத்தலை, யாம்) உண்மைஞானத்தினாலறிந்தோம். விருத்தைதன் யாக்கைதன்னை—(ஆகையால்) விருத்தையினது உடம்பை, மொய் உறு தயிலம் தோணி மூழ்குவித்து இருத்தி—(கெடாதிருத்தற்பொருட்டு) நிறைத்த எண்ணெய்த்தோணியின்கண் மூழ்கும்படி வைத்துப் பாதுகாத்திருக்கக்கடவீர், இன்றே—இன்றைக்கே, ஒய்யென நோற்று—அதி விரைவாக (யான்) தவஞ்செய்து, உயிரைமீட்டு தருகுவன் என்றான்—(இக்கன்னிகையின்) உயிரை மீட்பித்துக் கொடுப்பேனென்று (குச்சகமுனிவர் நிச்சயப்படுத்திக்) கூறினார். (எ—று)

ஏகாரங்கள், தேற்றம். தருகுவன்—கு, சாரியை. கண்டாம்—தனித்தன்மைப்பன்மை. ஏனைஞானிகளையு மகப்படுத்திய பன்மையெனினுமாம். த

யிலம்—போலி. தைலம்—திலத்தினின்றுண்டானது, தத்திதாந்தப்பெயர். எண்ணெய், என்பது மது. திலம்-எள். உனத்திலென வேண்டாது கூறி ஞர், ஐயவிபரீதமற்ற வுளமென்பதைக் காட்டற்கு, உயிரில்லாத வுடம் பைப் பழுதடையாமற் காப்பது தைலத்தோணியில் வைத்தென்பதை, மேலே பானுகோபன் வதைப்படலத்திலும், இராமாயணம் ஓதலமாட்டு படலத்திலுங் காண்க.

இறந்தோருயிர்பெற்றெழுத லெவ்விடத்து மெக்காலத்து மில்லாத தொன்றாகலி னைஂதைபத்திற் கிடமாகுமென்பபிர், தாமாகவே "ஐயமென் றுளத்திலுன்னி யழுங்கலே," என்றும், இவ்விருத்தைக் கிஂது விதியாக லின், "விதியு மற்றே." என்றுங் கூறினர். (கசo)

சாற்றிய துணர்ந்து தாதை தயிலத்தி லிட்டு மாதைப்
போற்றின னிருப்ப மேலோன் போயொரு பொய்கை மூழ்கிக்
கூற்றுவற் புகழ்ந்து நோற்பக் கொடுங்குழை மடவா ரஞ்சக்
காற்றென முன்னர் வந்த களிறுமீண் டணைந்த தம்மா.

(இ—ள்) சாற்றியது உணர்ந்து—(இவ்வாறு, குச்சகமுனிவர்) சொன் னதை ஆலோசித்துணர்ந்து, தாதை—பிதாவாகியவுசத்தியமுனிவர், மா தை தயிலத்தில் இட்டு போற்றினன் இருப்ப—விருத்தையினுடம்பை எண் ணெய்த்தோணியிலிட்டுப் பாதுகாத்துக்கொண்டிருக்க, மேலோன்—மேலவ ரான குச்சகமுனிவர், போய் ஒரு பொய்கை மூழ்கி—அவ்விடத்தினின்றுஞ் சென்று ஒரு தடாகத்தில் மூழ்கியிருந்துகொண்டு, கூற்றுவன் புகழ்ந்து நோற்ப—யமனைச் சிந்தித்துத் துதித்துத் தவம்புரிய, முன்னர்—முன்ன மே—கொடுங் குழை மடவார் அஞ்ச—வளைந்த காதணியையுடைய பெண்க ளஞ்சும்படி, காற்று என வந்த களிறு—காற்றுப்போ லதிவேகமாகவந்த கொம்பன்யானையானது, மீண்டு அணைந்தது—(சேரநாட்டினின்றும்) தி ரும்பி (குச்சகமுனிவர் தவம்புரியு மவ்விடத்தில்) வந்தது. (எ—று)

அம்மா—வியப்பிடைச்சொல். அந்தயானை மீட்டும்வந்த அற்புதத்தைக் குறித்தது. போற்றினன்—முற்றெச்சம். கூற்றுவற்புகழ்ந்து – இயல்பின் வந்த விகாரம். கொடு—வளைவு. மேலோன்—மேன்மைத்தன்மை யுடைய வன்.

வினைத்தொன்மையுடனே பெறவேண்டியவர்கள், நீரினுள்ளிருந்து சுவாசமடக்கித் தவம்புரியிற் கருதிய தேவருடனே வெளிப்பட்டு வே ண்டிய தருளுவாராகலின், குச்சகமுனிவர் பொய்கையில் மூழ்கி யமனை ப்புகழ்ந்து நோற்றாரென்பதாம். இத்தவம் இறந்தோரையுயிர்க்கச்செய்

தலையும், பகைவரால் வெல்லப்படாமையையும் பெரும்பாலு முதவுந் தவ மென்க. மகிடாசுரன் துற்காதேவியோடு போராடிக்கொண்டு நிற்கையில் தனது சைனியங்க ளுயிர்பெற்றெழுதலையுந் தான் துற்கைக்குத் தோலா மையையுங் கருதி அமுததீர்த்தத்தின் மூழ்கித் தவம்புரிந்ததும், விருத்தி ராசுரன் தெய்வேந்திரனோடு போராடிக்கொண்டு நிற்கையில், சமுத்தி த்தில் மூழ்கித் தவம்புரிந்ததும்; துரியோதனன் வீமனோடு போரா டிக்கொண்டு நிற்கையில் குளத்தின்கண் மூழ்கித் தவம்புரிந்ததும் இது பற்றியேயாம். மகிடாசுரன் அங்ஙனந் தவம்புரிந்தமையை, "மாகடல்யோ சனைபத்துளபுண்ணியவாவியின்மூழ்கிமறைந்துற்றான்." என்னுஞ் சேதுபு ராணச்செய்யுளானும், விருத்திராசுரன் தவம்புரிந்தமையை, "நீங்குளம் போன்றிருண்ட திணியுடற் கடனஞ்சி—வாங்கிருங் கடலுள்வீழ்ந்தான் ம றைந்தமைநாகமொததான்." என்னுந் திருவிளையாடற்புராணச் செய்யுளா னும், துரியோதனன் தவம்புரிந்தமையை, "ஈண்டுச்சமரினிறந்தோர்களை வருமின்றே—மீண்டுற்டவிக்கவிடுவித்துவிரங்கூறும் – பாண்டுபெயந்தோர்ப டையாவுமடியமோதப-பூண்டுத்தமமாமறைகொண்டகன்பொய்கைபுக்கான்." என்னும் பாரதச்செய்யுளானுமுணர்க. (கககக)

தடம்குபுன லுட்புக்குத்தாளினலுழக்கிச்சாடிப்
படவரவனையசெய்கைப்பருவலித்தடக்கை தன்னு
லிடைதொறுந்துழாவிநின்றவிருந்தவமுனிவற்பற்றிப் [மேற.
பிடர்மிசையேற்றிக்கொண்டுபெரிதுசேண்பெயர்ந்ததன்

(இ—ள்) தடம் மிகுபுனல் உள் புக்கு—(நல்வினைவயத்தா லங்குவந்த யானையானது) அத்தடாகத்தின் நிறைந்த நீரினுள் இறங்கி—தாளினல் உ ழக்கிசாடி—தனது கால்களினற் கலக்கியடித்து, பட அரவு அனைய செய் கை—படத்தையுடைய பாம்புபோன்ற செய்கையமைந்த, பருவலி தடம் கை தன்னல்—மிக்க வலிபொருந்திய பெரிய துதிக்கையினல், இடை தொறும் துழாவி—உள்ளிடங்களெங்கு மாராய்ந்து, நின்ற இரும் தவம் மு னிவன் பற்றி—அந்நீரினுட் டவஞ் செய்துகொண்டிருந்த பெருந் தவத்தை யுடைய குச்சகமுனிவரைப் பிடித்து, பிடர் மிசை ஏற்றிக்கொண்டு—தன து பிடரியின்மேல் வைத்துக்கொண்டு, பெரிது சேண் பெயர்ந்தது—மிக வும் நெடுந்தூரம்போயினது. (எ—று)

அன்றுமேயும்—அசைகள். உழக்கல்—மிதித்தலுமாம். பிடர்—கழுத்தின டி. சேண்—நெடுந்தூரம். துனியைப் படம்போலெடுத்து, மேற்புறத்தை யசைத்து, கண்டோரை யஞ்சச்செய்து, கொல்லு மியல்பையுடையது

திக்கையாகையின், "படவரவனையசெய்கைப்பருவலித்தடக்கை." என்றார், நீருட்புக்குநாளமாராய்தல் யானைக்கியல்பென்க. "கண்ணகன்ற பேர கழியினுழக்கியகரிகள்" என்றார் பிறரும். (௧௧௨)

கோதறுகுணத்தின் மேலாங்குச்சகனென்னுந்தொல்பேர்
மாதவனுணர்ந்து பின்னர் மதகளிறதனை நோக்கி
யீதெனைப்பற்றிச்செல்வதென்கொல்காரணமென்றெண்ணி
யோதியின் வலியாலன்னதூழ்முறையுன்னலுற்றான்.

(இ-ள்) கோது அறு குணத்தின் மேலாம்—குற்றமற்ற நற்குணங்களில் மேலோரான, குச்சகன் என்னும் தொல்பேர் மாதவன் உணர்ந்து—குச்சகரென்கின்ற பழமையான பெயரைப்பெற்ற மகா தவத்தையுடைய முனிவர் (தியானத்திநின்றும்) தெளிந்து, பின்னர் மதகளிறு அதனை நோக்கி—பின்பு (தன்னைக் கொண்டுபோகும்) மதயானையைப் பார்த்து, ஈது எனைபற்றி செல்வது—இந்த யானை என்னைப் பிடித்துக்கொண்டுபோவது, என்கொல் காரணம் என்று எண்ணி—யாதுகாரணமோவென்றாலோசித்து, ஓதியின் வலியால்—ஞானவலியினால், அன்னது ஊழ்முறை உன்னல் உற்றான்—அந்த யானையினது பூர்வகன்மத்தின் முறைமையை சிந்திப்பாராயினர். (எ-று)

கொல்—ஐயம். மதகளிறு—உரிச்சொல்லாகலினியல்பாயிற்று. ஓதியின் வலி—ஞானவல்லபம். உணர்ந்து, நோக்கி, எண்ணி, உன்னலுற்றானென வினையும். ஈண்டெண்ணல், பொதுவகையினும், உன்னல் சிறப்புவகையினும்வந்தன. முற்பிறப்பிற் செய்த வினையே பிற்பிறப்பிற்குக் காரணமாகையாலும், விலங்காய்ப் பிறப்ப திறப்பவுந் தீயவினையேயாகலானும், மாந்தரைக் கண்டுழிக் கொல்லும் விசேடவறிவில்லாத யானை தன்னைப் பிடரில்வைத்துச் செல்லு மற்புதமுண்மையானும், அதற்கோர் விசேடவேதுவுண்டென்பார், "ஈதெனைப்பற்றிச் செல்வ தென்கொல்காரணமென்றெண்ணி" என்றும், அவ்வேதுவையறியவேண்டுமென்பார், "ஓதியின்வலியாலன்னதூழ்முறையுன்னலுற்றான்." என்றுங் கூறினார். முற்பிறப்பின் வினையே வருபிறப்பிற்குக் காரணமென்பதை, "மேலைக்கு வித்துமாகி விளைந்தவையுணவுமாகி—ஞாலத்து வருமாபோல நாஞ்செயும் வினைகளெல்லா—மேலத்தான் பலமாச்செய்யு மிதமகி தங்கட்கெல்லா—மூலத்த தாகியென்றும் வந்திடு முறைமையோடே." என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானுணர்க. ஓதி—ஓதப்படுவது. கக௩)

## வேறு.

மாவதத்தினையிழைத்திடும் பூட்கையின் மதநீர்
காவதத்தினுங் கமழ்தரு கலிங்கநாடதன்பா
லாவதத்தநேர் மாக்கள்வா ழரிபுர மதனிற்
றேவதத்தனென் றுளனொருவணிகரிற் றிலகன்.

(இ-ள்) மாவதத்தினை இழைத்திடும்—பெரிய கொலையைச்செய்கின்ற, பூட்கையின் மதம் நீர்—யானைகளினது மதசலம், காவதத்தினும் கமழ்தரு கலிங்கநாடதன்பால்—ஒரு காததூரமளவும் மணம் வீசிக்கொண்டிருக்கின்ற கலிங்கநாட்டின்கணுள்ள, ஆ அது அத்தம் நேர் மாக்கள் வாழ்—(தெய்வப்பசுவாகிய)" காமதேனுவினது கரத்தை நிகர்த்த (தருமிகளான) மாந்தர்கள் வசிக்கின்ற, அரிபுரம் அதனில்—அரிபுரமென்னும் பட்டினத்தில், தேவதத்தன் என்று ஒரு வணிகரில்திலகன் உளன்—தேவதத்தனென்னும் பெயருள்ள ஒரு வைசியர்குல திலகனிருந்தான். (எ-று)

அத்துக்களிசண்டும்—சாரியை. அதம்—எனப் பிரிப்பினுமாம். அதம்—கொலை. பூட்கை—துவாரமுள்ள கையையுடையது, இரண்டாம் வேற்றுமைத் தொகைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. காதம்—காவதமெனவகரம் விரிந்துநின்றது. காதம்—ஏழரைநாழிகை வழிதூரம். "கலிங்கநாடதன் பாலாவது" என நிறுத்தி, கலிங்கதேயத்தின்கட் பொருந்தியது, எனவும், "அத்தம்நேர் மாக்கள்" செல்வத்தை வைத்திருக்கும் மாக்கள் எனவும், "ஆவ், தத்தம்நேர்" என நிறுத்தி, பொருந்திய கொடையிற் றகுதியுடைய எனவும், பொருள்கொள்ளினும் பொருந்தும். தத்தம்—ஈகை. திலகன்—சிரேட்டன்.

கொடுப்பது கையாகலின், ஆவென்றது "ஆவது அத்தம் நேர்."என்றும், அப்புரத்துறைவோர் வரையாது கொடுக்குங் கொடையாளராகலின், "ஆவது அத்தம் நேர் மாக்கள் வாழ் அரிபுரம்." என்றும் கூறினர். "இருகையுடைக் கற்பகம்போ லினிதளித்து." என்றார் பிறரும்.

வரம்பிகந்த யானைகள் வாசம்பண்ணும்நாடாகலின், "பூட்கையின் மதநீர் காவதத்தினுங் கமழ்தரு கலிங்கநாடு" என நாடு விசேடிக்கப்பட்டது. இதனாற்போலும், இந்நாட்டரசன், யானைப்போரிற் றிறமையுற்று, ஒருமுனையி லாயிரம் யானைகளைக் கொன்றமையின், அவனைக் [illegible] வைத்துக் கலிங்கத்துப்பரணியென்னும் பிரபந்தமுஞ் செய்யப்பட்டது. இது, திரிபு என்னும் சொல்லலங்காரம். இதுமுதலிருபத்தைந்து செய்யுட்கள் கலிநிலைத்துறைகள். (கக௪)

தவத்தினன் னவன்பெறுமகன் றருமதத்தனெனப்
புவிக்கண்மேலவர்புகழ்செயவறம்புரிபுகழோன்
கவற்சியின்றிமூவகைப்பொருளையுங்காண்போ
னுவப்புநீடியவிருநிதிக்கிறையினுமுயர்ந்தோன்.

(இ—ள்) அன்னவன்—அந்தத் தேவதத்தன், தவத்தின் பெறும் மகன்—தவம் புரிந்து (அருமையாகப்) பெற்ற புத்திரன், தருமதத்தன் என—தருமதத்தனென்று விதந்து, புவிக்கண் மேலவர் புகழ்செய—பூவுலகின்கணுள்ள மேலோர்கள் புகழும்படி, அறம்புரி புகழோன்—தருமஞ்செய்கின்ற கீர்த்தியையுடையவன், கவற்சி இன்றி—வருத்தமில்லாமல், மூவகை பொருளையும் காண்போன்—(யோகம், பிரயோகம், கருமம் என்னும்) மூன்று வகைத்தாய பொருளையும் (ஈட்டுதலைச்) செய்பவன், உவப்புநீடிய இருநிதிக்கிறையினும் உயர்ந்தோன்—(செல்வத்தினால்) மகிழ்ச்சி மிக்க (சங்கநிதி, பதுமநிதியென்னும்) இருநிதிக்கதிபனாகிய குபேரனினும் மேற்பட்டவன். (எ—று)

ஏகாரம்—அசை. என, புகழ்செயவென வியையும், "இருநிதிக்கு, இறையினும் உயர்ந்தோன்" எனப் பிரித்து பெருஞ்செல்வத்திற்கு அரசனினும் மேற்பட்டவன் எனக் கண்ணழிப்பதுமொன்று.

"மூவகைப்பொருள்" என்பதற்கு, அறம், பொருள், இன்பம், என்னும் மூன்று பொருளெனப் பொருள்கோடலுமொன்று. ஈண்டுக்காண்டல் செய்தலென்னும்பொருட்டு. யோகம்—வட்டிக்குக்கொடுத்தல், பிரயோகம்—வர்த்தகம்பண்ணல், கருமம்—பயிரிடுதல். இதனை, அமரம்வைசியவருக்கத்துக்காண்க.

தருமங்களைத் தவறுமற் புரிதலி னிவர்க் கப்பெயர் தகுமென மேலோர் கொண்டாடத்தக்க வத்துணைப் பெருந் தரும சீலனென்பார், "தருமதத்தனெனப் புவிக்கண்மேலவர் புகழ்செய வறம்புரி புகழோன்," என்றார். (௧௧)

தந்தையன்னையுமிறத்தலுந்தமியனேயாகிச்
சிந்தைவெந்துயருழந்துபின்னொருவகைதேற
வந்தவேலையினவன்பெருந்திருவினையகற்ற
வந்துதோன்றினன்மனமருள்செய்வதோர்காதி.

(இ—ள்) தந்தை அன்னையும் இறத்தலும்—(அந்தத் தருமதத்தன்) தனது பிதாவும் மாதாவுமிறந்துபோகவும், தமியனே ஆகி—தான் (துணை

யில்லாமல்) தனித்தவனுகி, சிந்தை வெம் துயர் உழந்து—மனத்திற்கொடிய துன்பத்தை யநுபவித்து, பின் ஒரு வகைதேற—பின்பு ஒரு பிரகாரம் மனந்தேறாத லடைந்திருக்க, அந்தவேலையில்—அந்தச்சமயத்தில், அவன் பெரும் திருவினை அகற்ற—அவனுடைய பெருஞ்செல்வத்தை நீக்கும் பொருட்டு. மனம் மருள் செய்வது ஓர் வாதிவந்து தோன்றினன்—மனத்தை மயக்கஞ்செய்வதான ஒரு ரசவாதத்தை யுடையவன் வந்து சேர்ந்தான். (எ—று)

ஏகாரம்—தேற்றம். பிறொருவகை—தொகுத்தல். தந்தை அன்னையும்—செவ்வெண். "செவ்வெணீற்ற தாமெச்சவும்மை" என்பதனுல், உம்மை-இறந்தது தழுவிய எச்சம். செய்வது, என்னுமெச்சம் வாதியென்பதன் பகுதியாகிய வாதத்தோடு முடிந்தது. மருள்—மயக்கம். ரசவாதி—ரசத்தைக் கொண்டு லோகங்களை மாறுதல் செய்பவன். எப்பாலாருடையமனதுக்கும் மயக்கத்தைத் தருவதாகலின், "மனமருள் செய்வதோர்வாதி."என்றூர், அங்ஙனமாகவே தருமதத்தனை, இவன் மருளச்செய்து பொருளைக் கவர்தலெழிதாகுமென்ப தருத்தாபத்தி. (கககூ)

முண்டிதப்படுசென் னியன்றூதுவின்முயங்கு
குண்டலத்தினன கோலநூன் மார்பினனீற்றுப்
புண்டரத்தியனெற்றியன் கஞ்சுகன் புதியோன்
கண்டிகைக்கலன்புனைந்துளான் வேத்திரக்கரத்தோன்.

(இ—ள்) முண்டிதம்படு சென்னியன்— அந்தரசவாதி) மொட்டையாகப் பொருந்திய தலையையுடையவன், தாதுவின் முயங்கு குண்டலத்தினன்—ஐம்பொன்னுற்செய்த காதணியையுடையவன், கோலம் நூல் மார்பினன்—அழகிய பூணூல் தரித்த மார்பையுடையவன், நீற்று புண்டரத்து இயல் நெற்றியன்—விபூதியாலாகிய திரிபுண்டரத்தால் தகுதிபொருந்திய நெற்றியையுடையவன், கஞ்சுகன்—(மேற்)சட்டையையுடையவன், புதியோன்—புதிய தன்மையையுடையவன், கண்டிகை கலன் புனைந்துளோன்—ருத்திராக் கமாலிகாபரணத்தையுடையவன், வேத்திரம் கரத்தோன்—பிரம்பு பிடித்த கையையுடையவன். (எ—று)

கலன்—போலி. முண்டிதம்—மொட்டை. தாது—ஐம்பொன். புண்டரம்—குறி. தாது—பொன்னுமாம். விபூதியாற் றகுதிபெற்ற நெற்றியாகலின்,"நீற்றுப்புண்டரத்தியனெற்றி" என்றூர்."நீறில்லா நெற்றிபாழ்"என்றூரவ்வையாரும்."புதியோன்"என்பது இரட்டுறமொழிதலென்னு முத்தியால், கண்டோர்

க்கற்புதத்தை விளைவிக்கின்றவனெனவும், தருமதத்தனுக்கோர் விருந்தாளி யெனவு மிருபொருள் பயந்துநின்றது. (கஎ)

அவனைக்கண்டன னடிமுறைவணங்கின னருவா
சிவனைக்கண்டன னுமெனப்பெருமகிழ்சிறந்தான்
புவனிக்குள்ளவரென்னினுஞ்சாலவும்புதியர்
தவமிக்கோரிவரென் றுகொண்டுறையுளிற்சார்ந்தான்.

(இ-ள்) அவனை கண்டனன்—(இன்ன கோலத்தையுடைய ரசவாதி யைத் (தருமதத்தன்) கண்டவுடன். முறை அடி வணங்கினன்—முறைப் படி பாதங்களில் வீழ்ந்து கும்பிட்டு, அரு ஆம் சிவனை கண்டனன் ஆம் என—அருவத்திருமேனியையுடையவரான சிவபெருமானை (உருவத்திருமே. னியோடு கண்கூடாகத்) தரிசனஞ் செய்யப்பெற்றவன்போன்று, பெரும் மகிழ் சிறந்தான்—பெருமகிழ்ச்சியில் மேலானவனாய், இவர்—இந்தப்பெரிய வர், புவனிக்கு உள்ளவர் என்னினும்—இந்தப் பூவுலகின்கணுள்ளவராக இருந்தாலும், சாலவும் புதியர்—மிகவு மற்புதமுள்ளவராக இருக்கின்றார், தவம் மிக்கோர்—(அன்றியும்) தவத்தாலும் மேற்பட்டவர், என்று கொண்டு — என்று சிந்தித்து, உறை உளில் சார்ந்தான்—(படிற்றொழுக்கனாகியவனை யழைத்துக்கொண்டு) தனதுவீட்டின்கட் சேர்ந்தனன். (எ—று)

கண்டனன். வணங்கினன். சிறந்தான்—முற்றெச்சங்கள். புவனிக்கு—ஏழனுருபின்றிரிபு, "யாதனுருபிற் கூறிற்றாயினும் பொருள் செல்மருங் கின் வேற்றுமை சாரும்" என்பதுவிதி. கொண்டு- உட்கொண்டு, சிந்தித்து, அரு—அரூபமென்னும் வடமொழிச் சிதைவு. புதியரும், தவமிக்கோரும். சிவ சின்னமாகிய விபூதியுருத்திராக்கத்தைத் தரித்தோரைக் காணி னவரைச் சிவமாகக்கண்டு வெறுப்பின்றித் தரிசிக்கவேண்டுமென்பதை,

"எவரேனுந் தாமாகவிலாட்த்திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி—யுவராதே யவரவரைக் கண்டபோது முகந்தடிமைத் திறகினைந்திங் குவந்துநோக்கி—யவர்தேவரிவர்தேவ ரென்றுசொல்லி யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமேபேணிக்—கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன் றுப்பூர் நடுதறியைக் காணலாமே." என்னுந் திருநாவுக்கரசு சுவாமிகள ருள்வாக்கானுமுணர்க. கண் கூடு—பிரத்தியக்ஷம். கொண்டு—உடன்கொண் டுமாம்.

பொன்னருங்கலந்திருத்துபுகுய்புடைப்புழுக்க
னன்னலம்பெறவருக்கினன்முகமனுரைகின்றான்

பின்னரன்னவன் றனையெதிர்நோக்கினன் பெரியோ
யென்னிவண்வந்ததென் றனன் வணிகருக்கிறைவன்.

(இ-ள்) வணிகருக்கு இறைவன்—வைசியர்குல திலகனாகிய தரும தத்தன், பொன் அரும் கமலம் திருத்துபு—பொன்னாற்செய்த அருமைய ன பரிகலத்தை விளக்கிக் கழுவி, தூய் உடை புழுக்கல்—தாளித்த கறிக ளையுடைய சோற்றை, நல் நலம் பெற அருத்தினன்—நல்ல இனிமை பொ ருந்த வுண்பித்து, முகமலனும் நவின்றான்—சன்மான வார்த்தைகளையுஞ் சொல்லி, பின்னர்—அதன்பின்பு, அன்னவன் தனை எதிர் நோக்கினன்— அந்த வாதியை யெதிரிற்பார்த்து, பெரியோய்—பெரியவரே, இவண் வந் தது என் என்றனன்—(தேவரீர்) இவ்விடத்திற் கெழுந்தருளப்பெற்றது யாதுக்காகவோவென்று வினவினன். (எ-று)

அருத்தினன், நவின்றான், நோக்கினன்—முற்றெச்சங்கள். திருத்துபு, அருத்தி, நவின்று, நோக்கி, என்றனனெனவியையும். பரிகலம்—உண்ணும் பாத்திரம். புழுக்கல்—ஆகுபெயர். "நன்னலம்பெற" என்பதற்கு, மனம கிழ்வு முகமலர்வு, இன்சொல்—என்னும், விருந்தினரை யுபசரிக்கும் மூன் று குணங்களும் பொருந்தவென்பினுமமையும். அருத்தல்—அருந்தலென்ப தன் பிறவினை. (௧௧௯)

ஈசன் றந்திடுவிஞ்சைபொன் றெமக்குளதெவர்க்கும்
பேசுந்தன்மையதன் றதுகுரவர்பாற்பெரிது
நேசம்பூண்டவர்க்குரைப்பதுநெஞ்சினிற்சிறிது
மாசின்றாயநிற்குணர்த்துவனஃதெனவகுத்தான்.

(இ-ள்) ஈசன் தந்திடு விஞ்சை ஒன்று எமக்கு உளது—(அதுகேட் டவாதி, தருமதத்தனை நோக்கி) சிவபெருமான் தந்தருளிச்செய்த வித் தையொன்று நமக்கிருக்கின்றது, அது—அவ்வித்தை, எவர்க்கும் பேசும் தன்மையது அன்று—(சாமானியமாக) எல்லார்க்குஞ் சொல்லத்தக்கதொன் றன்று, குரவர்பால் பெரிதும் நேசம் பூண்டவர்க்கு உரைப்பது—ஆசாரிய ரிடத்து மிக்க பத்தியுடையவர்களுக்கே சொல்லத்தக்கது, நெஞ்சினில் சிறி தும் மாசு இன்றாய நிற்கு—(ஆதலால்) மனதிற்கிஞ்சித்துங் களங்கமில்லாத உனக்கு, அஃது—அதனை, உணர்த்துவன் என வகுத்தான்—சொல்லித் தெரிவிப்பேன் என்று கூறினன். (எ-று)

விஞ்சை. வித்யாவென்னும் வடமொழிச்சிதைவு. குரவர்பால் நேசம் பூண்டவர்—குருமாரிடத்துப் பத்தியுடையவர். (௧௨0)

சாதமேயிது சம்புவின் வந்ததோர் தகைசா
லிரதமுண்டது பொன்னெனச் செய்தனமெமக்கோ
ரரிதுமன்றதுபோல்வன பலவுள வவைதாம்
விரதமாதவரல்லதியார்கொலோ விரும்பார்.

(இ-ள்) இது சாதமே—(நான்கூறும்) இந்த விஷயம் உண்மையே யாம். சம்புவின் வந்தது—சிவபெருமானிடத்து வந்ததான, ஓர் தகை சால் இரதம் உண்டு—ஒரு தகுதிமிக்க இரத மென்னிடத்திருக்கின்றது, அது பொன் என செய் தனம்—அதனை பொன்னாகச் செய்துவிட்டோம், எமக்கு ஓர் அரிதும் அன்று—(இச்செய்கை) நமக்கோரருமையானதுமல்ல, அதுபோல்வன பல உள—அதனைப்போன்றன வின்னு மனேகம் (எம்மிடத்து) இருக்கின்றன, அவைதாம்—அந்த இரசவாதங்களை, விரதம் மாதவர் அல்லது—விருதங்களை யனுட்டிக்கும் மகா தவத்திகளையொழிய, யார் ஓ விரும்பார்— மற்று எவர்தான் விரும்பமாட்டார், (எவரும் விரும்புவரென்றபடி.) (எ-று)

ஏகாரம்—தேற்றம். கொல்—அசை. ஓகாரம்—வியப்பு. யார்—எதிர்மறையில்வந்த வினாவினைக்குறிப்பு. இகரம்—"யவ்வரினிய்யாம்" என்னும் விதியான்வந்த குற்றுகரத்திரிபு. சம்பு—சுகஞ்செய்பவன். செய்தனம், எமக்கு—ஒருமையில்வந்தபன்மை.

சிவபெருமானது வீரியமே பாதரசமாகலின், "சம்புவின்வந்ததோர் தகைசாலிரதமுண்டு." என்றான். "அது பொன்னெனச்செய்தனம்" என்பதற்கு, அதனைப் பொன்னாகச் செய்தோமென்பதும், அதனால், ஏனைய லோகங்களைப் பொன்னாகச்செய்தோமென்பதும் பொருளாம். "விரதமாதவரல்லது யார்கொலோ விரும்பார்" என்பதற்கு, முனிவர்களும் அவரையல்லாத வேனையோர்களுமான ஆர்தான் விரும்பார், எனப் பொருள்கொள்ளினும் பொருந்தும்.

சிவபெருமானது வீரியமாகிய பாதரசம், பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரநாமங்களுடன் நான்குபிரிவுள்ளதென்றும், பிராமணச்சாதி இரசத்தைக்கொண்டு எல்லாப் பொருள்களையும் பொன்னாக்கலாமென்றுங் கூறப்படுவது இரசவாதக்கொள்கை.

கலம்பகமென்னும் பிரபந்தத்தில், புயவகுப்புமுதல், ஊசல் இறுதியான பதினெட்டுறுப்புக்களுள்ளன அவற்றுள் சித்து என்னு மோருறுப்புண்டு, அதன் இலக்கணம், இரசவாதிகள் தமது வல்லமையை ஒருவனுக்குக் கூறுவதாகச் செய்யுளியற்றல் அவ்வாறு புனைந்துரையால்

தமது வல்லமைகளை வெளிப்படுத்தும் வாக்கியங்களை உற்றுநோக்குமிடத்து இயல்பாக ஒருபொருளிருப்பதாக அமைத்தல் முறை. அவ்வாறே இங்கும் இயல்பான தொருபொருளமையக் கூறினன். இஃதடுத்த நான்கு செய்யுள்கட்குமமையும்.

இவ்வாறான வல்லமையால் தான் கூறுவது பொய்யாகாதென்பான், "சரதமேயிது." எனச் சத்தியமிட்டுத் தொடங்கினன். நம், எம் எனத் தன்னை உயர்த்திக் கூறுதலும், உள்ளொன்று புறம்பொன்றாய் வஞ்சித்தலும் இரசவாதிகளுக்கியல்பெனக.

இனி, "சம்புவின் வந்ததோர் தகைசாலிரதமுண்டது பொன்னெனச்செய்தனம்" என்பதற்கு, நாவன்மரத்தினின்றும் வந்த தகுதிமிக்க சாறு உண்டு அதனைப் பொன்னாகச் செய்துவிட்டோம், எனவும், சிவபெருமான்பொருட்டு வந்த ஒருதகுதிமிக்கதேருண்டு அதனைப் பொன்னாகச் செய்துவிட்டோம், எனவும் இருவகைப் பொருள்க டொனிக்கின்றன. இங்கே நாவலென்றது மேருகிரியின் றென்பாலுள்ள நாவலை, அந்நாவற்கனியின் சாறு ஆறாகிப் பெருகி சாம்புநதியெனப் பெயர்பெற்று அக்கிரியைச்சுற்றிச் செல்லாநிற்கும், அச்சாற்றி னனைந்த மணல்கள், சாம்பூநதமென்னும் பொன்னாய்விடுகின்றது, அந்நாவல் தென்றிசைக்கணின்றதனால் இத்தீபத்திற்கு, சம்புத்தீபமென்னுங் காரணப்பெயருமுண்டாயிற்று. இதனை, "பட்டமார்தரு மாகரி யளவெனப் பருத்துக்—கொட்டைநண்ணிய நாவலின் கொழுங்கனிச் சாறு—பெட்டசம்புமா நதியென வலங்கொடு பெருகி—யுட்டெளிந்துபொன் மேருவைச் சுலாயினி தோடும்."

"அதிருமப்புன லருந்தின ரருங்கரையசும்பு—ததையும்வெங்கதிர் காற்றுற வுலர்ந்துகற் சாம்பு—நதமெனும்பொனா மாங்கதி னணிபுனை நலத்தோர்—இதமில்வெம்பிணி நரைதிரை யற்றினி திருப்பார்." எனவரும் பாகவதச்செய்யுட்களானும், "கடிகமழு நாவலொன்று தென்பால்நின்ற காரணத்தாற் பாரதன்றன் கண்டமுற்றும்—இடனுடைய நாவலந்தீ வெனப்பேர்பெற்ற நித்தருவின் றீங்கனிநீ ராறாய்மேருத்—தடவரையைப் புடைசூழ்ந்து வடபாற்சென்று சாம்புநதப்பேர்பெறுமச் சலிலந்துய்த்தோர்—உடன்முழுதும் பொன்மயமா யயுதமேலு மொருமூவாயிரமாண்டங் குறுவரன்றே." எனவரு மண்டகோசப்படலச் செய்யுளானும், "நாவலொடுபெயரியபொலம்புனையவிரிழை." எனவருந் திருமுருகாற்றுப்படையகவலானுமுணர்க. சிவபெருமான் திரிபுரசங்காரஞ் செய்யும்பொழுது கொண்டபூமியையே வீண்டுத் தேரென்றது, பூமி உள்ளே பொன்னையுடைமையால், வசுமதி. வசுந்த

ரா. எனப் பெயர்பெறும். இவற்றையெல்லாந் தான்செய்ததாக நடித்தா னென்பதாம். (௧௨௧)

காரிரும்பையுநாகத்திற்காட்டுதுங்கரிய
சீரிரும்பினைப்பொன்னெனவுரைபெறச்செய்வா
மேருவுங்கயிலாயமுமென்றிருவெற்பை
யாருநோக்கவேகாட்டுதுமிவைநமக்கரிதோ.

(இ-ள்) கார் இரும்பையும் நாகத்தில் காட்டுதும்—கருமையான இரும்பையும் ஈயம்போலச் செய்துகாட்டுவோம், கரிய சீர் இரும்பினை—கருமையான தன்மையையுடைய இரும்பை, பொன் என உரைபெற செய்வாம்—பொன்போல மாற்றுரையமையச் செய்வோம், மேருவும் கயிலாயமும் என்று இரு வெற்பை—பொன்மலையாகிய மேருவும் வெள்ளிமலையாகிய கயிலாயமுமென்று சொல்லப்பட்ட இரண்டு மலைகளை, ஆரும் நோக்கவே காட்டுதும்—எல்லாரும் பார்க்கக் காண்பிப்போம், இவை நமக்கு அரிதோ—இந்தச் செய்கைகள் நமக்கு அருமையானவைகளோ. (அல்ல என்றபடி.) (எ-று)

ஓகாரம்—எதிர்மறை. ஏகாரம்—தேற்றம். என்றிரு—தொகுத்தல் இவையரிது—பன்மையொருமைமயக்கம். "பன்மையிலொருமையும்" என்னும் விதியான் வந்த பால்வழுவமைதி. "காரிரும்பையும் நாகத்திற்காட்டுதும்" என்பதற்கு, இரும்பை ஈயமாகச்செய்வோம், ஈயத்திலிரும்பைச் செய்வோம். இரும்பை துத்தநாகமாகச்செய்வோம், துத்தநாகத்திலிரும்பைச்செய்வோம், என்னும் பல பொருள்க டொனிக்கின்றன. மேருமலையளவு பொன்னையும், கயிலாயமலையளவு வெள்ளியையும், இப்போ இங்குக்காட்டுவேனென்பான், "மேருவுங்கயிலாயமுமென்றிருவெற்பையாருநோக்கவே காட்டுதும்." என்றான்.

இனி, கார் இரும்பையும்—கருமையான பெரிய படத்தையும், நாகத்தின் காட்டுதும்—பாம்பினிடத்துக் காண்பிப்போம், எனவும், கரிய சீர் இரும்பினை—கரிய சீர்பொருந்திய இரும்பை, பொன் என உரைபெற செய்வாம்—பொன்னென்று பெயர்பெறும்படி செய்வோம்; எனவும், மேருவும் கயிலாயமும் என்று இரு வெற்பை—மேருவும் கயிலாயமுமென்று சொல்லப்பட்ட இரண்டு மலைகளையும் வருத்தப்பட்டுக் காணவேண்டுவதில்லை புண்ணியமுடையோரு மஃதில்லாதோருமாகிய வெப்பாலாரும் இலேசாயே காணும்படி காட்டுவோம், எனவும், இன்னும், கார் இரும்பையும் நாகத்தில் காட்டுதும்—கருமைநிறத்தையும் பெரிய பசுமைநிறத்தையும்

ஆகாயத்திற் காண்பிப்போம், எனவும், கரிய—பெரிய. சீர்—சிறப்பமைந்த. இரும்—மகிமைதங்கிய. பிணை—இலக்குமியை. பொன் என உரைபெற செய்வாம்—பொன்னென்று யாவருங் கூறி வழங்கும்படிசெய்வோம், எனவும், மேருவும்—ஓர்வகைக்குப்பியும். கை இல் ஆயமும்—கையிலெடுத்தாடுஞ் சூதாடுகருவியும் ஆகிய இரண்டையும், எல்லாருங் காணக் காட்டுவோம். எனவும். பல பொருள்க டொனிக்கின்றன. நமக் கிஃ தற்பகாரியமென்பான், "இவைநமக்கரிதோ." என்றான். நாகம்—ஈயம், துத்தநாகம்,பாம்பு, ஆகாயம்.

பின்னை—இலக்குமி. பிணை—தொகுத்தல். கை+இல்+ஆயம். கயிலாயம்—போலி. ஆயம்—சூதாடுகருவி. மேரு—ஓர்வகைக்குப்பி. இதனை, "சலனமே னொருகடநற்கரி தனையழைப்பிமுன்னுகமா தங்கமாக்குவ மெய்தராவிடு சந்தமிக்குயர்பணம்வரும், இலகிரும்புதனைப்பொன் வெள்ளியொடேற்றவே முரைகுறைபடா தெடுத்ததாம்பிரமாழைமச்சநும் மிரதவாதமதன்றியிற், பலமருந் தறிவேஞ்சொல்வோ மதிபசியவர்க்குபசரியையா." எனவரு மழகர்கலம்பகச்செய்யுளானுமுணர்க. மேற்செய்யுள்கட்கு மீதொக்கும். (௧௨௨)

எய்துமீயமுமிரதமும்வெள்ளியதெனவே
செய்துமன்றியும்வங்கத்திற்செம்பொனுந்தெரிப்பாம்
நொய்தினன்னதுவலியுறக்காட்டுதுநுவலுங்
கைதவம்பயின்மாக்களுக்கினையனகழறும்.

(இ—ள்) எய்தும்—(நம்மிடத்திற்) கிடைக்கின்ற, ஈயமும் இரதமும்—ஈயத்தையும் இரசத்தையும், வெள்ளி எனவே செய்தும்—வெள்ளியென்று சொல்லும்படியாகவே (சிறிதும் வேற்றுமையின்றி) செய்வோம், அன்றியும்—அதுவல்லாமலும், வங்கத்தில் செம்பொனும் தெரிப்பாம்—அந்த ஈயத்திலிருந்து மாற்றுயர்ந்த பொன்னையுஞ் செய்து காட்டுவோம், நொய்தின் அன்னது—மென்மைத்தன்மையான அப்பொருளை, வலி உற காட்டுதும்—வன்மை பொருந்தச்செய்து காட்டுவோம், நுவலும் கை தவம் பயில் மாக்களுக்கு—(ஆனால், பெரியோர்களால்) இகழ்ந்துபேசுகின்ற வஞ்சனையைப் பழகும் மனிதர்களுக்கு, இனையன கழறும்—இந்த இரசவாதங்களைச் சொல்லமாட்டோம். (எ—று)

ஏகாரம்—தேற்றம். அது—பகுதிப்பொருள்விகுதி, செய்தும், காட்டுதும்—தனித்தன்மைப்பன்மைவினைமுற்றுக்கள். ஈண்டெதிர்காலம். அன்னது—சாதியொருமை. "வங்கத்திற் செம்பொனுந் தெரிப்பாம்" என்பதற்கு,

வெள்ளியிற் பொன்னைக்காட்டுவோம், துத்தநாகத்திற் பொன்னைக்காட்டு வோமெனவும் பொருள்கொள்க. "நொய்தி னன்னது வலியுறக்காட்டுதும்" என்பதற்கு, (சாலவித்தைகளினால் தோன்றும் பொருள்கள் விரைவி லழிந்து கட்புலனுக்குத் தோற்றா தொழிந்துவிடுதல்போலாகாது) விரைவி லொன்றை யொன்றாக மாறு மப்பொருள்களை நிலைத்திருக்கும்படி செய் வோம், எனப் பொருள்கொள்ளினும் பொருந்தும்.

அம்மேனைய வாதிகளைத் தாழ்த்தித் தன்னை யுயர்த்திக் கூறியவா றும். தன்னைச் சிறிது மயிராது நம்புமாறு, நீயே வஞ்சனையற்ற குருபத் திமானென் றுயர்த்திக் கூறுவான், "கைதவம்பயின்மாக்களுக்கினையனகழு றும்." என்றான்.

இனி, ஈயமுமிரதமும் வெள்ளியதெனவே செய்தும்" என்பதற்கு, ஈயத்தையு மிரதத்தையும் வெண்மையாகச்செய்வோம், எனவும், "வங்கத் திற் செம்பொனுந் தெரிப்பாம்" என்பதற்கு மரக்கலத்திற் பொன்னிருக் கச் செய்மோம், எனவும், "நொய்தினன்னது வலியுறக்காட்டுதும்" என் பதற்கு, இளகியிருப்பதை யிறுகியிருக்கச்செய்வோம், எனவும், "கைத வம்பயின்மாக்களுக் கினையனகழுறும்" என்பதற்கு, கபடமான மனிதர்க ளுக் கிந்தச் சாலவித்தைகளைக் கூறுகின் நம்பவேமாட்டார், கபடமில்லா த வுன்னைப்போன்றவர்களே நம்புவார்கள். எனவும் பொருள்படுமனிக் கின்றன. (கஉ௬)

இரும்பினிற்செம்புவாங்குவமீயமுமற்றே
வரம்பிலாதவோர்தரணியண்டங்களைமரபி
னரும்பொன்வண்ணமதாக்குவம்வல்லவாறனைய
விரும்பினுமெனின்யாண்டுமோரளப்பிலவேண்டும்.

(இ-ள்) இரும்பினில் செம்பு வாங்குவம்—இரும்பிலிருந்து செம்பை யெடுப்போம், ஈயமும் அற்றே—ஈயத்திலிருந்து மப்படியே, (செம்புண்டாக் குவமென்றபடி) வரம்பு இலாத ஓர் தரணி அண்டங்களை—அளவில்லாத வொப்பற்ற பிருதுவிக்கணுள்ள அண்டங்களை, மரபின்—முறையே. அரும் பொன் வண்ணம் ஆக்குவம்—அருமையான பொன்மயமாகச் செய்வோம், வல்ல ஆறு அனைய் விரும்பினும் எனின்—(இன்னும்) நாம் வல்லபடியை யெல்லாம் சொல்லவேண்டுமென்று விரும்பினோமென்றால், அளப்பு இல யா ண்டும் வேண்டும்—அளவில்லாத வருடங்களும் வேண்டியிருக்கும். (எ-று)

ஏகாரம்—தேற்றம். து, ஓர்—சாரியைகள். அது—பகுதிப்பொருள்விகுதி. உம்மை—உயர்வு சிறப்பு. வாங்குதல்—எடுத்தலென்னும் பொருட்டு. "யாண்டுமோரளப்பிலவேண்டு"மென்றது தற்புகழ்ச்சி. கற்ற வித்தையை முற்ற முடியச்செய்யப்புகின், ஊழிசெல்லினும் முடியாதென்பான். "வல்லவாறறைய விரும்பினுமெனின் யாண்டுமோரளப்பில வேண்டும்" என்றான்.

இனி, "இரும்பினிற் செம்புவாங்குவம்" என்பதற்கு, பண்டமாற்றலாக, இரும்பைக்கொடுத்துச் செம்பைவாங்குவோம், எனவும், "ஈயமுமற்றே" ஈயத்தையு மப்படியே வாங்குவம், எனவும், உள்ளுறைப்பொருள்கள் பலதொனிக்கின்றன. "தரணியண்ட"மென்றார். பிருதுவியண்டமென்பது போதரா. பிருதுவி—மண். (கஉச)

ஒன்றுகோடிபொன்னுக்குவங்கோடியதுளதேற்
குன்றுபோலவேகோடியிற்கோடிசெய்குவமா
னின்றனக்குளபொருளெலாந்தருதியேனினது
மன்றன்மாளிகைநிதிக்கிடமில்லெனவகுப்பாம்.

(இ—ள்) ஒன்று—ஒருபொன்னை, கோடிபொன் ஆக்குவம்—கோடி பொன்னாகச் செய்வோம், கோடி அது உளதேல்—கோடி பொன் உண்டேயாயின், குன்றுபோலவே—மலைபோலாகும்படி. கோடியின் கோடி செய்குவம்—மகாகோடி பொன்னாகச்செய்வோம், நின் தனக்கு உள பொருள் எலாம் தருதி எல்—உனக்குள்ள பொருள்கள் முழுதையுந் தருவாயாயின், நினது மன்றல் மாளிகை—உனது மங்கலத்தன்மையான வீடு, நிதிக்கு இடம் இல் என—திரவியம் வைப்பதற்கு இடமில்லையென்று சொல்லுமாறு, வகுப்பாம்—பொலியச்செய்வோம். (எ—று)

ஆல்—அசை. ஒன்று, கோடி—ஆகுபெயர்கள். ஏகாரம்—தேற்றம். கோடியின்கோடி—கோடியாற் பெருக்கிய கோடி.

முதன்முதல் ஒருகோடி பொன்னை யீட்டுவேன், அஃதீட்டியவிடத்து, பின்னர் அவற்றை மகாகோடியாக வீட்டுவேன், என்பதுமே லிரண்டடிகளுக்கும், உன்னுடைய பொருள்கள் முழுதையுந் தந்துவிடுவையாயின், திரவியம் வைப்பதற் கிடமில்லாம லிருக்கு முன்னது வீட்டை இம்மியளவுந் திரவியமில்லாத வெறுமையான வீடாக்கிவிடுவேனென்பது, மூன்றும் நாலாமடிகளுக்கு முள்ளுறைப்பொருள்களென்க. (கஉரு)

என்னவேமொழிசோரனை வணங்கினனிகமப்பின்
முன்னருள்ளதுந்தான்றனதுரிமையான்முயலப்

பின்னரெய்தியநிதியமும்பேழையானவற்றின்
மன்னுபூண்களுங்கொணர்ந்தனன்முன்புறவைத்தான்.

(இ—ள்) என்ன மொழி சோரனை—என்று (உள்ளொன்று புறம் பொன்றாக வஞ்சித்து) சொன்ன திருடனாகிய ரசவாதியை, வணங்கினன்—(தருமதத்தன்) நமஸ்காரம்பண்ணி, இமைப்பின்—அதி சீக்கிரத்தின், முன்னம் உள்ளதும்—(தனது தந்தை மூதாதையரால் சம்பாதிக்கப்பட்டு) முன்தொட்டிருந்த திரவியங்களையும், தான் தனது உரிமையின் முயல—தான் தனது வாணிகம்முதலான சுதந்தரங்களால் முயற்சிக்க, பின்னர் எய்திய நிதியமும்—பின்பு கிடைத்த திரவியங்களையும், பேழை ஆனவற்றின் மன்னு பூண்களும்—பெட்டிகளிலிருக்கும் ஆபரணங்களையும், கொணர்ந்தனன் முன்பு உற வைத்தான்—கொண்டுவந்து (ரசவாதியின்) முன்பாகப் பொருந்த வைத்தான். (எ—று)

எகாரம்—அசை. வணங்கினன், கொணர்ந்தனன்—முற்றெச்சங்கள். சோரன்—கள்வன், படிற்றொழுக்கன். நிதியம். அம்—சாரியை. முன்னமுள்ளது—பிதிரார்ச்சிதபொருள், பின்னரெய்திய நிதியம்—சுயார்ச்சிதப்பொருள் வர்த்தகம், வட்டிக்குக்கொடுத்தல், பயிரிடுதல் என்னும் முத்தொழிலானுந் தானீட்டிய பொருளாகலின், "தனதுரிமையின் முயலப்பின்னரெய்தியநிதியமும்." என்றார். (௧௨௬)

வைத்தமாநிதிநோக்கலுமவணிகர்திலக
ருய்த்தசெல்வமுமிதுகொலோவோவெனவுரையாக்
கைத்தலங்கொடுகைத்தலம்புடைத்துடுக்கணங்க
ணத்தவேலையிலொருங்குபட்டாலெனநகைத்தான்.

(இ—ள்) வைத்தமாநிதி நோக்கலும்—(அவ்வாறு) வைக்கப்பட்ட பெருந் திரவியத்தைப் பார்த்தவுடனே, ஓ வணிகரில் திலகர் உய்த்த செல்வமும் இது ஓ என உரையா—(ரசவாதி) ஓகோ! வைசியர்களிற் சிரேட்டரானவர் சம்பாதித்த திரவியமு மிதுதானோவென்று (களினமாகச்) சொல்லி, கைத்தலம் கொடு கைத்தலம் புடைத்து—ஒரு கையைக்கொண்டு மற்றைக்கையில் தட்டி, நத்தம் வேலையில்—இராக்காலத்தில், உடுகணங்கள் ஒருங்குபட்டால் என—நட்சத்திரக்கூட்டங்க ளொருங்குசேர்ந்தாற்போல, நகைத்தான்—(பற்கள்தோன்றச்) சிரித்தான். (எ—று)

கொல்—அசை. ஓ—இகழ்ச்சிக்குறிப்பு. நோக்கலும், உரையா, நகைத்தானெனவியையும். அர்-இழித்தற்கண்வந்தது. நத்தம்—இரா. தருமதத்தனிடத்துள்ள திரவியம் முழுதையும் பற்றறக் கவருங் கருத்துடையனாய், பெ

ருந் திரவியங்களைக் கண்டு களித்தவன்போன்று, நாடகமாத்திரையாக, இழித்தற்கணார்விகுதி கொடுத்து. "வணிகர்" என்றும், தனபதிகளாக வுள்ளவர் வைசியர்களாகவும் அவருள்ளும் சிரேட்டராகவுள்ளவர் பெருந் திரவியமுள்ளவ ரன்றோவென்பான், "வணிகரிற் றிலகருய்த்த செல்வமு மிதுகொலோவோவெனவுரையா" என்றும், வைசியர்சிகாமணியி னிச்செல்வம் பெருஞ் சிரிப்புக்கிடமென்பான், "கைத்தலங்கொடு கைத்தலம்புடைத்துக் கணங்க-ணத்தவேலையி லொருங்குபட்டாலென நகைத்தான்" என்றும் கூறினார். (௧௨௭)

இந்தநின்பொருணம்முடைவிஞ்சையிலிறைக்கும்
வந்திடாதுநாமுருக்குறுமுகந்தனில்வழுவிச்
சிந்துகின்றதற்கிலையிதுநமதுபின்றிரியி
னந்தமில்பொருள்கொடுக்குவம்வைத்தியென்றறைந்தான்.

(இ-ள்) நின் இந்த பொருள்—(வைசியர்திலகனே) உனது இந்தப் பொருள்கள், நம் உடை விஞ்சை இல் இறைக்கும் வந்திடாது—நமது வித்தையில் அணுவளவுக்கும் போதாது, இது—இப்பொருள்கள், நாம் உருக்குறும் முகம் தனில் வழுவி சிந்துகின்றதற்கு இலை—நாம் (வழக்கமாக) உருக்குகின்ற உலைமுகத்தில் தவறிச் சிந்திப்போகின்ற அவ்வளவிற்குமில்லை, நமது பின் திரியின்—(நீ சும்மா) எமது பின்னால் திரிகுவாயானால், அந்தம் இல் பொருள் கொடுக்குவம்—அளவில்லாத பொருளை (நாமே யுனக்குக்) கொடுப்போம், வைத்தி என்று அறைந்தான்—(ஆகையா லிப்பொருளை நீதானே) வைத்துக்கொள் என்று கூறினான். (எ-று)

உடைய. என்னு மாறாம்வேற்றுமைச்சொல்லுருபுதொகுத்தல். இலை—தொகுத்தல். இது—தொகுதியொருமை. முகம்—முன்மொழிகெட்ட பின்மொழி. கொடுக்குவம்—கு-சாரியை. "வைத்தி" என்பதற்கு நாம் தருகின்ற பொருளையே வைத்துக்கொளென்பினுமமையும். (௧௨௮)

முனியலையநீவேண்டியபெருநிதிமுழுது
மினிதினாடியேகொணருவனிருத்தியென்றுரைத்துப்
புனையுமாடையுநிலங்களுமணிகளும்பூணு
மனையுமாக்களும்பகர்ந்தனனிகரிலாவணிகன்.

(இ-ள்) ஐயமுனியல்—சுவாமீ! கோபங்கொள்ளவேண்டாம், நீ வேண்டிய பெரும் நிதி முழுதும்—தேவரீர் விரும்பிய பெருந் திரவியம்முழுதும், இனிதின் நாடியே கொணருவன்—சந்தோஷமாகத் தேடிக்கொண்டு வருவேன், இருத்தி என்று உரைத்து—இவ்விடத்திற்றானே யிருப்பீராக

வென்று சொல்லிக்கொண்டுபோய், நிகர் இலா வணிகன்—(பிறர்) ஒப்பில்லாத வைசியனாகிய தருமதத்தன், புனையும் ஆடையும்—உடுத்திக்கொள்ளுகின்ற வஸ்திரங்களையும், நிலங்களும்—பூமிகளையும், மணிகளும்—ரத்தினங்களையும், பூணுடை—ஆபரணங்களையும், மனையும்—வீடுகளையும், மாக்களும்—மாக்களையும், பகர்ந்தனன்—விற்றான். (எ—று)

பகர்த்தல்—விற்றல். பூணும் அணியெனமாற்றி அணிகின்ற ஆபரணமெனப் பொருள்கொள்ளினும், ஆக்களும் எனப் பிரித்துப் பசுக்களையுமெனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். மாக்கள், என்றது ஆடு மாடு குதிரை ஒட்டகங்கழுதை, அடிமையாட்களையென்க. (கஉக)

பொருமதத்தினையிழைத்திடுமருப்புயர்புழைக்கைப்
பெருமதக்கரியென்னவேமயங்கினன்பெரிதும்
வருமதத்தமென்றறத்தையும்பகர்ந்துமெய்வணிகன்
றருமதத்தனும்பெயரினைநிறுவினன்றரைமேல்.

(இ—ள்) மெய்வணிகன்—உண்மையுள்ள வைசியனாகிய அத் தருமதத்தன், பொரும் அதத்தினை இழைத்திடும்—போர்புரிதலாகிய கேட்டைச்செய்யும், உயர் மருப்பு புழைக்கை பெரும் மதகரி என்ன—உயர்ந்த கோட்டையும் துளைபொருந்திய கையையுமுடைய பெரிய மதயானையைப்போல, மயங்கினன்— மயக்கமடைந்து, அத்தம் பெரிதும் வரும் என்று—திரவிய மதிகமாக வருமென்று நினைந்து, அறத்தையும் பகர்ந்து—தருமச்சொத்துக்களையும் விற்று, தரைமேல்—பூமியின்கண், தருமதத்தன் ஆம் பெயரினை நிறுவினன்—தருமதத்தனென்னும் தனது பெயரை (அழியாமல் எக்காலத்தும்) நிலைநிறுத்தினான். (எ—று)

ஏகாரம்—தேற்றம், அது-பகுதிப்பொருள்விகுதி, பெரிதும் மயங்கினனென்பினுமமையும், அதம்—கொலையுமாம். அறம்—ஆகுபெயர், ஈண்டு, "தருமதத்தன்" என்றது தருமத்தைத் தத்தஞ்செய்தவனென்னும் பொருட்டு, தத்தம்—கொடுத்தல். பிராமணருக்கு, சர்ம, என்பதும், க்ஷத்திரியருக்கு, வர்ம, என்பதும், வைசியருக்கு, குப்த, என்பதும், சூத்திரருக்கு, தாஸ, என்பதும், வழக்கமான பெயர்களாயினும், "தத்த" என்பதும் வைசியர் சூத்திருக்கு வழங்கும் பெயரேயாம், மேலே இவன்றந்தையைத் "தேவதத்தன்" என்றதுமிது. "தருமதத்தன்" என்றார். மதகரிபோல் மதத்தையுடையவனெனவும், தருமத்தைக் கொடுத்தவனெனவு மிருபொருள்பட.

* தனக்காகிய விடுகுறிமாத்திரையாக விருந்த "தருமதத்தன்" என்னும் பெயரை இப்பொழுதிக் காரணப்பெயராக்கி உலகமுள்ளளவரையு மழி

யாமல் வைத்தானாகலின், "தருமதத்தனும் பெயரினை நிறுவினன் றனை மேல்" என்றார். இச்செய்யுள் பிரிநிலைநவிற்சியணியும், திரிபு என்னும் சொல்லணியுமாம். (௧௩௦)

இத்திறத்தினிற்றேடியபெருநிதியனைத்துங்
கைத்தலங்கொடுதாங்கியேகரவன்முன்காண
வைத்துநிற்றலுமகிழ்ந்தனனவையெலாம்வாங்கி
மொய்த்தசெங்கனற்றீயிடையுருக்குதன்முயன்றான்.

(இ-ள்) இ திறத்தினில் தேடிய—இவ்வண்ணமாகச் சேர்த்த, பெரும் நிதி அனைத்தும்—பெருந் திரவியங்கள் முழுமையும், கைத்தலங்கொடு தாங்கியே—தனது கைகளினால் எடுத்துக்கொண்டு (சென்று) கரவன் முன் காணவைத்து நிற்றலும்—வஞ்சகனாகிய இரசவாதிக்கு முன்பாக அவன் பார்க்கும்படிவைத்துவிட்டு (தருமதத்தன்) நிற்கவும், மகிழ்ந்தனன்—(ரசவாதி) களிப்படைந்து, அவை எலாம் வாங்கி—அவற்றையெல்லாம் வாங்கிக்கொண்டு, மொய்த்த செம் கனல் தீ இடை—நெருங்கிய சிவந்த சுவாலைகளையுடைய அக்கினியின்கண், உருக்குதல் முயன்றான்—உருக்குதலைச் செய்வானாயினன். (எ-று)

ஏகாரம்—தேற்றம். மகிழ்ந்தனன்—முற்றெச்சம். எலாம்—தொகுத்தல் கரவு—களவு, வஞ்சனை. செங்கனல்—சாதியடை.

வணிகனிடத்துள்ள திரவியமெஞ்சாது முழுதும் வந்துவிட்டமையாலும், அவை தனக்குப் போதுமாக விருத்தலாலும், "மகிழ்ந்தனன்வாங்கி" என்றார். (௧௩௧)

திரட்டியாவையுமோருருவாக்கினன்செழும்பொ
னிரட்டிதூக்கியவிரதமாங்கொருசிலையிட்டு
மருட்டியாடகமுழுவதுமுரைத்தவைவலிதா
வுருட்டிமட்பெருங்குகையினின்மருந்தையுள்ளுறுத்தான்.

(இ-ள்) யாவையும் திரட்டி ஓர் உரு ஆக்கினன்—அந்தப் பொன்முழுதையும் (உருக்கி) திரட்டி ஒரு உருண்டையாகச் செய்து, செழும் பொன் இரட்டி தூக்கிய இரதம்—அந்த மிக்க பொன்னிரண்டு மடங்கு நிறுத்த ரசத்தை, ஆங்கு ஒரு சிலை இட்டு—அவ்விடத்திலொரு (அம்மிக்) கல்லின்கண் விட்டு, மருட்டி ஆடகம் முழுவதும் உரைத்து—(அவ்விரசத்தோடு) கலந்து பொன்முழுவதையு மரைத்து, அவை வலிதா உருட்டி—அவற்றை வன்மையாக உருண்டைசெய்து, மண் பெரும் குகையினில் ம

ருந்தை உள் உறுத்தான்—மண்ணுற்செய்த பெரிய ஒரு மூசையின்கண் (த ன்னிடத்திருந்த) மருந்தை யுள்ளேயிட்டான். (எ—று)

உருவாக்கினன்—முற்றெச்சம். இரட்டி—இரண்டு மடங்கு. பொன் ஒரு பங்கும் இரதம் இரண்டு பங்குமாம். சிலை—கலுவம். மருட்டி, என்பதற்கு தருமதத்தனை, மயக்கியென்பினும் பொருந்தும். மருந்து ரசகுளிகை.

பொன்னை யிரதத்தோடு கலந்துண்டைசெய்து கொண்டு, மூசைக்குள் ரசகுளிகையிட்டானென்பது கருத்து. (௧௩௨)

பண்ணுறுத்திய கனகமுள்ளிட்டதன் பாலு
மெண்ணுறுத்தியமிசைக்கணுங்களங்கமொன்றிட்டு
மண்ணுறுத்திநற்றுகில்கொடுபொதிந்தனன் மருங்கிற்
கண்ணுறுத்தியசெந்தழற்புடைமிசைகரந்தான்.

(இ—ள்) பண் உறுத்திய கனகம் உள் இட்டு— (ரசத்தோடு கலந்து) பக்குவஞ்செய்த பொன்னுருண்டையை (அம் மூசையின்) உள்ளேவைத்து, அதன் பாலும்—அவ்வுருண்டையின் பக்கங்களினும், எண் உறுத்திய மிசைக்கணும்—உறுதிப்படுத்திய மேலிடத்தினும், களங்கம் ஒன்று இட்டு—ஒவ்வொரு இரசக்குளிகைகளை வைத்து, மண் உறுத்திய நல் துகில் கொடு பொதிந்தனன்—மண் தடவிய நல்ல சீலையைக்கொண்டு மூடி (மண்சீலைசெய்து) மருங்கின்கண் உறுத்திய—பக்கத்தின்கண் மூட்டிய, செம் தழல் புடை மிசை கரந்தான்—சிவந்த அக்கினியினால் (அதன்) பக்கங்களையும் மேற்புறத்தையும் மறைத்தான். (எ—று)

களங்கு—இரசக்குளிகை. களங்கம்—போலி. பொதிந்தனன்—முற்றெச்சம். "செந்தழற் புடமிசைக் கரந்தான்" என்பதும் பாடமாயின். சிவந்த அக்கினியிற் புடம்வைத்து மேலே மூடினனென்பது பொருள். மண்சீலை செய்தல், மூசையைச் சீலையால் மூடி மேலெழுழுதும் மண்ணப்புதல். மூசையின்வாயோடு பொருந்த உள்ளேவைத்துத் திடப்படுத்தினமையின், "எண்ணுறுத்திய மிசைக்கண்" என்றார். "மருங்கிற்கண்" இயல்பின்வந்த விகாரம்.

பொன்னுருண்டையை மூசையுள்வைத்து பக்கங்களினும் மேற்புறத்தும் இரசக்குளிகைகளையிட்டு சீலைமண்செய்து புடம்வைத்தானென்பது கருத்து. (௧௩௩)

நூற்றுநான்கொடுநான் குருக்குடபுடநோய்தின்
விற்றுவிற்றதாகிட்டதுநோக்கினன்மிகவு

மாற்றுவந்ததுபழுக்குமோர்வராகியின்மருளேல்
காற்றிலாததோருறையுள்காட்டென்றனன்கரவன்

(இ-ள்) கரவன்—வஞ்சகனன இரசவாதி, நொய்தின்—சீக்கிரத்தில், வீற்று வீற்று ஆ—தனித்தனியாக (ஒன்றன்பின் ஒன்ருக) நூற்று நான்கு ஒடு நான்கு குக்குடபுடம்—நூற்றெட்டுத்தரம் கோழிப்புடத்தை, இட்டு—வைத்து, அது நோக்கினன்—அப்பொன்னை (எடுத்துப்)பார்த்து, மிகவும் மாற்று வந்தது—மிகவும் மாற்று வந்து விட்டது, ஓர் வராகியின் பழுக்கும்—(இனி) ஒருவராகிப்புகையினுல் பழுப்பும் வந்துவிடும், மருளேல்—(என்னவுறய் முடியுமென்று, நீ) மயங்கவேண்டாம், காற்று இலாதது ஓர் உறையுள் காட்டு என்றனன்—காற்றுப் பிரவேசியாததான ஒரு வீட்டை காண்பியென்று (தருமதத்தனைக்) கேட்டனன். (எ-று)

நோக்கினன்-முற்றெச்சம். வராகி-வராகிப்புகை. குக்குடபுடம்-ஒரு தரத்துக் கோழியளவினதாக எருமுட்டைகளை யடுக்கி யதனுள்வைத்துச் சுடுவது. குக்குடம்-கோழி. புடம்-பொன்முதலானவற்றினறவைப்பு.

புடமிடுவது மாற்றேறும்பொருட்டாகலின், நூற்றெட்டுக் குக்குடபுடங்களை வேறு வேறு வைக்கவே மாற்றேறிவிட்டமையின், "மாற்று வந்தது" என்றும், வராகிப்புகை யிட்டாலன்றிப் பழுப்பேருமையின், "ஒரு வராகியின் பழுக்கும்" என்றும், நமக்கிது கைவந்தது ஐயங்கொண்டு வருத்தப்படவேண்டாமென்பான், "மருளேல்" என்றும், காற்றுப்படின் பழுப்பேருதென்பான், "காற்றிலாததோ ருறையுள் காட்டு" என்றுங் கூறினன். (ககச)

சேமஞ்செய்ததோருறையுளைக்காட்டலுஞ்சென்று
வாமஞ்செய்ததோரிந்தனக்குவான்மிசைமறவோ
ரீமஞ்செய்தசெந்தழற்கொடுவராகிமேலிட்டுத்
தாமஞ்செய்தனைடங்கியுமவனைதிர்துரந்தான்.

(இ-ள்) சேமம் செய்தது ஓர் உறையுளை காட்டலும்—(காற்றுப்புகாது) காவல் செய்யப்பட்டதான ஒரு வீட்டைக் காட்டவும், சென்று—(இரசவாதி) அதனுட்போய், வாமம் செய்தது ஓர் இந்தனம் குவால்மிசை—சிறிய துண்டுகளாகச் செய்தடுக்கப்பட்டதான ஒரு விறகுக்குவியலின்மேல், மறவோர் ஈமம்செய்த—புலைஞர்கள் சுடலையில் மூட்டிய, செம் தழல் கொடு—சிவந்த அக்கினியைக் கொண்டுவந்து கொளுத்தி, வராகிமேல் இட்டு தாமம் செய்தனன்—வராகிப்பொடியை மேலே தூவி புகையச்செய்தனன், அங்

கியும் அவன் எதிர் தூரந்தான்—(அப்போது) அக்கினியும் அத்தருமதத்தனை முன்னிலையில் தொடர்ந்தனன், (எ-று)

உம்மை—இறந்தது தழுவியவெச்சவும்மை. மேலும் ஈண்டும் உறையுள் என்றது மூடுசாத்திட்ட அறைவீட்டை. வாமம்—குறுமை, அழகுமாம். மறவோர்—புலைஞர், பிணஞ் சுடுபவ ரவராகலின். "மறவோரீமஞ்செய்த" என்பதற்கு வீரர்களுடலை மயானத்தெரித்த, எனப பொருள்கொள்வாருமுளர். அது, அப்பொழுதைக்கு நிச்சயமின்மையின் கருத்தாகாது. சுடலை அக்கினியைக்கொண்டு வாரிபபுகையிடுதல் ரசவாதவழக்கு.

திரவியத்தைக் கவருமாறு ரசவாதியே மாத்தித் தொடர்ந்தமைபோல, அக்கினியும் சுவாலித்துத் தருமதத்தனை வெதுப்பிக் காய்ந்தமையின், எச்சவும்மைகொடுத்து, "அங்கியுமவனெதிர் தூரந்தான்." என்றார்.

"அங்கி தூரந்தான்."என்றது. "இசைத்தலுமுரியவேறிடத்தான்"என்னும் விதிபற்றி. (கஅ)

ஓங்கிநாட்டநீர்பொழிதரவாருயிருலைய
வீங்குகின்றமெய்வெதும்புறவெங்ஙனும்வியர்ப்ப
மூங்கையாமெனமொழிகிலான்போவதுமுயலான்
பாங்கிருந்திடுவணிகர்கோன்பட்டதார்பகர்வார்.

(இ-ள்) நாட்டம் நீர் ஓங்கி பொழிதர—கண்களிலிருந்தும் நீரானது மிகுதியாகச் சொரியவும், ஆர் உயிர் உலைய—அருமையான உயிர் வருத்தமுறவும், வீங்குகின்ற மெய் வெதும்புற—பூரிக்கின்ற தேகம் வாட்டமடையவும், எங்கணும் வியர்ப்ப— அத்தேகம்முழுதும் வெயர்வை கொள்ளவும், பாங்கு இருந்திடு வணிகர்கோன்—பாகத்திலிருந்த வைசியர்திலகனை தருமதத்தன், மூங்கை என மொழிகிலான்—ஊமைபோல ஒன்றும் பேசாதவனும், போவதும்முயலான் (அந்தவிடத்தைவிட்டப்பால்)போவதற்கும் முயலாதவனும், பட்டது பகர்வார் ஆர்—பட்ட வருத்தத்தை (இவ்வளவிற்றென்று) சொல்பவர் யாவர். (ஒருவருமிலரென்றபடி) (எ-று)

ஆம்—அசை. ஆர்—எதிர்மறை வினைவினைக்குறிப்பு. மூங்கை—மூகவென்னும் வடமொழிச்சிதைவு. காற்றுப்புகாத அறைவீட்டினுள் புகையும், சுவாலையும் சுலாவுதலால், "நாட்டநீர் பொழிதர, ஆருயிருலைய, மெய்வெதும்புற, எங்ஙனும் வியர்ப்ப."என்றும், பேசுகின், வாதியின் மனதிற்கு வருத்தமும், பழுப்பேற்றுதலாகிய கருமத்திற்கு இடையூறும் நேரிடும்போலுமென்றெண்ணியிருந்தானாகலின், "மூங்கையாமென மொழிகிலான்" என்றும், தனது திரவியத்தை விட்டப்புறம்போதற்கு மனமொருப்படாமை

யின், "போவது முயலான்" என்றும், இவைகளா லவனடைந்த ஆபத்துக்கோர் முடிவில்லையாகலின், "வணிகர்கோன் பட்டதார் பகர்வார்." என்றுங் கூறினர். (ககசு)

ஏல்லையன்னதிற்பொதிந்திடுபொற்குகையொடுத்து
மெல்லெனத்தனதாடையிற்கரந்தனன்வெய்யோன்
வல்லையக்குகைபோலவொன்றிருந்தது மருங்கிற்
செல்லவைத்தனனுந் தழற்பெரும்புகையையுந்தீர்த்தான்.

(இ-ள்) அன்னது எல்லை இல்—(தருமதத்தனுபத்தடைகின்ற) அந்தச்சமயத்தில், வெய்யோன்—கொடியவனான ரசவாதி, பொதிந்திடு பொன்குகை எடுத்து—(மண்சிலையினால்) பொதியப்பட்டபொன்னை வைத்த மூசையை யெடுத்து, மெல்லென தனது ஆடையில் கரந்தனன்—மெல்லவாகத் தன்னுடைய வஸ்திரத்தினுள் மறைத்துவைத்து விட்டு, வல்லை—(உடனே) அதிசீக்கிரமாக, அ குகைபோல ஒன்று இருந்தது—அந்த மூசையைப்போல வேறொரு மூசையொன்று (தன்னிடத்தி)லிருந்தது, மருங்கில் செல்ல வைத்தனன்—(அந்த மூசையைப்)பக்கத்தில் பொருந்த வைத்துவிட்டு, தழல்பெரும் புகையையும் தீர்த்தான்—அந்த அக்கினியின் மிக்க புகையையுந் தணித்துவிட்டான். (எ-று)

கரந்தனன், வைத்தனன்-முற்றெச்சங்கள். உம்மை-இறந்தது தழுவிய எச்சம். மெல்லென-மந்தக்குறிப்பு. பொன்னைத் தீர்த்ததோடு புகையைத் தீர்த்தானென்பார், எச்சவும்மை கொடுத்து, "புகையையுந் தீர்த்தான்" என்றார். தீர்த்தல்-என்பது, இரட்டுற மொழிதலென்னு முத்தியால் நீக்குதல், தணித்தலென்னு மிருபொருள் பயந்து நின்றது.

வாரிப்புகையினால், தருமதத்தனை ஆபத்துறுவித் தெமாத்திப் பொற்குகையை மறைவிடஞ் செய்துகொண்டு, அதற்கீடாக இரும்புக்குகையொன்றைத் தன்பக்கத்திலெடுத்து வைத்துவிட்டுப் புகையைத் தணித்தானென்பதாம். (ககஎ)

தத்தவிக்குகைநின்கையிற்றாங்கிளை தழன்மேல்
வைத்தியென்றனனவனதுபுரிதலுமாயி
னத்தருஞ்செயற்குரியனயாவை:புமமைத்து
வித்தகம்பெறச்சேமியாவொருசெயல்விதித்தான்.

(இ-ள்) தத்த—தருமதத்தனே! இ குகை—இந்த மூசையை, நின் கையில் தாங்கினை தழல்மேல் வைத்தி என்றனன்—உனது கையிலெடுத்து அக்கினியின்மேல் வைப்பாயாகவென்று (ரசவாதி) சொன்னான், அவன்

அது புரிதலும்—தருமதத்தன் மூசையையெடுத்து அக்கினியின்கண் வைக்கவும், மரபின்—(ரசவாத)முறைப்படி, அதற்கும் செயற்கு உரியன யாவையும் அமைத்து—அத்தத் தகுதியான (புடமிடுதலாகிய) செய்கைக்கு உரித்தான எல்லாக் காரியங்களையும் செய்து, வித்தகம்பெற சேமியா—(தருமதத்தன்) அற்புதம் பொருந்தப் (புடத்தீயினுள்) மறைத்துவைத்துவிட்டு, ஒரு செயல் விதித்தான்—(தருமதத்தனுக்கு)ஒரு செய்கையைக் கட்டளையிட்டான். (எ—று)

சேமியா விதித்தானென வியையும். தத்த—முன்மொழி கெட்ட பின்மொழி. "அண்மைச்சொல்லிற் ககரமாகும்" என்னுந் தொல்காப்பிய விதியான், "தத்தன்" என்னு மண்மைவிளி யீறுகெட்டு, "தத்த" என நின்றது.

தான் செய்யாநின்ற செய்கையை வணிகன் நம்புமாறு மெய்ம்மை போல நாடகமாத்திரையாற் காட்டுவான். அற்புதந் தோன்றச் சில செய்தானென்பார், "மரபினத்தகுஞ் செயற்குரியனயாவையு மமைத்துவித்தகம்பெறச் சேமியா" என்றும், தான் கலிங்கநாட்டைவிட் டப்பாற்சென்று மறையுந் துணையும், அவனைக் காவற்படுத்துமாறு ஒரு விரதத்தைக் கற்பிக்கின்றானென்பார், "ஒருசெயல் விதித்தான்." என்றுங் கூறினர். (கரூஅ)

வேறு.

உண்டியிகந்துரையாடலையாகிப்
பெண்டிரைவெஃகல்பெறாய்பிறர்தம்மைக்
கண்டிடலின்றுகருத்தினிலெம்மைக்
கொண்டிருமுப்பகல்கோதில்குணத்தோய்.

(இ—ள்) கோது இல் குணத்தோய்—குற்றமில்லாத நற்குணங்களையுடைய தருமதத்தனே! மு பகல்—(நீ) மூன்று நாள்வரைக்கும், உண்டி இகந்து—போசனமில்லாமலுக்கும், உரை ஆடலை ஆகி—(எவரோடும்)பேசாமலுக்கும், பெண்டிரை வெஃகல் பெறாய்—பெண்களை விரும்புதல் செய்யாமலுக்கும், பிறர் தம்மை கண்டிடல் இன்று—பிறத்தியார்களைப் பார்க்குதலில்லாமலுக்கும், எம்மை கருத்தினில் கொண்டு இரு—எம்மையே மனதில் தியானம்பண்ணிக்கொண்டிருப்பாயாக. (எ—று)

ஆடலை—முன்னிலையொருமை யெதிர்மறை. பெறாய் முன்னிலையொருமை யெதிர்மறை முற்றெச்சம். அல், ஆ—எதிர்மறை இடைநிலைகள் இன்று – இன்றியென்பதன் றிரிபு. "அன்றியின்றியென்வினையெஞ்சிகர–

தொடர்பினுளுகரமாய்வரினியல்பே." என்பது விதியாகலின், பகல், நாளுக்கு இலக்கணை.

உணவருந்தாதிருக்கின், தைரியமற்றுத் தன்னை நாடத் துணியா ளாகலின், "உண்டியிகந்து" என்றும், வார்த்தை யாடலும், பெண்களைவிரும்பலும், பிறரைக் காண்டலுங் கூடுமாயின் தனது திருட்டு வெளிவந்து விடுமாகலின், "உரையாடலையாகி" என்றும், "பெண்டிரை வெஃகல்பெறாய்" என்றும், "பிறர்தம்மைக் கண்டிடலின்று" என்றும், கலிங்கநாட்டைவிட்டப்பாற் சென்று மறைதற்கு நாள்வேண்டுமாகலின், "முப்பகல்" என்றும் விரதங்கள் கற்பித்தானென்பதாம்.

இதுமுதற் பத்தொன்பது செய்யுட்கள் பெரும்பாலு மீற்றுச்சீர் மாச்சீரும் ஏனைய விளச்சீருமாய் வந்த அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (கங்க)

நெய்கமழ்செஞ்சடைநீலிதன்முன்னோர்
மொய்கனல்வேள்விமுடித்திடலுண்டாற்
செய்கடனன்னதுதீர்த்தபினாலாம்
வைகலினேகுதுமற்றிவணென்றான்.

(இ—ள்) நெய்கமழ் செம் சடை நீலி தன்முன்—நெய்மணம் வீசுகின்ற சிவந்த சடையையுடைய காளியின் சந்நிதானத்தில், ஓர் மொய் கனல் வேள்வி முடித் திடல் உண்டு—ஒரு நிறைந்த அக்கினியாலாகும் யாகத்தை (நாம், மூன்றுநாள்மட்டும்) செய்துமுடிப்பதுண்டு, செய் கடன் அன்னது தீர்த்தபின்—(எம்மாற்) செய்யப்படுங் கடமைபாகவுள்ள அந்த யாகம் செய்துமுடித்தபின்பு, நாலாம் வைகலின்—(அடுத்த) நாலாம் நாளில், இவண் ஏகுதும் என்றான்—(நாம்) இவ்விடத்திற்கு வருவோமென்று (தருமதத்தனை நோக்கிக்) கூறுகின்றான். (எ—று)

ஆல், மற்று—அசைகள். நெண்டுநெய்யென்றது வாசனைத்தைலத்தை, நீலி—நீலநிறமுடையவள். காளி—என்பதும்அது. வைகல்—கழிதலென்னும்பொருட்டு. செஞ்சடைநீலி—முரண்தொடை.

காளிசந்நிதியிற் றீவேள்வி செய்வது, தனக்கெப்போதைக்கும் வழக்கமென்பான், "நீலிதன்முன்னோர், மொய்கனல்வேள்வி முடித்திடலுண்டு, செய்கடனன்னது தீர்த்தபின்" என்றான். (கச0)

அம்முறைசெப்பெனவாங்கவனடியை
மும்முறைதாழ்ந்துமுதற்பெருவணிகச்
செம்மலவன்புடைசென்றிலனின்றான்
மைம்மலிசிந்தையன்வல்லையகன்றான்.

(இ—ள்) முதல் பெரு வணிகன் செம்மல்—முதன்மையான பெருமையையுடைய வைசிய சிரேட்டனான தருமதத்தன், அ முறை செய்க என—அப்படியே செய்தருளுகவென்று சொல்லி, ஆங்கு—அப்பொழுது, அவன் அடியை மும் முறை தாழ்ந்து—அவனுடைய கால்களை மூன்று தரம் வணங்கி, அவன்புடை சென்றிலன் நின்றான்—அவன்பின்னே போகாமல் நின்றுவிட்டனன், மைமலி சிந்தையன் வல்லையகன்றான்—வஞ்சனை நிரம்பிய மனத்தையுடைய ரசவாதி அதி விரைவாக அவ்விடத்தை விட்டகன்று போயினான். (எ—று)

செய்கென—ஈறுதொகுத்தல். மை—வஞ்சனை. அஃறிலக்கணை. செம்மல்—பெருமையிற்சிறந்தவன். செம்மல்நின்றான், சிந்தையன் அகன்றான் என்க.

தருமதத்தனதுயர்வு தோன்ற "முதற்பெருவணிகச் செம்ம" லென்றும், ரசவாதியி னிழிவுதோன்ற "மைமலி சிந்தைய" னென்றும், மூன்று நாளைக்குள் வேற்றூரிற் சென்று மறைந்துவிடுமா றதிவிரைவாகப் போக வேண்டிச் சென்றானாகலின் "வல்லையகன்றான்" என்றுங் கூறினார்.

(கசக)

காவதமோரொருகன்னலினாகப்
போவதுசெய்துபுறத்துருமாறி
வாவினன்வேறோர்வளாகமதுற்றா
னேவலின்வைகினனித்தலைவணிகன்.

(இ—ள்) ஓர் ஒரு கன்னலின் காவதம் ஆக—(அந்தஇரசவாதி) ஒவ்வொரு நாழிகை நேரத்தில் ஒவ்வொரு காத தூரமாக, போவது செய்து—(அதி விரைவாகப்) போதலைச் செய்து, புறத்து உரு மாறி—(தான் கொண்ட) புறவேஷம் மாறி, வாவினன்—(கலிங்கநாட்டைக் கடந்து, வேறு ஓர் வளாகம் உற்றான்—வேறொரு நாட்டை யடைந்தான், வணிகன் இ தலை ஏவலின் வைகினன்—தருமதத்தன் இவ்விடத்தில் (அவனது) கட்டளையின்படி (சொல்லிய விரதங்களை யநுட்டித்துக்கொண்டு) இருந்தான். (எ—று)

அது—பகுதிப்பொருள் விகுதி. ஓர்—ஓர் எனக் குறுகிற்று. வாவினன்—முற்றெச்சம். கன்னல்—இருபத்து நான்கு நிமிஷங் கொண்டது. வளாகம்—நீரால் சூழப்பட்ட இடம். மேலே சொன்ன, சிரமொட்டையாதிய வெளி வேடங்களை அகற்றிச் சுயவேடத்தைக் கொண்டு வேறொரு தேசத்திற் போய்விட்டானென்பதாம். (கசஉ)

முப்பகல்போதலுமூதறிவுள்ளோன்
செப்பியநாள்வரைசென்றுளவன்றே
யிப்பகல்வந்திலனென்னையவன்சொற்
றப்புவனோவெனமேவதளர்கின்றான்.

(இ-ள்) முப்பகல் போதலும்—மூன்றுநாட் சென்றவுடன், மூதுஅறிவு உள்ளோன் செப்பிய நாள் வரை சென்றுள—(தருமதத்தன்) அந்தப் பேரறிவாளர் சொல்லிய நாளினளவு முடிந்துவிட்டன, இ பகல் வந்திலன்—(நாலாநாளாகிய) இன்றையதினம் வந்திலர், என்னை—இது என்ன அற்புதம், அவன் சொல் தப்புவனோ என தளர்கின்றான்—அவர் சொன்ன சொல்லுத் தவறுவாரோவென்று வருத்தமுறுவானாயினன். (எ-று)

அன்றும், ஏகாரங்களும்—அசைகள். அன்றே—என்பதைத் தேற்றமெனினுமாம். பகல்—இலக்கணை. "மூதறிவுள்ளோன் தளர்கின்றான்" என முடிக்கின். மூதறிவுள்ளோன், நுண்ணிய வறிவில்லாத தருமதத்தனென்க. "தளர்கின்றா"னென்பதை முற்றெச்சமாக்கிப் பிற்செய்யுளோடு முடிப்பினு மமையும். பொய்மையும் பொருளாசையுமற்ற தவவேட முடையோரிவ்வாறு செய்வரோ, இஃதற்புதமாக விருக்கின்ற தென்பான், "என்னையவன்சொற்றப்புவனோ" என்றான். (கசங)

நீடியதொல்புகழ்நீலியிருக்கை
நாடினன்மேதகுநன்னகரெங்குந்
தேடினன்மாலுறுசிந்தையனானான்
வாடினன்மீண்டனன்மாளிகைவந்தான்.

(இ-ள்) நீடிய தொல்புகழ் நீலி இருக்கை நாடினன்—மிகுந்த பழமையான புகழையுடைய காளிகோவிலிற் (சென்று) பார்த்து, மேதகு நல் நகர் எங்கும் தேடினன்—(அங்குக் காணாமல்) மேன்மையான நல்ல அந்தப் பட்டினம் முழுவதினும் தேடி, மால் உறு சிந்தையன் ஆனான்—மயக்கம் நிரம்பிய மனதையுடையவனாய், வாடினன்—வாட்டமுற்று, மீண்டனன் மாளிகை வந்தான்—(அங்குநின்றுந்) திரும்பித் (தனது) வீட்டின்கண் வந்தான். (எ-று)

நாடினன், தேடினன், சிந்தையனானான், வாடினன், மீண்டனன்—முற்றெச்சங்கள். நகரென்றது-அரிபுரத்தை. (க௪௪)

அடுத்துமுன்வைத்தவருங்குகைதன்னை
யெடுத்தநோக்கவிரும்பதுவாக

வடுத்தவிர்சிந்தையன்மாயைகொலென்று
விடுத்தனனன்னதுவீழுமுன்வீழ்ந்தான்.

(இ-ள்) வடுதவிர் சிந்தையன்—குற்றம் நீங்கிய நன்மனத்தையுடைய தருமதத்தன், அடுத்து—(தன்வீட்டினுள் வைத்த புடத்தைச்) சமீபித்து, முன்வைத்த அரும் குகை தன்னை—(தனது கையினால்) முன்னமே யெடுத்து வைத்த அருமையான மூசையை, எடுத்து—எடுத்து, அது நோக்க—அதனை (உள்ளே) பார்க்க, அது இரும்பு ஆக—அம்மூசையிரும்பையுடையதாகவும், மாயை கொல் என்று—இது மாயம்போ லிருக்கின்றதென்று நினைந்து, விடுத்தனன்—(அதனைக்) கையைவிட்டு, அன்னது வீழுமுன் வீழ்ந்தான்—அம்மூசை (நிலத்தில்) விழுவதற்கு முன்னமே தானும் விழுந்தான், (அதி சீக்கிரமாக விழுந்தானென்றபடி.) (எ-று)

கொல்—ஐயம். விடுத்தனன்—முற்றெச்சம்: என்று, விடுத்து, வீழ்ந்தானெனவியையும். மாயை, இந்திரசாலம் முதலிய வஞ்சனைகள். மிகு விரைவில் தன்னை மறந்து விழுந்தமையின், கவிசமத்காரமாக, "அன்னது வீழுமுன் வீழ்ந்தான்" என்றார். (கசு௩)

அத்தமனைத்துமகன்றிடலோடும்
பித்தின்மனத்தொடுபீழையனாகி
யெய்த்தனனாயுளினெல்லையுமெய்தத்
தத்தனும்விண்ணிடைசார்ந்தனனன்றே.

(இ-ள்) அத்தம் அனைத்தும் அகன்றிடல் ஓடும்—(தன்னிடத்துள்ள திரவியம் முழுதும் தன்னைவிட்டு) நீங்கிப்போகவும், பித்தின் மனத்தொடு—பித்தங்கொண்டமனத்தோடு, பீழையன் ஆகி—துன்பமுடையவனாய், எய்த்தனன்—மெலிவடைந்து, ஆயுளின் எல்லையும் எய்த—(தனது வாழ்நாளின் முடிவும் வந்துவிட, தத்தனும் விண் இடை சார்ந்தனன்—தருமதத்தனும் (இறந்து) தேவலோகத்தையடைந்தான். (எ-று)

அன்றுமேயும்—அசைகள். எய்த்தனன்—முற்றெச்சம் தத்தன்—முன்மொழிகெட்ட பின்மொழி. உம்மை—உயர்வு சிறப்பு.

திரவியமானது, தேடும்பொழுதும் வைத்துப் பாதுகாக்கும்பொழுதும், செலவுசெய்யும்பொழுதும், இழந்துவிடும்பொழுதும், தன்னை யுடையானுக்குத் துன்பத்தையே கொடுக்குமென்க. இதனை, "இன்ன ரும்பொருளை யீட்டுதலுந் துன்பமே-பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—யன்ன—தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பா—லிழத்தலுந் துன்பமே யெண்." என்பதனாலுமறிக (கசு௪)

அறந்தனை விற்றவருஞ்செயலாலே
மறந்தருதத்தனுமால்கரியாகிப்
பிறந்தனன்முன்னுறுபெற்றியதெல்லா
மறந்தனனென்றுமனத்திடைகொண்டு.

(இ-ள்) மறந்தரு தத்தனும்—(அவ்வாறு) மரணமடைந்த தருமதத்தனும், அறம் தனை விற்ற அருஞ்செயலாலே—தருமத் திரவியங்களை விற்ற கொடிய செய்கையின் பயனால், மால் கரி ஆகி பிறந்தனன்—மத மயக்கமுள்ள யானையாகிப் பிறந்து, முன் உறு பெற்றி அது எல்லாம் மறந்தனன்—முற்பிறப்பில் தனக்கு நேரிட்ட தன்மைகள் முழுதையும் மறந்துவிட்டான், என்று மனத்திடை கொண்டு—என்று (குச்சகமுனிவர், தமது) மனதின்கண்ணறிந்துகொண்டு. (எ-று)

ஏகாரம்—தேற்றம். அறம், செயல்—ஆகுபெயர்கள். ஆல்—ஏதுப்பொருட்டு. தத்தன்—முன்மொழிகெட்ட பின்மொழி. பிறந்தனன்—முற்றெச்சம். முன்—முற்பிறப்பு. மால்—பெரிதுமாம். "அறந்தனை விற்றஅருஞ்செயலாலே மறந்தருதத்தன்" என நின்றாங்கு வைத்து, தருமத்தை விற்ற அரிய செய்கையால் பாவத்தையுடைய தத்தன், எனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். இப்பொருட்கு, மறம்—பாவம். மறத்தைக் கரிக்கேற்றுவாருமுளர். மேலே, "ஒதியின் வலியாலன்ன தாழ்முறை யுன்னலுற்றான்" என்றது தொடங்கி யிதுவரையும், அந்த யானையின் பூருவ சென்மத் தொடர்பு கூறப்பட்டது. தருமதத்தன், முற்பிறப்பிலே தருமத்தை விற்ற பாவத்தினால், இப்பிறப்பில் இங்க யானையாகப் பிறந்திருக்கின்றானென்று, குச்சகமுனிவர், ஞானவுணர்விற் கண்டாரென்பதாம். குளகம். (கசஎ)

மாற்றுவனிப்பவம்வல்லையினென்னாச்
சாற்றினன்முன்புதவம்புரிவேலை
நோற்றிடுமோர்பகனோன்பவைதானிவ்
வாற்றலிபத்துழையாருகவென்றான்.

(இ-ள்) இ பவம் வல்லையின் மாற்றுவன் என்னா சாற்றினன்—(அங்ஙனம் மனதிற் கொண்ட குச்சகமுனிவர்) இந்த யானைப்பிறப்பை விரைவிலே நீக்கிவிடுவேனென்று தமக்குள் தாம் சொல்லிக்கொண்டு, முன் தவம் புரி வேலை நோற்றிடும் ஓர் பகல் நோன்பு அவைதான்—(தாம்) முன்னே தவஞ்செய்யுங் காலத்தி லநுட்டித்த ஒருநாளைத் தவப்பயன், இ ஆற்றல் இபத்துழை ஆருக என்றான்—இந்த வலிமையையுடைய யானையினிடத்துச் சேரக் கடவன என்று திருவாய்மலர்ந்தருளிச் செய்தார். (எ-று)

சாற்றினன்—முற்றெச்சம். "இப்பவம்" என்பதற்கு, இந்தப் பாவத்தையென்பினும் பொருந்தும். தன்னுயிர்க்குக் கேடுவராமற் பாதுகாக்கும் பெரியோர்கள் பிறவுயிர்க் கிரங்குதலியல்பாகலின், குச்சகமுனிவர் தாம் வருந்தித்தேடிய வொருதினத்துத் தவப்பயனை, அந்த யானைக்குக் கொடுத்திரட்சித்தாரென்பதாம். தேவரும், "மன்னுயி ரோம்பி யருளாள்வார்க் கில்லென்ப—தன்னுயி ரஞ்சும் வினை." என்றார். (கசஅ)

இப்பரிசங்கணியம்புதலோடு
மப்பொழுதன்னவனுண்டுறுவேழ
மெய்ப்படிவந்தனைவீட்டினன்யாருஞ்
செப்பரிதாகியதேவுருவானான்.

(இ—ள்) இ பரிசு அங்கண் இயம்புதலோடும்—(குச்சகமுனிவர்) இவ்வாறு அங்குத் திருவாய்மலர்ந்தருளிச் செய்தவுடன், அ பொழுது—அப்பொழுதிலே, அன்னவன்—அந்தத் தருமதத்தன், ஆண்டு உறு வேழம் மெய்ப்படி வந்தனை வீட்டினன்—அவ்விடத்துத் தான்கொண்டிருந்த யானைவடிவத்தை யொழித்தவனாகி, யாரும் செப்பு அரிது ஆகிய தே உரு ஆனான்—எவராலுஞ் சொல்லுதற் கருமையாகிய தேவரூபத்தை யுடையவனாயினான். (எ—று)

வீட்டினன்—முற்றெச்சம். மெய்ப்படிவம்—ஒருபொருட் பன்மொழி. உண்மையான வடிவமெனப் பொருள்கோடல் சிறப்பின்று.

இந்த உருவம் போனால், மீள நல்வினைவயத்தாலெடுப்பது அரிபிரமேந்திராதி வானோர்களின் திவ்விய உருவமேயாகலின், இவனும் குச்சகமுனிவரி னோர்நாளைத் தவோபலத்தால், தேவரூபங் கொண்டானென்க, இஃது; "முன்னுடைய, நாணாள்வரையி னுடல்பிரிந்து நல்வினைக்கண்—வானாளின் மாலா யயனாகி—யீனாகர்—வானடர் கோமுதலாய் வந்தபெரும் பதத்து நானா விதத்தா னலம்பெறுநாள்." எனவரும் போற்றிப்பஃறொடையுரையானும் பெறப்படும். (கசக)

அந்தரதுந்துபியார்த்தனவானோர்
சிந்தினர்பூமழைசெண்ணிடைநின்றும்
வந்ததுதெய்வதமானமதன்பா
லிந்திரனாமெனவேறினனன்றே.

(இ—ள்) அந்தர துந்துபி ஆர்த்தன—(அப்பொழுது,) தேவதுந்துபி வாத்தியங்க ளொலித்தன, வானோர் பூ மழை சிந்தினர்—தேவர்கள் பூக்க

களை மழைபோற் சொரிந்தார்கள், தெய்வதம் மானம் சேண் இடை நின்றும் வந்தது—தேவ விமானமானது சுவர்க்கத்தி லிருந்தும் வந்தது, அதன்பால்—அவ் விமானத்தின்கண், இந்திரன் ஆம் என ஏறினன்—(அத் தருமதத்தன்) இவன் தெய்வேந்திரன் போலுமென்று சொல்லும்படி ஏறினன். (எ—று)

அன்றும், ஏயும்-அசைகள். சேண்—ஆகுபெயர். அந்தர துந்துபி—வடமொழியாகலி னியல்யாயிற்று. தெய்வதம்—வடமொழித்திரிபு. ஆம்—உவம உருபு. மானம் – முதற்குறை. நின்றும் – உம்பெற்று வந்த (சொல்)லுருபு, நீக்கப்பொருள், உம்-இசைநிறை. "செயப்படு பொருளைச் செய்தது போலத் தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுளுரித்தே" என்னும் விதியான், "அந்தர துந்துபி யார்த்தன" எனப்பட்டது. துந்துபி—துந்து. என்றொலிப்பது, விமானம்—அந்தரத்திற் செல்லுந் தேவரதம்

துந்துபியார்க்க, பூ மழை சிந்த, தேவரூபத்தைப் பெற்று விமானத்து மேறினமையின், "இந்திரனெனெ வேறினன்" என்றார். (கூ௰)

பாசிழைமங்கையர்பற்பலர்சுற்றா
வீசினர்சாமரைவிண்ணுறைகின்றோ
ராசிகள்கூறினரங்கவணிற்குந்
தேசிகனாரடிசெங்கைகுவித்தான்.

(இ—ள்) பாசு இழை மங்கையர் பல் பலர்—பொன்னாற் செய்த ஆபரணங்களையணிந்த தெய்வப்பெண்க ளநேகர், சுற்றா—(அவனது பாகங்களில்) சூழ்ந்து நின்று, சாமரை வீசினர்—வெண்சாமரங்களை யிரட்டினார்கள், விண் உறைகின்றோர் ஆசிகள் கூறினர்—தேவலோகத் திருப்பவர்களாகிய தேவர்கள் (அவனுக்கு) ஆசீர்வாதங்களைச் சொன்னார்கள், அங்கு—அப்பொழுது, அவண் நிற்கும்—அவ்விடத்து நிற்கின்ற, தேசிகனார் அடி செம் கை குவித்தான்—ஆசாரியராகிய குச்சகமுனிவரின் பாதங்களை (அத் தருமதத்தனாகிய தேவன்) செம்மையான கைகளைக் குவித்துக் கும்பிட்டான். (எ—று)

பாசு—என்னும் விகாரப் பண்புப்பெயர் ஆகுபெயர். முதல், "மங்கையர்" என்றமையின், "விண்ணுறைகின்றோர்" ஆடவர்மேற்று. சாமரம்—சாமரையென வீறுதிரிந்தது. ஆர். உயர்த்தற்கண் வந்தது. தன்னை நற்கதியின் விட்டமையின், "தேசிகனார்" என உயர்த்திக் கூறினன். கைகுவித்தல்—அஞ்சலிசெய்தல். தேவருந் தேவமாதருந் தொண்டுசெய்ய விமானத்திருப்பவன், அஞ்சலிசெய்தானென்னிற், குச்சகமுனிவர், மனுடனாயி

னும், தபோமகிமையாற் றேவரினும் சிறந்தவரென்பது மிதனாற் பெறப்படும். (கடுக)

நோக்கினன் மாதவநோன்மையுளானை
வாக்கினில்வந்தனவந்தனைசெய்தா
னீக்கரும்வல்வினைநீக்கினையென்று
மேக்குயர்புங்கவர்விண்ணுலகுற்றான்.

(இ-ள்) மாதவம் நோன்மை உளானை நோக்கினன்—(அதன்பின்னும்) பெருந் தவத்தில் வலிமையையுடைய குச்சகமுனிவரைப் பார்த்து, நீக்கு அரும் வல்வினை நீக்கினை என்று—(எவர்க்கேனும்) நீக்குதற் கருமையான (எனது) வலிய தீவினையை (நீர்) நீக்கியருளினீரென்று (நன்றியறிவு) கூறி, வாக்கினில் வந்தன வந்தனை செய்தான்—(தனது வாயில் வந்தவாறு (பல) தோத்திரங்களைச் சொல்லி வணங்கிக்கொண்டு, மேக்கு உயர் புங்கவர் விண் உலகு உற்றான்—மேன்மையினு லுயர்ந்த தேவர்கள் வாசம்பண்ணும் சுவர்க்கலோகத்தை யடைந்தான். (எ-று)

நோக்கினன், செய்தான்—முற்றெச்சங்கள். புங்கவர்—உயர்வுடையோர். புங்கம்—உயர்வு. மேக்குயரென்னு மடையை விண்ணுலகிற்கேற்றினுமாம்,

இழிந்த பிறப்பாகிய விலங்குப்பிறப்பை யொழித்து, உயர்ந்த பிறப்பாகிய தேவப்பிறப்பைக் கொடுத்த ஒருநாட் டவம்சோலப் பலநாட் புரிந்த பெருந் தவவல்லமையையுடையராகலின், "மாதவநோன்மையுளானை" என்றும், முறுகிய பேரன்புடையோர்க்கு இப்பெற்றித்தாகத் தோத்திரம் பண்ணவேண்டுமென்னும் முறைமை தெரியாமையின், "வாக்கினில் வந்தன வந்தனை செய்தான்." என்றுங் கூறினர். (கடுஉ)

விண்ணிடையேயவன்மேவுதலோடு
மண்ணிடைநின்றிடுமாதவன்முன்போ
லெண்ணருநோன்பியற்றலுமன்னோன்
கண்ணியதென்றிசைகாவலன்வந்தான்.

(இ-ள்) அவன் விண் இடை மேவுதலோடும்—அந்தத் தருமதத்தன் சுவர்க்கலோகத்திற் சேர்ந்தவுடனே; மண் இடை நின்றிடும் மாதவன்—பூமியின்கண் நின்ற பெருந் தவத்தரான குச்சகமுனிவர், முன்போல எண் அரும் நோன்பு இயற்றலும்—முன்போலவே நினைப்பதற்கருமையான தவஞ் செய்யவும், அன்னோன் கண்ணிய—அம்முனிவர் கருதிய, தென் திசை

காவலன் வந்தான்—தென்றிசைக் கதிபதியான யமன் பிரசன்னமாயின ன். (எ—று)

ஏகாரம்—அசை. அது—பகுதிப்பொருள் விகுதி. கண்ணிய என்னும் இறந்தகாலத் தெரிநிலைவினைப் பெயரெச்சத்துக்காலங் காட்டும், இன், இடைநிலையீறுகெட்டது. கண்ணுதல்—கருதுதல். காவலன்—காத்தலில் வல்லவன், காத்தலையுடையவன். முன்போல், என்றது மேலே, "போயொரு பொய்கைமூழ்கிக் கூற்றுவற் புகழ்ந்து நோற்ப" என்றதை. (கடு௩)

முன்னுறுகூற்றுவன் முப்பகைவென்றோ
யுன்னிலைநோக்கியுவந்தனநம்பா
லென்னைகொல்வேண்டியதென்றலுமன்னோ
ன்றன்னடிவீழ்ந்திதுசாற்றுதலுற்றான்.

(இ—ள்) முன் உறு கூற்றுவன்—முன்னிலையிற் பிரசன்னமான யமனானவன், முப்பகை வென்றோய்—(குச்சகமுனிவரைப் பார்த்து) (காமம் வெகுளி மயக்கம் என்னும்) மூன்று பகைகளை வென்ற முனிவரே, உன் நிலை நோக்கி உவந்தனம்—உமது தவநிலையைக் கண்டு (யாம்) மகிழ்வடைந்தோம், நம்பால் வேண்டியது என்னை என்றலும்—எம்மிடத்தில் (உமக்கு) வேண்டற்பாலது யாது என்று வினவுதலும், அன்னோன் தன் அடிவீழ்ந்து—(குச்சகமுனிவர்) அந்த யமனது பாதங்களில் நமஸ்காரம்பண்ணி, இது சாற்றுதல் உற்றான்— இந்த வார்த்தையைச் சொல்வாராயினர். (எ—று)

கொல்—அசை. "கூற்றுவன்" "உவந்தனம்" "ஒருமையிற் பன்மையும் பன்மையி லொருமையும்" என்னும் விதியானமைந்த பால்வழுவமைதி, "வேண்டியது என்னை" என்னும் வினா, கொடைவினா. வினையற்ற முனிவராகலின், குச்சகமுனிவரை, "முப்பகை வென்றோய்" என்றான், தேவரும், "காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்—நாமங் கெடக் கெடும் நோய்." என்றார். மயக்கம்—அவிச்சை. (கடுச)

உந்தியசீர்த்தியுசத்தியன்மாவெனன்
மைந்தன்மணஞ்செயவந்தனனன்னோன்
முந்துறுகென்னன்முடிந்தனன்முன்போற்
றந்தருளென்றிதுசாற்றுதலோடும்.

(இ—ள்) உந்திய சீர்த்தி உசத்தியன் மான்—(உலகமெங்கும்) பரவச்செய்த புகழையுடைய உசத்திய முனிவரது புதல்வியை, என் மைந்தன் மணம் செய வந்தனன்—எனது புதல்வனுக்கு மணஞ் செய்யும்பொருட்டு

(கல்யாணம்பேச) வந்திருந்தேன், அன்னாள்—அந்த மாது, முந்து உறு நென்னல் முடிந்தனள்—முன்னுள்ள நேற்றைத்தின மிறந்துவிட்டனள், முன்போல் தந்தருள் என்று—(அவளை) முன்போல (உயிர்) கொடுத்தருள வேண்டுமென்று, இது சாற்றுதலோடும்—இந்த வார்த்தையைக் (குச்சக முனிவர் குறையிரந்து) சொன்னவளவில். (எ-று)

மான்—ஆகுபெயர். "உந்திய" என்பதற்கு உயர்ந்த எனப் பொருள் கொள்வாருமுளர். நென்னல்—முதனாள். "நெருநலு நென்னலுந் தானிகழ்ந்த முன்னைநாளே" என்பதனாலுமுணர்க. (௧௫௫)

அத்தகுபோழ்தினிலந்தகனென்போ
னித்தவன்வேண்டியவேந்திழையாவி
வைத்தனமேயதுவல்லையின்மீட்டிங்
குய்த்திடுவாயெனவொற்றொடுசொற்றான்.

(இ-ள்) அத்தகு போழ்தினில்—அவ்வாறாகிய சமயத்தில், அந்தகன் என்போன்—யமனென்பவன், இத்தவன் வேண்டிய ஏந்து இழை ஆவி—இந்தமுனிவர் (தரும்படி) வேண்டிக்கொண்ட ஏந்திய ஆபரணங்களையுடைய பெண்ணினதுயிரை, வைத்தனமே—(நாம் கொண்டுபோய்) வைத்தோமல்லவா, அது—அவ்வுயிரை, வல்லையின் மீட்டு இங்கு உய்த்திடுவாய் என—அதி சீக்கிரத்தில் (அங்குநின்றும்) மீட்டு இவ்விடத்திற் சேர்க்கக்கடவாயென்று, ஒற்றொடு சொற்றான்—(தனது) தூதனிடத்திற் கட்டளை செய்தான். (எ-று)

ஏகாரம்—தேற்றம். ஏந்திழை—அன்மொழித்தொகை. ஏந்திழை ஆவி—"இராகுத்தலை" என்பதுபோல பேதப்பொருளில் வந்த ஆறாம் வேற்றுமைத்தொகை. ஒற்றனை, ஒற்று என்றது, வேந்தனை, வேந்து என்றாற்போல. அஃது உயர்திணைக்கண்வந்த வஃறிணை. தானுந் தூதரு மொருங்கு கூடி யுயிர்களை யமபுரத்து வைப்பது வழக்காகலின், தூதனையுமகப்படுத்தி வைத்தனமேயெனப் பன்மையாற் கூறினான். அந்தகன்—அழிவுசெய்பவன். (௧௫௬)

கொற்றவனிங்கிதுகூறிமறைந்தான்
சொற்றதுணர்ந்திடுதூதுவன்முன்போ
யுற்றிடுமவ்வுயிரைக்கொடுபோந்து
மற்றவள்யாக்கையுள்வந்திடுவித்தான்.

(இ-ள்) கொற்றவன்—அரசனாகிய யமன், இங்கு இது கூறி மறைந்தான்—இதனைச் சொல்லி (கட்டளைபண்ணி) அந்தர்த்தானமாயினான்,

சொற்றது உணர்ந்திடு தூதுவன் முன்போய்—(அந்த யமன்) சொன்ன வா ர்த்தையை யறிந்த தூதுவன் முன்னேசென்று, உற்றிடும் அ உயிரை கொ டுபோந்து—(யமபுரத்தில்) இருக்குமந்த உயிரைக் கொண்டுவந்து, அவள் யாக்கை உள் வந்திடுவித்தான்—அந்தப் பெண்ணினது உடம்பினுள் பிரவே சிப்பித்தான். (எ—று)

மற்று—அசை. இங்கிது—ஒருசொன்னீர் மைத்து. சொற்றது—வினையா லணையும்பெயர்.

கொல்லுந் தொழிற் கதிகாரமுள்ள யமன், மீள அவ்வுயிரைக் கொ டுக்குந் தொழிற்கு மதிகாரமுடையனோவெனின், பூரணாயுளைப் பெற்றி றந்தோரையொழிய, அவமிருத்தினர்களது உயிரை, வழிபடுங் கடவுளர்க ளாக வுள்ளவர்கள் ரக்ஷிப்பதற் கதிகாரமுடைமையாலும், தன்னை வேண்டி க் குச்சகமுனிவர் தவம்புரிந்தமையாலும், உயிரைக் கொடுத்தற்கு மதிகா ரம் இருந்ததென்க. அதுவும், சர்வலோகைக நாயகராகிய சிவபெருமா னே! பிரமன், திருமால், யமன், முதலானோர்க்கு படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் தொழில்களையு மதிகாரங்களையு மீய்ந்து, ஆன்மாக்க ளுக்கு விரும்பியபடி யருளையும் புரியுமாறு ஆஞ்ஞை செய்தனர் என்ப தாம். (கஙஎ)

வேறு.

உடற்குளுயிர் வந்திடலும்புகுந்ததுமெய்யுணர்வுசிறிதுயிர்த்த
நாசி, துடித்தனகால்பதைத்ததுரந்துளங்கிமுகம்விளங்கியதாற்
றுவண்டதாகஞ், மெடுத்தனகையசைந்தனதோளிமைத்தனகண்
விழித்தனவாலினையகாலை, மடக்கொடியுந்துயிலுணர்ந்தாள்
போலெழுந்தாளல்லோருமருங்கிற்சூழ்ந்தார்.

(இ—ள்) உடற்குள் உயிர் வந்திடலும்—(அவ் விருத்தையின்) உடம் பினுள்ளே ஆவியானது வந்தவளவில், மெய் உணர்வு புகுந்தது—தேகத் தோடு தொடர்புள்ள வறிவு வந்தது, நாசி சற்று உயிர்த்த—மூக்குத் து வாரங்கள் சிறிது மூச்சுவிட்டன, கால் துடித்தன—கால்கள் அசைந்தன, உரம்பதைத்தது—மார்பு துடித்தது, முகம் துளங்கி விளங்கியது—முகம் அசைந்து பிரகாசித்தது, ஆகம் துவண்டது—தேகமசைந்தது, கை எடுத் தன—கைகள் மேலெழுந்தன, தோள் அசைந்தன—தோள்கள் அசைவு கொண்டன, கண் இமைத்தன விழித்தன—கண்கள் இமை வெட்டிப் பா ர்த்தன, இனைய காலை—இவ்வாறான (அங்கச்சேட்டைகளுண்டான) சமய த்தில், மடம் கொடியும்—இளமையான பூங்கொடிபோன்ற விருத்தையும், துயில் உணர்ந்தாள் போல் எழுந்தாள்—நித்திரையிலிருந்தும் விழித்தெழு

ந்தவனைப்போல (மரணத்துநின்றும், எளிதாக) பிழைத்தெழுந்தனன், எல்லோரும் மருங்கில் சூழ்ந்தார்—(அப்பொழுதிலங்குள்ள) எல்லாரும் அவனது பக்கத்திற் சூழ்ந்துகொண்டார்கள். (எ-று)

ஆலிரண்டும்—அசைகள். வந்திடலும்—உம்மீற்று வினையெச்சம். கொடி—ஆகுபெயர். உயிர்த்த—அன் சாரியை பெறாதுநின்ற பலவின்பால் வினைமுற்று. இமைத்தன—முற்றெச்சம். நாசி, கால், கை, தோள், கண்—பால்பகாவஃறிணைப் பெயர்களாகலின் பன்மை முற்றேற்றுடியைந்தன. "னளரயவீற்றய லாவேவாதலுஞ்செய்யுளு ளுரித்தே." என்னும் விதியான், எல்லாரும் என்பது "எல்லோரும்" என ஆகார மோகாரமாயிற்று. மெய் உணர்வு—உண்மையறிவுமாம்.

மரணம் நித்திரையையும், பிறப்பு விழித்தெழுதலையு மொக்குமென்பார், "மடக்கொடியுந் துயிலுணர்ந்தாள் போலெழுந்தாள்," என்றார். தேவரும், "உறங்குவது போலுஞ் சாக்காடுறங்கி—விழிப்பதுபோலும் பிறப்பு." என்றார். வியப்புச்சுவையென்னு மலங்காரம்.

இதுமுதல் ஒன்பது செய்யுட்கள் பெரும்பாலும் முதல் நான்கு சீர்களும் காய்ச்சீர்களும், இறுதியிரண்டும் மாச்சீருமாய்வந்த அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தங்கள். (கருஅ)

**அன்னையவடனைத் தழுவியிரங்குற்றாடந்தையெடுத் தணைத்துப்பல்**
**காற், சென்னிதனிலுயிர்த்தே தனிருகுறங்கின் மீமிசையேயிகழ**
**ச்சேர்த்தி, யென்னடிகளென் கடவுளெனது தவப்பயனாகுமெந்**
**தைநென்னற், சொன்னபடி தவமியற்றியுய்வித்தானிவனையென்**
**று துணிவிற்சொற்றான்.**

(இ-ள்) அன்னை—மாதாவாகிய மங்கலையானவள், அவள் தனை தழுவி இரங்குற்றாள்—அந்த விருத்தையைக் கட்டியணைத்துக் கொண்டழுதாள், தந்தை—பிதாவாகிய உசத்தியமுனிவர், எடுத்து அணைத்து—(அவ் விருத்தையை) எடுக்கித் தன் மார்போ டணைத்து, பல் கால் சென்னிதனில் உயிர்த்து—பலதரமாக உச்சியில் முத்தமிட்டு, தன் இரு குறங்கின் மீ மிசை—தனதிரண்டு தொடைகளின்மேல், இகழ சேர்த்தி—விளங்கும்படி யிருத்திவைத்துக்கொண்டு, என் அடிகள்—எனது குருவும், என்கடவுள்—எனது தெய்வமும், எனது தவப்பயன்—எனது தவத்தின் பயனும், ஆகும் எந்தை—ஆகவுள்ள எனது தந்தையான குச்சகமுனிவர், நென்னல் சொன்னபடி—நேற்றையதினம் சொன்னபிரகாரம், தவம் இயற்றி—தவம்செய்து, இவளை உய்வித்தான் என்று—(அடியேனது கண்மணிபோலு

ம்) இந்த மாதைப் பிழைக்கச்செய்தனமென்று, நாணியின் சொற்றான்—உறுதியாகக் கூறினர். (எ—று)

ஏகாரங்களிரண்டும்—அசைகள். மீமிசை—ஒருபொருட் பன்மொழி. இரங்குற்றாள்—உறு, துணைவினை. "எந்தை." உவப்பின்கண்வந்த மரபுவழுவமைதி. அடிகள்—பெரியவன். கடவுள்—பிரபஞ்சத்தைக் கடந்து நின்றவன்.

ஒருவர்க்கு நேரிட்ட, தீராத பேரிடரைத் தீர்க்க வல்ல குருவும், தெய்வமும், தவப்பயனுமே, தாமாகநின்று புதல்வியை அவமிருத்தினின்றும் பிழைக்கச்செய்தமையின், குச்சகமுனிவரினருமையும் தமது நன்றியறிதலுந் தோன்ற "என்னடிகள், என்கடவுள், எனது தவப்பயன்." என்றும், பேருவகைப் பெருஞ்சிறப்பால், "எந்தை"என்றுங் கூறினர். இஃது வீறுகோளணியிலுள்ளப் பெருமையென்னு மலங்காரம். (கரு௬)

**சுற்றுகின்றகிளைஞர்களுமல்லோருமதிசயிப்பத்தொல்லைஞாலம்**
**பெற்றதிருவனையாடன்பெண்ணணங்கைமுகநோக்கிப்பேதைநீ**
**யீண், டுற்றதுவுமிறந்ததுவுமீண்டதுவுமுறைப்படவேயுரைத்தி**
**யென்னப், பொற்றொடியாளதுவினவிப்புகுந்ததொருபரிசனைத்**
**தும்புகலலுற்றாள்.**

(இ—ள்) தொல்லை ஞாலம் பெற்ற திரு அனையாள்—பழமையான உலகத்தைப்பெற்ற இலக்குமிபோலும் அழகுங் குணமுமுள்ள மங்கலாதேவி, தன் பெண் அணங்கை முகம் நோக்கி—தனது மகளாகிய தெய்வப் பெண்போல் வாளைமுகத்தின்கட் பார்த்து, பேதை—மகளே! நீ ஈண்டு உற்றதுவும்—நீயிவ்விடத்தில் வந்தமையையும், இறந்ததுவும்—இறந்தமையையும், மீண்டதுவும்—(பின்னர்) உயிர்பெற்றெழுந்தமையையும், முறைபட உரைத்தி என்ன—முறைமைபொருந்தச் சொல்லக்கடவையென்று கேட்ப, பொன்தொடியாள் அது வினவி—பொன்னாற்செய்த வளையலைத் தரித்த விருத்தை யதனைக் கெட்டு, சுற்றுகின்ற கிளைஞர்களும் அல்லோரும் அதிசயிப்ப—(தன்னைச்) சூழ்ந்துகொண்டிருக்கின்ற சுற்றத்தார்களு மவரையல்லாத பிறரு மற்புதங்கொள்ள, புகுந்தது ஒரு பரிசு அனைத்தும் புகலல் உற்றாள்—(தனக்கு) நேரிட்டதான ஒப்பற்ற செயல்களையெல்லாம் சொல்வாளாயினள். (எ—று)

ஏகாரம்—அசை. கிளைஞர்கள், கள்—விகுதிமேல் விகுதி. அணங்கு—ஆகுபெயர். பேதை—ஈண்டிளம்பெண். அண்மைவிளியாகலி னியல்பாயிற்று. "முதலை யையுறிற் சினையைக்கண் ணுறும்." என்னும் விதிநோக்கி. "அண

ங்கைமுகநோக்கி." என்பதற்கு அணங்கை முகத்தின்கட் பார்த்து எனப் பொருள்கூறினும், ஐ, உருபு அது வுருபின் றிரிபு எனவும், அணங்கைமுகத்தைப் பார்த்து எனப் பொருள்கொண்டு, இரண்டு செயப்படுபொருள் வந்தனவெனவும் கூறுவாருமுளர். இளை—பரத்தை. இளைதழுவுதல்போல ஒருவரைத் தழுவிநிற்பவர் தொடி—வட்டமானது. உலகத்தைப் பெற்ற திருமாலின் சிறப்பை இலக்குமிக்கேற்றி, "தொல்லைஞாலம்பெற்ற திரு" என்றது ஒற்றுமைநயங் கருதியென்க. "ஞாலம்பெற்றதிருவனையாள்" உலகத்தார் பெற்றுக்கொண்ட செல்வம்போன்ற மங்கை, எனவும், உலகத்தைப் பெற்ற வுமையைப்போன்ற மங்கை, எனவும், பொருள்கொள்வாருமுளர். உமைக்குக் கூறுங்கால், "திரு," பெண்ணென்னும் பொருட்டு, மேலே, "பொறைதருதிருவைப்போல்வாள்" எனவருவது மிக்கருத்தேயாம். (கக0)

**நீடியமங்கையர்பண்ணைதன்னுடனேபோந்ததுவுநெடுநீர்க்கான்யா, றாடியதுமீண்டதுவுங்கடகளிறுபோந்ததுவுமதனைக்கண்டே, யோடியதுந்தானொருத்திதனித்ததுவுங்கூவலிடையுலந்து வீழ்ந்து, வீடியதுமீண்டதுவுந்தென்றிசைக்கணிகழ்வனவும்விரித்துச்சொற்றாள்.**

(இ—ள்) நீடிய மங்கையர் பண்ணை தன்னுடன் போந்ததுவும்—மிக்க தோழிப்பெண்களின் கூட்டத்தோடு (தானில்லத்தின்கண்ணின்று) போனமையையும், நெடுநீர் கான்யாறு ஆடியதும்—மிகுந்த நீரையுடைய காட்டாற்றில் ஸ்நானஞ் செய்தமையையும், மீண்டதுவும்—(பின்பு, இல்லத்திற்கு வருமாறு) திரும்பியமையையும், கடகளிறு போந்ததுவும்—(வழியில்) மதயானை வந்தமையையும், அதனை கண்டு ஓடியதும்—அந்த யானையைக் கண்டு (தாங்களனைவரு மச்சங்கொண்டு) ஓடினமையையும், தான் ஒருத்தி தனித்ததுவும்—(தோழிமார்களைப் பிரிந்து) தான் ஒருத்திமாத்திரம் தனித்துக்கொண்டமையையும், உலந்து கூவல் இடை வீழ்ந்து வீடியதும்—வருத்தமுற்றுப் (பாழ்ங்) கிணற்றின்கண் விழுந்திறந்தமையையும், தென்றிசைக்கண் நிகழ்வனவும்—யமலோகத்தின்கண் நடக்குஞ் செய்கைகளையும், விரித்து சொற்றாள்—விபரமாகக் கூறினாள். (எ—று)

ஏகாரங்களிரண்டும்—அசைகள். கடகளிறு—வடமொழியாகலி னியல்பாயிற்று. தென்றிசை—ஆகுபெயர். மங்கையர்—பன்னிரண்டு பதின்மூன்று வயசுள்ள இளம்பெண்கள், பண்ணை—மகளிர்கூட்டம், ஈண்டு ஆடுதல்—நீராடுதல். வீடுதல்—இறத்தல். மீளுதல்—உயிர்பெற்றெழுதல். களிறு—ஆண்யானை. "உலந்து" என்பதற்கு, தவறியெனப் பொருள்கோடலுமொன்று. (ககக)

சொன்னமொழியதுகேளாமிகமகிழும்வேலைதனிற்றுகளிறாயோ
ன், கொன்னவிலுமுத்தலைவேற்கூற்றுவன்றனருள்பெற்றுக்குறு
கலோடு, முன்னுறவெதிர்சென்றுபெருங்கிளையும்பன்னியுமா
முனியும்பெற்ற, கன்னியுமவர்தடிவணங்கிப்போற்றிசெயவரன்
முறையேகருணைசெய்தான்.

(இ-ள்) சொன்ன மொழி அதுகேளா—(விருத்தை, யிவ்வாறு விவ
ரித்துச்) சொன்ன அந்த வார்த்தைகளைக் கேட்டு, மிகமகிழும் வேலை
தனில்—(அனைவரும்) மிகவும் மகிழ்ச்சியடைந்துகொண்டிருக்குஞ் சமயத்
தில், துகள் இல் தூயோன்—மாசற்ற பரிசுத்தரான குச்சகமுனிவர், கொ
ல் நவிலும் முத்தலைவேல் கூற்றுவன் தன் அருள்பெற்று குறுகலோடும்—
கொலைத்தொழிலைப் பழகும் மூன்று தலைகளைப் பெற்ற சூலவேலையுடை
ய யமனது கடாட்சத்தைப் பெற்றுக்கொண்டு (அவ்விடத்திற்கு) வருதலும்,
பெரும் கிளையும்—மிக்க சுற்றத்தாரும், பன்னியும்—பத்தினியாகிய மங்க
லையும், மாமுனியும்—மகிமையுள்ள உசத்தியமுனிவரும், பெற்ற கன்னி
யும்—(இவ்விருவரும்) பெற்ற புதல்வியான விருத்தையும், முன்னுற எதிர்
சென்று வந்து—முன்பாக எதிர்கொண்டு வந்து, அடிவணங்கி போற்றி செ
ய—பாதங்களில்நமஸ்கரித்துத் துதிகூற, வரன்முறை கருணைசெய்தான்—
(குச்சகமுனிவர், அவர்களுக்கெல்லாம்) முறைமைப்படி அனுக்கிரகம் செய்
தனர். (எ-று)

ஏகாரங்களிரண்டும்—அசைகள். "கிளை"—அஃறிணைபோல் வந்த உயர்
திணை. கேளா—செய்யா என்னும் வாய்பாட்டுடன்பாட்டு வினையெச்சம்.
கொல்—முதனிலைத் தொழிற்பெயர். செய—தொகுத்தல். "மகிழும் வேலை"
என்பதன் மகரம் குறுக்கம், நவிலல்—செய்தலுமாம். போற்றி—இகரவிகு
திபெற்ற தொழிற்பெயர். முநி—மநநசீலன்: எப்பொழுதுங் கடவுளைத் தி
யானஞ் செய்து நிற்பவன். கன்னி—மணமாகாத பெண். கூற்றுவன் தன்
அருள் பெறுதல்—விருத்தை பிழைக்கும்பொருட்டு யமனிடத்து வரம்பெ
றுதல், "வரன்" என்பதை எழுவாயாக்கி முதன்மையையுடைய குச்சகரெ
னப் பொருள்கொள்ளினும் பொருந்தும்.

தம்புதல்வி யுயிர்பெற்றெழுந்து தனக்கு நிகழ்ந்த சம்பவங்களை விவ
ரித்துச் சொன்னபோ தவர்க்குண்டான களிப்பு, கழிபெருங் களிப்பாக
லின் "மகிழும் வேலை" என்னாது "மிக மகிழும் வேலை" என்றும், முற்
செய்த ஒருதினத்துத் தவத்தால் யானையாகிய விழிந்த பிறப்பை மாற்றி
தேவனாகிய வுயர்ந்த பிறப்பாக்கித் தருமதத்தனைக் சுவர்க்கத்துக்குச் சேர்
த்து, பின் ஒரு தினத்துத் தவத்தால் யமனையழைத்து விருத்தையி னுயி

ரை மீட்டுக் கொடுத்த மகானுபாவராகலின், குச்சகமுனிவரை, "துகளி றூயோன்." என்றும், அவ்வவர்க் கேற்றபடி யனுக்கிரகித்தாராகலின், "வரன்முறையே கருணைசெய்தான்." என்றும் கூறினூர். (கசுஉ)

என்னுயிரும்பெருங்கிளைஞர் தம்முயிருமில்லறத்திற்கியன்றபன்னி, தன்னுயிருநட்டோர்கடமதுயிருநின்றிடயான்றவத்திற்பெற்ற, மின்னுயிர்தந்தருளினையாலரிதோநிற்கிதுவம்மாவேலைஞால, மன்னுயிர்காத்தளிப்பவனுநீயெனவேயெனதுள்ளமதித்ததன்றே.

(இ-ள்) என் உயிரும்—என்னுடைய உயிரும், பெரும் கிளைஞர் தம் உயிரும்—மிகுந்த சுற்றத்தார்களுடைய உயிரும், இல்லறத்திற்கு இயன்ற பன்னிதன் உயிரும்—இல்லறத்திற்கிசைந்த மனைவியினது உயிரும், நட்டோர்கள் தமது உயிரும்—சிநேகிதர்களது உயிரும், நின்றிட—(இறந்துபடாமல்) நிலைத்திருக்கும்படி, யான் தவத்தில் பெற்ற—அடியேன் தவம்புரிந்து பெற்ற, மின் உயிர் தந்து அருளினை—புதல்வியி னுயிரைத் தந்து இரட்சித்தீர், அம்மா—ஆ! ஆ! நிற்கு இது அரிதோ—(தவமகிமையுள்ள) தேவரீருக்கு இஃதருமையானதா, வேலைஞாலம் மன் உயிர் காத்து அளிப்பவனும்—கடல்சூழ்ந்த பூவுலகின்கணிருக்கின்ற சீவவர்க்கங்களையெல்லாங் காத்து இரட்சிப்பவரும், நீ எனவே எனது உள்ளம் மதித்து—தேவரீர் தாமேயென்று அடியேனுடைய மனம் நிச்சயித்தது. (எ-று)

அன்று மேயு மாலும்—அசைகள். எனவே-என்பதன்கணேகாரம்—தேற்றம். ஓகாரம்—எதிர்மறை. அம்மா—வியப்பிடைச்சொல். மின்—ஆகுபெயர். மன்னுயிர்—முக்காலவினைத்தொகை. அளிப்பவனும்—என்பதன்கணும்மை, உயர்வுசிறப்பு. "ஆவீறையும்" என்னும் விதிப்படி. வேலா, வேலையென நின்றது. புத்திரசோகத்தை மேதாவியரும் பொறுக்க முடியாமையாலும், அஃது நஞ்சுபோன்றுயிரை நலிதலாலும், நானிறந்து படுதல் நிச்சயம் அங்ஙனம் நானிறந்துபடவே, என்னை யுயிராகக்கொண் டதற் குடம்பாக வாழ்ந்த மனைவியும், மரஞ்சாயப் பற்றுக்கோடாகப் பற்றியிருந்த வல்லியுங் கிளைகளும் சாயுமாறுபோல உறவினரும் நட்பாளரும் இறந்து படுவரன்றே. அங்ஙனமாகாது, என்மகளைப் பிழைப்பித்துத் தந்தீரென்பார், "என்னுயிரும் பெருங்கிளைஞர் தம்முயிரும் பன்னிதன்னுயிரும் நட்டோர்கடமதுயிருநின்றிடமின்னுயிர் தந்தருளினை" என்றும், தருமதத்தனையும், எங்களையும், புத்திரனை யில்லறத்திருத்தி, யிறந்துபோன முன்னோர்களையு மிரட்சிக்கும் மகானுபாவனும் நீரேயென்பார், "ஞாலமன்னுயிர் காத்தளிப்பவனு நீயெனவே யெனதுள்ள மதித்தது" என்றுங் கூறினூர். பு

த்திரசோகம் மேதாவியாராலும் பொறுக்க முடியாதென்பதை, "புத்திர சோகந்தன்னைப் பொறுப்பரோ பெரியோர்தாமும்" என்பதனாலும், அஃது நஞ்சுபோன்றுயிரை நலியுமென்பதை, "புத்திரசோகமென்னு நஞ்சினாற் பொன்றினன்போல்," என்பதனாலு முணர்க. மேதாவியர் – அறிஞர்.

(கசரு)

ஆர்வமொழியென்னு மலங்காரம்.

வள்ளலையுன்றிருவுளத்தை யாருணர்வார் கவுச்சகனுமகற்கியான் பெற்ற, தெள்ளமிர்தமனையமொழி விருத்தையெனுங் கன்னிகை யைத்திசையினாடிக், கொள்ளுதற்கு வந்தனையோ கூற்றுவனாற் போனவுயிர்குறுகிமீண்டு, மெள்ளவரும்படியழைத்துத் தந்திடு வான்வந்தனையோ விளம்புகையா.

(இ–ள்) வள்ளலே—(வேண்டினோர்க்கு வேண்டியாங்கு) வரையாது அருளுந் தன்மையையுடையவரே, உன்றிருவுளத்தை உணர்வார்யார்—தேவரீரது திருவுளப்பாங்கை யறியுமாற்றலையுடையவர் யாவர் (ஒருவருமிலர்) ஐயா—சுவாமீ! கவுச்சகனும்மகற்கு—(தமது) கவுச்சகராகிய புதல்வருக்கு, யான்பெற்ற—அடியேன் (தவம்புரிந்து) பெற்றெடுத்த, தெள் அமிர்தம் அனையமொழி விருத்தை எனும் கன்னிகையை—தெளிவான தேவாமுதம் போலு மினிய வசனங்களை வசனிக்கும் விருத்தையென்கின்ற பெண்ணை, திசையில் நாடி கொள்ளுதற்கு வந்தனையோ—இத்தேசத்தில் தேடி (மணஞ்செய்வித்துக்) கொள்ளுதற்காக வந்தீரோ, கூற்றுவனால் போனஉயிர்—(அல்லது) யமனாலுடலினின்றும் போன உயிரை, மீண்டும்—மீளவும், குறுகி மெள்ள வரும்படி அழைத்து தந்திடுவான் வந்தனையோ—சமீபித்து மெல்லவாக வரும்பொருட்டு அழைத்துத் தரும்படியாக வந்தீரோ, விளம்புக—(எதன்பொருட்டென்பதை) திருவாய்மலர்ந்தருளுக. (எ–று)

ஓகாரங்களிரண்டும்—விகற்பப்பொருளில்வந்தன. திசை. ஆகுபெயர். எனும்—விகாரம். விளம்புகையா—ஈறுதொகுத்தல். மெள்ள—மெல்லவென்பதன்போலி. "மெள்ளவந்துதன்கடிமனைமேவிய" என்றார் பிறரும். வள்ளலையென்பதன்கணைகாரம். "அன்னையுன்னை" என்பதிற்போல விளிப்பொருளில் வந்தது. அண்மைவிளியாகலிற் சாரியையென்பாருமுளர். யாவர் என்னும் எதிர்மறைவினைக்குறிப்பு யார் என விகாரப்பட்டது. வள்ளல்—வரையாது கொடுப்பவன். அமிர்தம்—மரணத்தைக் கெடுப்பது. கன்னிகை—மணமாகா விளம்பெண்.

குறையிரந்தோர்க்கு வேண்டிய கொடுத்தருள் புரியு மருட்கொடையாளரென்பார், "வள்ளலே" என்றும், மகனுக்கு மணம்புணர்த்த மகட்பேசுமாறு வந்ததனோடு இறந்த வுயிரை யழைத்துக்கொடுத் தருளுதற்கும் வந்தவரீரென்பார், "சவுச்சகனுமகற்குவிருத்தையெனுங்கன்னிகையைக் கொள்ளுதற்கு வந்தனையோ—கூற்றுவனாற் போனவுயிர் குறுகிமீண்டு மெள்ளவரும்படி யழைத்துத் தரநீவான் வந்தனையோ" என்றும், குச்சகமுனிவரி னுயர்வு தோன்ற விங்ஙனம் விதந்து கூறினார். இதுவும் பேஷையலங்காரம்.

(கககூ)

எனமுனிவன் றனைநோக்கி முகமன்கள் பலவெடுத்துக்கூறி
யனையவனை யுடன்கொண்டு சுற்றத்தா ரெல்லாரு மடைந்துசூழ
மனைவியொடும் புதல்வியொடு மடமாதர் தங்களொடும் வல்லையேகித்
தனதுறையு ளிடைப்புகுந்து வீற்றிருந்தா னாற்றரிய தவத்தின்மே
லோன்.

(இ—ள்) ஆற்று அரிய தவத்தின் மேலோன்—செய்தற் கருமையான தவத்தில் மேம்பாடுடைய உசத்தியமுனிவர், முனிவன் தனை நோக்கி—குச்சகமுனிவரைப் பார்த்து, என முகமன்கள் இவை பலவும் எடுத்து கூறி—என்றிடபெற்றித்தாகச் சன்மான வார்த்தைகளிவைபோல்வன பலவற்றையும் விரித்துச் சொல்லி, அனையவனை உடன் கொண்டு—அந்த முனிவரைத் தம்முட னழைத்துக்கொண்டு, சுற்றத்தார் எல்லாரும் அடைந்து சூழ—(தமது) ஞாதியர்களெல்லாருஞ் கூடி (பாகத்திற்) சூழ்ந்துவர மனைவி ஒடும்—மனைவியாகிய மங்கலையம்மையொடும், புதல்வி ஒடும்—மகளாகிய விருத்தையோடும், மடம் மாதர் தங்கள் ஒடும்—இளம்பருவமுள்ள தோழிப்பெண்களோடும், வல்லை ஏகி—மிகு விரைவாகச் சென்று, தனது உறையுள் இடை புகுந்து வீற்றிருந்தான்—தம்முடைய இல்லத்தின்கட் சார்ந்து வீற்றிருந்தனர். (எ—று)

நோக்கி, கூறி, கொண்டு, சூழ, ஏகி, புகுந்து, வீற்றிருந்தானென வியையும். அனையவன்—சுட்டடியாகப் பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயர்.

மடம்—கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமையுமாம். மாதர்—விரும்பப்படுமழகையுடையவர். அது பெண்களுக்கு ஆகுபெயர். "மாதர் காதல்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானும், "மாதர்கொள் மாதரெல்லாம்" என்னுந் திருவாதவூரடிகள் புராணச் செய்யுளானு முணர்க. வல்லை—என்பதில், ஐ—சாரியை. வல்—விரைவுக்குறிப்பு. உறையுள்—வீடு, வீற்றிருத்தல்—பெருஞ்சிறப்போடிருத்தல். வீறு—பகுதி. (ககஙு)

பின்புமொருசிலவைகல்குச்சகனை யவணிருத்திப்பெரியோயிங்ஙன்
னென்புதல்விதனை யளிப்பனுன் மதலைதனைக்கொண் டேகுகெ
ன்னத், தன்புதல்வற்கொடுவரலும் விருத்தைதயெனுங்கன்னிகை
யைத்தழல்சான்றாக, வன்பினொடுநன்னாளினோரை தனில்விதிமு
றையேயருள்செய்தானால்.

(இ—ள்) பின்பும் ஒரு சில வைகல்—(உசத்தியமுனிவர்) அதன் பின்
னரும் ஒரு சிலநாள்கள், குச்சகனை அவண் இருத்தி—குச்சகமுனிவரைய
வ்விடத்தி லிருக்கும்படி செய்து, பெரியோய்—(அதன்மேல் குச்சகமுனி
வரைநோக்கி) பெரியவரே! இங்ஙன் என் புதல்வி தனை அளிப்பன்—இவ்
விடத்திலே யடியேனது புத்திரியை (மணஞ்செய்து) கொடுப்பேன், உன்
மதலைதனைக் கொண்டு ஏகுக என்ன—தேவரீரது புத்திரரை யழைத்துக்
கொண்டு வரக் கடவீரென்று சொல்ல, தன் புதல்வன் கொடு வரலும் (அ
வ்வாறு குச்சகமுனிவர்) தமது புத்திரராகிய மிருககண்டேயரை யழைத்
துக்கொண்டு வருதலும், விருத்தை எனும் கன்னிகையை— (உசத்தியமு
னிவர்) விருத்தையென்கின்ற தமது மகளை, அன்பினொடும்—அன்போ
டும், நல் நாளில் (நல்) ஓரைதனில்—சுபதினத்திலுள்ள சுபமுகூர்த்தத்தில்,
தழல் சான்று ஆக—அக்கினி சாட்சியாக, விதிமுறையே அருள் செய்தா
ன்—(வேதநூலின்) விதிப்படி மணஞ்செய்து கொடுத்தனர். (எ—று)

ஆலுமேயும்—அசைகள். விதிமுறையே—என்பதன்கணேகாரந் தேற்
றம். இங்ஙன்—இங்ஙனமென்பதன் விகாரம். ஏகுகென்ன—ஈறுதொகுத்தல்.
கொண்டு—கொடு என இடைக்குறைந்தது. நல், என்னு மடையோரைக்குங்
கூட்டப்பட்டது. வைகல்—கழிதலென்னும் பொருட்டு. அஃதீண்டு நாளுக்கு
ஆகுபெயர். கன்னிகையை யருள்செய்தல்—கன்னிகாதானம்பண்ணல். தழல்—
பற்றுதலுடையது. ஓரை—இரண்டரைநாழிகைகொண்ட நேரம். பெண்வீட்
டிற்றானே மணம்புணர்த்தல் வழக்கமாகலின், "இங்ஙனென் புதல்வி தனை
யளிப்பன்" என்றார்.

மகளிரிலக்கணத்தினும் விசேடலக்கணங் கூறவந்த கவுச்சகமுனிவ
ரிறந்து மீள வுயிர்பெற்றெழுந்த பெண்ணையும் மணக்கலாகுமோவெனின்
அஃதேகதேசமென்றொழிக. (கசுச)

## வேறு.

**அருள்புரிந்திடுதலுமன்பினனியைந்**
**திருவருமில்லறமியற்றப்பல்பகல்**

கருணைசெய்குச்சகன் கண்டுமாதவம்
புரிதரவேவடபுலத்திற்போயினான்.

(இ—ள்) அருள்புரிந்திடுதலும்—(உசத்தியமுனிவரிவ்வாறு) மணஞ்செய்து கொடுக்கவும், இருவரும்—(மிருககண்டுயர் விருத்தையென்கின்ற இவர்களிருவரும், அன்பினான் இயைந்து—(ஒருவர்மே லொருவர் வைக்கும்) அன்பினால் (பூவும் மணமும்போலக்) கலந்து, இல்லறம் இயற்ற—இல்லறத்தை நடத்திக்கொண்டிருக்க, கருணைசெய் குச்சகன்—(அவர்க்குக்) கிருபை புரிகின்ற குச்சகமுனிவர், பல்பகல் கண்டு—(அவ்வில்லறத்தைப்) பலநாள் பார்த்து (மகிழ்வடைந்து) மாதவம் புரி தர வடபுலத்தில் போயினான்—(பின்பு, தாம்) மகா தவத்தைச் செய்யக் கருதி உத்தரதிசையைநோக்கிப் போயினார். (எ—று)

ஏகாரம்—அசை. புரிந்திடுதலும்—என்பதில், இடுவும், புரிதர, என்பதில்—தரவும், துணைவினைகள். பகல்—இலக்கணை. பல்பகல் இல்லறமியற்றவென்பினுமாம். கருணைசெய்—என்பதற்கு உயிர்களுக்கருள்புரியுமென்பினுமமையும். போயினான், என்பதில்—இன்—இறந்தகால விடைநிலை—ய்—எழுத்துப்பேறு. தொன்றுதொட்டெல்லாருந் தவம்புரிவதும், சித்தியைத் தரும் மங்கலத்தையுடையது முத்தரதிசையாகலின், "மாதவம்புரிதரவடபுலத்திற் போயினான்."என்றார்.

புத்திரப் பேற்றின்பொருட்டில்லறத்திருந்து புத்திரரைப்பெற்றுப்பக்குவப்படுத்துந் துணையும் பாதுகாத்து, தம்போலில்லறத்திருத்தித் தாம் தவம்புரிதலே முனிவர்கடனாகலிற் குச்சகமுனிவர் புதல்வரை யில்லறத்து நிறுவி அவ்வில்லறச்சிறப்பைச் சிலநாளிருந்து கண்டு களித்துக்கொண்டு தவம்புரியுமாறு சென்றாரென்பதாம்.

இதுமுதற் பன்னிரண்டு செய்யுட்கள் பெரும்பாலும் மூன்றாஞ்சீர் மாச்சீரும் ஏனைமூன்றும் விளச்சீருமாய் வந்த அளவடி நான்குகொண்டகலிவிருத்தங்கள். (கஎ)

போதலுமிருந்திடும்புனிதவேதியன்
மாதவவலியினான்மாதினோன்பினான்
மேதினியியந்திடமிருகண்டனென்போர்
காதலனுதித்தனன் கணிப்பில்காட்சியான்.

(இ—ள்) போதலும்—(குச்சகமுனிவர் தவஞ்செய்யப்) போனபின்பு இருந்திடும் புனித வேதியன் மாதவவலியினால்—(இல்வாழ்க்கையில்) இருக்

கும் சுத்தமுள்ள வந்தணராகிய மிருககண்டூய முனிவரின் மகா தவவலிமையினாலும், மாதின் நோன்பினால்—(அவர் மனைவியாகிய) விருத்தையின் விரத பலத்தினாலும், மேதினி வியந்திட—உலகத்திலுள்ளோ ரதிசயமடைய, கணிப்பு இல் காட்சியான்—(இவ்வளவென்று) மதிக்கவியலாத பேரறிவையுடையவராகி, மிருகண்டு என்ன ஓர் காதலன் உதித்தனன்—மிருகண்டு என்று ஒரு புத்திரர் தோன்றினார். (எ-று)

காட்சியான்—முற்றெச்சம். மேதினி—ஆகுபெயர். அருள்செய்சாலும், அருள்புரிந்திடுதலும், போயினான், போதலும, எனவந்தமையின் இம்மூன்று செய்யுட்களும் மந்தாதித் தொடைகள். ஆல்—இரண்டுமேதுப பொருட்டு. அன்னை தந்தையரின் தகுதியுடைமைந்துபபுதல்வரே சான்றாகலின், "புனிதவேதியன்மாதவவலியினான்." என்றும், "மாதினோன்பினான்" என்றும், கூறினார். இதனை, "தக்கார் தகவில ரென்பசவரவ—ரெச்சத்தாற் காணப்படும்." என்னுந் தேவர்குறளானுமுணர்க. வேதியன்—வேதமோதற்கும் ஓதுவித்தற்கு முரியவன். மேதினி—உடற்கொழுபபினால் நனைந்தது. விட்டுணுமூர்த்தியினால் கொல்லபபட்ட மதுகைடவரென்னு மசுரர்களுடைய கொழுப்பினால் நனைந்தமைபற்றிய பூமிக்குக் காரணபபெயராயிற்று. காட்சி—ஞானவுணர்வு. காதலன் - புத்திரன், அன்புடையவன். மிருககண்டூயன் புத்திரன் மிருகண்டு; சம்பந்தம்பற்றிய தத்திதாந்தபபெயர். புத்திரரின் மகிமை தோன்ற, "பிறந்தனனென்னாது," "உதித்தனன்" என்றார். (௧௧௮)

அப்புதல்வற்கியாண்டா றுசென் றுழி
மெய்ப்பிரமச்செபலைவிளங்குபான்மையான்
முப்புரிநூல்வினைமுடித்துத் தாதைபோற்
செப்பருமாதவஞ்செய்யப்போயினான்.

(இ-ள்) அ புதல்வற்கு—(இங்ஙனந் தோன்றிய மிருகண்டு என்னும்) அந்தப் புதல்வருக்கு, யாண்டு ஆறு சென்ற உழி—வருடமாறு கழிந்தபொழுது, மெய் பிரமம் செயல்விளங்கும் பான்மை ஆன்—உண்மையான பிராமணத்துவம் விளங்கும்பொருட்டு,* மு புரிநூல் வினை முடித்து—உபவீதச் சடங்கை நிறைவேற்றிவிட்டு: தாதைபோல்—(அந்த மிருககண்டூயமுனிவர், தமது) பிதாவாகிய குச்சகமுனிவரைப்போல, செப்பு அரும் மாதவம் செய்ய போயினான்—(தாமும்) சொல்லுதற்கருமையான மகா தவத்தைச் செய்யும்படி(உத்தரதிசையை நாடிப்) போயினார். (எ-று)

சென்றுழி—ஈறுதொகுத்தல். செப்பு—முதனிலைத் தொழிற்பெயர். "யாண்டுஆறுசென்றுழி" என்றமையின், ஏழாம்வயதினென்பது கருத்து. பிறந்ததுமுதல் ஏழாவதுவயதின், அல்லது, கருப்பமுண்டானதுமுதல் எட்ட

வது வயதின், உபநயனஞ் செய்யவேண்டுவது நூல்விதியென்க. "அப்புத ல்வற்கு முப்புரிநூன்வினை முடித்து" எனக்கூட்டுக. இதனானன்றே, பிராம ணரை, இருபிறப்பாளரென்பர். பிரமம்—வேதகம். அதனையோதுதற்கதிகா ரமுண்மையின், பிராமணத்துவத்தைப் "பிரமச்செயல்" என்றார். வடமு ம் மூன்று, புரியும்மூன்று, இழையும் மூன்றாக விருத்தல்பற்றிப் பூணூலை, முப்புரிநூலென்பர். "பிரமச்செயல்விளங்குபான்மையால் முப்புரிநூல் வி னைமுடித்து" என்பதற்கு, பிரமசரியம் விளங்கும்பொருட்டினால் பூணூற் சடங்கைமுடித்து எனப் பொருள்கோடலுமாம். பிரமசாரி யொற்றைப்பூ ணூல் தரிக்கவேண்டுவது முண்மையாகலின்—"மெய்ப்பிரமச்செயல்விளங் குபான்மையான்" என்பதற்கு உண்மையான பரப்பிரமத்தின் செயல்க ளைத் தெரிந்திருக்கும் தன்மையையுடைய மிருககண்டேயர், எனப், பொரு ள்கொள்ளினுமாம். பிரமம்—முழுமுதற்கடவுள். உபவீதச்சடங்கு—பூணூல் தரித்தற்கிரியை. "தாதைபோல், போயினான்" என்றவுவமையால், வீடு பேற்றைக் கருதித் தவம்புரிய வடதிசையை நோக்கிப் போனாரென்பது பெறப்படும்.

இந்தக் கவுச்சகமுனிவர், இல்லறத்திற் கிஞ்சித்தும் பற்றற்றவராக லானும், தந்தைசொல்லைக் கடப்பது பாவமாகுமென்று அதற்குடன்பட்ட பேரறிவாளராகலானும், புத்திரரைப் பெற்றவுடன் அவர்க்கு மணஞ்செய் து வைத்தலைப் பொருட்படுத்தாது, உபவீதச்சடங்கை மாத்திரம் முடித்து விட்டுத் தாம் தவஞ்செய்யப்போனாரென்பதாம். (ககக)

ஊற்றமாமிருககண்டேயனென்றிடு
மாற்றன்மாமுனிவரனகலவன்னவன்
றோற்றமாகியசுதன்றொன்மைநாடியே
போற்றினனாதியிற்புரியுஞ்செய்கடன்.

(இ—ள்) ஊற்றம் ஆம்—உண்மைஞானந்தோன்றும், மிருககண்டேயன் என்றிடும் ஆற்றன் மாமுனிவரன் அகல—மிருககண்டேயரென்று விசேடித் துச் சொல்லப்படும் தவவலியையுடைய மகாமுனிசிரேட்டர் (தவஞ்செய் யுமாறு, தம்மைப்பிரிந்து) போகவும், அன்னவன் தோற்றம் ஆகிய சுதன் —(பின்பு) அம்மிருககண்டேய முனிவரது தோற்றம்போலுள்ள புத்திரரா ன மிருகண்டர், தொன்மை நாடியே—பழமையான முறைமைகளை யாரா ய்ந்தபடியே, ஆதியில் புரியும் செய்கடன் போற்றினன்—முதலி லனுட் டிக்கப்படும் பிரமசரிய விரதத்தை யநுட்டித்தனர். (எ—று)

வகாரம்—தோற்றம் அன்னவன்—சுட்டுமாரு. ஊற்றம், உண்மைஞானம். "ஊற்றமாமிருககண்டேயன்" என்பதற்கு, தமக்கு ஊன்றுகோல்போல வுற்

ற துணையாகு மிருககண்டேயனென்பினுமமையும். ஊற்றம்—ஊன்றுகோல்; இனி, ஆவுரோஞ்சிக் குற்றிபோல அசைவின்மையைப் பொருந்தியிருந்த மிருககண்டேயன் என்பதுமொன்று. ஊற்றம்—அசைவின்மை. ஆற்றல்—ஒன்றுசெய்யிற், சொல்லிற் றப்பாது பலிக்கும் வல்லமை. இதனை, "நிறைமொழிமாந்தர் பெருமைநிலத்து—மறைமொழி காட்டிவிடும்." எனவும், "இறந்தமைந்தசார்புடையராயினுமுய்யார்—சிறந்தமைந்தசீரார்செறின்." எனவருந் தேவர்குறளானுணர்க.

கவுச்சகமுனிவரை, தத்துவஞானமுடையரென்பது போதர, "ஊற்றமாமிருககண்டேயன்" என்றும், திருமாலினால், பெருந்தவமெனக்கண்டு காரணங் கருதிக் கொடுக்கப்பட்ட விசேடநாமமென்பது போதர, "மிருககண்டேயனென்றிடும்" என்றும், மிருகண்டரை, தந்தையினுருவுங் குணனுமொப்பப் பிறந்தவரென்பது போதர, "அன்னவன் றோற்றமாகிய சுதன்" என்றும், தொன்றுதொட்டு முதன்முதலனுட்டிப்பது பிரமசரியவிரதமென்பது போதர, "தொன்மைநாடியாதியிற் புரியுஞ் செய்கடன்" என்றும், அதனை வழுவாது அநுட்டித்தாரென்பது போதர, "போற்றினன்" என்றுங் கூறினார். (கஎ)

சொற்கலைதெரிமருத்துவதியென்றிடு
முற்கலன்மகடனைமுறைவழாதுபின்
னற்கலையணிகலனல்கிநீக்கிய
வற்கலையுடையினன்வதுவைமுற்றினான்.

(இ—ள்) பின்—(பிரமசரிய விரதத்தை யநுட்டித்து முடித்த) பின்பு, நீக்கியவற்கலை உடையினன்—அகற்றிய மரவுரியாடையையுடையவரான மிருகண்டர், முறைவழாது—(இரண்டாவ தநுட்டித்தற்பாலதான கிருகஸ்தாச்சிரம) முறைமை தவறாமல், சொல்கலை தெரி—சொல்லுருபமாகவிளங்கும் கலைஞானங்களைக் கற்றுணர்ந்த, மருத்துவதி என்றிடும்—மருத்துவதியென்று சொல்லப்படும், முற்கலன் மகள் தனை—முற்கலமுனிவரது புத்திரியாரை, நற்கலை அணிகலன் நல்கி வதுவை முற்றினான்—நல்ல ஆடையையும் ஆபரணத்தையுங் கொடுத்து மணஞ்செய்து கொண்டனர்.

உடையினன்—முற்றெச்சமுமாம். வழாது—வழுவாதென்பதன் மரூஉ. சொல்கலையென்பதற்குப் புகழமைந்த கலையெனினு மிழுக்காது. வற்கலை—மரவுரி. அஃது, பூர்சமென்னு மொருவகை மரத்தினின்று முரித்தெடுக்கப்பட்ட தோல். நீக்கியவற்கலையுடையையுடையவனாகி, எனவெச்சமாக்குங்கால், கன்னிகையாக விருக்கும்போது உடுத்திய மரவுரியைப் பட்டாடையைக் கொடுத்து நீக்கி, தாமும் பட்டாடையைத் தரித்து நீக்கியெனப் பொ.

ருள்கொள்க. ஈண்டு, கலை—என்றது கூறையையும். அணிகலன்—என்றது திருமங்கலியத்தையுங் குறிக்கும். செய்யத்தக்கன, தகாதனவற்றையுணர்ந்து இல்லறத்தைக் கடைபோக நடத்தற்குரிய மகளிர்க்குக் கல்வியறிவு சிறப்புடைத்தாகலின் அஃதிவர்க்குடைமை தோன்ற, "சொற்கலைதெரிமருத்துவதி" யென்றார். இதனை, "பெருந் தடங்கட் பிறைநுதலார்க்கெலாம்—பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்—வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்—விருந்துமன்றி விளைவன யாவையே." என்பதனானுமுணர்க. மகள்தனை, நல்கி, வதுவை முற்றினனென்ன வினைபபும். முற்கலன்—முக்கலன்.

பிரமசரியத்துக்கன்றிக் கிருகஸ்தாச்சிரமத்திற்கு மாவுரி விலக்காகலின், "நீக்கியவற்கலையுடையினன்" என்றும், பிரமசரியம் முடிந்தவுடன் கிருகஸ்தாச்சிரம மநுட்டிப்பது நெறியேயாகலின், "முறைவழாது" என்றும், ஆடையாபரணம் கொடுத்து மணஞ்செய்தல் வழக்கமாகலின், "கலை பணிகலனல்கி." என்றுங் கூறினார். (கஉக)

இருந்தனனநாமயமென்னும்பேரொடு
பொருந்தியவனத்திடைப்புதல்வரின்றியே
வருந்தினனறமரொடுமாதுதன்னொடு
மருந்தவன்காசியையடைதன்மேயினன்.

(இ—ள்) அரும் தவன்—அருமையான தவத்தையுடைய மிருகண்டு முனிவர், மாது தன்னொடும் தமரொடும்—(தமது) மனைவியாகிய மருத்துவதியோடும் சுற்றத்தாரோடும், அநாமயம் என்னும் பேரொடு பொருந்திய வனத்திடை இருந்தனன்—அநாமயமென்னும் பெயருடன் பொருந்தியிருக்கும் தபோவனத்தின்கண் (இல்லறம் புரிந்துகொண்டு) இருந்து, புதல்வர் இன்றியே வருந்தினன்—புத்திரப்பேறு இல்லாமல் வருத்தமடைந்து, காசியை அடைதல் மேயினன்—(அப் புத்திரப்பேற்றைக் கருதி, புண்ணியக்ஷேத்திரமாகிய) காசியம்பதியைச் சேர்வாராயினர். (எ—று)

ஏகாரம்—பிரிநிலை. இருந்தனன், வருந்தினன்—முற்றெச்சங்கள் பேர் பெயரென்பதன்மரூஉ. அடைதல் மேயினன்—அடைதலைப் பொருந்தினன், எனவேயடைந்தானென்பது கருத்து. வடமொழியாகிய, காசி—என்னும் பெயருக்கு (சிவரூபமாகிய தேஜசுதன்னிடத்தில்) பிரகாசிக்கப்பெற்றுள்ளது என்பதுபொருள். முத்திஸ்தலங்களேழனுள் முதன்மைபெற்றதும், விராட்புருடனுக்கு ஆக்ஞாஸ்தானமாக உள்ளதும், (புருவமத்தி) சிந்திக்கக்கூறப்பிரதிட்டை பண்ணத்திருப்பணிசெய்ய இட்டசித்திகளைவழங்கிப் பாவத்தைப்போக்குவது மிக்காசியம்பதியேயாம். முத்திஸ்தலங்களேழனுள் முதன்மைபெற்றமையை, "காசிமாயாபுரியவந்தி காஞ்சிமற்—றேசைகொளயோத்திவண்டுவ

மைமெயாப்பறு-மேசிலா மதுரையென்றிசைக்குமேழ்பதி-மாசறமுத்தியை வழங்குமென்பவே" என்பதனாலும், விராட்புருடனுக்கு ஆக்ஞாஸ்தானமாவுள்ளதென்பதை, "திருவளராரூர்மூலந் திருவானைக் காவேகும்ப- மருவளர்பொழில்சூழண்ணாமலை மணிபூர நீவி-ரிருவருங் கண்டடைன்ற மிசையமாந் திருக்காளத்தி-பொருருவருங்கண்டமாகும் புருவமத்திமயாங்காசி" என்பதனாலும், சிந்திக்கக்கூறப் பிரதிட்டைபண்ணத்திருப்பணிசெய்ய இட்டசித்திவழங்கிப் பாவத்தைப்போக்குமென்பதை, "சிலரொருகாசிரூபஞ் சிந்தித்துங்காசியென்றே-சிலரிடைபெறுது சொற்றுஞ்சிலரதையடைந்தமர்ந்துஞ்-சிலரதனிடத்துத்தெய்வச் சிவப்பிரதிட்டைசெய்துஞ்-சிலர் சிறுதானயங்குச்செய்தும் போக்கினர்தம் பாவம்." என்பதனாலுமுணர்க. கஎஉ

அடைந்ததோர்பொழுதினிலமரர்யாவருங்
கடைந்திடுதிரைக்கடலனையகங்கைநீர்
குடைந்தனனுடினன் குழுமிமாதவர்
மிடைந்திடுமறுகிடைவிரைவின் மேவினன்.

(இ—ள்) அடைந்தது ஓர்பொழுதினில்—(காசிக்ஷேத்திரத்தில்) அடைந்தவுடனே அமரர்யாவரும்கடைந்திடு திரை கடல் அனைய-தேவர்களெல்லோரும் (ஒருங்குகூடி) மத்தித்தவலைகளையுடைய திருப்பாற்கடலைநிகர்த்த, கங்கைநீர் குடைந்தனன் ஆடினன்-கங்கைநீரில்குடைந்து ஸ்நானஞ்செய்து, மாதவர்குழுமி மிடைந்திடுமறுகு இடைவிரைவின்மேவினன்-பெருமை பொருந்திய தவத்தையுடைய பிராமணர்கள் நெருங்கியிருக்கின்ற திருவீதியினிடத்து அதிசீக்கிரத்திற்சேர்ந்தனர். (எ—று)

குடைந்தனன், ஆடினன்-முற்றெச்சங்கள். யாவர். என்பதில் யா-எஞ்சாமைப்பொருட்டு. திரைக்கடல். உருபும்பயனுமுடன்தொக்க இரண்டாம் வேற்றுமைத்தொகை. குடைதல்-துளைதல். அமரர்-மரணமில்லாதவர். கங்காதீர்த்தம், வெண்மைநிறமும் இனிமையும் நீர்மிகுதியுமுடைமையால், திருப்பாற்கடலைஉவமை கூறினர். கங்கை—உமையினது திருக்கரத்துநின்றும் வந்தது. அன்றியும், விட்டுணுவின்பாதத்துநின்றும் வந்ததெனவும், சிவபிரானது திருமுடியினின்றும் வந்ததெனவும்,மேலுலகத்து நின்றும்வந்ததெனவும் காரணப்பொருள்படும். ஈண்டுக்காசிவாழந்தணரை, "மாதவர்" என்றார். சிவப்பிரகாசமாகி முத்திகரங்களுள் முதலாகிவிளங்கு மந்தக்ஷேத்திரத்தில் பிறந்து வசித்து இறப்பதற்குப் பூருவசென்மத்துச் செய்த பெருந்தவமுடையாராகலின் முனிவரென்பதுமொன்று.

முன்னொருகாலத்துத் தேவருமசுரருங் கூடி யமுதமெடுக்குமாறு திருப்பாற்கடலைக் கடைந்தமையின், பாற்கடலை, "அமரர்யாவருங்கடைந்திடு திரைக்கடல்" என்றார்.

பொன்றிரண்மாமதில்புடையதாமணி
கன்றிகையென்பதோர்கடவுளாலயஞ்
சென்றனன்சூழ்ந்தனன்றிங்கள்வேணியான்
மன்றமர்திருவடிவணங்கிப்போற்றினான்.

இ-ள். பொன்றிரள் மாமதில் புடை அது ஆம்—பொற்றிரள்களாற் செய்யப்பட்ட பெரிய மதிலைப் பக்கத்துடையதாகும். மணிகன்றிகை என்பது ஓர்கடவுள் ஆலயம்சென்றனன்-மணிகர்ணிகை யென்றுசொல்லப்படுவதான ஒப்பற்ற சிவாலயத்தினுட் சென்று. சூழ்ந்தனன்-(அவ்வாலயத்தைப்) பிரதக்ஷணம்பண்ணி. திங்கள்வேணியான்-(அங்குச் சாந்நித்தியமாக வெழுந்தருளியிருக்கும்) சந்திரகலையைச்சூடிய சடாமகுடத்தையுடைய விசுவநாதசுவாமியினது, மன்றுஅமர்திரு அடிவணங்கிப்போற்றினான்—கனகசபையில் (அநவரதம்) நடனமாடிக்கொண்டிருக்கும் (குஞ்சித) திருப்பாதங்களைக் கும்பிட்டுத் தோத்திரஞ் செய்தனர். (எ-று)

சென்றனன, சூழ்ந்தனன்—முற்றெச்சங்கள். மணிகன்றிகை—மணிகர்ணிகையென்னும் வடமொழிச்சிதைவு. மணி—இரத்தினம். கர்ணிகை—காதணி, அஃது கங்கைக்கு—ஆகுபெயர். மணிகன்றிகையெனப் பெயர்பெற்ற கங்கையினருகிலுள்ள ஆலயத்தை, மணிகன்றிகை, என்றது, இலக்கணை. மா—மஹா, என்னும் வடசொற்றிரிபு. ஆகும், என்பது ஆமென நின்றது. அமர் திருவடி—முக்காலவினைத்தொகை. பூ—என்பது தாமரைப்பூவையுணர்த்துமாறுபோல, மன்று, என்பதுங் கனகசபையையுணர்த்திற்று. பஞ்சசபைகளென்பினு மமையும். பஞ்சசபைகளாவன—சிதம்பரத்துக் கனகசபையும், மதுரையின் வெள்ளிச்சபையும், திருநெல்வேலியின் தாமிரசபையும், திருக்குற்றாலத்துச் சித்திரசபையும், திருவாலங்காட்டு இரத்தினசபையுமாம்.

மணிகர்ணிகை, யென்பது கங்காநதியின் ஸ்நானகட்டங்கள் பலவற்றுள் ஒன்று, முற்காலத்திலே சிவபெருமான் விட்டுணுமூர்த்தியை நோக்கி, ''உன்பெயர் நாராயணன் உன்னிடத்திலுண்டாகிய சுவாசம் வேதமாகும் அதனால் நீ யாவையுமுணர்வாய்'' என்று திருவாய் மலர்ந்தனர். (இதனை, ''தண்ணறும் பூவைவண்ணன் றமரை வதனநோக்கி—நண்ணுநின் பெயரொன்று நாரணனாகமற்று—னுண்ணிக ழுயிர்ப்புவேத மவற்றினா லெவையுமோர்கென்—றண்ணலு முலகம்பூத்த வணங்கொடு மறைந்துபோனான்'' என்பதனாலுணர்க.) பின்பு விட்டுணுமூர்த்தி காசியம்பதியையடைந்து சக்கரப்படையினால்ஒரு தடாகத்தைத் தோண்டி, சரீரத்தி லூறிய வெயர்வையினா லதனை நிரப்பி அதன் கரையிலிருந்து ஐம்பதினாயிரம் வருடம் அருந்

தவஞ் செய்தனர், (இதனை, "ஐயன தாளைசென்னி கொண்டலர் கமலக் கண்ணன்—கையுறு நேமியாலோர் கடிமலர் வாவிதொட்டு—மெய்யுறு வெயர் வுதன்னு னிறைத்தனன் கரையின்மேவி—மையிலங் தயுதமாண்டு வான்ற வமாற்றினனே." என்பதனாலுணர்க) சிவபெருமா னத்தவத்திற் கிரங்கி யுமையோடு 'மாங்கெழுந்தருளி, விட்டுணுவே உன் தவத்திற்காகச் சந்தோஷப்பட்டோம் என்று சிரமசைத்து வேண்டும் வரங்களைக் கேளென்ன, (இதனை, "முருகவிழ் துளவத்தாண்டார் துயல்வரு முழவுத் திண்டோட்—டிருமறு மார்பவுன்றன் செய்தவ மகிழ்ச்சிகூர்ந்தேங்—கருதுவ யாவுமின்னே தருகுவங் கழறுகென்ன—வுருகிய வுள்ளத்தோடும் பணிந்தவ னுரைக்கலுற்றான்." என்பதனாலுணர்க) தேவரீரிடத்து நீங்காத வன்புதந்து மயக்கத்தை நீக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, அவ்வாறே யருளினோம், உனது தவத்தை நோக்கி யாம் சிரமசைத்தபோது நமது குண்டலத்திலிருந்த மணி இத் தடாகத்தில் வீழ்ந்தமையால், இத்தடாகம் மணிகர்ணிகையென வழங்கக் கடவது இதில் ஸ்நானஞ்செய்தோர் பெறுதற்கரிய வீடுபேற்றை யடைவர், என்று திருவாய்மலர்ந்தருளிச் செய்தனர். (இதனை, "களங்கனி யனையமேனிக் கண்ணநின் றவத்தென் சென்னி—துளங்கலுங் குழையிற் றூழ்ந்த சுடர்மணி விழுந்தவாற்றால்—வளங்கெழு மிந்தவாவிக் கொளிமணி கன்னிகைப்பேர்—விளங்குக விதனிற் றோய்ந்தோர் பெறலரும் வீடு சேர்வார்" என்பதனாலுணர்க) விட்டுணுமூர்த்தி சக்கரத்தால் தோண்டினமையிற் சக்கரதீர்த்தமெனவும், சிவபிரானது காதணியின் மணி விழுந்தமையின் மணிகர்ணிகையெனவும் பெயர்பெறும்.

குறையிரந்தோர்க்கு அக்குறைதீர்த்தருள்புரியு மருட்டியாகியென்பார், "திங்கள்வேணியான்" என்றார். இக்கருத்துடையடையால் மிருகண்டர்க்குத் தப்பாது புத்திரபேற்றைக் கொடுப்பரென்ப துள்ளுறை. இது, கருத்துடையடையென்னு மலங்காரம். (கஎச)

**மெய்ப்படுமறையுணர்மிருகண்டென்பவ**
**னப்பெருங்கோயிலுக்கணித்தொர்பாங்கரிற்**
**செப்புறுமாகமத்தெளிவுநாடியே**
**மைப்பெருங்கண்டனைவழிபட்டானரோ.**

(இ—ள்) மெய்படு மறை உணர் மிருகண்டு என்பவன்—உண்மை பொருந்திய வேதங்களைக் கற்றுணர்ந்த மிருகண்டு என்னு மம்முனிவர், அ பெரும் கோயிலுக்கு அணித்து ஓர் பாங்கரில்—அந்தப் பெருமைபொருந்திய (மணிகர்ணிகையென்னும்) திருக்கோவிலுக்குச் சமீபமாகவுள்ள ஓரிடத்தில், ஆகமம் செப்புறும் தெளிவு நாடி—சிவாகமங்கள் கூறும் தெளிவான

கொள்கையை யுணர்ந்து, மை பெரும் கண்டனை வழிபட்டான்—(அக்கொள்கையின்படி) பெருமைதங்கிய திருநீலகண்டனான சிவபெருமானை (லிங்கப்பிரதிட்டை செய்து) பூசித்தனர். (எ—று)

அரோ, ஏ—அசைகள். ஏகாரந்தேற்றமெனினுமாம். கோயில்—கோவிலெனவும் வழங்கும். பாங்கர்—போலி. உறு—துணைவினை. வேதத்திற் கூறப்பட்டுள்ள தத்துவங்களுண்மையானும், மந்திரங்க ளுண்மையாக விருத்தலானும், "மெய்ப்பமெறை" என்றார். மறை—மறைவாகவுள்ளது. செப்புறும் ஆகமம்—என நின்றுங்குவைத்து ஆதியிற் சிவபெருமானாற் சொல்லப்பட்ட ஆகமம் எனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். ஆகமம்—ஆப்தவாக்கியம். அஃது, வாதுளம்முதல், காமிகம்றுதியாக விருபத்தெட்டென் க. வேதம், ஆகமம் என்னு மிரண்டனுள் ஆகமம், சிவபிரானுக்கே யுரிய தாய்ச் சிறப்புற்றிருத்தலானும், சிவபிரானைத் தியானம்பண்ணல், பிரதிட்டைசெய்தல், பூசைசெய்தல் முதலிய விதிகளைக் கூறுவது மதுவேயாக விருத்தலானும், "ஆகமத்தெளிவுகாடிமைபெருங்கண்டனைவழிபட்டான்." என்றார். தெளிவு—தெளிந்தபொருள், சித்தாந்தம்.

தீயவற்றையும் நல்லவாக்கி தம்மைப் புகலிடமாய்க்கொண் டடைந்தோரையு மிரட்சிக்குங் கடவுளென்பது போதர "மைப்பெருங் கண்டன்" என்றார். இதுவும் மேலையலங்காரம். (கஎ௫)

ஆதவமபனிமழையனிலத்தச்சுறுப்
பாதவமாமெனப்பருவமாறினும்
பேதைபங்குடையவெம்பிரானையுன்னியே
மாதவம்புரிந்தனன்மதலைவேண்டியே.

(இ—ள்) மதலை வேண்டி—(மிருகண்டு முனிவர்) புத்திரபேற்றை விரும்பி, ஆதவம் பனிமழை அனிலம் அச்சுறு—வெயிலும் பனியும் மழையும் காற்றுமாகிய இவற்றிற்கு அச்சபடாமல், பாதவம் ஆம் என—மரமாகுமென்று சொல்லும்படி (சலனமில்லாமல் நின்று) பருவம் ஆறினும்—ஆறு பருவங்களினும், பேதை பங்கு உடைய எம் பிரானை உன்னி—உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய எங்கள் தலைவரான சிவபெருமானைத் தியானித்து, மாதவம் புரிந்தனன்—மகா தவஞ் செய்தனர். (எ—று)

ஏகாரங்கள்—அசை. அத்து—சாரியை. அச்சுறு—ஈறுகெட்டஎதிர்மறை வினையெச்சம். அச்சுறாமல் புரிந்தனனெனக் கூட்டுக. அஞ்சு, என்னும் முதனிலைத்தொழிற்பெயர், அச்சு, எனத் திரிந்தது. ஆம்—அசையுமாம். உம்மை, முற்றுப்பொருளது. எம்—என்னும் பன்மை சகல வுயிர்மனையுங்

குறிக்கும். பருவம், இரண்டு மாதங் கொண்ட காலம். ஆறு பருவங்களான ன—இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி—வெயிலினாலும், மழையினாலும், காற்றினாலும் வருத்தப்படாமல் வருடமொன்றுக்குத் தவம்புரிந்தனரென்க. ஆதவம்—வெயில். பாதவம்—மரம். ஆதவம்—நன்றாகத் தபிப்பது. பாதவம்—பாதத்தால் (நீரைக்) குடிப்பது.

ஆன்மாக்களுக்குப் போகத்தையூட்டியும், வினையைக் கடிந்தும் வீடுபேற்றைக் கொடுக்குமாறு தாமும் போகியா யில்லறத்திருக்கு மர்த்தநாரீஸ்வரமூர்த்தியென்பதும், இல்லறத்திற் கின்றியமையாப் புத்திரபேற்றைக் கொடுக்கும் பேரருளாளரென்பதும் போதர, யோகமூர்த்தியாகிய சிவபெருமானை, "பேதைபங்குடையவெம்பிரான்" என்றார். ஆன்மாக்களுக்குப் போகத்தையூட்டுமாறு சிவபெருமான் போகமூர்த்தியா யிருப்பரென்பதை, "போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார்—யோகியா யிருந்துயிர்க்கு யோகத்தைப் புரிதலோரார்—வேகியா னாற்போற் செய்த வினையினை வீட்டலோரார்—யூகியா மூடரெல்லா மும்பரி னொருவனென்பர்." என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தாலும், இச்சைவயத்தராய்த் தன்னின் வேறாய வோர்பெண்ணைப் பாகத்திலிருத்தினரோவெனின், அற்றன்று, தமது அருட்சத்தியைத்தானே பெண்ணுருபமாக்கி வைத்தாரென்பதை, "ஆன தன்னருளையாங்கோ ராயிழையாகநல்கி," என விந்நூலாசிரியர் மேற்கூறியிருத்தலானுமுணர்க.

"பேதைபங்குடையவெம்பிரான்" என்பதற்கு முமையையிடப்பாகமாகவுள்ள வெம்பிரானென்பது பொருள். அதன் வரலாறு,

முன்னொருகாலத்திலே கைலாசமலையில் சிவபெருமானு முமாதேவியும் ஒரு ஆசனத்தில் நெருங்க வீற்றிருந்தபொழுது, பிருங்கு மகாமுனிவர் சிவபெருமானை மாத்திரமே வலம்வரக் கருதி வண்டுருபங்கொண்டு ஆசனத்தை இடையில் துளைத்துக்கொண்டு நுழைந்து சென்று உமையைப் பிரித்து சிவபெருமானைமாத்திரம் வலம்வர, அதுகண்ட வெம்பெருமாட்டி பரமேஸ்வரக்கடவுளைநோக்கி முனிவன் என்னை வலம்வராததற்குக் காரணமென்னை யென்று வினவ, சிவபெருமான், இம்மை மறுமைகளிலிட்ட சித்திகளைப் பெற விரும்புபவர் உன்னைச் சேர்த்தும், வீடுபேற்றை விரும்புபவர் என்னை மாத்திரமும் வழிபடுவர்; என்று திருவாய்மலர்ந்தருளிச் செய்ய, அதுகேட்ட நம்பெருமுதல்வி பெருமானது திருவுருவத்தைப் பிரிந்திருந்தமையாலன்றோ, எனக்கு இவ்விழிவு சம்பவித்ததென்று வருத்தமுற்று சிவபிரானை விட்டுப் பிரியாதிருக்கக்கருதி, புண்ணியக்ஷேத்திரமாகிய திருக்கேதாரத்தையடைந்து அங்குத் தவம்புரிந்து எம்பிரானது வடி

வத்திலே இடப்பாகத்தைத் தனக்கு இடமாகப்பெற்று அவ்வடிவத்திலே அபின்னமாகக் கலந்திருந்தனர் என்பதாம். (கஎசு)

அருந்தவமோரியாண்டாற்றத்தொல்லைநாட்
பொருந்தியமூவெயில்பொடித்தபுங்கவன்,
வரந்தனையுதவுவான்வந்துதோன்றலு
மிருந்தவமுனிவரனிறைஞ்சிப்போற்றினான்.

(இ-ள்) அரும் தவம் ஓர் யாண்டு ஆற்ற—(இவ்வாறாக) செய்தற்கருமையான தவத்தை (மிருகண்டுமுனிவர்) ஒருவருடங்காறும் செய்துகொண்டிருகையில், தொல்லை நாள் பொருந்திய—முற்காலத்தி லிருந்த, மூ எயில் பொடித்த புங்கவன்—திரிபுரங்களை யெரித்தருளிய சிவபெருமான், வரம் தனை உதவுவான் வந்து தோன்றலும்—(அவருக்கு) வரத்தைக் கொடுக்கும்படி வந்து பிரசன்னமாகவும், இரும் தவ முனிவரன் இறைஞ்சி போற்றினான்—பெருந் தவத்தையுடைய முனிசிரேட்டரான மிருகண்டு முனிவர் உடனே வணங்கித் தோத்திரஞ்செய்தனர். (எ—று)

ஓரியாண்டு—என்பதன்கணிகரம் "தன்னொழிமெய்ம்முன்யவ்வரினிகரந்துன்னுமென் றுதுணிநருமுளரே." என்னும் விதியான்வந்த சாரியை. ஆற்றத்தோன்றலும், என இயையும். "இருந்தவம்முனிவரன்" என்பதும் பாடமேல், இருந்த அம்முனிசிரேட்டன் என்பது பொருள். மதில்—இலக்கணை. பொன், வெள்ளி, இரும்பு ஆகிய இவற்றால் செய்யப்பட்ட மூன்று மதில்களை யுடைமையின், முப்புரத்தை மூவெயிலென்பர்.

தீயோரைத் தண்டிப்பதும், நல்லோரை யிரட்சிப்பதும், சிவபெருமானுக் கியல்பென்பார், "மூவெயில் பொடித்த புங்கவன்" என்றார். எங்ஙனமோவெனின், திரிபுரங்களையும் அங்குத்தங்கிய வசுரர்களையுமெரித்து, அப்புரங்கட்கரசர்களா யங்கிருந்த தாரகன், கமலாக்கன், வித்தியுன் மாலியென்னும் மூவரையுந் தப்பவைத்தமையே சான்றாகலினென்க. இதனை, "மூவரை விடுத்துத்தொன்னாள் முப்புரம்பொடித்தமுன்னோன்." என மேற்கூறுமாற்றானுமுணர்க. திரிபுரங்கள், அந்தரத்திருந்துகொண்டு தம்மிடத்து வசிக்கின்ற அசுரர்கள் நினைத்துச் செல்லுமிடங்களுக்குத் தாமுஞ் சென்று மூன்றுலகங்களினுமுள்ள நகரங்களை யழிவுசெய்தமையும், அப்புரவாசிகளாகிய தானவர்கள், பௌத்தமதத்திற் பிரவேசித்துச் சிவநிந்தாகஷ்ணியஞ்செய்து, வானவர்களை வருத்தினமையையும் உற்று நோக்கி உடனே யப்புரங்களை யெரித்தனரென்பதாம். இப்புரங்க ளியங்குமாற்றலையுடைத் தென்பதை, "உழன்மதில் பொடித்ததழனகைப்பெருமான்" எனக் கல்லாடத்துக் கூறுமாற்றானுணர்க. (கஎஎ)

மூந்துறுமுனிவரன்முகத்தைநோக்கிநீ
சிந்தையில்விழைந்ததென்செப்புகென்றலு
மைந்தனைவேண்டினன்வரத்தைநல்கென
வெந்தையுமுறுவல்செய்தினையகூறுவான்.

(இ-ள்) மூந்து உறு முனிவரன் முகத்தை நோக்கி— (அப்பொழுது சிவபெருமான், தமது) முன்பாக நிற்கின்ற முனிசிரேட்டரான மிருகண்டுவினது முகத்தைக் கண்ணுற்று, நீ சிந்தையில் விழைந்தது என் செப்புக என்றலும்—(முனிவனே) நீ மனதில்விரும்பியது யாது (அதனைச்) சொல்வாயாகவென்று வினவியருளுதலும், மைந்தனை வேண்டினன் வரத்தை நல்கு என—(அடியேன்) புத்திரனை விரும்பினேன் (அந்த) வரத்தைத் தந்தருள்வீரென்று (மிருகண்டுமுனிவர்) குறையிரக்க, எந்தையும் முறுவல் செய்து—எங்கள் பரமபிதாவாகிய சிவபெருமானும் திருப்புன்னகை கொண்டு, இனைய கூறுவான்—இத்தன்மையான வார்த்தைகளைத் திருவாய்மலர்ந்தருளிச் செய்கின்றனர். (எ-று)

செப்புகென்றலும்—ஈறுதொகுத்தல். விழைந்தது, இனைய—என்பன வினையாலணையும் பெயர்கள். மூந்துறு—என்பதற்கு எல்லாரினும் மேற்பட, எனப் பொருள்கொள்ளினுமாம்.

எக்காலத்தும், எவ்விடத்தும், எவர்க்காயினுமில்லாத வோரற்புத சிரஞ்சீவித்துவத்தையுடைய சற்புத்திரனைப் பெறும்படியான பெருந் தவமுடைய முனிவனேவிவனென்ற ஆநந்தத்தோடும், சர்வஞத்துவமிருந்தும் புத்திரர்வாய்க்கேட்டுவக்குந் தந்தையர்போல் எந்தப் புத்திரன்வேண்டுமென்று ஒரு ஆடலாகக் கூறுவாரென்பார், "எந்தையு முறுவல்செய் தினையகூறுவான்" என்றார். சர்வஞத்துவம்—முற்றறிவு. (கஎஅ)

வேறு.

தீங்குறுகுணமேமிக்குச்சிறிதுமெய்யுணர்விலாயன்
ஃ ஃ மூங்கையும்வெதிருமாகிமுடமுமாய்விழியுமின்றி
யோங்கியவாண்டுநூறுமுற்றபிணியுழப்போனாகி
யீங்கொருபுதல்வன்றன்னையீதுமோமாதவத்தோய்

(இ-ள்) மாதவத்தோய்—மகா தவத்தையுடைய முனிவனே! தீங்கு உறு குணமே மிக்கு—தீமைபொருந்திய குணங்கள்தாமே மிகுதியுமமையப்பெற்று, மெய் உணர்வு சிறிதும் இலாமல்—உண்மையறிவு கொஞ்சமேனு மில்லாமல், ஓங்கிய ஆண்டு நூறும் உறுபிணி உழப்போன் ஆகி—(இந்த அங்கஹீனங்களோடும்) நீடித்த வருடம் நூறுக்கும் (நூறு வயசுக்கும்) மிக்க நோய்களை யநுபவித்துக்கொண்டிருப்பவனுமாக, ஈங்கு ஒரு புதல்வன் தன்னை ஈதுமோ—இப்பொழுது ஒரு புத்திரனை (உனக்குக்) கொடுக்கலாமோ.

ஏகாரம்—பிரிநிலை. ஓகாரம்—வினு. இறந்தது தழீயவெச்சவும்மை விகாரத்தாற் ருெக்கது ஈங்கு—சுட்டுநீண்டது. உறுகுணம்—வினைத்தொகை. உறுபிணி—உரிச்சொற்டொர். சிறிதும், என்பதன்கணும்மை இழிவு சிறப்பு. நூறும், என்பதன்கணும்மை முற்றுப்பொருளது. ஆகி—ஆக என்பதன் றிரிபு. ஈதும், என்பதன்கண்தும் விகுதியெதிர்காலங் காட்டிற்று. மெய்யுணர்வு—கடவுளையும் மரணசனனங்களையும் பாவபுண்ணியங்களையும் ஐயவிபரீதமறவுள்ளவாறுணரும் சிவஞானம். மனிதர்க்கு வயசு நூருகலின் "ஆண்டுநூறும்" எனப்பட்டது. அதனை, "மனிதர்க்கு வயது நூறல்லதில்லை" என்பதனுலுணர்க. மூங்கை—வாய்பேசாதது. வெதிர்—காதுகேளாதது. முடம்—கைகாலற்றது. குருடு—விளியற்றது. ஊமைகட்குச் செவிடுமுடனமைந்த தொன்றென்பார், இடைச்சொற்பெய்யாது, "மூங்கையும்வெதிருமாகி." என்றும், பூரணயுசுவுண்டென்பார், "ஓங்கியவாண்டுநூறும்." என்றும், சகிக்கலாற்ருத பெருநோய்களென்பார், "உறுபிணி," என்றும் கூறினுர்.

இதுமுதல் இருபத்தொரு செய்யுட்கள் பெரும்பாலும முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், ஏனை நான்கும் மாச்சீர்களும் ஆகிவந்த அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (கஎசு

கோலமெய்வனப்புமிக்குக்குறைவிலாவடிவமெய்தி
யேலுறுபிணிகளின்றியெமக்குமன்புடையோனுகிக் பா
காலமெண்ணிரண்டேபெற்றுக்கலைபலபயின்றுவல்ல
பாலனைத்தருதுமோநின்னெண்ணமென்பகர்தியென்ருன்.

(இ—ள்) கோலம் மெய் வனப்பு மிக்கு—(அல்லது) அலங்காரம்பொருந்திய தேகம் அழகினுல் மிகுந்து, குறைவு இலா வடிவம் எய்தி—குறைபாடில்லாத வவையவங்களைப்பெற்று, ஏலுறு பிணிகள் இன்றி—பொருந்தின்ற (ஏதொரு) நோய்களுமில்லாமல், எமக்கும் அன்புடையோன் ஆகி—எம்மிடத்திலு முண்மையன்புள்ளவனுய், காலம் எண் இரண்டேபெற்று—வயசு பதினுறுமாத்திரமே பெற்று, பல கலை பயின்று வல்ல—பல கலைக்ஞானங்களைக் கற்று (அவற்றிற்) சாமர்த்தியமுள்ள, பாலனை தருதுமோ—ஒரு புத்திரனைக் கொடுக்கலாமோ? நின் எண்ணம் என் பகர்தி என்ருன்—(இவ்விருபாலருள்) உனது கருத்து எதுவோ அதனைச் சொல்வாயாக வென்று (சிவபெருமான்) வினவியருளினுர். (எ—று)

ஏகாரம்—பிரிநிலையோடிழிவு சிறப்பு. ஓகாரம்—வினு. உறு—துணைவினை. காலம், இலக்கணை-எண்ணிரண்டு—ஆகுபெயர். அது, வருடத்திற்கு.எமக்கும்-என்பதன்கணும்மை இறந்தததழீய எச்சம். எமக்கு—எழனுருபின்றிரிபு,என்

னே "யாதனுருபிற் கூறிற்றாயினும் பொருள்சென்மருங்கின் வேற்றுமைசா ரும்—" என்பதிலக்கணமாகலின். தும். எதிர்காலம். பாலன்-சிறுவன்-கோ லம்-செயற்கையழகென்பாருமுளர். இவ்விருவகைப்புதல்வருள் எந்தப்புதல் வனைப்பெறுவதுனக்கு விருப்பமாகுமென்று வினவினரென்பது கருத்து. சாமனியமாகவழகமைந்த தேகம், ஆடவரும் பெண்மையையவாவும் சிறப்ப ழகுபொருந்த வென்பார், "கோலமெய்வனப்புமிக்கு" என்றும், மேற்குறித் தவங்கவீனமில்லாமலென்பார், "குறைவிலாவடிவமெய்தி" என்றுங்கூறினர்.

மாண்டகுதவத்தின் மேலாமறைமுனியவற்றையோரா
வாண்டவைகுறுகினுமறிவுளனாகியாக்கைக்
கீண்டொருதவறுமின்றியெம்பிரானின்பாலன்பு
பூண்டதோர்புதல்வன்றானே வேண்டினன்புரிகவென்றான்

(இ—ள்) மாண் தகுதவத்தின்மேல் ஆம்-மாட்சிமைதக்க தவத்தினால் மேலாக உள்ள. மறை. முனி அவற்றை ஓரா-வேதங்களை உணர்ந்த மிருகண்டு முனிவர் (சிவபிரான்கூறியருளிய) அவ்வார்த்தைகளை ஆலோசித்துணர்ந்து. எம்பிரான்-எம்பெருமானே! ஆண்டு குறுகினும்-வயதுதான் குறைந்திருந்தா லும். அறிவு உளன் ஆகி-நல்ல ஞானமுடையவனாகி. யாக்கைக்கு ஈண்டு ஒரு தவறும் இன்றி-தேகத்திற்குப்பொருந்திய எதொரு குற்றமுமில்லாமல். நின் பால் அன்பு பூண்டது ஓர் புதல்வன்தானே வேண்டினன்-தேவரீரிடத்தன்பு வைத்துள்ள ஒரு புத்திரனைத்தானே (அடியேன்) விரும்பினேன். புரிக என் றான்-(அவ்வரத்தையே) பாலித்தருளுகவென்று பிரார்த்தித்தனர். எ—று

ஏகாரம்-பிரிநிலை. தான்-தேற்றம். ஓரா-ஆகாரவீற்றுடன் பாட்டுவினை யெச்சம். அவை- பகுப்பொருள்விகுதி. எழுவாயின்சொல்லுருபெனினுமாம். ஈண்டு-இப்பொழுதுமாம், எம்பிரான்-அண்மை விளியாகலினியல்பு. பூண்ட து-தொழிற்பெயர், அன்றேற்றிணைவழுவும். மாண் தவத்தை விசேடிக்க தவம்முனிவனை விசேடித்தது. யாக்கை-என்பதில் கைதொழிற்பெயர் வி குதி. சத்ததாதுக்களாற் கட்டப்பட்டுள்ளது-உடம்புக்குக்காரணப் பெயரா யிற்று. ஓரா என்றனெனவியையும். வயசு நூறிருந்தாலும், அறிவில்லாதவ னும், அங்கவீனனும், நோயாளனுமாகவுள்ள புத்திரனைப்பெற்றுத் தாமிருமை யுந்து யருழத்தலினும், வயசுகுறுகினும், அங்கக்குறைபாடின்றியும், நோ யின்றியும், தத்துவஞானத்தோடு சிவபக்தியும்வாய்ந்த சற்புத்திரனைப்பெறுத லேயிருமையின் பத்திற்குங்காரணமான பெரும் பேறெனக்கருதியிங்ஙனங்கூ றினரென்பதாம். ஒருவர் பெறற் பாலது அறிவறிந்த புத்திரனேயேயாமென் பதை, "பெறுமவற்றுள்யாமறிவதில்லை யறிவறிந்த-மக்கட்பேறல்லபிற," எ ன்னுந் தேவர் வாக்கானுமறிக. "குறுகினும்" என்றார் விருப்ப மற்றதொன் பதுபோதர (௧அக)

என்றிவை துணிவினாலேயிசைத்தலுமீசனிற்கு
நன்றிகொள்குமரன்றன்னை நல்கினமென்றுசொல்ல
நின்றிடுமுனிவன்போற்றிநெஞ்சகமகிழ்ச்சியெய்தி
யொன்றியகேளிரோடுமுறைந்தனனுறையுநாளில்.

(இ-ள்) என்று இவை துணிவினால் இசைத்தலும்- (மிருகண்டுமுனிவர்) என்று இவற்றைநிச்சயப் படுத்திச்சொல்லுதலும். ஈசன் (அவற்றைத்திருச்செவிமடுத் தருளிய) சிவபிரான். நிற்கு (முனிவனே) உனக்கு. நன்றிகொள்குமரன்தன்னை நல்கினம் என்றுசொல்ல-நற்குண நற்செய்கைகளையுடையபுத்திரனைத் தந்தோமென்று திருவாய்மலர்ந் தருளிச்செய்ய. நின்றிடுமுனிவன் போற்றி-(திருமுன்னிலையில்) நின்றுகொண்டிருந்த மிருகண்டுமுனிவர் தோத்திரம்பண்ணிக்கொண்டு. நெஞ்ச அகம் மகிழ்ச்சி எய்தி-(சிந்தித்தகாரியம் சித்தித்ததுஎன்று) மனத்தின் கட் களிப் படைந்து. ஒன்றிய கேளிரோடும் உறைந்தனன்-(தம்முடன்) கலந்த உறவினருடன் (காசியம்பதியில்) வீற்றிருந்தனர். உறையுநாளில்-(அங்ஙனமாக) இருந்துகொண்டுவரும்நாட்களில். (எ-று)

ஏகாரம்-அசை. அகம்-ஏழனுருபு. நெஞ்சகம். ஒருபொருட்பன்மொழியென்பாருமுளர். நல்கினம்- தனித்தன்மைப் பன்மை. எதிர்காலத்தையிறந்தகாலத்தாற் கூறியது, விரைவினாலும் தெளிவினாலும் வந்த காலவழுவமைதி, "விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும் பிறழவும் பெறூஉமுக்காலமுமேற்புழி" என்பதுவிதியாகலின். ஈசன் எல்லாமேன்மையுமுடையவன், ஐசுவரியமுடையவன். நிற்குநல்கினமெனவினையும். இருவகைப்புத்திரரும் மனச்சஞ்சலத்தை விளைவிக்கும்புத்திரராகவும், அறிவுள்ள புத்திரனே வேண்டுமென பதினாறுவயசுக்கண்டத்தைப் பொருட்படுத்தாது நிச்சயப்படுத்திச்சொன்னாரென்பார், "என்றிவை துணிவினாலேயிசைத்தலும்" என்றார் (கஅ)

பூதலமிடும்பைநீங்கப்புரைதவிர்தருமமோங்க
மாதவமுனிவருய்யவைதிகசைவம்வாழ
வாதிதன்னருளினாலேயந்தகன்மாளவன்றோன்
காதலியுதரத்தாங்கோர்கருப்பம்வந்தடைந்ததன்றே

(இ-ள்) பூதலம் இடும்பைநீங்க-பூவுலகின்கணுள்ள தீமைகளகலும்படியாகவும், புரைதவிர்தருமம் ஓங்க-குற்றம்நீங்கியதருமங்கள் விருத்தியாகும்படியாகவும். மாதவம் முனிவர் உய்ய-மகாதவத்தையுடைய முனிவர்களீடேறும்படியாகவும். வைதிகசைவம்வாழ-வேதசம்பந்தமான சைவசமயம்

மென்மேலுமுயர்ந்து) வாழ்வடையும்படியாகவும், ஆதிதன் அருளினால் அந்தகன்மாள—முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானது திருக்காருண்ணியத்தினால் யமன் இறக்கும்படியாகவும். அன்னான்காதலி உதரத்து—அந்தமிருகண்டுமுனிவரின்பத்தினியாரான மருத்துவதியாரின் வயிற்றின்கண். அங்கு ஓர் கருப்பம் வந்து அடைந்தது அப்பொழுது ஒருகர்ப்பம் உண்டாயினது.

அன்றுமேகாரங்களும்—அசைகள். அங்கு—அசையெனினுமாம். நீங்க, ஓங்க, உய்ய, வாழ, மாள, என்னும்செயவெனெச்சங்கள் காரியப்பொருளன. வைதிகம்—வேதசம்பந்தமுள்ளது. சைவம்—சிவசம்பந்தமுள்ளது—இவை வடமொழித்தந்திதாந்தப் பெயர்கள்.

அந்தகன்—அழிவுசெய்பவன். அருளினால் மாள என்பதறியும். அருளினால் கருப்பம்வந்ததென்றியைப்பினுமமையும் "பூதல இடும்பை" என்பதற்கு பூமிதேவியினது வருத்தம் எனப்பொருள் கோடலுமொன்று.

இக்கருப்பத்திற்றோன்றும் சிவஞானச்செல்வராகிய மார்க்கண்டேயமுனீந்திரரோ! வேதவேள்விகளையோம்பிக்கலிகடிந்துலகத்தைப் பாதுகாப்பவராகலின் "பூதலவிடும்பைநீங்க" என்றும், கலிகடியவேகராணகாரியமுறைப்படிதருமம் விருத்தியாதலும், தவமுனிவரீடேறுதலும், சைவம்வாழ்வடைதலுமுண்டென்பார் "தருமமோங்க", என்றும், "தவமுனிவருய்ய" என்றும், "சைவம்வாழ" என்றும், சிவபூசையாகியபெருந்தவத்துநின்ற சிவபிரானைக்கொண்டியமனைக்கொல்வித்தவரென்டார், "அந்தகன்மாள" என்றும், அங்ஙனமெம்பெருமான்யமனைக்கொன்றதும் அவனது ம ம காரத்தையொழிக்குங்கருணையின் பாலதென்பார் "ஆதிதன்னருளினாலே" என்றும் கூறினார். வேதவேள்விகளையோம்பக்கலிநீங்குமென்பதை "கற்றாங்கெரியோம்பிக்கலியைவாராமே-செற்றார்வாழ் தில்லைச்சிற்றம்பலமே" என்னுந்திருப்பதிகத்தானுணர்க. (கஅரு)

அடைதலுமதனைநோக்கியறிதருமுனிவனாண்டை
யிடையவனடியார்யார்க்கும்வேண்டியவேண்டியாங்கே
கொடுதுபல்வளனுமீந்துநிறைதருதிங்கடோறுங்
கடனியன்மரபுமாற்றிக்காசியின்மேவினானே.

(இ—ள்) அடைதலும்—(அவ்வாறு கருப்பம்) உண்டானவுடன். அதனைநோக்கி அறிதருமுனிவன்—அதனைப்பார்த்து உணர்ந்தமிருகண்டுமுனிவர். ஆண்டைவிடையவன் அடியார்யார்க்கும்—அவ்விடத்தில்வாசம்பண்ணும் சிவனடியார்களனைவருக்கும். வேண்டியபல்வளனும் வேண்டியாங்கேகொடுத்து ஈந்து—வேண்டியபலபடித்தாயபொருள்களையும் வேண்டியபடியே மிகுதியாகக் (களிப்போடும்) கொடுத்து. நிறைதருதிங்கள்தோறும்—(சென்று சென்

ரு)பூரணமாகின்ற மாதங்களிலெல்லாம். கடன் இயல்மரபும் ஆற்றி—(செய்
தற்பாலதான) கடமையாகப்பொருந்திய கிரியைகளையும்செய்துகொண்டு,
காசியில்மேவினன்—(புண்ணியக்ஷேத்திரமாகிய) காசியம்பதியில்வீற்றிருந்த
னர். (எ-ம்)

ஈற்றேகாரம்-அசை. ஆங்கே-என்பதன்கணேகாரம். தேற்றம், ஆண்டை-
ஐயீற்றுடைக்குற்றுகரம். நெடித்து முற்றெச்சம்-வள்ன்-மொழியிறுதிப்போலி.
யார்க்குமென்பதன்கண்யா எஞ்சாமைப்பொருட்டு. வள்ளுமென்பதன்கணும்
மை யெதிரது தழீயவெச்சம், மரபுமென்பதன்கணும்மையிறந்தது தழீயவெச்
சம். வேண்டிய-வினையாலணையும்பெயர் வேண்டியவாங்கு, வேண்டியாங்கெ
னவிகாரப்பட்டது. அறிதரு, நிறைதரு. என்பவற்றில், தரு, துணைவினை,
விடையவன்-சிவன், இடபவாகனத்தையுடையவன், இடபக்கொடியையுடை
யவன், திங்கள்-சந்திரன், அஃது, அமாவாசைதொடங்கி அமாவாசைவரைக்
குமொருமாதமாகக்கொண்டு சந்திரனது சம்பந்தத்தால்வரையறைசெய்யப்ப
டுதல்பற்றி. மாதத்திற்குப்பெயராயிற்று வேண்டிய வேண்டியாங்கே என நி
ன்றவாறு வைத்து, வேண்டிய வேண்டியவாறு எனவும், நிறைதருதிங்கள் எ
ன்பதற்கு, கருப்பம் நிரம்புகின்ற மாதங்களெனவும், பொருள்கொள்ளினுமா
ம் சிவனடியார்கள் விரும்பியவற்றை யெல்லாம் வரையாதுகொடுத்தாரென்
பார்," வேண்டியவேண்டியாங்கு பல்வள்ளும்நெடிது ஈந்து." என்றார்.

அக்கிரியைகளாவன, பும்ஸவனக் கிரியையும், சீமந்தக்கிரியையுமாம்,
இவை கர்ப்பாதானக் கிரியைக்கும், சாதகன்மக்கிரியைக்கு மிடையிற்செய்ய
ப்படுவன, பும்ஸவனமாவது, கர்ப்பமுண்டான மூன்று நான்கு ஆறு எட்டு
என்னும் மாதங்களில் பூர்வபக்ஷத்தில், சதுர்த்தி நவமிசதுர்த்தசிபொர்ணி
மை அமாவாசை யொழிந்த திதிகளில், திங்கள் புதன் வியாழம்.வெள்ளி நா
ட்களில், பூசம் திருவோணம் முதலிய சுபநக்ஷத்திரங்களில், மிதுனம் கடக
ம் கன்னி யொழிந்த சுபலக்கினங்களில், ஆயிரமாகுதியினாலேனும்நூற்றெ
ட்டாகுதியினாலேனும் ஓமஞ்செய்து, ஆலமொக்குளையும உழுந்தையும் அம
மியில்வைத்துப் பால்விட்டரைத்து, தோய்த்துலர்ந்தவெள்ளை வஸ்திரத்தி
த்தில்வைத்து முடிந்து, கருப்பவதியைக் கிழக்குமுகமாக நிமிர்ந்திருக்கச்செ
ய்து, அதற்காகியமந்திரங்களைச்சொல்லி ஆண்குழந்தையைவிரும்பின் வல
துநாசியினும், பெண்குழந்தையை விரும்பின்இடது நாசியினும், பிழிந்து
அதை இரேசக பூர்வகமாகவாங்கி உண்ணச்செய்வது. சீமந்தமாவது, கர்
ப்பமுண்டான நான்கு ஆறு எட்டு என்னும் மாதங்களில் பூர்வபக்ஷத்
தில் சதுர்த்தி சஷ்டி நவமி பொர்ணிமை அமாவாசைதுவாதசி யொ
ழிந்ததினங்களில், சுபநாட்களில் உரோகணி உத்தரம் உத்தராடம்
உத்தரட்டாதி மிருகசீரிடம் அத்தம் புநர்பூசம் இரேவதி திருவோ

ணம் பூசம் முதலிய சுபநக்ஷத்திரங்களில், சிங்கம் விருச்சிக மொழிந்தலக்கினங்களில், முகூர்த்தலக்கினத்துக்கு எட்டாமிடம் சுத்தமாக, கருப்பவதியை நூதனவஸ்திரா பரணங்களாலலங்கரித்து. மெழுக்கிட்டலங்கரித்த இடத்திலிருக்கவைத்து, நூற்றெட்டாகுதியாலோமஞ்செய்து, அத்தித்தடி பச்சைத் தருப்பைப் பன்றிமுள் கற்றையாய்ச்சேர்த்து கணவன்கையால் அப்பெண்ணினுடைய நாபிஸ்தானத்தில் வைத்து வேதமந்திரங்களையுச்சரித்துக்கொண்டு இதமாக நேரேயுச்சிவரையிலிழுத்து வகிர்ந்து விடுவது. (கஅச)

கறையுயிர்த்திலங்குதந்தக்காய்சின வரவங்கவ்வக்
குறையுயிர்ப்படிவத்திங்களமிர்தினைக்கொடுத்திட்டாங்கு
மறையுயிர்த்தருளுஞ்செவ்வாய்மதலையைவயாவின்மாழ்கிப் [ள்.
பொறையுயிர்த்தருளிற்றந்தாள்பொறைதருதிருவைப்போல்வா

(இ-ள்) கறை உயிர்த்து இலங்கு தந்தப்-விஷத்தையுமிழ்ந்துகொண்டு விளங்குகின்ற பற்களையும்-காய்சினக்-கொல்லுகின்ற கோபத்தையுமுடைய -அரவம்கவ்வ—(ராகு வென்னும்) பாம்பு கௌவிக்கொள்ள-குறையுயிர் படிவந் திங்கள்- (அப்பொழுது) குற்றுயிராய் (அவத்தைப்பட்டுக் கொண்டிருக்கும்) வடிவத்தையுடைய சந்திரன். அமிர்தினைக் கொடுத்திட்டு ஆங்கு-அமிர்தத்தைக் கொடுத்தாற்போல-பொறைதருதிருவை போல்வாள்-பொறுமையை யுடைய லக்ஷ்மியை யொத்த மருத்துவதியம்மையார். வாயாவின்மாழ்கி-கருப்பவேதனையால் வருத்தமுற்று. மறை உயிர் தருளுஞ்செவ்வாய் மதலையை-வேதங்களை வெளிப்படுத்திக் கூறும் செவ்விதான வாயையுடைய புத்திரனை-அருளின்—(சிவபிரானது) கிருபாகடாக்ஷத்தால். பொறையுயிர்த்து தந்தாள்—பிரசவித்துத் தந்தார்.

கறை—கறுத்துள்ளது. நஞ்சுக்குக்காரணப்பெயர். காய்சினம்—வினைத்தொகை. அரவம், என்பதனம். சாரியை. உவ்வும், சாரியை, அரா அரவெனக்குறுகிற்று, ஆங்கு—உவமவுருபு. குறையுயிர்—குற்றுயிர். பொறையுயிர்த்தல், பிரசவித்தல். மறை உயிர்த்தல், பொறை உயிர்த்தல், என்பவற்றினுயிர்த்தல் வெளிப்படுத்த லென்னும்பொருட்டு. பொறை—பாரம், எனவே. பொறையுயிர்த்தல் மகவாகியபாரத்தை வெளிப்படுத்தல், அஃதுபிரசவித்தலாம். வயா—கருப்பவேதனை. பாம்பின் நச்சுப்பற்கள்—காளி, காளாத்திரி, யமன், யமதூதி. "குறையுயிர்ப்படிவத்திங்கள்" என்பதற்கு குறையைப்படிவத்திற்குங்கூட்டி, வருந்துகின்ற உயிரையும் குறைகின்றவடிவத்தையுமுடைய சந்திரனெனவும், "பொறைதருதிருவைப்போல்வாள்" என்பதற்கு,பூமியைப்பெற்றலக்ஷ்மியைப் போல்பவரெனவும், இமையமலைபெற்ற உமையைப் போல்பவரெனவும், பொறுமையையுடைய பூமலக்ஷ்மியைப்போல்பவரெ

னவும்பொருள்கொள்ளினு பொருந்தும். ஆங்கு, போல்வாள், மாழ்கி, மதலை யை, அருளின், உயிர்த்து, தந்தாளெனவியையும்.

பம்பினால்விழுங்கப்பட்டுக் குற்றுயிராய் வருத்தமடையும் சந்திரன், உலகத்தில் நச்சுத்தன்மையையகற்றி யின்பத்தைத் தருமமிர்தத்தைக்கொடு த்தாற்போல, மருத்துவதியாரும்' கருப்பவேதனையால் வருத்த மடைந்தும், உலகத்திற்றீமைகளையகற்றி நன்மையைச்செய்யும் சற்புத்திரனைப்பெற்றுத்த ந்தாரென்பதாம்.

அரவந், திங்கள், அமிர்தமாகியவுவமானங்களுக்குமுறையே, வயாவும் மருத்துவதியும், மதலையுமுபமேயமென்க. அமிர்தம்-மரணத்தைக்கெடுப்ப து இப்புதல்வரும் மரணத்தைநீக்கிக்கொள்ளுபவராகலின், அவர்க்கதனையே வுவமை கூறினர். (கஅ௫)

மீனமுமுடிந்தநாளுமேவுறமிதுனஞ்செல்ல
வூனமில்வெள்ளிதானுமொன்பொனுமுச்சமாகுந்
தானமுற்றினிதுமேவத்தபனனேமுதலாவுள்ள
வேனையர்முனிவர்நாகரிடந்தொறுமிருப்பமன்னோ.

(இ-ள்) மீனமும்-மீனமாதமும், (பங்குனிமாதம்) முடிந்தநாளும்—(அ சுபதிமுதலான இருபத்தேழு நட்சத்திரங்களுள்) கடைசிநட்சத்திரமானரே வதிநட்சத்திரமும், மேவுற—பொருந்தவும், மிதுனம்செல்ல—மிதுனலக்கின னம்நிகழவும், ஊனம் இல்வெள்ளிதானும்—குற்றமில்லாதசுக்கிரனும், ஒள் பொனும்—பிரகாசத்தையுடைய வியாழனும், உச்சம் ஆகும் தானம் உற்று இ னிதுமேவ—உச்சமான இடங்களையடைந்து இன்பத்தோடிருக்கவும், தபன ன் ஏ முதல் ஆ உள்ள ஏனையர்—சூரியனையே முதலாகவுள்ள கிரகங்களில் (இவரையல்லாத) ஏனையோர்கள், முனிவர் நாகர் இடம்தொறும் இருப்ப— ஏழாம் இடம் எட்டாம் இடங்களிலிருக்கவும். (எ—று)

மன், ஓ—அசைகள். ஆக ஆ எனஈறுகெட்டது. ஏகாரம்—பிரிநிலை. மே வுறஎன்பதன்உறு துணைவினை. மேவுற, செல்ல, மேவ, இருப்பஎன்பனவினை ச்செவ்வெண். முதன்மையைப்பெற்ற முனிவர் எழுவரும்நாகர் எண்மருமாவ ராதலால் அவர்களைக்குறித்தற்கு உரிய "முனிவர்" "நாகர்" என்னுஞ்சொற் கள், ஈண்டு அவர்களைக்குறியாமல் ஏழு எட்டு என்னும் எண்ணுப்பெயர்களை க்குறிக்குஞ் சங்கேதச்சொற்களாய் நின்றன. முனிவர், நாகர்-இலக்கணை: கு ழூக்குறியின்பாற்படும். மீனம்—மீன்வடிவாகவுள்ளது. மிதுனம்—(ஆணும்பெ ண்ணுமாகிய) இரட்டைவடிவாகவுள்ளது. வெள்ளி—வெண்ணிறமுடையவ ன். பொன்—பொன் னிறமுடையவன். உச்சம்—உயர்ந்தநிலை. தபனன்—வெம் மைசெய்பவன். வெள்ளியும் பொன்னும் அசுரர்க்குந் தேவர்க்கும் குருவாக

வும்,மேலோராகவுமிருத்தலின், "ஊனமில்வெள்ளி" என்றும், "ஒண்பொன்" என்றுமடைபுணர்த்தியும், நவக்கிரகங்களுள் ஆதித்தன் முதல்வனாகலின், "தபனனேமுதலாவுள்ள ஏனையர்" என்றுங் கூறினார்.

| | | | |
|---|---|---|---|
| சூ-சந் சு-பு | | | ல |
| | | | குரு கே |
| சனி- ரா | | | |
| செ | | | |

மீனமாதமும், ரேவதிநட்சத்திரமும், வெள்ளியும்பொன்னு முச்சமுமென்றமையின் சூரியனும், சந்திரனும், சுக்கிரனும், மீனத்தினும், வியாழன்கர்க்கடகத்தினும், ஆன்றோர்களுக்குப் பெரும்பான்மை சூரியனுடனாவது பக்சத்தினாவது புதன்நிற்பதுவழக்கமாகலின், புதனும் மீனத்திலும், "ஏனையர்" ஏழாமெட்டாமிடங்களென்றமையின், செவ்வாய்தனுவினும், சனியும் ராகுவும் மகரத்திலும், ராகு கேதுக்களொருவர்க்கொருவரேழாமிடமாகலின் கேதுவுங் கர்க்கடகத்திலுமாக இங்ஙனங் கிரகநிலையாயிற்றென்க. புதன், சனி, ராகு, கேது, செவ்வாயென்னு மிவ்வைவரை யுமித்தானங்களிற்கொண்டது, ஏற்புழிக்கோடலென்னுமுத்தி. (எ-று)

இன்னுமோர்பொருள் வருமாறு.

மீனமும்—பங்குனிமாதமும்,முடிந்தநாளும்—ரேவதிநட்சத்திரமும், மேவுற—பொருந்தவும்,மிதுனம்செல்ல—மிதுனலக்கினங்கழிந்துபோகவும், (கர்க்கடகலக்கினமாக) ஊனம் இல்வெள்ளிதானும்—குற்றமில்லாதசுக்கிரனும், ஒள்பொனும்—பிரகாசத்தையுடையவியாழனும், உச்சம் ஆகும் தானம் உற்று இனிதுமேவ—உச்சமான இடங்களையடைந்து இன்பத்துடனிருக்கவும், தபனன் முதல் ஆ உள்ள ஏனையர்முனிவர்—செவ்வாய் முதலாகவுள்ள (சூரியன்,

சந்திரன், சுக்கிரன், வியாழன்) ஒழிந்த (ஏனையராகியகிரகங்களும், நாகர்—ராகு கேதுக்களும், இடம்தொறும் இருப்ப—(நட்பாட்சியாகிய) நல்லவிடங்களிலிருக்கவும்.

(எ—று)

ஏகாரம்—அசை. ஏனையர்—முற்றெச்சம். தபனன்—வெப்பத்தையுடையவன், அழலோன், என்றது போல. முனிவர்—மேலோர். புதனும் சனியும். ராகுகேதுக்கள், அசுரராய் பின்வந்து கூடினமையிற்பிரித் தோதினர். பாங்கு. இடம் என்பனதானத் தைக்குறிக்கும் பரியாயநாமமாகலானும், பாங்கு, என்பதற்கு, நல்லவிடமென்பதுபொருளாகலானும், ஈண்டும் இடம் என்பதற்கும், (நட்பாட்சியாகிய) நல்லவிடமெனப்பொருள்கொள்ளப்பட்டது. பாங்கு, நல்லவிடமென்பதை, சீவகசிந்தாமணியில், "பாங்கின்மாதவர் பான்மதிபோன்றிவன்" என்னுஞ் செய்யுளுக்கு நச்சினார்க்கினியருரைத்தவுரையினும், அகநானூற்றில், 'பாங்கர்பபல்லி" என்பதினுங்காண்க. ஏற்புழிக்கோடலால்—ஈண்டுங்கிரகங்களின்னிலைக்கணின்றன.

| | | | |
|---|---|---|---|
| சூ-சந் சுக் | செ பு | | கே |
| | | | ல குரு |
| சனி | | | |
| ரா | | | • |

வியாழன் உதயமானகர்க்கடகத்தில் உச்சமும், ராகு ஆறாமிடமானதனுவில் நட்பும், சனி ஏழாமிடமானமகரத்தில் ஆட்சியும், சூரியனும், சந்திரனும், ஒன்பதாமிடமான மீனத்தில் நட்பும், அங்குச் சுக்கிரன் உச்சமும், செவ்வாய்பத்தாமிடமான மேடத்தில் ஆட்சியும், அங்குப்புதன் நட்பும், கேது பன்னிரண்டாமிடமானமிதுனத்தில் நட்பும், பெற்றிருந்தனரெனக. இக்கிரகநி

லைகளாற் சாதகருக்குப்பதினாறுவயசுக்கண்டமும், கண்டநிவிர்த்தியும், தபோ பலமும், தத்துவஞானமும், வரப்ரசாதமும், சிவன் முத்தநிலையும் சாலவும மையுமாற்றைச்சொதிட நூலின் வல்லார்வாய்க்கேட்டுணர்க. கசுசு)

நண்ணினன் புவியின் மைந்தன வமணிக்குலமும்பொன்னுஞ்
சுண்ணமுமலருந்தாதுந்தூயமென் கலவைச்சாந்துந்
தண்ணுறுநானச்சேறுந்தலைத்தலைக்கொண்டுதாவில்
விண்ணவர் மண்ணுளோர்கள் வியப்புறவீசியார்த்தார்.

(இ—ள்) மைந்தன்புவியில் நண்ணினன்—புத்திரர் பூமியிற்பிரவேச மாயினர். நவம்மணிகுலமும்—(அப்பொழுதில், மிருகண்டுமுனிவரின், ஞா திகளாயுள்ளோர்கள்) நவரத்தினங்களின் கூட்டங்களையும்; பொன்னும்—பொ ன்னையும். சுண்ணமும்—வாசனைப்பொடிகளையும்—மலரும்—பூக்களையும், தா தும்—பூந்தாதுக்களையும். தூயமென் கலவைசாந்தும்—சுத்தமானதும் மென் மையானதுமான கலவைச்சந்தனத்தையும். தண் உறு நானம் சேறும்—குளிர் மைபொருந்திய கஸ்தூரிக் குழம்பையும். தலை தலைகொண்டு—(காசிப்பட்ட ணத்தின்) இடங்களெங்கும் கொண்டுசென்று. தா இல்விண்ணவர்—அழிவி ல்லாதவிண்ணுலகவாசிகளாகிய தேவர்களும். மண்ணுளோர்கள்—மண்ணுல கவாசிகளாகிய மானுடர்களும். வியப்புற—அதிசயங்கொள்ள. வீசி ஆர்த்தா ர்—சிதறி ஆரவாரித்தார்கள். (எ—று)

தலை, தலை—என்னும் எழனுருபுகள் ஈண்டுத்தொறுப்பொருளில் வந்த ன. ஒவ்வொருவருமென்பினுமமையும். நவமணிகளாவன—கோமேதகம், நீ லம், பவழம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம். சாந்து—தந்தனமென்னும் வடமொழிவிகாரம். சுண்ணம்—சூர்ணமென்னும் வடமொழிச்சிதைவு.

மேவுற, செல்ல, மேவ, இருப்ப, மைந்தன் புவியில் நண்ணினனென மேலைச்செய்யுளோடு கூட்டிமுடிக்க. உத்தம. சற்புத்திரர் பூமியிற்பிரவேச மானால் இவ்வாறுகொண்டாடன் முறையேயாமென்க. இதனை, "சுண்ண மொடுதண்மலர் துதைந்ததுகள்வீசி—யுண்ணிறைவிருப்பினுடனேகையுரை செய்வார்" என்பதனுலும், "நந்தன்வாழ்பெருந்தண்கானம் நலத்தருபசும் பொற்சுண்ணம்—சிந்தூரப்பொடிகளோடு திசை திசை கமழவீசி—அந்தளிர்ப் பாரிசாதத் தாய்மலர்த்தாதுபோர்த்த—இந்திரனகரமேய்ப்ப இன்னெழில் சி றந்ததன்றே) என்பதனுலுமுணர்க. (கசுஎ)

தேவதுந்துபிகளார்த்தசெய்தவையோம்பிமாற்று
மூவர்களன்றியேனேர்முறைமுறையாசிசெய்தார்.

யாவதென்றுணர்தறேற்றுதிங்கரன்றிநேமி
காவல்செய்யுலகம்யாவுங்களிமயக்குற்றவன்றே.

(இ-ள்) தேவதுந்துபிகள் ஆர்த்த—(புத்திரர்பிறந்தபொழுதில்) தேவலோகத்து துந்துபியென்னும் வாத்தியங்கள் ஆரவாரித்தன. செய்து அவை ஓம்பிமாற்றும் மூவர்கள் அன்றி-(உலகங்களைப்) படைத்து அவற்றைக்காத்து (அவற்றை) அழிக்கும் முத்தொழில்களையுடைய (பிரமவிட்டுணுருத்திரனாகிய) மும்மூர்த்திகளையொழிய. ஏனோர் முறை முறை ஆசிசெய்தார்- மற்றைத் தேவர்கள் வரிசை வரிசையாக ஆசீர்வாதஞ்செய்தார்கள். இநகர் அன்றி—இந்தக்காசிப்பட்டணத்துள்ளோர்களல்லாமல். நேமிகாவல்செய் உலகம்யாவும்-கடலாற் சூழப்பட்ட உலகத்துள்ளோரெல்லாரும். யாவது என்று உணர்தல்தேற்றுது-(இந்தப்பெருமகிழ்ச்சிக்குக் காரணம்) யாது என்று அறியாமல். களிமயக்கு உற்ற—மகிழ்ச்சியாலாகிய தலைதடுமாற்றத்தையடைந்தனர்.

அன்றேயும்—அசைகள். நகர், உலகம்-ஆகுபெயர்கள். யாவது—விரித்தல்விகாரம். உணர்தல்தேற்றுதல்—ஒருசொன்னீர. மயக்கு—மயங்குதல், முதனிலைதிரிந்ததொழிற்பெயர். "நேமிகாவல்செய்" என்பதற்கு கடவுளாணையாற் காவல்செய்யப்படும், எனவும், வாளகிரிபாற்சூழப்பட்ட எனவும். பொருள்கோடலுமாம். "உலகம்" என்றதுயர்ந்தோர்மேற்றதுவென்க. அங்ஙனமாக, "நேமிகாவல்செய்" என்னுமடை, "குருநிக்கோட்டுக்குஞ்சரநகரம் "என்பதிற்போலநின்றது. இந்தக் காசியம்பதியில் சிவானுபூதிச் செல்வராகியவோர் புத்திரர் பிறந்தாரென்பதையறியாது, உலகம்முழுதினும் பெருங்களிப்புண்டாயிற்றென்பார், யாவதென்றுணர்தறேற்றுதிங்கரன்றி நேமிகாவல்செய்யுலகம்யாவுங்களிமயக்குற்ற" என்றார். உத்தமோத்தமர்களாகிய மேலோர்கள் பிறக்கில், தேவவாத்தியமாதியவாத்தியங்களாமேயொலித்து நற்சகுனங்களுண்டாயுலகுமகிழ்வடையுமென்பதை, எங்கணும்யற்றுபவரின்றியுமியம்பு—மங்கலமுழக்கொலிமலிந்தமறுகெல்லாம்" எனவும். "எங்குநன்னிமித்தஞ்செல்லவிருநிலமகிழ்ச்சிகூர, விசையனும்பிறந்தான்" எனவும் வருஞ்செய்யுட்களானுணர்க. (கஅஅ)

தந்தையுமதனைக்கேளாத்தடம்புனற்கங்கைமூழ்கி
யந்தணர்முதலோர்க்கெல்லாமடாகம்பலவுநல்கி
முந்துறுகடன்களாற்றமுளரிமேன்முனிவன்மேனி
மைந்தனுக்குரியநாமமார்க்கண்டனென்றுசெய்தான்.

இ-ள்) அதனைகேளா—(புத்திரன்பிறந்த) அச்செயலைக்கேட்டறிந்து, தந்தையும்—பிதாவாகிய மிருகண்டுமுனிவரும். தடம் கங்கைபுனல்மூழ்கி-

பெரிய கங்காநீரில் ஸ்நானம்பண்ணி. அந்தணர் முதலோர்க்கெல்லாம்—பிரா மணர்முதலான (சற்பாத்திரர்களுக்) கெல்லாம். ஆடகம்பலவும்நல்கி—பொன்னேயும் (மற்றும்) பொருள்கள் பலவற்றையுந்தானங்கொடுத்து. மூந்துறு கடன்கள் ஆற்ற— (புத்திரன்பிறந்தவுடன்) முதலிற்செய்யப்படுங்கடமைக ளைச்செய்ய. முளரிமேல் முனிவன்மேவி—தாமரைப்பூவின்மீதிருக்கின்றபி ரமதேவர் வந்து. மைந்தனுக்கு உரியநாமம் மார்க்கண்டன் என்றுசெய்தான்- இப்புத்திரனுக்குரிமையானபெயர் மார்க்கண்டனென்று நாமகரணஞ்செய் தனர். (எ—று)

செய்யுளின்பம் நோக்கிதடம்புனற் கங்கையெனப்பிறழவைத்தார். கே ளா—உடன்பாட்டுவினையெச்சம். ''தடவுங்கயவும் நளியும் பெருமை'' என் னுந்தொல்காப்பியவிதியான் ''தட'' என்பதற்குபெரியவெனப்பொருள்கூறி னும். தடம்புனல் பெலிமிக்கது. அந்தணர்-அழகியதண்ணளியுடையவர், மை ந்து-இளமை. கேளா, மூழ்கி, ஆற்ற, மேவி, என்று, செய்தான், எனவியையும். மிருகண்டு மகன், மார்க்கண்டன். வடமொழித்தத்திதாந்தப்பெயர். மார்க்கண் டனெனினும், மார்க்கண்டேயனெனினுமொக்கும். தாதையானவர் புத்திரன் பிறந்தவுடன். தேவர்பிதிரர்து தாகந்தணியுமாறு உத்தரதிசைக்கட்சென்று நீ ராடவேண்டுமென்பார், 'தாதையும் தடம்புனற்கங்கைமூழ்கி' என்றும், அவர் மகிழுமாறு, பிராமணர்க்கு ராடு, சற்பாத்திரரெவர்க்கும், சொர்ணத்தோடு, வஸ்தி ரம், பூமி, பசு, நெல், தண்டுலம் முதலிய தானங்கள்கொடுத்தல்வேண்டுமென் பார், ''அந்தணர் முதலோர்க்கெல்லாமாடகம் பலவு நல்கி'' என்றும், புத்தி ரன்பிறந்தவுடன் முதலிற்செயற்பாலதான, சாதகன்மம். பஞ்சாயுதந்தரித்த ல், தொட்டிலேற்றுதல் முதலியகிரியைகளைச்செய்தாரென்பார், ''மூந்துறு கடன்களாற்ற'' என்றும், தாதையாவது தங்குலத்துமுன்னோராகிய பெரி யோராவது நாமமிடவேண்டுமென்பார், முளரிமேன்முனிவன்மேவி,'' எ ன்றும், தங்குலத்துமுன்னோரதாவது, தாதையதாவது நாமத்தையேயிடுதல் வேண்டுமென்பார், ''மைந்தனுக்குரியநாம மார்க்கண்டனென்றுசெய்தான்'' என்றுங்கூறினர். புத்திரன்பிறந்தவுடன் நீராடித்தானங்கொடுத்து பின் னர் நாமகரணஞ்செய்யவேண்டுமென்பதை, ''ஆறுமதியினுயர் சீ மந்தமாற்றி யெய்தாப்—பேறுமகப்பெற்றிடுங்காலையிற் பெட்பினேடு—மாறுதகாதன் மகவி ன்முகநோக்கி நானச்—சேறுடியோர்ப்போர்க்குயர் நீணிதிமாரிசிந்தி. எனவும், 'தோளாமணியன்னவத்தோன்றலுக் கன்பினேடு—நாளோர்பதினொன்றுபு குந்துழி'' நாமநல்கி—எனவும்வருங்காசிகாண்டச்செய்யுட்களானுணர்க. புத் திரன்பிறந்தவுடன் தேவர்களும் பிதிரர்களும் அவ்விடத்துவந்து, பிதாவான வர் நீராடும்பொழுது தெறித்துமேலெழுகின்ற நீர்த்துளியைப்பருகித்தாக ந்தணிந்து, தானங்கொத்தலினால் மனமகிழ்வடைவரென, ஸ்மிருதிகூறும்.

சாதகன்மம்—(புத்திரன்பிறந்தவுடன், தாயினதுவலஸ்தனத்தைச் சுத்தஞ்சிறுலலம்பி குழந்தையைவிருரவும்பித்து நாபிக்கொடியைத்துண்டித்து, அதன்பின்பு (புள்ளிமுடங்கல் முதலானகுற்றங்களில்லாதபனையோலையில்) சாதகமெழுதுவித்தல்.

நாமகரணம்—(புத்திரன்பிறந்த பதினொராநாள் சுபநேரத்தில்) பெயரிடுதல். (க௭க)

மறுப்பாடத்திங்கள்போலவளர்தலுமதியந்தோறு
முறுப்படையுபநிட்டானமோதனம்பிறவுமுற்ற
நெறிப்படுமோரியாண்டினெடுஞ்சிகைவினையுமாற்றிச்
சிறப்புடையிரண்டாமாண்டிற்செவிநெறிபுரிதலுற்றான்.

(இ—ள்) மறுபடா திங்கள் போலவளர்தலும்—(மார்க்கண்டரென்னுமப்புத்திரர்) களங்கமில்லாத ஒரு சந்திரனைப்போலவளர்ந்துகொண்டுவருதலும். மதியந்தோறும்—(விதித்த, விதித்த,) மாதங்களிலெல்லாம். உறுப்பு அடை—அங்கங்களாகப்பொருந்திய. உபநிட்டானம்—சந்திரதரிசனமும். ஓதனம்—அன்னப்பிராசனமும். பிறவும்முற்ற—(இதுபோன்ற) மற்றைய கிரியைகளும் நிறைவேற. ஓர்யாண்டின்நெறிபடும்—முதலாம்வருடத்தில் முறையாகச்செய்யப்படும். நெடும் சிகைவினையும் ஆற்றி—நீண்டகுடுமிவைத்தலாகிய கிரியையையும்செய்து. சிறப்புடை இரண்டாம் ஆண்டில்—சிறப்பமைந்த இரண்டாம்வருடத்தில். செவிநெறிபுரிதல் உற்றான்—கர்னவேதனக்கிரியையையும் செய்வாராயினர். (எ—று)

அம்—சாரியை. படாதவென்னும் பெயரெச்சத்தீறுகெட்டது. நெடுஞ்சிகை—சாதியடை. மதி—மாதத்திற்கிலக்கணை. ஓதனம்—சோறு. உபநிட்டானம்முதற்கிரியைகள் மாதக்கிரியைகளென்பதுபோதர, "முற்ற" எனஇடைச்சொற்கொடுத்துப்பிரித்தார். "மறுப்படாத்திங்கள்" என்றது அபூதவுவமை. அபூதம்-இல்லாதது. பூர்வபட்சச் சந்திரன்போல நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாகவளர்ந்தமையின், "மறுப்படாத்திங்கள்போலவளர்தலும்" என்றும், ஒவ்வோர்கிரியையுமோர்வோரங்கமாகலின், "உறுப்படை" என்றும், சந்திரதரிசனம் அன்னப்பிராசனமென்னுமிவற்றோடு சூரியதரிசனஞ்செய்வித்தலும், கோதரிசனஞ்செய்வித்தலும், சந்திமிதிப்பித்தலும், ஆலயத்திற்சென்று கடவுளைவணங்கச்செய்வித்தலுமுண்மையின், "உபநிட்டானமோதனம் பிறவுமுற்ற" என்றும், இவைகள் முடியவே, முதலாம்வயசில் சௌளக்கிரியையும், இரண்டாவதுவயசில் கர்னவேதனமும்செய்யவேண்டுவது விதியாகலின், "ஓரியாண்டிற்சிகைவினையுமாற்றி, இரண்டாமாண்டிற்செவிநெறிபுரிதலுற்றான்" என்றுங்கூறினர். இதனை,

"தாளான்மதிநான்கினிற் சந்திமிதித்தபின்னர்க்-கேளோடுமாறுமதியிற் கிளரன்னமூட்டி" எனவும். "தத்தம் மறையின்வழியேசிகை தாங்கவைத்து" எனவும் வருங்காசிகாண்டச்செய்யுட்களானுணர்க நடையயின்று, மழலைச் சொற்பேசியழகைத்தரும் இரண்டாண்டுக் குழந்தையினை யை, ஆண்டுக் கேற்றி, "சிறப்புடையிரண்டாமாண்டின்" என்றார். உபநிட்டாணம்—(நான் காம்மாதம்) சந்திரனைத்தரிசனஞ்செய்வித்தல். (குழந்தையைவெளியிற் கொண்டுவருதல்) உபநிஷ்கிரமணமென்பதுமிது. அன்னப்பிராசனம்—(ஆறு, எட்டு, பத்து, பன்னிரண்டு எனனும் மாதங்களில்) சோறூட்டுதல். சூரியதரிசனம்—(மூன்றாவது மாதத்தில்) சூரியனைத் தரிசனஞ்செய்வித்தல். கோதரிசனம்—(நான்காவது மாதத்தில்) பசுவைத்தரிசனஞ்செய்வித்தல். சந்திமிதிப்பித்தல்—(நான்காவது மாதத்தில் மங்கலச்சிறப்போடும் நன்யாமனெடுகிச்சென்று) நாற்சந்தி முச்சந்திகளில் மிதிப்பித்தல். ஆலயசேவையும் நான்காமாதத்திற்செய்யப்படுவதென்க. சிகைவினை—(முதலாவதுவருடத்திலாவது இரண்டாவதுதொடங்கியைந்தாவது வருடத்துக்குள்ளாவது சுபகாலத்தில்) குடுமிவைத்தல். கர்ணவேதனம்—(இரண்டாவது வருடத்தில்) காதுகுத்துதல். "மரபினெறி" என்பதில், செறிதுளையையுணர்த்தும்.

ஏதமிலைந்தின முந் நூலிலக்கண விதியுஞ்செய்தே
யோதிடுங்கலைகளெல்லா முள்ளுறவுணர்த்துங்காலை
வேதமும் பிறவுங்கொண்டவியன்பொருடெரிந்துமேலா
மாதியேசிவனென்றெண்ணியவனடி யரணென்றுற்றான்.

(இ—ள்) ஐந்தில்—ஐந்தாவதுவருடத்தில். ஏதம் இல்—குற்றமில்லாத. முநூல்—உபவீதச்சடங்கையும். இலக்கணம் விதியும்செய்து—வித்தியாரம்பக் கிரியையையுஞ்செய்து. ஓதிடும்கலைகள் எல்லாம் உள் உற உணர்த்துங்காலை—கற்றற்குரியகலைக் ஞானங்களையெல்லாம் மனதிற்பதியுமாறு (அவருக்கு )பயிற்றிக்கொண்டுவருங் காலத்தில். வேதமும் பிறவும்கொண்டவியன் பொருள்தெரிந்து—வேதங்களும் மற்றுமுள்ளசாத்திரங்களும் தம்முட்கொண்டிருக்கும் உண்மையானபொருளை (ஐயம், திரிபு, அறியாமையகல) உணர்ந்து. மேலாம் ஆதிசிவன் ஏ என்று எண்ணி—(எப்பொருட்கும்) மேலாம் முழு முதற்கடவுள் சிவபெருமானேயென்று சிந்தித்து, அவன் அடி அரண் என்று உற்றான்—அப்பெருமானது திருவடிகளைத் (தமக்குத்) துணையென்று கருதிக்கொண்டிருந்தனர் (எ—று)

ஏகாரம் முன்னையது—அசை—பின்னையது பிரிநிலையோடுதேற்றமுமாம். அஃதுபிரித்துக்கூட்டப்பட்டது. ஐந்து—ஆகுபெயர். முந்நூலிலக்கணம்—உம்மைத்தொகை. சிவன்—சுபம்செய்பவன். வேதம். (விதிவிலக்குக்களா

ல், நன்மைதீமைகளைத்) தெரிவிப்பது. சிறப்புவிதிபெற்றிவந்தமையின் ஏ
தமிலென்னுமடையைந்துக்குங் கூட்டினுமாம். இலக்கணவிதி—அக்ஷராரம்
பக்கிரியை, 'அஃது வித்தியாரம்பம், இலக்கணம், எழுத்தென்பதை, "எ
ண்ணென்பவேனையெழுத்தென்பவிவ்விரண்டுங். கண்ணெனன்பவாழுமுயிர்க்
கு" என்பதனாலும். ஏரணங்காணென்பரெண்ணரெழுத் தென்பரின்புல
வோர். என்பதனாலுமுணர்க. பிற என்றது-ஆகமம், புராணம், ஆறங்கம்,
நீதிநூல் முதலியவற்றை, அந்தணர்க்கு உபநயனஞ் செய்வதற்குரியகாலம்,
ஏழாமெட்டாமாண்டுகளாகவும், வேதமோதல் வேதார்த்தங்களையுணர்தலா
கிய விவற்றிலதிவிருப்புடையோர்க்கு, ஐந்தாமாண்டினும் உபநயனஞ்செய்
யலாமென்னுஞ் சிறப்புவிதிபெற்றி, இரபார்க்கண்டேயருக்கும், வேதமோத
ல், வேதார்த்தங்களையுணர்தலாகிய விவற்றிலதிவிருப்பமிருந்தமையின், ஐ
ந்தாமாண்டினுபநயனக் கிரியையைச்செய்தாரென்பதாம். மேலே, மிருகக
ண்டுவுக்கு, "அப்புதல்வற்கியாண்டாறுசென்றுழி-முப்புரிநூன்வினைமுடித்
து" என்றசெய்யுளின்படி ஏழாவது ஆண்டிற் பூணூல்தரித்ததுபொதுவிதி.
வேதமோதுதலினும், அர்த்தமுணருதலினும் பிரீதியுள்ள சிறுவர்களுக்கு
ஐந்தாமாண்டினுமேனையோர்க்கு, ஏழாமெட்டாமாண்டுகளினுமுபநயனஞ்
செய்யவேண்டுமென்பதை, "பழுத்தகேள்விச் சுவையம்புமறுமுன்தெளித்து
த்தனிபகர்ந்த-ஒழுக்கங்கேட்டீர் அழற்கூட்டியவண்ணுமறையோ ரெழிற்புதல்
வர்க்கு-இழைத்தமுந்நூல் ஐயாண்டிலிடுக அன்றேல் இருநான்காய்த்-தழைத்
தபருவந்தனிலிடுக இட்டால்தத்தம் மறையயில்க." என்னுங்கூர்மபுராணச்
செய்யுளானும், "ஆண்டேழிலெட்டில் மறையந்தணர்க்காகுமுந்நூல்-" எ
னவும், "ஐந்தாம் பருவத்தினுமாமறையோர்க்கு" எனவும், வருங்காசிகாண்
டச்செய்யுட்களானும், "பிரமசாரியர்க்கறம்பேசினேங்தெனும்-பருவமே மு
தற் பகராண்டுநாலினுள்--உரைசெய்சீரிருபிறப்புற்றதென்னமுப்--புரியினூ
ன் முறைபூணல்வேண்டுமால்" என்னும் பாகவதச்செய்யுளானுமுணர்க. க
ற்கவேண்டியநூல்களைக்கற்பித்தாரென்பதுபோதர. "ஓதிடுங்கலைகளெல்லா
முள்ளுறவுணர்த்துங்காலை" என்றும், வேதம் முதலியநூல்களினுண்மைப்
பொருள் சிவமேயாமென்பதும், கல்வியறிவானுயபயன் சிவத்தையடைத
லேயாமென்பதும்போதர, வேதமும் பிறவுங்கொண்டவியன்பொருடெரிந்
துமேலா-மாதியே சிவனென்றெண்ணியவஷடிரணைனன்றுற்றான்." என்
றுங்கூறினர்.

சிவத்தையடையாதொழியிற் கல்விஞானத்தாற்பயனில்லையென்பதை,
"வேதமோதிலென்சாத்திரங்கேட்கிலென்-நீதிநூல்பலநித்தம் பயிற்றிலென்
-ஓதியங்கமொராறு முணரிலென்-ஈசனையுள்குவார்க் கன்றியில்லையே." எ
ன்னும் ஆளுடையவரசுகளினருள் வாக்கானுணர்க. (கககக)

அரனைமுன்னிறைஞ்சியன்னோனன்பரைத்தாழ்ந்துதங்கள்
குரவனைவணக்கஞ்செய்துகோதறுமுனிவர்தம்மைப்
பரவியேபயந்தமேலோர்பாதபங்கயங்கள்சூடிப்
பிரமமாமொழுக்கநாளும்பேணினன்பிறப்புநீப்போன்.

(இ-ள்) பிறப்புநீப்போன்—(தமது) பிறவியைநீக்குபவராகிய மார்க்கண்டேயமுனிவர். முன் அரனை இறைஞ்சி-முதலிற் சிவபெருமானைவணங்கி. அன்னோன் அன்பரைதாழ்ந்து— பின்பு அப்பெருமானுடைய அடியார்களை வணங்கி, தங்கள்குரவனைவணக்கம்செய்து-தங்கள்குலகுருவை நமஸ்காரம்பண்ணி. கோது அறு முனிவர்தம்மைபரவி—(காமம், வெகுளி, மயக்கமென்னும்முக்) குற்றங்களில்லாத முனிவர்களைவணங்கி. பயந்தமேலோர் பாதபங்கயங்கள்சூடி—(தம்மைப்) பெற்ற அன்னைதந்தையர்களின் பாததாமரைகளைத் தலைமேல்வைத்து. நாளும் பிரமம் ஆம் ஒழுக்கம்பேணினன்-தினந்தோறும் பிரமசரியவிரதத்தையநுட்டித்துக் வந்தனர். (எ-று)

ஏகாரம்-அசை. நீப்போன்-வினையாலணையும் பெயர். நாளும்-என்பதன்கணும்மைதொறுபொருளில் வந்தது. பாதபங்கயம்-வடமொழியாகலினியல்பாயிற்று. தங்கள், என்னும்பன்மை, தம்மினத்தினரையுமகப்படுத்தும். அரன்—(அடியார்களுடையவினையை) அழிப்பவன், (கடைகாலத்திலுலகத்தையும்) அழிப்பவன். பாதபங்கயம், உருவகம். பங்கயம்-சேற்றிற்பிறப்பது குருலிங்கசங்கமத்தைமுன் வணங்கவேண்டுதலின், அரனையுமன்பரையுங்குரவனையும் முன்வைத்துக் கூறினர்.

இச்செய்யுளில், இறைஞ்சி, தாழ்ந்து, வணக்கஞ்செய்து, பரவி, சூடி என ஒருபொருள்குறித்த பலசொற்கள்வந்தமையின். பொருட்பின்வருநிலையென்னு மலங்காரம். (ககஉ)

இந்தவாறியலுங்காலையெண்ணிரண்டானயாண்டும்
வந்ததாலதனைநோக்கிமைந்தனைநோக்கிவாளா
தந்தையும்பயந்ததாயுந்தனித்தனியிருந்துசால
வெந்துயர்க்கடலின்மூழ்கிவிம்மலுற்றிரங்கினைந்தார்,

(இ-ள்) இந்த ஆறு இயலும் காலை—இவ்வாறாகநடந்துகொண்டுவரும் காலத்தில், எண் இரண்டு ஆனயாண்டும்வந்தது—(மார்க்கண்டேயருக்குப்) பதினாறுவதானவருஷமும் பிறந்தது. அதனைநோக்கி-அப்பதினாறுவது வருஷத்தையும்நினைந்து. மைந்தனைநோக்கி-புத்திரனையும்நினைந்து. தந்தையும்பயந்ததாயும்—பிதாவும் (பத்துமாதமும் சுமந்து) பெற்றமாதாவும், தனி தனி இருந்து-வெவ்வேறாக இருந்து. வெம்துயர்கடலின் சாலமூழ்கி-கொடுமையானதுன்பசாகரத்தில் மிகவுமழுந்தி, வாளா—ஏதொன்றுஞ்சொல்லாமல்,

விம்மல் உற்று இரங்கினைந்தார்-ஏக்கங்கொண்டு அழுது வருந்தினார்கள்.

ஆல்-அசை. உம்மை-இழிவு சிறப்பு-நோக்கியென்பதிரண்டும் சிந்தித்தென்னும்பொருட்டு. வாளா-சும்மா-எனவே, ஒன்றுஞ்சொல்லாமலென்றபடி. "விம்மலுற்றிரங்கி" என்பதற்குபொருமியழுதென்பினுமாம். ஆர்க்கிங்கிடையாதகல்வியழகும், காயவழகும், சிவபக்தியுமமைந்த சற்புத்திரனாகியவிப்புத்திரனையா! நாளையிறக்கக்கொடுப்பதென்றோருகாற் புத்திரனைநேர்முகத்திற்கண்ணூன்றிப்பார்த்தழுதாரென்பினுமாம். இருவருமொருங்கிருந்திரங்குகிற் கவலைமீக்கூரப்பெறுதலின், அகலத்தனியிருந்தழுதாரென்பார், "தனித் தனி" என்றார். "வாளா" என்பதற்கு இச்செய்பொருளையொழித்து இறவாதவரையிறப்பரென்றிரங்கியது வீணாதலின், பயனில்லாமலென ஒரு குறிப்புப்பொருள்கொள்ளினுமாம். (ககூ)

ஆங்கதுமதலைகாணாவடியிணைவணங்கியன்னோர்
பாங்குறவணுகிநீவிர் பருவரலுறுகின்றீரா
லீங்கிதுவென்னோவின்னு மியாதுமொன்றறிதேற்றே
னீங்குமினவலநும்பாலெய்தியநிகழ்த்துமென்றான்.

(இ-ள்) ஆங்கு அது மதலைகாணா—(வருத்தமுறுகின்ற) அத்தனைப் புத்திரரான மார்க்கண்டேயமுனிவர்கண்டு. அன்னோர்பாங்குஉற அணுகி-அன்னை தந்தையரின்பக்கத்தில் பொருந்தப்போய். அடி இணைவணங்கி—(அவர்களுடைய, உபயபாதங்களை (விழுந்து) கும்பிட்டு. நீவிர்பருவரல் உறுகின்றீர்—(மீள அவர்களைநோக்கி) நீங்களிருவரும்வருத்தப்படுகின்றீர்கள், ஈங்கு இது என்—(இங்ஙனம் வருத்தப்படுகின்ற) இதற்குக் (காரணம்) யாது. இன்னும் யாதும் ஒன்று அறிதல் தேற்றேன்—(அடியேன்) இன்னமும் (இதற்குக்காரணமான) எதொன்றையுமறியேன், அவலம்நீங்கும்—(ஆனால்) கொண்டவருத்தத்தைவிட்டு விடுங்கள். நும்பால் எய்திய நிகழ்த்தும் என்றான்-உங்களிடத்திற்சம்பவித்த இடர்களை (அடியேனுக்குச்) சொல்லுங்களென்றுவினாவினர். (எ-று)

ஆலுமேயும்-அசைகள். காணா-ஆகாரவீற்றுடன்பாட்டெச்சம். மின்-முன்னிலையசை. அங்கது, இங்கிது என்பன, "தாக்கிற்சுட்டுநீளும்" என்னும்விதியான், நீண்டுநின்றன, இஃதிரண்டும். "தேம்பலஞ்சிற்றிடையீங்கிவள்" என்றதிற்போல ஒருசொன்னீர. "அறிதறேற்றேன்" என்பதும், மேலே, "யாவதென்றுணர்தறேற்றாது" என்றதிற்போல ஒருசொற்றன்மையது. எய்திய-வினையாலணையும்பெயர். பருவரல்-தொழிற்பெயர். பால்-ஏழனுருபு.

கண்டமொன்றுனக்குண்டென்று கூறிற்புத்திரர்சஞ்சலப்படுவரென்றி ப் பதினாறுவருடமும்மறைத்திருந்தமையின், மார்க்கண்டேயமுனிவர், இன் னும்யாதுமொன்றறிதறேற்றேன்'' என்றார். (ககச)

கூறியமொழியுட்கொண்டுகுமரநீயிருக்கநம்பால்
வேறொருதுயரமெய்திமெலிவதுமுண்டோமேறு
வேறுடையமலமூர்த்திபாண்டுநின்றனக்கீரைந்து
மாறுமென்றளித்தானந்நாளடைதலினவலஞ்செய்தோம்

(இ-ள்) கூறியமொழிஉள்கொண்டு-அவ்வாறுபுத்திரர் சொன்னவா ர்த்தையைக்கேட்டு, குமர-புதல்வனே! நீ இருக்க— எங்களுக்குப்புதல்வ னுக) நீ யிங்கேயிருக்க. நம்பால்-எங்களிடத்தில், வேறு ஒருதுயரம் எய்தி மெலிவதும் உண்டோ—(இன்பத்தினும்) வேறானவொருதுன்பம்வந்து வ ருந்துகின்றதுமுளதோ. (இல்லையென்றபடி) மேல்நாள்-முன்னாளில். ஏறு உடை அமலமூர்த்தி-இடபவாகனத்தையுடைய நிர்மலராகியசிவபெருமான். நின்தனக்கு—(மகனே) உனக்கு. யாண்டு ஈரைந்தும் ஆறும் என்று அளித் தான்-வயதுபதினாறென்று வரமருளிச்செய்தனர். அ நாள் அடைதலின் அ வலம்செய்தோம்-அந்தப்பதினாறுவயதாகியகாலம் வந்துவிட்டமையால் (நா ங்கள்) வருத்தமடைந்தோம். (எ-று)

ஓகாரம்-எதிர்மறை. துயரம். என்பதனம்-சாரியை. உடை-ஈறுதொகு த்தல். ஈரைந்து-பண்புத்தொகை. ரகிதம்-இன்மை. நீ "நம்பாலிருக்க" எ னமாற்றிப்பொருள்கொள்ளினுமமையும். "குமர நீ கூறியமொழியுட்கொ ண்டிருக்க" எனமாற்றி, புத்திரனே நீ நாம் சொல்வனவற்றையங்கீகரித்து அதன் வழிப்பட்டொழுகிக்கொண்டிருக்க, எனப்பொருள்கொள்வாருமுளர் "குமர நீ யிருக்கநம்பால்வேறொருதுயரமெய்திமெலிவது முண்டோ" என் பதில், புத்திரனே நீயே யெமக்குவருத்தத்திற்கேதுவாக இருப்ப, அதைய ன்றிவெறுமொருதுன்பத்தையடைந்து வாடுதலுமுளதோ, எனவோர்குறிப் புப்பொருள்தொனிக்கின்றது. (ககரு)

என்றுரைசெய்ததாதையிடருறுமுகத்தைநோக்கி
யொன்றுநீரிரங்கல்வேண்டாமுயிர்க்குயிராகியென்று
நின்றிடுபரனேயேத்தியருச்சனைபுரப்பிக்கூற்றின்
வன்றிறல்கடந்துநம்பால்வல்லைவந்தடைவன்மன்னோ.

(இ-ள்) என்று உரை செய்த —(இப்படி)என்று சொன்ன. தாதை இடர் உறு முகத்தை நோக்கி—பிதாவாகிய மிருகண்டு முனிவரது துன்பத்தைக் காட் டும் முகத்தைப் பார்த்து. நீர் ஒன்றும் இரங்கல் வேண்டாம்—(மார்க்கண்

டேயமுனிவர்) நீங்களேதொன்றுக்குங்கவலைப்படவேண்டாம், என்றும் உயிர்க்கு உயிர் ஆகி நின்றிடும்—(நான்) எப்பொழுதும் ஆன்மாக்களுக்கெல்லாம்பரான்மாவாகியிருக்கின்ற. அரனை ஏத்தி அருச்சனைசெய்யி-சிவபெருமானைத்தோத்திரம்பண்ணிப் பூசையைக்குறைவின்றிமுடித்து. கூற்றின்வன் திறல்கடந்து-யமனது மிக்கவலிமையைவென்றிகொண்டு. நும்பால்வல்லை வந்து அடைவன்—(மீள) உங்களிடத்திலதிவிரைவில் வந்துசேருவேன்.

மன், ஓ—அசைகள். அருச்சனை—அருச்சனாவென்னும் வடமொழிவிகாரம். வன்றிறல்—ஒருபொருட்பன்மொழி. பால்—ஏழனுருபு. அன்னையையுமுளப்படுத்தி. நீர், நும் எனப்பன்மையாற் கூறினர். அடைவன்—தன்மையொருமை. மனத்துங்கொண்டதுமுகங்காட்டுமாகலின் "இடருறுமுகம்" என்றார். இதனை, "அடுத்ததுகாட்டும்பளிங்குபோனெஞ்சங்—கடுத்ததுகாட்டுமுகம்" என்பதனானுமறிக. உடம்பினுள் உயிரிருக்குமாறுபோல சீவான்மாவினுள், சிவான்மாவும்நின்றுதொழில்செய்வித்தலால், "உயிர்க்குயிராகி" என்றார். "இடருறுதாதை" எனமாற்றினுமாம். (சகூ)

இருத்திரால்ஈண்டேயென்றுமேதுக்கள்பலவுஞ்செப்பிக்
கருத்துறநெடிதுதேற்றிக்கான்முறைவணங்கிநிற்பத்
திருத்தகுகுமரற்புல்லிச்சென்னியுமோந்துமுன்னர்
வருத்தமுநீங்கிச்சிந்தைமகிழ்ந்தனர்பயந்தமேலோர்.

(இ—ள்) ஈண்டே இருத்திர் என்று—(நீங்கள்) இவ்விடத்திற்றானேயிருங்களென்று-ஏதுக்கள்பலவும்செப்பி—(அதற்கானிய) காரணங்கள் பலவற்றையும்சொல்லி-கருத்து உறநெடிதுதேற்றி—(அவர்கள்) மனமமையும்படிமிகவும் தெளிவுப்படுத்தி. கான்முறைவணங்கிநிற்ப—பாதங்களின்கண் (விழுந்து) முறையாகக்கும்பிட்டுப் (பின்) எழுந்துநிற்க, பயந்தமேலோர்—(அவரைத்தவம்புரிந்து) பெற்றெடுத்த தந்தையுந்தாயுமான மிருகண்டுமுனிவரும் மருத்துவதியம்மையாரும், திருதகுகுமரன்புல்லி—(அருட் (செல்வத்தாற்றகுதிபொருந்திய புத்திரனை (எடுத்துத்) தழுவி. சென்னியும்மோந்து—உச்சியையும் முத்தமிட்டு. முன்னர்வருத்தமும் நீங்கி—முன்னம் (தாமடைந்த) துன்பமுமொழிந்து. சிந்தைமகிழ்ந்தனர். மனமகிழ்ச்சியடைந்தார்கள். (எ—று)

நோக்கி, என்றுசெப்பி, வணங்கி, நிற்ப எனமேலைச்செய்யுளோடுகூட்டிமுடிக்க. ஆல்—அசை. குமரற்புல்லி—இரண்டாம்வேற்றுமைத்தொகை; இயல்பின்வந்தவிகாரம். திரு. அழகெனினுமாம்.

செப்பேசுரர், சுவேதன், இரகபதியென்றின்னோரன்ன பலர்செயல்களையெடுத்துக்காட்டியவரை நம்புமாறுதெருட்டினரென்பார், "ஏதுக்கள் பலவுஞ்செப்பிக்கருத்துறநெடிதுதேற்றி" என்றார்.

செப்பேசுரர் வரலாறு—சிலாதமுனிவர் சிவபெருமானைநோக்கி அருமையானபெருந்தவம்புரிய, எம்பெருமான்பிரசன்னமாகி, உனக்குவேண்டியதெதுவென்று வினவ, அடியேற்கு "இறவாதபுத்திரனைத்" தந்தருளவேண்டுமென்ன, அப்போதெம்பெருமான் "அவ்வாறாக, இறவாதவனுப் என்கூறுகிய ஒருபுதல்வனாக பூமியிலுதிப்பான் என்றுதிருவாய்மலர்ந்தருளிமறைந்தனர். பின்பு முனிவர்யாகபூமியையுழுகையில் பொற்பேழையில் ஒரு குழந்தையிருக்கக்கண்டுவணங்கி, சகத்பிதாவாகியதேவரீர், அடியேற்காகக்குழந்தையானீரா! என்றுசொல்லியெடுத்துக்கொண்டு தன்வீட்டில் வந்து "செப்பேசுரர்" என்று நாமமிட்டுவளர்த்துவந்தனர். ஏழாவதுவயதில், "மித்திராவருணர் என்னும் மகாமுனிவர்," இப்புதல்வன் இன்னும் ஓருவருடத்திலிறப்பானென்றுசொல்ல. அதனைக்கேட்டுத்தந்தையாரான சிலாதமுனிவர்வருத்தமுற, அதனைக்கண்டபுத்திரரானசெப்பேசுரர் "யான் இறக்கமாட்டேன்" நீர் வருத்தமுறவேண்டாமென்றவரைத்திடப்படுத்திவிட்டு. தாம் சிவபெருமானைத்தோத்திரஞ்செய்ய, எம்பெருமான்காட்சிகொடுத்து "யமன் உன்னிடம்வரமாட்டான்" என்று திருவாய்மலர்ந்தருளிச்செய்து, தமதுதிருக்கரத்தையவர் தலைமேல்வைத்துப்பரிசதீட்சைகொடுத்து, "திருநந்திதேவர்" என்னும் தமது திருநாமத்தையும், நெற்றிக்கண், மான், மழு, பிறைமுதலியவற்றோடமைந்தசாரூப்பியத்தையுங்கொடுத்து, "சுயசை" என்னும்பெண்ணையும்மணஞ்செய்வித்து, தாம் என்றைக்கும் வீற்றிருக்கும் திருக்கயிலாயகிரிக்குமுதற்காவலாய பதத்தையுங்கொடுத்தருளினர் இதனை, இலிங்கபுராணம்—நந்திகேசுரர்—காலனைவென்ற அத்தியாயத்தில், "பருவமேழுசெல்காலையிற் பழமறைமுழுதுந்—தெரியுமித்திராவருணராந் தீதறுமுனிவர்—அருகுவந்தினியோர் பருவத்தினிலாவி—யொருவுமென்றுரைசெய் தனருணர்வினிலுணர்ந்தே," எனவும், "ஆயவாசகங்கேட்டலுமருளுடைச்சிலாதன்—சாயநெஞ்சகந்தளர்தலுந்தளரனீதளரல்—மாய்வதில்லையானென்றவன் மனங்கொளக்கூறிப்—பாயுமால்விடைப்பாகனைப்பணிந்தனன்றுதித்தான்" எனவும், "வழுத்தல்கேட்டலுமதிமுகிழணிந்தவார் சடைமேற்—குழைத்தபைம் புனிர்க்கொன்றைதாழ் குழகன்வந்தாவி-யழிக்குங் கூற்று வனுன்னுழையணுகிடானென்று-தழைத்தகாதலாற்றலையின் மேற்றன் கரம் வைத்தான்" எனவும் வரும்செய்யுட்களாலுணர்க.

சுவேதன்வரலாறு—சுவேதனென்னுமரசன் தனக்கு மரணகாலம் சமீபித்தமையையுணர்ந்து, அரசாட்சியைநீக்கிவிட்டுத் தவவேடம்பூண்டு காலாஞ்சரமென்னும் புண்ணியதீர்த்தத்தையடைந்து அங்குச் சிவபூசைசெய்துகொண்டிருக்கையில். குறித்தநேரத்து உயிரைக்கவரும்பொருட்டு யமன்வந்து வெளிப்பட்டுப்பாசத்தைக் கழுத்திலெறிந்தான். அதனைக்கண்டமாத்திரத்தில், சுவேதவேந்தன்மனங்கலங்கித் தான்தாபித்தும் பூசைசெய்துகொ

ண்டிருந்த சிவலிங்கத்தையே கட்டித்தழுவிக்கொள்ள உடனேசிவபெருமான் உமாதேவியோடுங்கூடி இடபாரூடராய்ச் சூலத்தைச்சுழற்றிக்கொண்டு பிரசன்னமாக, அதனைக்கண்ட யமன் அச்சங்கொண்டிறந்துவிட. எம்பரமபிதாவாகியசிவபெருமான் சுவேதனைத் தமது கணங்களுக்கதிபதியாகும் பதத்தைக்கொடுத்தருளி, பின்னருமாமகேஸ்வரியின் வேண்டுகோளுக்கிரங்கி, யமனையுமெழுப்பியருளினார். இதனை, காஞ்சிப்புராணம், இறவாத்தானப்படலத்தில், "சுவேதனென்பான்வாழ்நாட்கழிவுதன்னாநாட்-சுவேதந்தீற்றுயாடச் சூழலதனிடைச்-சுவேதநல்லானூர்திகோன்றொடாழுதனன்-சுவேதநீற்றூனீத்தான் பிறவித்துன்பமே." எனவருஞ்செய்யுளானும், இலிங்கபுராணம், சுவேதன்காலனைவென்ற அத்தியாயத்தில். "சிறிபது நம்வாணாளென்றெண்ணி மறைச்சுவேதனெனுமிர் திங்கள்வேணிச்-சுறைமிடற்றோனடிபரவுங்காலையினிற் கண்களழல் கதுவக்கீற்றுப்-பிறையெயிற்றுவாய்மடித்துப்பெருஞ்சினந்தன் றலைக்கொளீஇ இப்பிறங்குபொற்கோட்-டிறுவரைகால்கொடுநடந்துவருவதென வெங்காலனெய்தினனே," எனவும், "பாசமவன்கழுத்திடலும் பாய்விடையோய்காத்தியெனப்பகராமுன்ன-மாசின்மணிமிடற்றிறைவன் வடவையழல்கக்குமழுவாள்கைத்தாங்கித்-தேசடையவிலிங்கத்திற்கணங்களொடுக் தோன்றநோக்கி-யோசனைபோய்வெங்காலனுருமினதிர்ந்துள்ளாவியொழிய வீழ்ந்தான்" எனவும் வருஞ்செய்யுட்களானுமுணர்க.

கிரகபதிவரலாறு-விசுவாநரனென்னுமந்தணர் தவத்தில்மேம்பட்டவராய்பலவகைத்தருமங்களையும் புரிந்துகொண்டுவாழ்ந்துவருங்காலத்தில், தபோபலத்தினால் கிரகங்கணன்னிலைக்கணிற்கும், சுபதினத்திலே சுபமுகூர்த்தத்திலேயொரு புத்திரனைப்பெற்றுவளர்த்துக்கொண்டுவருகையில், அத்திரிமுதலானமுனிவர்களும், விட்டுணுமுதலானதேவர்களும், திக்குபாலகர்களும், சமுத்திரங்களும், நதிகளும், மலைகளும், நாகர்களுமங்குவந்து, அக்குழந்தைக்குக் "கிரபதி" யெனப்பெயரிட்டு, பிள்ளைக்கும் அன்னைதந்தையருக்குமாசீர்வாதமுஞ்சொல்லிப்பின் புதத்தமிடங்களையடைந்தார்கள். பின் ஒரு நாள் நாரதமகாமுனிவரவ்விடம்வந்து "கிரகபதியின்," அங்கலக்கணங்களைநோக்கிப்பாராட்டி இப்புதல்வனுக்குபன்னிரண்டாவது வயதில் உயிர்நீங்கும்படியிடியானது அதிர்ந்துவிழும் அதனைத்தவிர்க்கும்வகையைச் செய்யக்கடவீரென்றுசொல்லிப்போயினார். அதனைக்கேட்டவிசுவாநரன் சகிக்கமுடியாதபெருந்துன்பமடைந்து தாமும் மனைவியும்புலம்பிக்கொண்டிருப்பதை "கிரகபதி" கண்டு நீங்களேதொன்றும்வருத்தப்படவேண்டாம் யான்சிவபெருமானைவழிபட்டு இடியைவிலக்கிக்கொண்டுவருகின்றேனென்றனுமதிபெற்றுக்கொண்டு, காசியம்பதியிற்போய் கங்கையில்ஸ்நானம்பண்ணி

அவ்விடத்தில் தம்முடையபெயரால் ஒருலிங்கத்தைத்தாபித்துத்தோத்திரம்பண்ணிப் பூசைசெய்துகொண்டிருந்தனர். அங்ஙனமிருக்குங்கால், இடிவீழவேண்டியநாள்வந்தது, வருதலும், சிவபெருமான் இந்திரன்போலவந்து மனநிலையைப்பரீட்சித்துப்பின்னர்ச் சொரூபங்கொண்டு காட்சிகொடுத்தருளித்தமதருமைத்திருக்கரத்தால் தடவி மனந்தளராதேயிடிவீழாமற்காத்தோமென்று திருவருள்பாலித்து, அக்கிரகபதிக்கு, தந்தைதாயோடும்தென்கீழ்த்திசையினக்கினிதேவனாக இருக்கும் பதத்தைக்கொடுத்தருளினார். கிரகபதியால் தாபிக்கப்பட்டலிங்கம், (அக்கினிதேவலிங்கம்.) இதனை, காசிகாண்டம், சிவசன்மா அக்கினியுலகங்கண்டதில். "இலக்கணமுடையனொருமீங்கிவன் பன்னீராண்டி—னலக்கணுற்று விசோரவசனியேறதிர்ந்துவீழ்ட்-விலக்குவதுண்டேனீவிர் விலக்குகவென்றுகூறி—நலத்தகுமகதிவீணை நாரதன்போயினனே" எனவும், "ஆற்றருந்தவங்களியாவுமாற்றியுமனப்பில்கால-நோற்றுநற்றனமெய்திருவலருமறையால் விண்ணோர்ப்-போற்றியுந்தமியேனிந்தப்புகல்வனைப் பயந்ததெல்லாங்—கூற்றினுக்குணவாய் வாளாகொடுப்பவோவென்றுலைந்தான்" எனவும், "தந்தைதாய் வருத்தநோக்கித்தளர்ந்திடறவிர்கழுக்க—ணைந்தைசீரடியார் தம்பாலெய்திடாவெரிகட்பேழ்வாய்—வெந்திறற்கூற்று மஞ்சு மசனியோவீழுமெண்டோ—ளந்தணன்மலர்த்தாள் போற்றியாங்கது தடுப்பேனென்றான்." எனவும், களங்கனியனையமேனிக் கண்ணனுங்கமலத்தோனு—மளந்தறிவரியதாருங் காசியிலடைந்து பின்னர்த்—துளங்குநீர்க்கங்கைமூழ்கித் தூமதிக்கண்ணியானை—யுளங்களிந்துருகப்போற்றியுவப்பொடும்வழிபட்டானே" எனவும், "என்னலுங்கனன்றுசீறியிருவிசும் பனிக்குமேலோன்—மின்னகுவயிரவொள் வாளுருமுகவிதிர்த்தவேலோடு-மன்னதுநோக்கிமைந்தனயர்தலு மமலன்றோன்றித்—தன்னமர்கையான்மேனிதைவந்து தளரலென்றான்" எனவும் வருஞ்செய்யுட்களாலுணர்க. (கசுஎ)

இருமுதுகுரவர்தத்தமேவலினீசனென்னு
மொருவனதருளுமன்புமுடனுறுதுணையாய்ச்செல்லப்
பொருவருமகிழ்ச்சிபொங்கப்பொள்ளெனப்பெயர்ந்துபோகித்
திருமணிகன்றிகைப்பேர்ச்செம்பொனாலயத்திற்புக்கான்.

(இ—ள்) இருமுதுகுரவர் தம் தம் ஏவலின்—(தமது) தந்தைதாயர்களுடைய அநுமதியின்படி. ஈசன் என்னும் ஒருவன் அது அருளும்—சிவபெருமானென்றுசொல்லப்படும் சர்வலோகைகநாயகரது (தம்மேற்பாலித்தருளும்) கிருபாகடாக்ஷமும். அன்பும்—(தாமவர்மேற்கொண்ட) மெய்யன்பும், உடன் உறுதுணையாய்செல்ல—தம்முடன்கூட உற்றதுணையாகவரவும். பொருவு அருமகிழ்ச்சிபொங்க—சமானமில்லாதபெருங்களிப்பு மேலிட்டோங்க

வும். பொள்ளெனபெயர்ந்துபோகி—அதிசீக்கிரத்தில் (தமதுவீட்டை) விட்டகன்றுசென்று. திருமணிகன்றிகைபேர் செம்பொன் ஆலயத்தில்புக்கான்—திருமணிகர்ணிகையென்னும்பெயரையுடைய மாற்றுயர்ந்தபொன்னாற்செய்ததிருக்கோவிலின் கட்பிரவேசித்தனர். (எ—று)

தத்தம்—வலித்தல் விகாரம், ஆறனுருபு. இன்—ஐந்தனுருபு, ஏதுப்பொருட்டு. இருமுதுகுரவர்—பண்புத்தொகைப் பன்மொழித்தொடர், இரண்டு பழமையான பெரியோர் என்பதுபொருள், எனவே அன்னைதந்தையரென்பதாம். பொள்ளென—விரைவுக்குறிப்பு. ஏவலின்பெயர்ந்துபோகியெனவியையும். திருமணிகன்றிகையென்னும்பெயரும் பெயர்க்காரணமும் மேற்கூறினும். இவர் தம்மையிரக்ஷிக்கவேண்டுமெனச் சிவபெருமான், தம்மேற்பாலித்ததிருவருளும், தாம வரையடைந்துய்யவேண்டுமெனவவர் மேல்வைத்தபக்தியும் விழுங்கிக்கொள்ளத் தம்வசமழிந்தவற்றின் வசமாகச்சென்றமையின். "ஈசனென்னுமொருவனதருளுமன்பு முடனுறுதுணையாய்ச்செல்ல," என்றும், சத்திநிபாதப்பேறடைந்த சிவனடியாரையமன்யாதுசெய்வான் என்றசெருக்குடையின், "பொருவருமகிழ்ச்சிபொங்க," என்றுங்கூறினர். அருள்—முழுமுதற்கடவுள் ஆன்மாக்களிடத்துப்பாலிக்குங்கிருபை. அன்பு—ஆன்மாக்கள் முழுமுதற்கடவுளிடத்துவைக்கும்பக்தி. அருளில்வழியன்புதியாமையான், அருளைமுன்வைத்தருளுமன்புமெனப்பட்டது. இஃதிங்ஙனமாதலை, "என்னையேதுமறிந்திலனெம்பிரான்—றன்னை நானுமுன்னேதுமறிந்திலே—னென்னைத்தன்னடியானென்றறிதலுந்—தன்னை நானும் பிரானென்றறிந்தேனே," என்னும் ஆளுடையவரசுகளினருள்வாக்கானுணர்க.

என்புநெக்குருகக்கண்ணீரிழிதரவலஞ்செய்தீசன்
முன்புறவணக்கஞ்செய்துமுடிமிசையடிகள்சூடித்
தென்புலத்தொருசாரெய்திச்சிவனுருச்செய்துபன்னா
ளன்புடனருச்சித்தேத்தியருந்தவமியற்றியிட்டான்.

(இ—ள்) என்புநெக்கு உருக—(அங்ஙனமடைந்த மார்க்கண்டேயமுனீந்திரர், அன்புமேலீட்டினால்) எலும்புகள்நெகிழ்ந்து உருகவும். கண்ணீர் இழிதர—(ஆனந்தக்) கண்ணீர் (பெருகிச்) சொரியவும். வலம்செய்து—(அத்திருக்கோவிலை) வலமாகச்சுற்றிவந்து. ஈசன் முன்பு உறவணக்கம்செய்து—(அங்கெழுந்தருளியிருக்கும்) விசுவநாதசுவாமியின் திருமுன்னிலையில்பொருந்த நமஸ்காரம்பண்ணி. முடிமிசை அடிகள்சூடி—(தமது) தலையின்மேல் அப்பெருமானுடைய திருவடிகளைத்தரித்துக்கொண்டு. தென்புலத்து ஒரு சார் எய்தி—(அத்திருக்கோவிலின்) தென்திசையிலோரிடத்திற்சேர்ந்து. சிவன் உருசெய்து—சிவலிங்கப்பிரதிஷ்டையண்ணி. பல் நாள்—பலநாள். அன்பு உடன் அருச்சித்து ஏத்தி—மெய்யன்போடும் பூசைசெ

ய்து துதித்து. அரும் தவம் இயற்றியிட்டான்—(எவராலும்செய்வதற்கு) அருமையான தவத்தைச்செய்தனர். (எ-று)

இழிதர—தாதுணைவினை. வணக்கம்-தொழிற்பெயர். முன்பு—சந்நிதானம். முடிமிசை அடிகள் சூடுதல், சாஷ்டாங்கநமஸ்காரம். அஃது எட்டங்கங்கள்படவிழுந்து கும்பிடுதல், உரு—ரூபமென்னும் வடமொழிச்சிதைவு. தன்வசமழிதற்கும், மெய்ம்மையானபேரன்புடைமைக்கும், என்புநெக்குருகலும், கண்ணீரிழிதலு மடையாளமென்க. (௧௬௬)

வேறு

ஈசனு மவ்வழியெய்திநற்றவம்
பூசனை யதனொடுபுரிதியாலது
மாசில தாதலின் மகிழ்ந்துநீயினிப்
பேசுக வேண்டியபெறுதற்கென்னவே.

(இ—ள்) ஈசனும் அவழி எய்தி—(அப்பொழுதில்) அன்பர்க்கு எழிவந்துவேண்டிய வேண்டியாங்கீயு மருட்பெருந்தியாகியாகிய) சிவபெருமானும் அவ்விடத்தில்பிரசன்னமாகி (காட்சிகொடுத்து) பூசனை அதனொடுநல்தவம்புரிதி—(மார்க்கண்டனே, என்னை) அருச்சனைசெய்வதோடும் நல்லதவத்தைச்செய்கின்றாய். அது மாசு இலது ஆதலின்மகிழ்ந்தும்—அத்தவமானது குற்றமில்லாமலிருத்தலினால் (நாமதன்பேரில்) மகிழ்ச்சிகொண்டோம். நீ வேண்டியபெறுதற்கு—(குழந்தாய்) நீ விரும்பியதைப்பெற்றுக்கொள்ளுதற்கு. இனி பேசுக என்ன—இப்பொழுது (இன்னதென்று) சொல்லக்கடவாயென்றுவினவியருள. (எ-று)

ஈற்றேகாரமுமாலும்—அசைகள்—ஒடு—உடனிகழ்ச்சி. புரிதி—என்பதில் இ—நிகழ்காலங்காட்டிநற்று—மகிழ்ந்தும்—தன்மையொருமையிறந்தகாலவினைமுற்று. வேண்டிய—பெயர். உம்மை—உயர்வுசிறப்பு. தவம்—மனம்பொறிவழிபோக்காது நிறுத்தலும், உண்டிசுருக்கலும், வெயில், பனி, மழை, காற்றுகியவிவற்றிற்குடையாது நின்று தம்முயிர்க்குவருந்துன்பங்களைப்பொறுத்தலுமாம். இதனோடு சிவார்ச்சனையையுமனுதினம்புரிதலின், "தவம், பூசனையதனொடுபுரிதி" என்றார். பூஜா என்னும் வடமொழிபூசனையெனவிகாரப்பட்டது.

இதுமுதல்மூன்றுசெய்யுட்கள் ஒருதொடராதலிற்குளகம்.

இதுமுதல் இருபதுசெய்யுட்கள்பெரும்பாலும் மூன்றுஞ்சீர் மாச்சீரும ஒழிந்தமூன்றுசீரும் விளச்சீருமாகிவந்த அளவடிநான்குகொண்டகலிவிருத்தங்கள். (௨௦௦)

ஐயனே யமலனே யனைத்துமாகிய
மெய்யனே பரமனே விமலனே யழற்
கையனே கையனேன் காலன் கையுறா
துய்யநேர் வந்துநீ யுதவென் றோதலும்.

(இ—ள்) ஐயனே—பூசிக்கப்படுபவரே! அமலனே—நிர்மலரே! அனைத்தும் ஆகியமெய்யனே—எல்லாப்பொருளுமாகிய திருமேனியையுடையவரே! பரமனே—(எல்லாவற்றிற்கும்) மேலானவரே! விமலனே—மலரகிதரே! அழல்கையனே—அக்கினியைத் தரித்ததிருக்கரத்தையுடையவரே! கையனேன்—கீழ்மகனாகிய அடியேன். காலன்கை உறாது உய்ய—யமனதுகையிலகப்படாமல் தப்பிப்பிழைக்க. நீ நேர்வந்து உதவு என்று ஓதலும்—தேவரீர் (அடியேனுக்கு) முன்னேவந்து காத்தருளவேண்டுமென்று (மார்க்கண்டேய முனீந்திரர் சிவபெருமானைநோக்கி) விண்ணப்பஞ்செய்யவும். (எ—று)

ஏகாரங்கள்—விளியுருபுகள். ஏன்—விகுதிமேல்விகுதி. கை—கீழ்மைகையன்—அதனையுடையவன். காலன்-உயிர்களின் ஆயுட்காலத்தைக் கணக்கிடுபவன். கையுறுதல்கைவசப்படுதல்.

சிவபெருமான், அருச்சிக்கபபடுபவரென்பதுபோதர, "ஐயனே." என்றும், இயல்பாகவே பாசநீக்கத்தையுடையவரென்பதுபோதர, "அமலனே, விமலனே," என்றும், முப்பத்தாறுதத்துவங்களுமே திருமேனியாகப்பொருந்தப்பெற்றவரென்பதுபோதர, "அனைத்துமாகியமெய்யனே." என்றும், தத்துவங்களுக்கதீதப்பட்டவரென்பதுபோதர, "பரமனே" என்றும், கடைகாலத்திலெல்லாவற்றையுந் தம்முளொடுக்குகின்றவரென்பதுபோதர, "அழற்கையனே," என்றும் விளித்திரந்தார். அமலன், விமலனெனவிருகால் கூறியது அன்பின் மேலீட்டால். மூன்றாமடியில், "கையனே கையனேன்காலன்கையுறாது." எனவந்தமையின், முற்றுமோனைத்தொடையும், மடக்கு என்னுஞ்சொல்லலங்காரமுமாம் (௨0௧)

அஞ்சலையஞ்சலையந்தகற் கெனாச்
செஞ்சரணிரண்டையுஞ் சென்னிசேர்த்தலு
முஞ்சனனினியென வோதவொல்லையி
னஞ்சணிமிடற்றினன் மறைந்து நண்ணினன்.

(இ—ள்) அந்தகற்கு அஞ்சலை அஞ்சலை எனா—(வாற்சல்லியபாலகா நீ!) யமனுக்குக் (கிஞ்சித்தும்) பயப்படாதே பயப்படாதேயென்று திருவாய்மலர்ந்தருளிச்செய்து. செம்சரண் இரண்டையும்சென்னிசேர்த்தலும்—(தமது) செம்மையான (ஞானசத்தி கிரியாசத்திகளாகிய) இரண்டுதிருவடிகளையும். (அவரது சிரசின்மேல்வைத்துப் பாதமுத்திரை செய்தலும், இ

ணி உஞ்சனன் என ஓத—(அப்பொழுதின், மார்க்கண்டேயமுனீந்திரர், அடியேன்) இனிப்பிழைத்துவிட்டேனென்றுசொல்ல. நஞ்சு அணிமிடற்றி ஞன் ஒல்லேயின்மறைந்துநண்ணிஞன்-நஞ்சைத்தரித்த திருக்கண்டத்தையு டையசிவபெருமான் அதிசீக்கிரத்தில்மறைந்து வீற்றிருந்தருளிஞர். (எ—று)

அஞ்சலே-எதிர்மறையேவலொருமை. அடிநோக்கி, உய்ந்தனனென்ப து உஞ்சனனென்ருயிற்று. அடுக்கு-தேற்றம் உஞ்சனனெனவிறந்தகால த்தாற் கூறியது தெளிவுபற்றியென்க. சரண்-சரணமென்னும் வடமொ ழிவிகாரம். ஒல்லே-விரைவிக்குறிப்பு. என்ன, ஓதலும், சேர்த்தலும், ஓத, நண்ணிஞனென, மேலேச்செய்யுட்களோடுகூட்டிமுடிக்க.

யமன் வருந்துணேயுமகலாதங்கிருந்தமையின், "போயிஞன்" என்ஞ து, "நண்ணிஞன்" என்ருர், அங்ஙனமாயின்சர்வவியாபகமுள்ள கடவுள ப்பொழுதிற்ருனங்கிருந்தாரோவெனின், அற்றன்று, முன்னர்ப்பாலுக்குள் வெண்ணெய்போலவும், இதுபொழுது தயிருக்குள் வெண்ணெய்போலவுமி ருந்தாரென்றெழிக. மரணசனனங்களுக்கேதுவான மலபந்தத்தைநீக்கிஞே மென் பதற்குச்சான்ருகச்சிரசிற்பாத முத்திரையைவைத்தாரென்பதாம், இ தனே, "அரன்விதியருளதென்றேயறைந்தன மதுவுமுன்னே-தரைநரகருந் துறக்கந்தனுகரணுதியெல்லாம்-வருவதுஞ்செய்த நாதிமலங்களிம் மருந்தா ற்றீர்த்துப்-பரகதியதுவுந் தந்துபாதபங்கயமுஞ்சூடும்," என்னுஞ்சிவஞா னசித்தித்திருவிருத்தத்தானுணர்க. நஞ்சுதேவரையொறுக்கவந்துழித் தே வரையுமிரக்ஷித்து அது தன்னேயும்கண்டத்துவைத்து வெம்மையைப்போ க்கிக் காத்தமைபோல, மார்க்கண்டேயரையுமிரக்ஷித்து யமனேயும் ஆணவ மலத்தைப்போக்கிக்காக்கு மாறமைந்தனரென்பதைவிளக்க, பிறிதோரடை கொடாது, நஞ்சணிமிடற்றிஞனென்றடைகொடுத்தார். கருத்துடையடை யென்னுமலங்காரம். (உ0உ)

நண்ணியபின்னரோநவையில்மைந்தனுக்
கெண்ணிரண்டாண்டெனுமெல்லேசெல்லலும்
விண்ணிடைமுகிலெனவிசைக்கொண்டொல்லேயிற்
றுண்ணெனவோர்யமதூதன்ருேன்றிஞன்,

(இ—ள்) நண்ணிய பின்னர்—(சிவபெருமான்மறைந்து) இருந்தபி ன்பு, நவை இல்மைந்தனுக்கு-குற்றமில்லாத மார்க்கண்டேயரென்னும் பா லகருக்கு. எண் இரண்டு ஆண்டு எனும் எல்லேசொல்லலும்.-பதிஞறுவரு டங்கள் (வயது) என்று (சிவபெருமான்) கூறும். (ஆயுளின்) அந்தம் வ ந்தவுடன். ஓர்யமதூதன்-ஒருயமதூதன். விண்ணிடைமுகில் எனவிசை கொண்டு—ஆகாயத்திற்செல்லும்மேகம்போலவேகங்கொண்டு. துண்ணென

(கண்டோர்களஞ்சித்) திடுக்கிடும்படி, ஒல்லையில்தோன்றினன்-அதிசீக்கி ரத்தில் வந்துகாணப்பட்டான். (எ-று)

ஏகாரம்-அசை. பின்னர்-என்பதன் அர்-சாரியை. இடை-ஏழனுருபு. யமதூதன்—வடமொழித்தொடர். யமன்—சங்காரஞ்செய்வோன்' (பிராணி களை அடக்குவோன்' "யமதூதன் முகிலென விசைக்கொண்டு ஒல்லையில் விண்ணிடைத்தோன்றினன்" என அன்வயப் படுத்தினும் பொருந்தும். மலபந்தமொழிந்தமைக்குச் சான்றாகப்பாதமுத்திரை வைக்கப்பட்ட மைந் தனாகலின், (மார்க்கண்டேயரை) "நவையின்மைந்தன்" என்றும், கருமை நிறமும் வேகமு முடைமையின், "தூதனை, "விண்ணிட முகிலென விசைக் கொண்டு" என்றும்' திடீரென்றாங்குக்காணப்பட்டமையின், "தோன்றின ன்"என்றுங் கூறினார். செல்லலுமெனபதற்குக் கழிதலுமெனப் பொருள் கோடல் பொருந்தாது. (உ0௧)

புண்டுமுப்புரமெரிபடுத்தபுங்கவன்
புண்டரீகப்பதம்பரவும்பூசனை
கண்டனன்வெருவிமார்க்கண்டன்றன்னையா
னண்டுவதரிதெனவகன்றுபோயினன்.

(இ—ள்) பண்டு—முன்னைக்காலத்தில். முப்புரமெரிபடுத்த—திரிபுரங்களையெ ரித்த. புங்கவன் புண்டரீகம் பதம்பரவும்பூசனை—சிவபெருமானாரது பாதமுத் திரையையும் (அப்பாதங்களைத்) துதிக்கின்ற பூசையையும். கண்டனன் வெருவி—(அந்தயமதூதன்) பார்த்து அச்சமடைந்து. மார்க்கண்டன் தன் னை—(இந்தச் சிவபூசைநிலையிலிருக்கும்) மார்க்கண்டேயரை. யான் அண்டுவ து அரிதுஎன—நான்சமீபித்தலும் முடியாது என்று நினைந்து. அகன்றுபோ யினன்—(அவ்விடத்தைவிட்டு) நீங்கிப்போயினன். எ—று

கண்டனன்—முற்றெச்சம். அண்டுவது—எதிர்காலத் தொழிற்பெயர். போ யினன், இன்—சாரியை. பதம்—ஆகுபெயர் "பதம்பரவும்பூசனை" என்பதற் கு, பாதங்களை வழிபடும் பூசையெனப் பொருள் கொள்ளலித் துணைச்சிறப் பின்று. சிவபூசைசெய்பவர், பஞ்சாக்ஷரமோதுபவர், உருத்திராக்கமணிந்த வர், விபூதிதரித்தவராகிய இப்பாலாரிடத்து அடர்ந்து செல்லுகிற்றீமைசம் பவிக்குமென்றஞ்சி மார்க்கண்டேய முனீந்திரரது சமீபத்திலுஞ் செல்லா மல் யமதூதன் போய்விட்டானெனபதாம். மூன்றுமடி, "கண்டனன்வெரு விமார்க்கண்டன்றன்னை." எனவிருத்தலின், மடக்கென்னுஞ் சொல்லலங் காரம். மடக்கை, யமகமென்பர் வடநூலார். (உ0௨)

தீயெழநோக்கியேசென்றிடாதுசேண்
போயதோர்வல்லியம்போலுந்தன்மையான்

வேயெனவந்துபின் மீண்டுதென்புல
நாயகனடிதொழாநவிறன்மேயினன்.

தீ எழ நோக்கி—(தான் இரைகொள்ளும்படிகருதிவந்த ஒன்றை) அக்கினிப்பொறி பறக்கப்பார்த்து. சென்றிடாது—(அதனருகிற்) போகமாட்டாமல், சேண்போய—(அச்சங்கொண்டுவிலகித்) தூரத்திலோடிப்போய்விட்ட, ஓர் வல்லியம்போலும் தன்மையான—ஒருபுலியைப்போன்ற தன்மையையுடையவனும்—வேய் எனவந்து—(அந்தயமதூதன்) தூதனென்றுவந்து. பின் மீண்டு—(மார்க்கண்டேயமுனீந்திரர்செய்யும் சிவபூசையைக்கண்டு) திரும்பிப்போய். தென்புலம்நாயகன் அடிதொழா—தென்திசைக்கதிபனுன்யமன் துபாதங்களைவணக்கம்செய்து, நவிறல்மேயினன்—சொல்வானுயினன். (எ—று)

ஏகாரம்—அசை. து—சாரியை, தன்மையான்—முற்றெச்சம். "எவ்வகைப்பெயரும்வெளிப்படத்தோன்றி, யவ்வியனிலையல்செவ்விதென்ப" என்னுந்தொல்காப்பியவிதியான், "தூதன்" என்னுமெழுவாயும், "தீயெழநோக்கி" என்றதன்செயப்படுபொருளும் தொக்குநின்றன. தொழா—செய்தென்னும்வாய் பாட்டுடன்பாட்டுவினையெச்சம், நவிறல்—தொழிற்பெயர். மேயினன்—இன்—சாரியை, "தீயெழநோக்கியேசென்றிடாது சேண்போயதோர்வல்லியம்" அபூதவுவமை, வேயென—விரைவுக்குறிப்புமாம். இனி "தீயெழநோக்கியேசென்றிடாது" என்பதற்கு, தீ எழ—அக்கினிசுவாலித்தெரிய, நோக்கியே—அதனைப்பார்த்தவளவிலே, சென்றிடாது—அதனருகிலும் செல்லமாட்டாது. எனப்பொருள்கோடலுமொன்று. எவரையுமழிக்கவல்லதும், அச்சத்தைச்செய்வதுமான புலியொன்று, தனக்கு இரையாகவுள்ள ஒரு விலங்கைசினந்துபார்த்து அதனருகிற்போக அஞ்சியோட்டம்பிடித்தமைபோல, சகல சீவான்மாக்களையுங்கொல்லவல்லயமதூதன், மார்க்கண்டேயமுனீந்திரரைப்பார்த்து அவரதுசமீபத்திற்போக அஞ்சியோடிவிட்டானென்பதாம். காலதூதனென்றுவந்தபோதுயிரைக்கவராமல், அகலநின்றகனுமிது தூதுக்கிழிவென்பார், "வேயெனவந்து" என்றார். (உ0௬)

இந்திரர்புகழ்தருமிறைவகேட்டியா
லந்தியினிறமுடையண்ணல்பாலுறு
சிந்தையனவனடிசேருஞ்சென்னியோன்
சந்ததமவன்புகழ்சாற்றுநோன்மையோன்.

(இ—ள்) இந்திரர்புழ்கதரும் இறைவகேட்டி—தெய்வேந்திரர்களினுற்புகழப்படுகின்ற தலைவரே (யான்சொல்வதைக்) கேட்பீராக. அந்தி இன் நிறம் உடை அண்ணல் பால் உறு சிந்தையன்—செவ்வானம்போன்ற (சிவ

ந்த) வண்ணத்தையுடையபெருமையிற் சிறந்தசிவபெருமானிடத்திற் பதிந்த மனமுடையவனும். அவன் அடிசேரும்சென்னியோன்—அப்பெருமானு ாது திருவடிமுத்திரையமைந்த சிரசையுடையவனும். அவன் புகழ்சந்ததம் சாற்றுப்நோன்மையோன்—அப்பெருமானுாதுகீர்த்தியையே யெப்பொழுதும்துதிசெய்கின்றவிரதத்தையுடையவனும். (எ—று)

ஆல்—அசை. புகரும், என்னும்செய்வினைபுகழ்தரும், எனச்செயப்பாட்டுவினையாயிற்று. தரு—துணைவினை. அந்தி—அந்திக்காலம், அஃதீண்டுச்செவ்வானத்திற்கு ஆகுபெயர். பால்—எழனுருபு. "இந்திரர்." எனப்பன்மையாற்கூறியது பலருண்மையின், அஃதுமேற்கூறினும். தலைமைபெற்றதேவர்களெவரையுமிந்திரரென்பதும் வழக்கென்க.

மனத்தினுற்சிந்தித்தலும் காயத்தினுல்வணங்குதலும் வாக்கினுல்துதித்தலுமாகிய திரிகரணங்களாலும் வழிபடுபவரென்பதும், அவரதுபுகழைத்தோத்திரம்பண்ணுதலை இடையறுத விரதமாகக்கொண்டவரென்பதும் போதர, "அண்ணல்பாலுறுசிந்தையன்" என்றும், "அவனடிசேருஞ்சென்னியோன்" என்றும், "சந்ததமவன்புகழ்சாற்று, நோன்மையோன்" என்றுங்கூறினர் 'நோன்மையோன்" என்பதற்குபெருமையையுடையவனென்பினுமமையும். (உ௦௬)

ஈசனதருச்சனையியற்றுகின்றன
னாசறுமனத்தினனறிவனந்தணன்
காசியினிடத்தன்மார்க்கண்டனுமெனப்
பேசியசிறப்புடைப்பெயர்பெற்றேங்குவான்.

(இ—ள்) ஈசன் அது அருச்சனை இயற்றுகின்றனன்—சிவபெருமானுக்குரிய பூசையைச்செய்துகொண்டிருப்பவனும். ஆசு அறுமனத்தினன்—குற்றமில்லாதமனத்தையுடையவனும். அறிவன்-சிவஞானத்தையுடையவனும் அந்தணன்—பிராமணவருணத்தவனும். காசியின் இடத்தன—(புண்ணியக்ஷேத்திரமாகிய) காசியம்பதியின் கண் வசிப்பவனும். மார்க்கண்டன் என பேசியசிறப்பு உடைபெயர்பெற்று ஓங்குவான்-மார்க்கண்டனென்று (சிறப்பித்துச்) சொல்லப்பட்டசிறப்புப்பொருந்திய நாமதேயத்தைப்பெற்று மகிமையடைபவனும். (ஆகிய ஒருவனுளன்). (எ—று)

ஆம்-அசை. முடிக்குஞ்சொல்வருவிக்கப்பட்டது. "ஈசனது அருச்சனை" என்பதன்கண், அது "முருகனதுகுறிஞ்சி நிலம்" என்பதிற்போல் உரிமைப்பொருட்கண்வந்த ஆறும்வேற்றுமையுருபு. மனமாசு—தீயனசிந்தித்தல். (உ௦௭)

அன்னதோர்பாலனை யணுகவஞ்சினன்
முன்னருமேகலன்முக்கணெம்பிரான்
றன்னுழையிருந்தனன் றண்டநாயக
வுனதுதியிதுவெனவுணரக்கூறினான்.

(இ—ள்) அன்ன ஓர்பாலனை அணுக அஞ்சினன்—அத்தன்மையையுடையவொப்பில்லாத (சிவானுபூதிச்செல்வனாகிய) சிறுவனை (யான்) அடைவதற்குப்பயந்துவிட்டேன் முன்னரும் ஏகலன்—(அன்றியும் அவனது) முன்பாகவும்சென்றிலேன். மு கண் எம் பிரான் தன் உழை இருந்தனன்—(அவன்) மூன்று கண்களையுடைய எங்கட்கெல்லாம் பிரானாகவுள்ளசிவபெருமான் வசத்திலிருக்கின்றனன். தண்டம்நாயக—(நீயவர்களைத்) தண்டிக்கின்றதலைவரே. இது உன்னுதி என—(நீர்) இச்செயலை ஆலோசிக்கக்கடவீரென்று. உணர கூறினான்—(யமன்) தெரிந்துகொள்ளும்படிசொன்னான். (எ—று)

அன்ன—அகரச்சுட்டின் பகுஉ. து—சாரியை. அர்—சாரியை 'உம்மை—இழிவுசிறப்பு. முன்—இடமுன். ஏகலன்—தன்மையொருமையெதிர்மறைமுற்று. அல்—எதிர்மறையிடைநிலை. பாலன்—பாலப்பருவமுடையவன். அதற்குக்காலம் பதினாறுவயதுவரையும். முக்கண்—சோமசூரியாக்கினியென்னும் மூன்றுகண்கள். தண்டம்—தண்டாயுதமுமாம். அடர்த்து அவரவர்வினைக்கேற்பத்தண்டிக்கவல்ல நீர்தாமேயெண்ணியொன்றியற்றுவதன்றி, யானது செய்யவல்லனல்லனெபதைக்குறிப்பால் விளக்குவான், "தண்டநாயகவுன்னுதி" என விளித்துக்கூறினானென்பதாம். (உ0அ)

கூறியவளவையிற்கூற்றன்றுப்பினை
யாறியசெந்தழற்கருத்தினாலெனச்
சீறினனுயிர்த்தனன்சிறுவனாங்கவ
னீறிலனாகியவிறைவனேனென்றான்.

கூறிய அளவையில்—(தூதன் இவ்வாறு) சொன்னமாத்திரத்தில். கூற்றன்—(அதனைக்கேட்ட) யமதன்மன். ஆறியசெம்தழற்கு—(எரிந்து) தணிந்துகொண்டிருக்கின்றசிவந்த அக்கினிக்கு. துப்பினை அருத்தினால் என—நெய்யைச்சொரிந்துவிட்டாற்போல. சீறினன்—கோபித்து. உயிர்த்தனன்—(அக்கோபத்தால்) நெடுமூச்சுவிட்டு. ஆங்குசிறுவன் அவன்—காசியம்பதியின்கணிருக்கும்பாலனாகிய மார்க்கண்டன். ஈறு இலன் ஆகிய இறைவனோ என்றான்—அழிவு இல்லாதவராகிய சிவபெருமானோவென்று (அலட்சியமாகச்சொன்னான். (எ—று)

சீறினன், உயிர்த்தனன்-முற்றெச்சங்கள். ஆங்கு—நீட்டல்விகாரம். ஓ காரம்—எதிர்மறை. செந்தழல்—சாதியடை—துப்பு—நெய்-நெருப்புக்குநெய்யு ணவாகலின், "அருத்திஞலென" எனப்பட்டது.

முன்னமே சுவாலித்தெரிந்துதணிகின்ற அக்கினியென்பதுபோதர, "செந்தழல்" என்றது, "ஆறியசெந்தழல்" என்றும், அதன்மீதுநெய்யை ச்சொரியினதிவிரைவிற் பற்றிச்சுவாலிக்குமேயதுபோல யமன் மிகுவிரை விற்பெருங்கோபங்கொண்டானென்பதுபோதர, "தழற்குத்துப்பினையருத் திஞலெனச்சீறினன்" என்றும், சிவபெருமானொருவரையொழிந்த எல்ல வர்க்கும் மரணசனனமுண்டென்பதுபோதர, அவனீறிலஞகியவிறைவனே வென்றான்." என்றுங்கூறினர். சிவபெருமானொருவருக்கேமரணசனனமி ல்லையென்பதனையும், ஒழிந்த எல்லவர்க்குமுளதென்பதனையும், "எல்லார் பிறப்பு மிறப்பு மியற்பாவலர்தஞ்—சொல்லாற்றெரிந்தே நஞ்சோணேசரில்லி ற்—பிறந்தகதையுங்கேளேம் பேருலகில்வாழ்ந்துண்—டிறந்தகதையுங்கேட்டி லேம்" எனவருஞ்செய்யுளாலுணர்க. (உ0க)

தருதியென் கணகரையென் றுதண்டக
னுரைசெயநின் றவோரொற்றனோடியே
வருதிர் நும்மழைத்தனன் மன்னனென்றிடக்
கரணர்கள்வந்தனர்கழல்வணங்கினர்.

(இ—ள்) தண்டகன்—(அவ்வாறுசொன்னவுடனே) யமதன்மன். என்க ணகரைதருதி என்று உரைசெய—என்னுடையகணக்கர்களையழைத்து வா வென்றுசொல்ல. நின்ற ஓர் ஒற்றன் ஓடி—அங்குநின்றவொருதூதுவனோடு ச்சென்று. மன்னன்நும் அழைத்தனன்வருதிர் என்றிட—(நமது) அரசன் உங்களையழைத்தான்வாருங்களென்று (அக்கணக்கர்களோடு) சொல்ல. கர ணர்கள்வந்தனர்கழல்வணங்கினர்—(அந்தட்சணமே) கணக்கர்கள்வந்து (ய மனது) பாதங்களைநமஸ்கரித்தார்கள். (எ—று)

ஏகாரம்—அசை. து—சாரியை. வந்தனர்—முற்றெச்சம். தண்டகன்—த ண்டஞ்செய்பவன். கரணர்—கணக்கெழுதுபவர். ஓடி, வருதிர், என்றிட, எ னவியையும். தூதன்—ஏவப்படாது தன்கருமத்தைத்தானே நாடிப்பார்ப்பவ ன். ஒற்றன்—உடனேயேவப்பட்டவற்றைச்செய்பவன். (உக0)

இறையவனவ்வழியெவருங்காணுறு
வறைகழலண்ணலையருச்சித்தேத்திய
மறுவறுகாட்சியான் மார்க்கண்டப்பெயர்ச்
சிறுவனுக்கிறுவரைசெப்புமென்னவே.

(இ-ள்) அ வழி-அப்பொழுது. இறையவன்-யமதன்மராசன். எவரும் காணொணா—(கணக்கர்களைநோக்கி, கணக்கர்காள்) எவர்க்கேனுங்காணமுடியாத. அறைகழல் அண்ணலை-ஒலிக்கின்றவீரக்கழலைத் தரித்தபெருமையிற் சிறந்தசிவபெருமானை. அருச்சித்து எத்திய-பூசைசெய்து துதித்த. மறு அறு காட்சியான்-குற்றமில்லாத அறிவையுடையவனான-மார்க்கண்டன்பெயர் சிறுவனுக்கு-மார்க்கண்டனென்று பெயரையுடையபாலகனுக்கு. இறுவரைசெப்பும் என்ன-முடிவுநாளைச்சொல்லுங்களென்று கட்டளையிடுதலும். (எ-று)

ஈற்றேகாரம்-அசை. ஒணா-ஈறுகெட்டபெயரெச்சம், இடைக்குறைந்தது, காட்சியான்-முற்றெச்சம். அவ்வழி-என்ன, எனவும், எத்திய, காட்சியான், எனவுமியையும். மார்க்கண்டப்பெயர்-விதியீற்றுப்புணர்ச்சி. கழல்-வீரர் பகைவரைவென்று அணியும் காலணி. சிவபெருமானும், அன்பரதுபகையாகிய பாசத்தைவென்றமையின், "அறைகழலண்ணல்" எனவிசேடித்துக்கூறினார். (௨௧௧)

சித்திரகுத்தரென் றுரைக்குஞ்சீரியோ
ரொத்திடுமியற்கைய ருணர்வின்மேலையோர்
கைத்தலமிருந்ததங் கணக்குநோக்கியே
யித்திறங்கேளென விசைத்தன்மேயினார்.

(இ-ள்) ஒத்திடும் இயற்கையர்—(மாறுபாடில்லாமல், ஒருவர்க்கு ஒருவர்) ஒற்றுமைப்பட்டதன்மையையுடையவரும் உணர்வின்மேலையோர்-அறிவினால்மேம்பட்டவரும். சித்திர குத்தர் என்று உரைக்கும் சீரியோர்—(ஆகிய) சித்திரன் குப்தன் என்று சிறப்பித்துச்சொல்லப்படும் சிறப்புவாய்ந்தகணக்கர்கள். கைத்தலம் இருந்ததம் கணக்குநோக்கி-கையின்கணிருந்த தங்களுடையகணக்குக்களைப்பார்த்து. இத்திறம்கேள் என—(அரசனே) இத்தன்மையைக்கேட்பாயாகவென்று. இசைத்தன்மேயினார்—(இவ்வாறு) சொல்வாராயினர். (எ-று)

ஏகாரம்-அசை. என்ன, நோக்கி, இசைத்தன்மேயினார், எனமேலைச்செய்யுளோடுகூட்டிமுடிக்க. குத்தர்-என்பதன் கண் அர்-பன்மைவிகுதி. தலம்-ஏழனுருபு. சித்திரகுத்தர்-உம்மைத்தொகை. விதியீறு. சித்திரன், குப்தன் என்னுமிக்கணக்கர்களிருவரையும், சிலநூல்களில், "குசலவன்" என்பதுபோலொருமையாற்கூறுப. (௨௧௨)

கண்ணுதலிறையவன் கருதிமேலைநா
ளெண்ணிரண்டாண்டென விறுதிகூறினார்

ணண்ணலேசென்றதாலதுவுமாங்கவன்
பண்ணியபூசனையறத்தின்பாலதே.

(இ-ள்) அண்ணலே-பெருமையிற்சிறந்த அரசனே! கண் நுதல் இறையவன்கருதி-கண்ணைநெற்றியிலுள்ள எப்பொருட்குந்தலைவரான சிவபெருமான்திருவுள்ளங்கொண்டு. மேலைநாள்-முன்னைக்காலத்தில். எண் இரண்டு ஆண்டு என இறுதிகூறினன்—(அந்தமார்க்கண்டேயனுக்கு) பதினாறுவருடமென்று ஆயுள்முடிவைத்திருவாய் மலர்ந்தருளிச்செய்தார். சென்றது—(அது) கழிந்துபோய்விட்டது. அதுவும்—(எவர்க்குங்கூடாத அக்காலமுடிவுகழிந்துபோன) அச்செயலும். ஆங்கு அவன் பண்ணிய-காசிக்ஷேத்திரத்திலந்தமார்க்கண்டேயன்செய்த.பூசனை அறத்தின்பாலது ஏ-சிவபூசையாகியபுண்ணியத்தின்றன்மையேயாகும். (எ-று)

ஈற்றேகாரம்-தேற்றம். ஆல்-அசை. ஆங்கு-நீட்டல்விகாரம். மேலை. என்பதன்கண்ஐ—சாரியை. பாலது-குறிப்புமுற்று. இறுதி-தொழிற்பெயர். தி-விகுதி. "அதுவும்" என உம்மைகொடுத்துச்சிறப்பித்தார், இம்மிப்பொழுதளவாவது தவறிப்போகாதவொன்றென்பதுபோதர. சிவபூசையாகியபுண்ணியம் விலக்கவல்லதொன்றென்பதுபோதர, "அதுவுமாங்கவன்பண்ணியபூசனையறத்தின்பாலதே" என்றார் அதுவுஞ்சென்றது, பூசனை அறத்தின்பாலது" எனவைத்து, ஆயுள்முடிவுங்கழிந்துபோயினது, சிவபூசைபுண்ணியத்தின்பாற்பட்டது, எனப்பொருள்கோடலுமாம். சீவன்களின் ஆயுள்முடிவையும், நல்வினைதீவினைப்பயன்களையுமெழுதிச்சொல்லுதல் இக்கணக்கர்களின்றொழிலாகலால், மார்க்கண்டேயரின் ஆயுள்முடிவையும் வினைப்பயன்களையுங்கூறுகின்றனரென்பதாம். (௨௧௬)

முதிர்தருதவமுடைமுனிவராயினும்
பொதுவறுதிருவொடுபொலிவராயினு
மதியினராயினும்வலியராயினும்
விதியினையாவரேவெல்லுநீர்மையார்.

(இ-ள்) முதிர்தருதவம் உடைமுனிவர் ஆயினும்-மேம்பாடுபொருந்தியதவத்தையுடையமுனிவர்களாக இருந்தாலும். பொது அறு திருவொடு பொலிவர் ஆயினும்—(பலர்க்கும்) பொதுவாகுந்தன்மையில்லாதசெல்வத்தோடு சிறப்புற்றிருப்பவராக இருந்தாலும். மதியினர் ஆயினும்-புத்தியையுடையவர்களாக இருந்தாலும். வலியினர் ஆயினும்-வலிமையையுடையவர்களாக இருந்தாலும். விதியினைவெல்லும் நீர்மையார் யாவர்-விதியைவெல்லுந்தன்மையையுடையவர் எவர். (ஒருவருமிலரென்றபடி.) (எ-று)

ஏகாரம்—அசை. யாவர்—எதிர்மறைவினாவினைக்குறிப்பு. விதி—இருவினைப்பயன் செய்தவனையேசென்றடைதற்கேதுவாகிய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதியென்பன ஒருபொருட்கிளவிகள். பொதுவறுதிரு-பங்கில்லாததிரு, ஒப்பில்லாததிருவென்பாருமுளர். தவமும் செல்வமும், புத்தியும், வலிமையுமிருந்தாலும், அவர்விதியைவெல்லுதல்முடியாதெனப் பிறர்மேலேற்றிக்கூறினார், மார்க்கண்டேயர் எவற்றானும்மேம்பாடுடையவராக இருந்தாலுமிறக்கத்தான்வேண்டுமென்பதுபோதர. எதொன்றானும் விதியைவெற்றிகொள்ளல்கூடாதென்பதை, "ஊழிற்பெருவலியாவுளமற்றொன்று-சூழினுந்தான்முந்துறும்" என்னுந்தேவர்வாக்கானும், வினைப்பயனைவெல்வதற்கு வேதமுதலா—வனைத்தாயநுலகத்துமில்லை' என்னுமவ்வைபிராட்டியாரமுதவாக்கானுமுணர்க.

அங்ஙனமேல், மார்க்கண்டேயர் விதியைவென்றமையுமுண்மையேயாமெனின், அதுவும், "ஊழையுமுப்பக்கங்காண்பருலைவின்றித்--தாழாதுஞற்றுபவர்" என்னுந்தேவர்வாக்கானும், "விண்ணுறுவார்க்கில்லைவிதி" என்னுமவ்வைப் பிராட்டியாரமுதவாக்கானுமுளதேயாமென்றொழிக. (உகசு)

ஆதலினமருலகடைவதாயினன்
பேதுறுநிரயமும்பிழைத்துநீங்கினா
னீதவனிலைமையென்றிருவருஞ்சொல
மேதகுதண்டகன்வெகுட்சியெய்தினான்.

(இ—ள்) ஆதலின்—ஆகையினால். அமர் உலகு அடைவது ஆயினன்—(மார்க்கண்டேயன் இறந்து) சுவர்க்கலோகத்தைச்சேருந்தன்மையையுடையவனாயினான். பேது உறும் நிரயமும்பிழைத்து நீங்கினான்—மனதைக்கலங்கச்செய்கின்றதற்கேதுவான நரகத்தினுந்தப்பித்து நீங்கினான். ஈது அவன் நிலைமை என்று—இதுவே அந்தமார்க்கண்டனது தன்மையாகுமென்று. இருவரும்சொல—(சித்திரன், குப்தன் என்னுங்கணக்கர்கள்) இரண்டுபெயரும்சொல்ல. மேதகுதண்டகன்வெகுட்சி எய்தினான்—மேன்மைதக்கயமதன்மராசன்கோபங்கொண்டனன். (எ—று)

அமராருலகு, அமருலகு எனவிகாரப்பட்டது. ஈது—நீட்டல்விகாரம். பேதுறல்—மனங்கலங்கல். "பேதுறும்" என்பதற்கு பலவேறுவகைப்படும், எனப்பொருள்கூறுவாருமுளர். வெகுட்சி—தொழிற்பெயர். அடைவது—எதிர்காலத்தொழிற்பெயர்.

புண்ணியங்களுட்சிறந்த புண்ணியமாகிய சிவபூசைப்புண்ணியமுடையோர் தேவராய்ச்சொர்க்கலோகஞ்சேர்வராகலின், "அமருலகடைவதாயினன்" என்றும், அவர்க்குநரகயாதனையில்லையாகலின், "நிரயமும்பிழைத்து

நீங்கினுன்" என்றுங்கூறினுர். அங்ஙனமாகவும், யமன், அதிகார அகங்கார முடைமையானும், புண்ணியசீலர்முதலினியமபுரஞ்சேர்ந்து பின்னர்ச்சொர்க்கஞ்சேருதலுண்மையானும், அவர்கூற்றைப்பொருட்படுத்தாது சினந்தானுகலின், "வெகுட்சியெய்தினுன்" என்றுர். புண்ணியசீலர்கள்சொர்க்கமாதிய பதங்களையேபெறுவரென்பதை, "தானயாகந்தீர்த்தமாச்சிரமந்தவங்கள் சாந்திவிரதங்கன்மயோகங்கள் சரித்தோ—ரீனமிலாச் சுவர்க்கம்பெற்றிமைப்பளவின் மீள்வரீசனியோகக் கிரியாசரியையினினின்ருே—ருனமிலா முத்திபதம்பெற்றுலகமெல்லாமொடுங்கும் போதரன் முனிலாதொழியினுற் பவித்து—ஞானநெறியடைந்தடைவர் சிவனையங்குநாதனே முன்னிற்கினனுதுவர்நற்ருளே." என்னுஞ்சிவஞானசித்தித் திருவிருத்தத்தானும், யமலோகஞ்சென்று அதன் பின்பேசொர்க்கம் முதலானபதங்களிற்செல்லவேண்டுமென்பதை, "அன்னமுதகமாவசுவ மாடைகுடைகட்டுவையசின—மென்னுமிவைகளிருநான்கு மீயிற்பிரேதபதியிரங்குஞ்—சொன்னபடியே மற்றுமுள தானம்புரிவார் துயரகலத்—துன்னுவார்களியமபுரிய தன்பின்னடைவர்துறக்கமுமே." என்னுஞ் சிவதருமோத்தரச்செய்யுளானுமுணர்க. (உகரு)

அந்தகனத்துணையமைச்சனுகிய
வெந்திறற்காலனைவிளித்துக்காசியி
னந்தணனொருமகனவனதாவியைத்
தந்திடுகென்றலுந்தரணியெய்தினுன்.

(இ—ள்) அதுணை—அப்பொழுது. அந்தகன்—யமதன்மராசன். அமைச்சன் ஆகியவெம் திறல்காலனைவிளித்து—(தனது) மந்திரியாகவுள்ளகொடுமையானவலியையுடையகாலனென்பவனையழைத்து. காசியில் ஒரு அந்தணன்மகன்—காசிக்ஷேத்திரத்திலொரு பிராமணச்சிறுவன் (இருக்கின்றனன்) அவன் அது ஆவியை—அந்தச்சிறுவனது உயிரை. தந்திடுக என்றலும்—(நீபோய்) இங்கேகொண்டுவரக்கடவையென்றுசொல்லுதலும். தரணி எய்தினுன்—(அந்தக்காலனென்பவன்) பூவுலகின்கண்வந்தான். (எ—று)

தந்திடுகென்றலும்—ஈறுதொகுத்தல். அவனதாவி—என்பதன்கண் ஆறனுருபு அபேதப்பொருளில்வந்தது. அமைச்சன்—அமாத்யன். என்னும் வடமொழிவிகாரம். அரசனேடு ஐக்கியமுடையனென்பதுபொருள். அமாவாசி, என்பதிற்போல. தரணி—(எல்லாப்பொருளையுந்) தரிப்பது. காலன்—இருவினைகளையுங்கணக்கிடுவோன், வயசுகணிப்போன். (உகசு)

மற்றவன்காசியில்வந்துமாசிலா
நற்றவனிருந்துழிநணுகினான்மறைக்

கொற்றவன் பூசையுங்குறிப்புநோக்கியே
பெற்றிவன் வருவதென் றெண்ணியேங்கினான்.

(இ-ள்) அவன் காசியில்வந்து—அந்தக்காலனென்பவன் காசியம்பதியின்கண்வந்து. மாசு இலாநல்தவன் இருந்த உழி நணுகி—குற்றமில்லாதநல்லதவத்தையுடைய மார்க்கண்டேயமுனீந்திரரிருந்த இடத்தையடைந்து. நான்மறைகொற்றவன் பூசையும்—நான்குவேதங்களுக்குந்தலைவரான அவரது சிவபூசையையும். குறிப்பும்நோக்கி—(சிரசின்கணுள்ள) பாதமுத்திரையையும்பார்த்து. இவன்வருவது எற்று என்று எண்ணி—(சிவபெருமானது பாதமுத்திரையைப்பெற்றுப் பூசிக்கும்மகானுபாவனாகிய) இந்தப்பாலன் (என்னுடன்) வருவது எவ்வாறு என்று நினைத்து. ஏங்கினான்—பயங்கரமடைந்தான். (எ—று)

மற்று, ஏ—அசைகள். இருந்துழி—ஈறுதொகுத்தல். எற்று—குறிப்புவினைமுற்று. வேதங்கள் நான்காவன—இருக்கு, யசுர், சாமம், அதர்வணம். நான்குவேதங்களையுமோதியுணர்ந்ததிற் பாண்டித்தியமடைந்தமையின், மார்க்கண்டேயரை, "நான் மறைக்கொற்றவன்" என்றார். "ஏங்கினான்." என்பதற்கு, தடுமாற்றங்கொண்டானென்பினுமமையும். "குறிப்பு" என்பதற்கு, சிவத்தியானமெனவும், நோக்கமெனவும்பொருள்கொள்வாருமுளர். குறிப்பு—முத்திரை. சிவபூசையொன்றைத்தானு முடையாரிடத்துச்சேறலு முயிர்கவர்தலுங்கூடாதாகவும், அதனோடு பதமுத்திரையுமிருத்தலின், இவர் சிவலோகஞ்சேர்வரன்றி எமலோகஞ்சேராரென்றும், அணுகுகிலெனக்குங்கேடுபயக்குமென்றுமாலோசித்தஞ்சினனென்பார். "பூசையுங்குறிப்புநோக்கியே. பெற்றிவன்வருவதென்றெண்ணியேங்கினான்" என்றார். (உகஎ)

விழியிடைத்தெரிவுறமேவிமைந்தனைத்
தொழுதனன்யாரைநீசொல்லுகென்றலு
முழுதுலகுயிரெலாமுடிக்குமாணையான்
கழலிணையடிமைசெய்கின்றகாலன்யான்.

(இ-ள்) வழியிடைதெரிவுறமேவி—(பயங்கரமடைந்தகாலனென்பவன், மார்க்கண்டேயமுனீந்திரரது) கண்களுக்குத்தோற்றும்படி சமீபத்தில்வந்து நின்று, மைந்தனைதொழுதனன்—பாலகரான மார்க்கண்டேயமுனீந்திரரை நமஸ்காரஞ்செதனன், நீ யார்சொல்லுக என்றலும்—(அப்பொழுதில் மார்க்கண்டேயமுனீந்திரர் காலனைநோக்கி) நீ யாரோ? சொல்லக்கடவையென்று வினவுதலும், முழுது உலகு உயிர் எலாம் முடிக்கும் ஆணையான்—காலன்சொல்வான்) உலகம் முழுதினுமுள்ள சீவவர்க்கங்களையெல்லாம் சங்காரஞ்செய்கின்ற ஆக்கினையையுடைய யமதன் மராசாவினது, இணைகழல்

அடிமைசெய்கின்ற—உபயபாதங்களுக்குத் தொண்டுசெய்கின்ற, காலன் யான்—காலனென்பவன்யான். (எ—று)

யானை, ஐ—அசை. சொல்லுகென்றலும்—தொகுத்தல். அடிமை—தொண்டு. நித்தியமாகிய உயிரை ஈண்டுமுடித்தலென்றது உடம்பினின்றுநீக்குதலை. இச்செய்யுளில், "என்றலும்" என்பது, பின்னே, "சிந்தைமீதினில்" என்னுஞ்செய்யுளில், "இசைத்தான்" என்பதனோடுமுடியும். "விழியிடைத் தெரிவுறமேவி" என்றார், காலன் காமரூபியாகலின். காமரூபி—வேண்டியவிடத்து வேண்டியரூபங்கொள்பவன். யமன்சங்கரிப்பது சிவபிரான்கட்டளைப்படி என்பான் "முடிக்குமாணையான்" என்றுமென்றும், தான் அரசனுக்கு வணக்கமுடையவன் என்பான், "கழலிணைபடிமைசெய்கின்ற காலன்யான்" என்றுமென்றுங்கூறினார். (உகஅ)

போந்ததிங்கெவனெனப்புகலுவீரெனி
னாய்ந்ததுமொழிகுவனாதிநாயக
னீந்திடுகாலமெண்ணிரண்டுநென்னலே
தேய்ந்ததுதென்புலஞ்சேர்தல்வேண்டுநீர்.

(இ—ள்) இங்குபோந்தது—(நீ) இவ்விடத்தில்வந்தது, எவன் என புகலுவீர் எனின்—என்னகாரணத்திற்காகவென்றுசொல்லி வினவுவீராயின், அது ஆய்ந்துமொழிகுவன்—அக்காரணத்தை ஆராய்ந்து (தெளிவாக) சொல்லுவேன், ஆதிநாயகன் ஈந்திடுகாலம் எண் இரண்டும்—முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் (தங்களுக்குத்) தந்தருளிச்செய்த வயதுபதினாறும், நென்னலே தேய்ந்தது—நேற்றையதினமே முடிவாகிவிட்டது, நீர் தென்புலம்சேர்தல்வேண்டும்—(ஆகையால்) நீர் யமலோகத்திற்குவருதல்வேண்டும். (எ—று)

ஏகாரம்—தேற்றம். மொழிகுவன்,—கு—சாரியை. புகலுவீர், ஈர்—உயர்திணைக்கண் வந்தபன்மைகள். "எவனென்வினைவினைக்குறிப்பு இழியிருபால்." என்னும் விதியான் ஈண்டு, எவன், என்பது அஃறிணையிருபாற்கும் பொதுவாகிய வினைவினைக் குறிப்புமுற்று. நென்னல்—முதனாள். "காலந்தேய்ந்தது" என்றார், வாள்கள்போன்று நாள்கள்செல்லுதலால். (உகக)

வேறு

தடுக்குந்தன்மையதன்றிதுசதுர்முகத்தவற்கு
மடுக்குந்தன்மையேபுதுவதுபுகுந்ததோவன்றே
கொடுக்குந்தன்மைபோற்காத்திடுந்தன்மைபோற்கூற்றன்
படுக்குந்தன்மையுங்கறைமிடற்றிறையருட்பணியே.

(இ—ள்) இது தடுக்கும் தன்மையது அன்று—'காலம் முடிந்தவுடன் இறந்துபோவதாகிய) இச்செயல் விலக்குந்தன்மையையுடையதுமல்ல, சதுர் முகத்தவற்கும் அடுக்குந்தன்மையே— சிருட்டிகர்த்தாவாகிய) பிரமதேவருக்குஞ் சம்பவிக்குந்தன்மையதேயாம், புதுவது புகுந்ததோ அன்று—புதிதாகவுண்டானதுமோவல்ல, கொடுக்குந்தன்மைபோல்—படைக்கின்ற தன்மையைப்போலவும், காத்திடுந்தன்மைபோல்—காக்கின்றதன்மையைப்போலவும், கூற்றன் படுக்குந்தன்மையும்—யமன் அழிக்கின்றதன்மையும், கறைமிடற்று இறை அருள்பணியே—நஞ்சணிகண்டரான சிவபெருமான்கொடுத்தருளிய கட்டளையேயாம். (எ—று

ஈற்றேகாரம்—தேற்றத்தோடு பிரிநிலை. தன்மையே, அன்றே—என்னுமேகாரங்கள்—தேற்றம். புகுந்ததோ,—என்னுமொகாரம்—தெரிநிலை. "சதுர்முகத்தவற்குமடுக்குந்தன்மையே" என்றது, கற்பாந்தத்து பிரமனுக்குமரணமுண்மையின். சிவபிரானொருவர் கட்டளைக்குட்பட்டவனன்றிப் பிறர் கட்டளைக்குட்பட்டவனல்லனென்று நீர் கருதுகினும் இதுவுமவர் கட்டளையேயாமென்பதும் புலப்பட, "கூற்றன் படுக்குந்தன்மையுங் கறைமிடற்றிறையருட்பணியே" என்றானென்க.

இது முதல் ஒன்பதுசெய்யுட்கள் பெரும்பான்மை முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீரும், ஒழிந்த மூன்றுசீரும் விளச்சீருமாய் வந்தநெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள்: (உஉ0)

ஆதலாலுமைவிளித்தனனன்றியுமமலன்
பாதமாமலரருச்சனைபுரிவதுபலரு
மோதமனமகிழ்ந்துமைக்காணியவுன்னிக்
காதலாகிபெயினின்றனனென்றிசைக்கடவுள்.

(இ—ள்) ஆதலால்—ஆகையினால், உமைவிளித்தனன்—(அடியேன்) தங்களையழைத்தேன், அன்றியும்—அதுவுமல்லாமல், அமலன் பாததாமரை அருச்சனைபுரிவது—(தாங்கள்) மலரகிதரான சிவபெருமானது திருவடித்தாமரைகளுக்குப் பூசைசெய்வதை, பலரும் ஓத—பலரும் வந்துசொல்லச் சொல்ல, மனம்மகிழ்ந்து—மனச்சந்தோஷமடைந்து, உமைகாணிய உன்னி—தங்களைப்பார்க்கவேண்டுமென்று கருதி, காதல் ஆகினின்றனன்—பேராசையுடையவனாகியிருக்கின்றனன். (எ—று

ஏகாரங்கள்—அசை. காணிய—செய்மியவென்னும் வாய்பாட்டெதிர்கால வினையெச்சம். பாதமாமலர்—உவமைத்தொகை, முன் பின்னாகமாறிநின்றது. "விளித்தனன்" தன்மையொருமைவினைமுற்று. இனி படர்க்கைவினைமுற்

ருக்கி, யமன் அழைத்தனனெனப்பொருள்கொள்ளினும் பொருந்தும். சொல்லாற்றலையுடையவர் மந்திரிகளாகலின், மந்திரியாகியகாலனும் இங்ஙனங்கற்பனையாகக்கூறினனென்க. (உ௨க)

அடுதலோம்பியசெய்கையனென்பதாலவனைக்
கொடியனென்பராறிவிலார்செய்வினைகுறித்து
முடிவிலாருயிரெவற்றிற்குமுறைபுரிந்திடலா
னடுவனென்கின்றதவன்பெயருலகெலாநவிலும்.

(இ—ள்) அறிவு இலார்—அறிவில்லாதவர்கள், அடுதல் ஓம்பியசெய்கையன் என்பதால்— இரக்கமில்லாமல்) கொல்லுந்தொழிலைச்செய்யும் செய்கையையுடையவனென்பதனால், அவனை—அந்தயமனை, கொடியன் என்பர்—கொடியவனென்று சொல்லுவார்கள், உலகு எலாம்—(அறிவுடைய) மேலோர்களியாவரும்—செய்வினைகுறித்து—(அவ்வவ்வான்மாக்கள்) செய்யும் நல்வினை தீவினைகளையெழுதி, முடிவில்—ஆயுள்முடியுங்காலத்தில், ஆர் உயர் எவற்றிற்கும்—நிரம்பிய சீவவர்க்கங்கள் யாவற்றிற்கும், முறைபுரிந்திடலால்—(வினைகளுக்கேற்ப) நீதிகளைச்செய்து விடுவதனால், நடுவன் என்கின்றது அவன்பெயர் நவிலும்—நடுவனென்றுசொல்லப்படுகின்றது அவனுடையநாமம் (என்று) சொல்லுவார்கள். (எ—று)

ஆல்—அசை. "என்று" அவாய் நிலையால்வருவிக்கப்பட்டது. மேலே அறிவிலார், என்றமையின், உலகு, என்பதற்கு அறிவுடையமேலோரெனப் பொருள்கொள்ளப்பட்டது. "ஓது சீருலகமென்பவுயர்ந்தவற்கியம்பு நாமம்" என்றார் சூடாமணியாரும். உலகு, மேலோர்மேற்றதாக, "பல்லோர்படர்க்கைமுன்னிலைதன்மையிற் செல்லாதாகுஞ்செய்யுமென்முற்றே" என்றவிதிப்படி "நவிலும்" என்னும்செய்யுமென்னும் முற்றைக்கொள்ளாதெனினும், பொருளாற் பலர்பால்மேற்றதாயினும், சொல்லால் பால்பகாவஃறிணையாகலிற்கொண்டதென்க. துலைநாப்போன்று மத்தியஸ்தனாய்நின்று உயிர்களைவினைகளுக்கேற்ப நரகத்திலும் சொர்க்கத்திலுமாகச்சேர்த்து பவனாகலின், யமன், 'நடுவன்' என்னும் நாமத்தைப்பெற்றானென்பதாம். நடுவன்—நடுவுநிற்றலையுடையவன். (உ௨உ)

சிந்தைமீதினில்யாவதுமெண்ணலீர்தென்பா
லந்தகன்புரமடைதிரேலவனெதிரணுகி
வந்தனைதொழுதேத்தியேநயமொழிவழங்கி
யிந்திரன்பதநல்குவன்வருதிரென்றிசைத்தான்.

(இ—ள்) சிந்தைமீதினில் யாவதும் எண்ணலீர்—(நீர்) மனத்திலே தோன்றுக்குமாலோசியாதீர், தென்பால் அந்தகன்புரம் அடைதிரேல்—தெ

ன்திசைக்கணுள்ள யமனது நகரத்துக்குவருவீராயின், அவன் எதிர் அணுகி வந்து—அந்த யமதன்மன் (உம்மை) எதிர்கொண்டு சமீபித்துவந்து, கைதொழுது ஏத்தி—வணங்கித்துதிசெய்து, நயம்மொழிவழங்கி—(சன்மானமான) நல்லவார்த்தைகளைப்பேசி, இந்திரன்பதம் நல்குவன்—இந்திரபதத்தைத்தருவான், வருதிர் என்று இசைத்தான்—(ஆகையால், என்னுடன்) வருவீராகவென்றுகூறினன். (எ—று)

யாவது—விரித்தல் விகாரம். "எண்ணலீர்" என்பதை முற்றெச்சமாக்கி 'எண்ணுமல்' எனப்பொருள்கொள்ளினும்பொருந்தும். எல்—என்னில் என்பதன் மரூஉ. "இந்திரன்பதம்" என்பதற்கு இந்திரனுடையசொர்க்கலோகமென்பினும்பொருந்தும். அந்தகன்—அழிவுசெய்பவன். இந்திரன்—பகைவரைப் போக்குவோன், சகல நன்மை தீமைகளையுங்காண்பவன், நென்முதலியதாநியங்களைக்கொடுப்பவன், பெருமகிமையுடையவன். (உஉஈ)

மாற்றமிங்கிதுகேட்டலுமதிமுடியரனைப்
போற்றுமன்பர்களிந்திரனுலகினும்போகார்
கூற்றுவன்றனதுலகினுநும்மொடுகுறுகா
ரேற்றமாகியசிவபதமடைந்தினிருப்பார்.

(இ—ள்) இங்கு இது மற்றம்கேட்டலும்—இவ்வாறு (காலன் சொன்ன) இந்தவார்த்தையைகேட்டவுடனே, (மார்க்கண்டேயமுனீந்திரர் கூறுவார்) மதிமுடி அரனைபோற்றும் அன்பர்கள்—பிறைச்சந்திரனைத்தரித்த சடாமகுடத்தையுடைய சிவபெருமானை வழிபடுகின்ற மெய்யடியார்கள், இந்திரன் உலகினும்போகார்—இந்திரலோகத்தினும்செல்லார்கள், நும்மொடுகூற்றுவன் தனது உலகினும் குறுகார்—உங்களோடுகூடி யமலோகத்தினும்செல்லார்கள், ஏற்றம் ஆகிய சிவபதம் அடைந்து—(அவர்கள், எவ்வகைத்தாய உலகங்களுக்கும்) மேலானதாகிவிளங்கும் சிவலோகத்திற்சென்று, இனிது இருப்பார்—(அங்குநித்தியமான) பேரின்பத்தை யநுபவித்துக்கொண்டுவீற்றிருப்பார்கள்

யமகணங்களையுமகப்படுத்தி "நும்" எனப்பன்மையாற் கூறினர். உயர்வுகுறித்ததேல் கீழ்ச்செய்யுளில், "போதிபோதி" என்ற ஒருமையோடுமாறுபடுமென்க. ஏற்றம்—உயர்வும், மேன்மையும்.

சிவனடியார்கள், சிவகணங்களழைக்கச்சென்று சிவலோகஞ்சேர்வாரென்பார், "நும்மொடுங் குறுகார், சிவபதமடைந்தினிதிருப்பார்" என்றார். எல்லாவுலகங்களினுஞ் சிவலோகம்மேலானதென்பதை, "புவலோகங்கடந்து போய்ப்புண்ணியருக்கெண்ணிறந்தபோக மூட்டுஞ். சுவலோகங்கடந்துபோய் மகலோகஞ்சனலோகந்துறந்துமேலைத்—தவலோகங்கடந்துபோய்ச் சத்தியலோகங்கடந்து தண்டுழாயோன்-நவலோகங்கடந்துலகநாயகமாஞ் சிவலோ

கருண்ணினுரே" என்னுந்திருவிளையாடற் புராணச்செய்யுளானும், இந்திர பதத்தைவிரும்பாரென்பதை, "புள்ளியதோலாடைபுனைந்தரவப் பூணணிந் த—வெள்ளியசெங்கண்விடையானடிக்கமல—முள்ளிய மெய்யன்புடையாரரு வருத்துத்—தள்ளியசெல்வத்தருக்கினுயென்செய்தாய்" என்னுந்திருவிளையா டற்புராணச்செய்யுளானும், யமலோகத்திற்குச்செல்லாரென்பதை, "கற்றுக் கொள்வன வாயுள நாவுள—விட்டுக்கொள்வனபூவுள நீருள—கற்றைச்செஞ்ச டையானுளன்யாமுளோ—மெற்றுக்கோநமனால் முனிவுண்பதே." என்னும் ஆளுடைய வரசுகளினருள்வாக்கானுமுணர்க. (உஉச)

நாதனார்தமதடியவர்க்கடியவனுனு
யாதலானுமதந்தகன்புரந்தனக்கணுகேன்
வேதன்மாலமர்பதங்களும்வெஃகலன்விரைவிற்
போதிபோதியென்றுரைத்தலுநன்றெனப்போனன்.

இ—ள் நானும்—(காலனே) நானும், நாதனார் தமது அடியவர்க்கு அடி யவன், எப்பொருட்குமிறைவராகிய சிவபெருமானது அடியார்களுக்கு அடி மையாகவுள்ளவன், ஆதலால்—ஆதலினால், நுமது அந்தகன்புரம் தனக்கு அணு கேன்—உங்களரசனுகிய யமனது நகரத்துக்குவரமாட்டேன், வேதன்மால் அ மர்பதங்களும் வெஃகலன்—பிரமவிட்டுணுக்கள்வீற்றிருக்கின்ற உலகங்களையு ம் (ஒருபொருளென்று) விரும்பமாட்டேன், விரைவில் போதிபோதி என்று உரைத்தலும்—(நீ) அதிசீக்கிரத்தில் (இவ்விடத்தைவிட்டுப்) போய்விடுபோ ய்விடு என்று (மார்க்கண்டேயமுனீந்திரர்) மறுத்துக்கூறியவளவில், நன்று எ னபோனன்—(காலனும், ஒருப்பட்டு) நல்லதுமென்றுசொல்லிக்கொண்டு சென்றனன்.

பதங்களும்—என்பதன் உம்மை உயர்வுசிறப்போடு இறந்ததுதழுவிய எ ச்சம். அடுக்கு—அலட்சியம்பற்றியது. வேதன்—வேதங்களைப் பாராயணஞ்செ ய்பவன். மால்—பெருமையையுடையவன், மாயையையுடையவன். தம்மைத் தாழ்த்தி "அடியவர்க்கடியவன்" என்முர். மெய்யடியார்கள், பிரமவிட்டுணு க்களின் சத்தியவுலகம்வைகுந்த வுலகங்களை விரும்பாரென்பதை, "கொள் ளேன்புரந்தரன் மாலயன்வாழ்வுகுடிகெடினு—நள்ளேனினதடியாரொடல்லா னரகம்புகினு—மெள்ளேன்றிருவருளாலேயிருக்கப் பெறினிறைவா—வுள்ளே ன் பிறதெய்வமுன்னையல்லாதெங்களுத்தமனே" என்பதனுலும், காலதூதர் களையிங்ஙனமகலப்போகுமாறு முனிந்துகூறுதலே, "படையும்பாசமும் பற் றியகையினீ—ரடையன்மின்னமதீசனடியரை—விடைகொளூர்தியினனடியா ர்குளாம்—புடைபுகாது நீர் போற்றியேபோமினே" என்னுமருள்வாக்கானுமு ணர்க. (உஉரு)

போனகாலனும்மறலியையணங்கிப்புகுந்த
பான்மையாவையுமுரைத்தலுமுளம்பதைபதைப்ப
மேனிமார்பகம்வியர்ப்புறவிழிகனல்பொழியக்
கூனல்வார்புருவக்கடைநிமிர்ந்திடக்கொதித்தான்.

(இ-ள்) போனகாலனும்—(இவ்வாறுசொல்லிக்கொண்டு) சென்றகாலனென்பவனும், மறலியையணங்கி—யமதர்மனை நமஸ்காரஞ்செய்து, புகுந்தபான்மையாவையும் உரைத்தலும்—நிகழ்ந்தசம்பவங்கள் முழுதையுஞ்சொன்னமாத்திரத்தில், உளம்பதைபதைப்ப—(அதுகேட்ட யமதர்மன்) மனம் துடிதுடிக்கவும், மேனிமார்பகம்வியர்ப்புற—தேகமும் மார்பும் வெயர்க்கவும், விழிகனல்பொழிய—கண்கள் கோபாக்கினியைச்சொரியவும், கூனல்வார் புருவம் கடைநிமிர்ந்திட—வளைவாகிய நீண்டபுருவங்களின் கடைகள்நெறித்து நெற்றிமேலேறவும், கொதித்தான்—கோபங்கொண்டனன் (எ—று)

மார்பகம்—ஒருசொல். மேனி, என்பதற்கு அழகெனினுமொக்கும். மறலி—வலிமையுடையவன். (உஉசு)

அழைத்திர்மேதியையென்னலும்போந்ததாலதன்மேற்
புழைக்கைமால்கரியாமெனவெரிநிடைப்புகுந்து
நிழற்றுகின்றதோர்கவிகையுந்துவசமுநிவப்ப
வழுத்திவீரர்கள்சுற்றிடவந்தகன்வந்தான்.

(இ-ள்) அந்தகன்—(கோபங்கொண்ட) யமராசன், மேதியை அழைத்திர் என்னலும்—(எனதுவாகனமாகிய) எருமைக்கடாவைக்கொண்டுவாருங்களென்று கட்டளையிடுதலும், புழைக்கைமால் கரி எனபோந்தது—(அது) துளைபொருந்தியகரத்தையுடைய பெரியயானையைப்போல (ஏவலாட்களாலழைக்கப்பட்டு) வந்தது, அதன்மேல்வெரிந் இடைபுகுந்து—அக்கடாவின்மேல் முதுகின் கண்ணேறிக்கொண்டு, நிழற்றுகின்றது ஓர் கவிகையும் துவசமும் நிவப்ப—நிழலைச்செய்கின்றவொப்பற்ற குடையுங்கொடியும் மேலெழுந்தோங்கவும், வீரர்கள்வழுத்தி சுற்றிட—படைவீரர்கள் துதிகூறிக்கொண்டு சூழ்ந்துவரவும், வந்தான்—பூவுலகத்தைநோக்கிவந்தனன். (எ—று)

ஆல், ஆம்—அசைகள். கரி—கரத்தையுடையது. கவிகை—கவிந்துள்ளது ஐ—தொழிற்பெயர் விகுதி. "புழைக்கை" என அடைகொடுத்தமையின் "கரி" அப்பொருள்குறியாது, "கருங்கண்ணன்" என்புழிப்போல், பெயர் மாத்திரையாய் நின்றது. கரிய பெரிய ரூபமுடைமையால் கடாவிற்குயானையுவமையாயிற்று. இனியிவ்வுவமையையமனுக்கேற்றிக் கூறினும்பொருந்தும். ஓர்கவிகை—ஒற்றைவெண்கொற்றக்குடை. (உஉஎ)

போந்துகாசியின் முனிமகனிருந்தழிப்போகிச்
சேந்தகுஞ்சியுமுகில்புரைமேனியுஞ்சினத்திற்
காந்துகண்களும்பிடித்தோர்பாசமுங்கரத்தி
லேந்துதண்டமுஞ்சூலமுமாகியேயெதிர்ந்தான்.

(இ—ள்) காசியின்போந்து— இவ்வாறுவந்தயமராசன்) காசியம்பதியி
ன்கண்வந்து முனிமகன் இருந்த உழிபோகி-முனிகுமாரரான மார்க்கண்டே
யமுனீந்திரர் வீற்றிருந்த சிவபூசைத்தானத்தையடைந்து, சேந்தகுஞ்சியும்—
சிவந்தகேசத்தையும், முகில்புரைமேனியும்—கருமுகிலை நிகர்த்ததேகத்தையு
ம், சினத்தில்காந்து கண்களும்—கோபத்தினுலெரிந்துகொண்டிருக்கின்ற க
ண்களையும், (கரத்தில்) பிடித்தது ஓர் பாசமும், கையிற்பிடித்தவொப்பற்றய
மபாசத்தையும், கரத்தில் ஏந்துதண்டமும் சூலமும்—கையிலேந்திய தண்டப
டையையும் சூலப்படையையும், ஆகி—உடையவனாகி, எதிர்ந்தான்—(மார்க்
கண்டேயமுனீந்திரரது முன்னிலையில்) காணப்பட்டான். (எ—று)

இருந்துழி—தொகுத்தல். கரம்—மேலுங்கூட்டப்பட்டது. சேந்த-சிவந்த
என்பதன் மருஉ. பாசம்—கயிற்றுவடிவமான ஓராயுதம். (உஉஅ)

வேறு

வந்துதோன்றலுமார்க்கண்டனென்பவ
னந்தகன்வந்தனனெனச்
சிந்தைசெய்தவன்செய்கையைநோக்கியே
யெந்தையாரடியேத்தியிறைஞ்சினன்.

(இ—ள்) வந்துதோன்றலும்—(இப்பெற்றித்தாக யமராசன்) வந்து
முன்பாகக்காணப்பட்டமாத்திரத்தில், மார்க்கண்டன் என்பவன்—(அதனை
க்கண்ட) மார்க்கண்டேயமுனீந்திரரென்பவர், அந்தகன்வந்து அணுகினன்
என சிந்தைசெய்து—யமன்வந்துநெருங்கிவிட்டானென்று சிந்தித்து, அவன்
செய்கையைநோக்கி—அவனுடைய தன்மையைப்பார்த்து, எந்தையார் அடி
ஏத்தி இறைஞ்சினன்—எங்கள் பரமபிதாவான சிவபெருமானுருடையவரு
மைத்திருவடிகளைவணங்கித் தோத்திரஞ்செய்தனர். (எ—று)

ஆம்—ஒப்பில்போலியில்வந்த உரையசைமாத்திரையது. என்பவன்-எழு
வாயின்சொல்லுருபு. ஆர்—உயர்த்தற்கண்வந்தது. அடிக்கேற்றினுமமையும்.
சிந்தைசெய்தல்-சிந்தித்தல். இவன்கருத்தென்னையோவென்றொருகாற் கண்
ணூன்றிப்பார்த்தனரென்பார், "அவன் செய்கையைநோக்கி" என்றார். இவ்
வாறுசவேதவேந்தனும் யமனெதிர்ப்பட்டபோது சிறிதுமச்சமற்றலட்சியம்
பண்ணித்தனது சிவபூசையிற்கையிட்டானென்பதை, "பாற்றினஞ்சூழ்தரும்

வெய்யபருப்புடைத் தண்டஞ்சுற்றிக்—கூற்றெதிர்ந்திடவுநெஞ்சம் வெருவலனாகிக்கொன்றை—யூற்றிருந்திழிதேன் காலுமொண்பிறைச்சடையோன்பாதம்—போற்றி நாண்மலர்கள் தூவிப்பூசனைபுரிந்தானன்றே” என்னுங்கூர்மபுராணச்செய்யுளாலுணர்க.

இது முதற் பதினெட்டுச்செய்யுட்கள் பெரும்பாலும் முதற்சீர்மாச்சீரும் ஏனைமூன்றுசீர்களும் விளச்சீருமாய்வந்த அளவடிநான்குகொண்டகலிவிருத்தங்கள் (௨௨௯)

அன்னவேலையிலந்தகன் மைந்தநீ
யென்னினைந்தனை யாவதியற்றினை
முன்னையூழின் முறைமையு முக்கணன்
சொன்னவாறுந் துடைத்திடலாகுமோ.

(இ—ள்) அன்னவேலையில்—அந்தச்சமயத்தில், அந்தகன்—யமராசன், (மார்க்கண்டேயமுனீந்திரரைநோக்கிச்சொல்லுவான்) மைந்தநீ என் னினைந்தனை—பாலகனேநீ! என்ன எண்ணினாய்! யாது இயற்றினை—எதனைச்செய்கின்றாய்! முன்னை ஊழின் முறைமையும்—பழமையான விதியினொழுங்கையும், முக்கணன்சொன்னவாறும்—திரியம்பகரான சிவபெருமான்திருவாய் மலர்ந்தருளிச்செய்த (பதினாறுவயதில் மரணமென்ற) படியையும், துடைத்திடல் ஆகுமோ—நீக்கிவிடுதல்கூடுமானதோ (கூடாதென்றபடி) (எ—று)

ஓகாரம்—எதிர்மறை. யாவது—விரித்தல் முன்னை ஊழ். முற்பிறப்பிற்செய்தகருமம், அது தப்பாது பயனைப்பயந்தேவிடுவது. நீ, இறவாதிருக்கவேண்டுமென்றெண்ணியவெண்ணத்தாலும், அதன்பொருட்டுச்செய்த சிவபூசையாலும்பயனில்லையென்பான், “என்னினைந்தனை, யாவதியற்றினை” என்றான். (௨௩0)

சிறிதுமூழ்வினைத்திண்மையுந்தேர்கிலா
யுறுதியொன்றுமுணர்கிலைபோலுமா
லிறுதியேபிறப்பென்றிவையாவரும்
பெறுவரன்னதுபேசுதல்வேண்டுமோ.

(இ—ள்) ஊழ்வினைத்திண்மையும் சிறிதும்தேர்கிலாய்—(பாலகனே நீ!) பழவினையின்வலிமையையுமொரு சற்றுமறியமட்டாய், உறுதி ஒன்றும் உணர்கிலைபோலும்—உண்மைகளேதொன்றையுமறிந்தாயில்லைப்போலும், இறுதி பிறப்புஎன்று இவையாவரும்பொறுவர்-மரணம்சனனமென்றவிவற்றைப் (பெரியர் சிறியரென்னாது) எப்பாலாருமடைவார்கள், அன்னதுபேசுதல் வேண்டுமோ—அதனைச்சொல்லவும்வேண்டியதோ. (வேண்டாமென்றபடி).

ஓகாரம்—எதிர்மறை. ஆல்—ஏ—அசைகள். தேர்கிலாய், உணர்கிலை—மு ன்னிலையொருமையெதிர்மறை வினைமுற்றுக்கள். போலும்—ஒப்பில்போலி யில்வந்த உரையசை. என்றிவை—செய்வெனெச்சத்திரிபு. மரணசனனமே நிச்சயமானதென்பான், "உறுதியொன்று முணர்கிலைபோலும்" என்றான்.

பீடுசாலும்பெருந்தவர்க்காயினுங்
கூடுறாவிதுகூடுமென் றுன்னியே
நாடியின்னணநண்ணுதல்கற்றுணா
ராடவர்க்குமியற்கையதாகுமோ.

(இ—ள்) பீடுசாலும் பெருந்தவர்க்கு ஆயினும்—பெருமைசான்றமேலா னதவத்தையுடைய முனிவர்களுக்குத்தானென்றாலும், கூடுறா இது—சித்தி யாகாத (மரணத்தைத்தவிர்த்தலாகிய) இக்கருமம், கூடும் என்று உன்னி— (நமக்குச்) சித்தியாகுமென்று நினைந்து, நாடி இன்னணம் நண்ணுதல்—விரு ம்பி இவ்வாறு (சிவபூசையில்) இருத்தல், கற்று உணர் ஆடவர்க்கும்—(நூல் களைக்) கற்றறிந்த (புத்திசாலிகளான) ஆண்மக்களுக்கும், இயற்கையது ஆ குமோ—நீதியாகுமோ. (ஆகாதென்றபடி) (எ—று)

ஓகாரம்—எதிர்மறை. இன்னணம்—இன்னவண்ணம் என்பதன்மரூஉ. உயர்வு சிறப்பும்மையால், பெருந்தவர்க்கல்லது கூடுமென்பதும்பெறப்படும்.

ஈசனார்தமிணையடிமீமிசை
நேசநெஞ்சினை நித்தலுநீபுரி
பூசைவெம்பவம்போக்குவதன்றியான்
வீசுபாசம்விலக்கவும்வல்லதோ.

(இ—ள் ஈசனார் தம் இணை அடிமீமிசை—சிவபெருமானாரது அருமை யான வுபயதிருவடிகளின்கண், நேசம்நெஞ்சினை—பேரன்புபூண்டமனத்தை யுடையவனாய், நீ நித்தலும்புரிபூசை—நீ நித்தியமும்செய்யாநின்ற சிவபூசை யானது, வெம்பவம்போக்குவது அன்றி—கொடுமையானபாவத்தை நீக்குவ தொன்றல்லாமல், யான் வீசுபாசம்விலக்கவும் வல்லதோ—(உன்மேல்) நான் எறியும் யமபாசத்தை நீக்குவதற்கும் வல்லமையையுடையதோ. (இல்லையெ ன்றபடி) (எ—று)

ஓகாரம்—எதிர்மறை. நெஞ்சினை—முற்றெச்சம். நித்தல், நித்தம் என்பத ன்போலி. பவம்—என்பதற்கு இனிவரும்பிறப்பு எனப்பொருள்கோடலுமாம். சிவபூசையால் மரணத்தைத்தவிர்க்கமுடியாதென்றானென்பதாம். (உ௬௬)

சிந்துவின் கட்செறிமணலெண்ணினு
முந்துவானத் துடுவினையெண்ணினு
மந்தமின்றிவென் னாணையின் மாண்டிடு
மிந்திரன் றனையெண்ணிடலாகுமோ.

இ-ள் சிந்துவின் கண்செறிமணல் எண்ணினும்-கடற்கரையின்கண் மிக்கிருக்கின்ற மணல்களைத்தான் (இவ்வளவென்று) எண்ணிமதித்தாலும் உந்துவானம் உடுவினை எண்ணினும், உயர்ந்த ஆகாயத்தின்கணுள்ளநட்சத்திரங்களைத்தான் (இவ்வளவென்று) எண்ணிமதித்தாலும், அந்தம் இன்றி-அளவில்லாமல், என் ஆணையின் மாண்டிடும்-என்னுடைய ஆக்கினையாலிறந்துபோகும், இந்திரன்தனை எண்ணிடல் ஆகுமோ-தேவேந்திரர்களை (இவ்வளவென்று) எண்ணிமதித்தல்முடியுமோ. (முடியாதென்றபடி) (எ-று)

ஓகாரம்-எதிர்மறை. அந்து-சாரியை. சிந்து-விட்டவாகுபெயர் இந்திரன்-சாதியொருமை. "இந்திரர்தமை" எனவும் பாடங்கொள்ளலாம். ஒரு இந்திரபட்டத்து அமரர் பலராகலின், என்னின்மாண்டிடுமென்னாது, "என்னாணையின்மாண்டிடும்" என்றான். (௨௩௪)

இற்றவானவர் தம்மையுமென்னினீ
றுற்றதானவ ராகியுளோரையு
முற்றவோதின் முடிவிலதாதலான்
மற்றையோரைவகுத்திடல்வேண்டுமோ.

(இ-ள்) (என்னின்-) என்றால், இற்றவானவர்தம்மையும், இறந்த தேவர்களையும், என்னின்-என்றால், ஈறு உற்றதானவர் ஆகி உள்ளோரையும்-இறத்தலையடைந்த அசுரர்களாகவுள்ளவர்களையும், முற்ற ஓதின்-முடிவுபெறச்சொல்லுகின், முடிவு இலது—(அதற்கு ஒரு) முடிவில்லை, ஆதலால்—ஆகையினால், மற்றையோரைவகுத்திடல்வேண்டுமோ—(என்றால் இறந்த) ஏனையோர்களை (அளவில்லையென்று, நான்) சொல்லவும்வேண்டுமோ. (சொல்லவேண்டாமென்றபடி) (எ-று)

ஓகாரம்-எதிர்மறை. என்னின்-இடைநிலைத்தீபகம். உம்மைகள்-எண்ணுமுயர்வுசிறப்பு தானவர்-தநுவென்பவளின் புதிரர், தத்திதாந்தப்பெயர். வரப்பிரசாதத்தாலும் வல்லமையாலும் ஆயுணீட்சியாலும் மேம்பட்டுள்ளதேவாசுரர்களெண்ணற்றவர்களிறந்தார்களேயாமாகின், இவற்றுளொன்றைத்தானுங்கிஞ் சித்தும்பெறாத மானுடர்களையேன்சொல்லவேண்டுமென்றானென்பதாம். இவ்வாறு, கூர்மபுராணத்திலும், "தண்ணறுந் துளவோன்செய்ய தாமரைப்பொகுட்டுமேலோன் விண்ணவரியக்கர்சித்தர் முனிவரர் விஞ்சை

வேந்த—ரெண்ணிலரென்கைப் பாசத்தாருயிரிறந்தாரென்னின்—மண்ணுறும
னிதனேவென்பாசத்தை விலக்கவல்லான்." என வருதல்காண்க. இச்செய்
யுள் தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறென்னு மலங்காரம். அஃதாவது
ஒருபொருளைச்சொல்லி அதுவாயிலாகமற்றொருபொருளைச்சாதித்தல். உகூ

தனக்குமுண்டகக்காமருகண்ணினன்
றனக்குமுண்டுசதுர்முகற்குண்டுமற்
றெனக்குமுண்டுபிறப்பிறப்பென்றிடி
னுனக்குமுண்டென்றுரைத்திடல்வேண்டுமோ.

(இ—ள்) பிறப்பு இறப்பு—சனனமும் மரணமும், தனக்கும். பெருமை
யையுடைத்தாகும், முண்டகம் காமருகண்ணினன் தனக்கும் உண்டு—தாம
ரைமலர்போன்ற அழகிய கண்களையுடையவிட்டுணுமூர்த்திக்குமுளது, சது
ர் முகற்கு உண்டு—நான்கு முகங்களையுடைய பிரமதேவருக்குமுளது,மற்று—
மற்றைய, எனக்கும் உண்டு—(சங்கரிக்கின்றவனாகிய) எனக்குமுளது, எ
ன்றிடின்—என்றுசொல்லுகில், உனக்கும் உண்டு என்று உரைத்திடல்வேண்
டுமோ—(அற்பமானுடனாகிய) உனக்குமுளதென்று சொல்லவும்வேண்டு
மோ. (வேண்டாமென்றபடி) (எ—று)

ஓகாரம்—எதிர்மறை. பிறப்பிறப்பு—உம்மைத்தொகை. தனக்கும், எனக்
கும்—என்றதன்கண் உம்மைகள்-எச்சத்தோடுயர்வு சிறப்பு. உனக்கும்—என்ற
தன் கண் உம்மை—எச்சத்தோடிழிவுசிறப்பு. காமரு—தொகுத்தல்விகாரம். கா
மம்—ஆசை, அது அழகுக்கு ஆகுபெர். படைத்தல் காத்தல் அழித்தலாகிய
முத்தொழில்களையியற்று மதிகாரிகளான முத்தேவர்களுக்கும் சனனமரண
முண்டாயிருந்தபோது, அற்பமானுடனாகிய உனக்குண்டென்பதையேன்
சொல்லவேண்டுமென்றானென்பதாம். இதுவும்மேலையலங்காரம். (உகூ)

வாசமாமலரிட்டுவழிபட
வீசனார்முன்னெனக்கருள்செய்தன
வாசிலாவிவ்வரசியலேந்திய
பாசசூலம்படைமழுத்தண்டமே

(இ—ள்) ஆசு இலா—குற்றமில்லாத, இ அரசியல்—இந்த அரசாட்சியும்
ஏந்திய—(நான்) பிடித்திரா நின்ற, பாசம் சூலம் மழுதண்டம்படை—பாசமு
ம் சூலமும் மழுவும் தண்டமுமாகிய படைகளும், வாசம்மாமலர் இட்டுவழிப
ட—நறுமணங்கமழுகின்ற பெருமைபொருந்திய புட்பங்களைச்சாத்தி (யருச்சி
த்து) வழிபடாநிற்ப, ஈசனார் முன் எனக்கு அருள்செய்தன—சகலமேன்மை
களையுமுடைய சிவபெருமானாராதியிலே யடியேனுக்குத்தந்தருளப்பட்டன.

ஏகாரம்—தேற்றம். முன்—காலமுன். ஆர்—உயர்த்தற் கண்வந்தது. பாசஞ்சூலம்—என்பதும்பாடம். படை—சேனையுமாம். அரசியல்—அதிகாரநிலே. இவைகள் பழுதாகாதென்றான் என்பதாம். (உ௯எ)

தேவர்காப்பினுஞ்செய்தளித்தீறுசெய்
மூவர்காப்பினுமெய்ம்பினராயினோ
ரேவர்காப்பினுங்காத்திடவின்றுநின்
னுவிகொண்டன்றிமீண்டுமகல்வனோ

(இ—ள்) தேவர்காப்பினும்—(மார்க்கண்டனே, உன்னை) தேவர்கள்தான் (வந்து) பாதுகாத்தாலும், செய்து அளித்து ஈறுசெய்—படைத்துக்காத்து அழிக்கின்ற, மூவர் காப்பினும்—(பிரமவிட்டுணுருத்திரனுகிய) திரிமூர்த்திகள்தான் (வந்து) பாதுகாத்தாலும், மெய்ம்பினர் ஆயினோர் எவர் காப்பினும்—(மற்றும்) வலிமையுடையவர்களாகிய யார்தான் (வந்து) பாதுகாத்தாலும் காத்திட—காக்கக்கடவர், இன்று நின் ஆவிகொண்டு அன்றிமீண்டும் அகல்வனோ—(நான்) இன்றைக்குஉனது உயிரைக் கொண்டேயல்லாமல் திரும்பியும்போவேனோ, (போகேனென்றபடி) (எ-று)

ஓகாரம்—எதிர்மறை, காத்திட—அகரவீற்று வியங்கோள், செயவெனும் வாய்பாட்டு நிகழ்காலவினையெச்சமாகக்கொண்டு, அவர்கள்காத்துக்கொண்டு நிற்கையிலே. எனப்பொருள்கொள்ளினும் பொருந்தும், இடு—துணிவுப்பொருளது, நின்னுவி—அபேதப் பொருளில் வந்த ஆரும் வேற்றுமைத் தொகை, (உ௯அ)

துன்பமென்பது கொள்ளலேசூலித
னன்பராயினுமந்தம்வந்தெய்திடிற்
றென்றபுலந்தனிற்சேர்த்துவன்றிண்ணமே
யென்பினீயினியேகென்றியம்பலும்.

(இ-ள்) துன்பமென்பது கொள்ளலே—(இதனாலே, நீ) வருத்தமென்பதைச் சற்றுமடையவேண்டாம், சூலிதன் அன்பர் ஆயினும்—சிவபெருமானது மெய்யடியார்களாகத் தானிருந்தாலும், அந்தம்வந்துஎய்திடின்—(ஆயுளின்) முடிவுநாள்வந்து சேர்ந்துவிட்டால், தென்புலம்தனில் சேர்த்துவன்—(அவர்களை, நான்) யமபுரத்தின்கண்சேர்ப்பேன், திண்ணமே—(இஃது) சத்தியமேயாம், நீ இனி என்பின் ஏகு என்று இயம்பலும்-(ஆகையால், மார்க்கண்டனே) நீஇப்பொழுது எனதுபின்னே வரக்கடவையென்று (யமராசன் முறைப்படுத்துச்) சொல்லுதலும். (எ-று)

எகாரம்—தேற்றம். திண்மை—அம்விகுதிபெற்ற பண்புப்பெயர். தென் திசைக்கணுள்ளவாகலின் தென்புலமென்றான்யமபுரத்தை. அது, சமனுவதி. புண்ணியவசத்தரும், முதலினியமபுரஞ்சென்று, பின்னரே மேலுலகங்களுக்குச் சேறலு முண்மையான்," சூலிதனன்பராயினும், தென் புலந்தனிற் சேர்த்துவன்" என்றான். இதனை," அன்னமுதக மாவசுவமாடைகுடைகட்டு வையசினமென்னு மிவைகளிரு நான்குமீயிற்பிரேத பதியிரங்குஞ்—சொன்னபடியே மற்றுமுளதானம் புரிவார்துயரகலத்—துன்னுவார்களியமபுரியதன்பின்னடைவர்துறக்கமுமே." எனவருஞ்சிவதருமோத்தரச் செய்யுளானுமுணர்க. நேரே சிவபதமடையும்,சிவத்தோடு அனன்னிய பதத்திலுற்ற மார்க்கண்டேயமுனீந்திரரையும், மற்றையபுண்ணியமுடையாரைப் போல் மதித்திங்ஙனங்கூறியது, இவனதநிகாரமயக்கமென்க. (உகக)

மைந்தனு ங்கதுகேட் டுமறலிகே
ளெந்தையா ரடியார் தமக்கில்லையா
லந்தமென் பதுண்டாயினுநின் புரம்
வந்திடார்வெள்ளிமால்வரையேகுவார்.

(இ-ள்) மைந்தன்—(மார்க்கண்டேயமுனீந்திரராகிய, வாற்சல்லிய) பாலகரானவர், அதுகேட்டு—(யமதன்மன் சொன்ன) அந்தவார்த்தையைகேட்டு (தாம்கூறுகின்றனர்) மறலிகேள்—யமனேகேட்பாயாக, எந்தையார் அடியார் தமக்கு—எங்கள்பரமபிதாவான சிவபெருமானுருடைய மெய்யடியார்களுக்கு, அந்தம் என்பது இல்லை—முடிவுநாளென்றுசொல்லப்படுவதொன்றில்லை' உண்டுஆயினும்—(ஒருசமயம்) உளதேயாமாகிலும், நின்புரம்வந்திடார்—உனதாகிய யமபுரத்திற்கு வரமாட்டார்கள். மால்வெள்ளிவரைஏகுவார்—மகிமையானகயிலாமலைக்கேசெல்வார்கள் (எ-று)

ஆங்கு, ஆல்—அசைகள், ஆர்—உயர்த்தற் கண்ணது, மறலி—அண்மைவிளியாகலினியல் பாயிற்று. வரை—கூறு, அதுமூங்கிலுக்காய் பின்மலைக்கானமையின், இருமடிஆகுபெயர். மேற்செய்யுளில்," இயம்பலும்" என்பது, இச்செய்யுளில்," மைந்தன் அதுகேட்டு" என்பதனோடியையும். சிவனடியாராகிய தவத்தர்களுக்கு மரணமில்லையென்பதை," வெஃகு, நெம்பொருள் பலவுங்கொள்வர் நித்தராயுறைவர்" என இந்நூலின் மேற்கூறுமாற்றானும், அவர்சிவபதத்தையே சேர்வரென்பதை," சிற்றறிவினைத்தும் போக்கியவ்வறிவெனச் சிவபோதம்—விரிந்துதோன்றுநெஞ்சடையவித்தகரே மேன்மையானநம்மெய்ப்பதம்பெறுவார்" எனவருந் திருவாதவூரடிகள்புராணச்செய்யுளானுமுணர்க. (உஉ0)

அனையர் தன்மையறைகுவனுங்கவர்
புனிதமாதவராயினும்பொற்புடை
மனையின் வாழ்க்கையின் மல்கினராயினும்
வினையினீங்கியவீட்டின்பமெய்துவார்.

(இ-ள்) அனையர்தன்மை அறைகுவன்—அந்தச்சிவனடியார்களுடைய நிலைமைகளை (நீயுணர்ந்துய்தற்பொருட்டு, நான்) சொல்லுவேன், (எங்ஙன மெனின்) அவர் புனிதமாதவர் ஆயினும்—அவர்கள் சுத்தமானமகாதவத்தையு டையவர்களாக இருந்தாலும், பொற்புஉடை—பொலிவுபொருந்திய, மனையின் வாழ்க்கையின் மல்கினர் ஆயினும்—இல்வாழ்க்கைக் கண்ணழுந்தினவர்களாக இருந்தாலும், வினையின் நீங்கிஅவீட்டுஇன்பம்எய்துவார்—வினைகளினின்று மொழிந்து அந்தமோட்ச இன்பத்தைப பெறுவார்கள் (எ-று)

ஆங்கு—அசை. "வினையின்" என்பதன்கண் இன்—நீக்கப்பொருளில்வந்த ஐந்தனுருபு. மல்கல்—அர்த்தகாமியங்களினழுந்துதல் "மன்னினர்" என்பதும்பாடம். சிவனடியார்கள், எப்பொழுதுமோரே மனமுடையராகலான், அவர்கள், துறவறத்துநின்றாலும், இல்லறத்துநின்றாலும் தப்பாது வீடுபேற்றையடைவார்கள், துறவறம் இல்லறமென்றபேதம அவர்க்கில்லை என்றொ ன்பதாம். (உசக)

ஏதந்தீர்சுடர்தன்னையுமெண்ணுமைம்
பூதந்தன்னையும்போதிகன்றன்னையும
பேதஞ்செய்வர்பிறப்பொழித்தோரவர்
பாதஞ்சேர்தல்பரபதஞ்சேர்வதே.

(இ—ள்) ஏதம்தீர்சுடர்தன்னையும்—குற்றம் நீங்கிய (சூரியன், சந்திரனுகிய) இருசுடர்களையும், எண்ணும் ஐம்பூதம்தன்னையும்—(பிருதுவி, அபபு, தேயு, வாயு, ஆகாயமென்று) எண்ணுகின்ற பஞ்சபூதங்களையும், போதிகன் தன்னையும்—ஆன்மாவையும், பேதம்செய்வர்—(பரப்பொருளல்லவென்று) பகுத்துப்பரப்பொருளைத்தெளிவார்கள், பிறப்பு ஒழித்தோர்—சனனமரணங்களைநீக்கிக்கொண்டவர்கள், அவர் பாதம்சேர்தல்—(அங்ஙனமான) சிவனடியார்களுடைய பாதங்களையடைதலே, பரபதம்சேர்வதே—சிவபதத்தையடைவதாகும். (எ—று)

ஈற்றேகாரம்—தேற்றம். சேர்தல்—என்பதன்கண் தேற்றேகாரம்தொக்கது, உபலக்கணத்தான், மாணமுமுடன்கொள்ளப்பட்டது. பரபதம்—விதிவீற்றுப்புணர்ச்சி, மேலானஇடமுமாம். போதம்—அறிவு; அதனையுடையவன், போதிகன், சேதனன் என்னும் ஆன்மாவின்பெயருமிப்பொருளது. பரபதம்சேர்வ

று அவர் பாதஞ்சேர்தல், என்றது உபசாரம். சூரியன், சந்திரன், பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், ஆன்மா என்ற எட்டுமே சிவபிரானது திருமேனியாகலானும், அவைகளெட்டனையும்பிரித்துச் சிவத்தைத் தெளிபவரே மேலான சிவனடியாராகலானும், அவ்வடியாரும் சிவபிரானுமன்னியமற்று, அனன்னியமாகவிளங்குவராகலானும் இங்ஙனங்கூறினரெனக. சிவபிரான் இவைகளெட்டையுந் திருமேனியாகவுடையாரென்பதை," போற்றியென்போலும் பொய்யர்தம்மையாட்கொள்ளும் வள்ளல்—போற்றிநீள்பாதம் போற்றி நாதனே போற்றிபோற்றி—போற்றிநின்கருணைவெள்ளப் புதுமது புவனநீர்தீக்—காற்றியமானன்வானமிருசுடர்க்கடவுளானே" என்னும் மணிவாசகப்பிரானருள்வாக்கானுணர்க. இயமானன்—ஆன்மா. இன்னும், பதிபசுபாசமாகியதிரிபதார்த்தங்களையும் பகுத்துணர்ந்து, நிஷ்களங்கரூபியான சிவபிரானை நாடுபவரே சனனமரணமற்ற மெய்யடியார்கள் எனப்பொருள்கோடலுமொன்று. சுடர்—பதி. இப்பூதம்—பாசம். போநிகன்—பசு. பஞ்சபூதங்களின் விகாரமே பிரபஞ்சமாகலான், காரணத்தைக் காரியமாகவுபசரித்து பாசத்தை, இப்பூதம் என்றார், "பற்றியதொடர்பையுமுயிரையும் பகுத்—திறறெனவுணர்கில மேதக்கீர்கிலம்" எனஇந்நூலின் மேற்கூறியது மிதுபற்றியென்க. (உ௪௨)

உன்னையெண்ணலரும்பரையெண்ணலர்
மன்னையெண்ணலர்மாமலர்ப்பண்ணவன்
றன்னையெண்ணலர்தண்டுளவோனையும்
பின்னையெண்ணலர்பிஞ்ஞகனன்பினோர்.

(இ—ள்) பிஞ்ஞகன் அன்பினோர்— முத்திசாதனரான) சிவனடியார்கள், உன்னை எண்ணலர்—உன்னையும் (ஒருபொருளாக) நன்குமதிக்கமாட்டார்கள், உம்பரை எண்ணலர்—தேவர்களையும் நன்குமதிக்கமாட்டார்கள், மன்னை எண்ணலர்—(அத்தேவர்களுக்கு) அரசனான இந்திரனையும் நன்குமதிக்கமாட்டார்கள், மாமலர் பண்ணவன் தன்னை எண்ணலர்—சிறந்த தாமரைப்பூவிலிருக்கின்ற பிரமாவையும் நன்குமதிக்கமாட்டார்கள், பின்னை—(இவர்களை) அன்றி, தண்துளவோனையும் எண்ணலர்—குளிர்ந்த துளவமாலையைத் தரித்த விட்டுணுமூர்த்தியையும் நன்குமதிக்கமாட்டார்கள். (எ—று)

உம்மை—உயர்வுசிறம்பு. உம்பர், மன்—ஆகுபெயர்கள். பின்னையென விடைச்சொற்பெய்துபிரித்தார், தேவர்க்குட்டிருமால் சிறந்தமையின். பிஞ்ஞகன்—தலைக்கோலத்தை யுடையவன்—சிவபெருமானொருவர்க்கே யாட்பட்டுக் கழிபெருஞ் சுவையோடுறுதி பயக்கும் பேரின்பநுகர்ச்சிக் கணிற்குந்தத்துவஞானிகளான சிவனடியார்களுக்கு, அழிதன் மாலையவாயதொழில்களின்

கணின்று பிறந்திறந்துழலும் தேவர்கள் துரும்புபோற்றோற்றுவராகையின், அவர், யமனோ, அரிபிரமேந்திராதிவானோ ரொருவனாயுமெண்ணலரென்றார். இதனை, "நாமார்க்குங் குடியல்லோ நமனையஞ்சோ நரகத்திலிடர்ப்படோ நடலையில்லோ மேமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோ மின்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத்தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர்காதிற், கோமாற்கே நாமென்று மீளாவாளாய்க் கொய்மலர்ச் சேவடியிணையேகுறுகினோமே" என்னுமாளுடைய வரசுகளருள்வாக்கானு முணர்க. (உ௪௬)

நாதன் றன்னையு நாதன தம்புயப்
பாதஞ்சேர்ந்துபரவினர் தம்மையும்
பேதஞ்செய்வது பேதமைநீரென
வேதங்கூறும்விழுப்பொருள்பொய்க்குமே.

(இ-ள்) நாதன் தன்னையும்—(எப்பொருட்குமிறைவராகிய) சிவபெருமானையும், நாதன் அது அம் புயம் பாதம்சேர்ந்து—அந்தச் சிவபெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளைச் சரணமடைந்து, பரவினர்தம்மையும்—வழிபட்டமெய்யடியார்களையும், பேதம்செய்வது (ஒன்றாகக்கருதாமல், இரண்டாக) பிரித்தெண்ணுவது, பேதமை நீர் என—அறியாமைத்தன்மையாகுமென்று, வேதம்கூறும் விழுபொருள்பொய்க்குமோ—வேதங்கள் முறையிட்டுநின்ற சிறந்தபொருளானது பொய்யாகுமோ, (எ-று)

ஓகாரம்—எதிர்மறை. நீர்மை—நீர் எனவும், விழு மிட்—விழு எனவு மீறுகெட்டுநின்றன. அம்புயம்—நீரில்தோன்றுவது. அம்பு—நீர். சிவத்தையுமடியாரையுமொன்றாகமதிக்கவேண்டுவது பதிடதமென்பதுகருத்து. இருவினையொப்பசத்தி நிபாதத்தையடைந்து, சிவஞானத்தாற் பசுகரணங்கெடப் பாசநீங்கிச் சிவமாகவிளங்குவோரேமெய்யடியாராகலின், அவரையும் சிவத்தையுமிரண்டாகப் பிரித்தெண்ணுவது பேதமைத்தன்மையென்றார், மெய்யடியார் தாமே சிவமாகவிளங்குவரென்பதை, திருமந்திரத்து, "இருவினைநேரொப்பிலின்னருட்சத்தி, குருவெனவந்து குணம்பலநீக்கித், தருமெனுஞானத்தாற்றன்செயலற்றாற், றிரிமலந்தீர்ந்து சிவனவனாமே" என்னுஞ்செய்யுளானும், சிவனையுமடியாரையுமொன்றாக மதிக்கவேண்டுமென்பதை, "எவரேனுந்தாமாக விலாடத்திட்ட திருநீறுஞ்சாதனமுங்கண்டாலுள்கி, யுவராதேயவரவரைக்கண்டபோதிலுகந் தடிமைத்திறனினைந்தங்குவந்துநோக்கி, யிவர் தேவரவர்தேவரென்றுசொல்லி யிரண்டாட்டாதொழிந் தீசன்றிறமேபேணிக், கவராதேதொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக்காணலாமே" என்னுமாளுடைய வரசுகளருள்வாக்கானும்; இன்னும், பிரபுலிங்க

லீலை, "சங்கமந்தனக்கொருசாதியுன்னிறே, னங்கையினமர்தருமாற்கு முன்னினன், சங்கரனொடுசேரந்தம்மில்வேறெனு மங்கவனறிவருமளற்றழுங்குவான்" என்னுஞ்செய்யுளானு முணர்க. (உசச)

செம்மையாகியசிந்தையர்சீரியோர்
வெம்மையென்பதைவீட்டிவிளங்கினோர்
தம்மையுந்துறந்தேதலைநின்றவ
ரிம்மைதன்னினுமின்பத்தைமேவுவார்.

(இ-ள்) செம்மை ஆகியசிந்தையர்—(கோட்டமின்றி) நேர்மையான நல்வழியிற்செல்லும்) மனத்தையுடையவரும், சீரியோர்—(பகைமுதலியவில்லாத) சிறப்பையுடையவரும், வெம்மை என்பதைவீட்டி விளங்கினோர்—கொடுமையென்பதைக்கெடுத்து விளங்குகின்றவரும், தம்மையும் துறந்தே தலைநின்றவர்— நானெனதென்னும்) அகங்காரமமகாரங்களைநீங்கி மேலான நிலையில்நின்றவருமாகிய சிவனடியார்கள், இம்மைதன்னினும் இன்பத்தைமேவுவார்—(மறுபிறப்பின்மாத்திரமன்றி) இப்பிறப்பினும் பேரின்பத்தைப்பெறுவார்கள். (எ-று)

இம்மைதன்னினும், என்பதன்கணும்மை—எச்சத்தோடிழிவுசிறப்பு. சிவனடியார்கள், பற்றற்றவராகலானும், பற்றற்றவிடமே வீடாகலானும், தேகத்தோடிருக்கும்பொழுதே சீவன்முத்தராய் விளங்குவரென்பார், "இம்மைதன்னினுமின்பத்தைமேவுவார்" என்றார். இதனை, "ஆராவியற்கையவாநீப்பினந்நிலையே, பேராவியற்கைதரும்" "அற்றதுபற்றெனில், உற்றதுவீடுயிர்" என்பவற்றானும், "சித்தாந்தத்தேசிவன்றன்றிருக்கடைக்கண் சேர்த்திச்செனனமொன்றிலே சீவன்முத்தராக, வைத்தாண்டு மலங்கழுவிஞானவாரிமடுத்தானந்தம் பொழிந்துவரும்பிறப்பையறுத்து, முத்தாந்தப்பாதமலர்க்கீழ்வைப்பனென்று மொழிந்திடவுமுலகரெல்லாமூர்க்கராகிப், பித்தாந்தப்பெரும் பிதற்றுப்பிதற்றிப் பாவப்பெருங்குழியில் வீழ்ந்திடுவரிதுவென்னைபிராந்தி." என்பதனானு முணர்க. (உசரு)

இன்மையாவதியாண்டுமில்லாதவர்
நன்மையென்பதியல்பெனநண்ணினோர்
புன்மையானபொருள்விரும்பாதவர்
தன்மையாவரேசாற்றவல்லார்களே.

(இ-ள்) இன்மையாண்டும் இல்லாதவர்—தீமையை (மனம் வாக்குகாயமாகிய) எவ்விடத்துமில்லாதவரும், நன்மை இயல்பு என நண்ணினோர்—நன்மையையியல்பாகப்பெற்றவருமாகிய சிவனடியார்கள், புன்மை ஆனபொருள்

விரும்பார்—இழிவானபொருள்களை தொன்றையுமபேட்சிக்கமாட்டடார்கள், அவர் தன்மை—(ஆகலின்) அச்சிவனடியார்களின் மேன்மைத்தகைமைகளை யெல்லாம், சாற்றவல்லார்கள்யாவர்—எடுத்துக்கூறத்தக்கவல்மையையுடைய வர்யாவர். (ஒருவருமிலரென்றபடி) (எ—று)

ஏகாரங்கள்—அசை. ஆவது, என்பது—பகுதிப்பொருள்விகுதிகள். எழுவாயின்சொல்லுருபெனினுமாம். யாவரென்னும் வினாவினைக்குறிப்பீண்டெதிர்மறை. கள்—விகுதிமேல்விகுதி. புன்மையானபொருள்—அநித்தியமானவஸ்து. சிவனடியார்கள், தீமையை, சிந்தித்தலும், பேசுதலும், செய்தலும்செய்யாதவரென்பார், "இன்மையாவதியாண்டுமில்லாதவர்" என்றார். (உசசு)

வேறு.

அன்னோர் தன்மையோர்கிலை வையத் தவர்போல
வுன்னுகின்றாய் பாங்கவர் தம்பா லுறுகின்ற
வென்னாவிக்குந் தீங்குநினைந் தாயிவையெல்லா
முன்னாவிக்குமித் தலைமைக்கு மொழிவன்றோ.

(இ—ள்) அன்னோர் தன்மை ஓர்கிலை—(யமனே, நீ) அத்தகையசிவனடியார்களது (சிறப்புற்ற) செயல்களையறிகின்றிலை, வையத்து அவர்போல உன்னுகின்றாய்—(அவர்களையும்) பூமியின்கணுள்ள சாமானியமாந்தர்களைப்போல எண்ணுகின்றாய், அவர்தம்பால் உறுகின்ற என் ஆவிக்கும் தீங்குநினைந்தாய்—அவ்வடியார் பகுப்பிலிருக்கின்ற எனது உயிருக்கும் தீமைசெய்யக்கருதினாய். இவை எல்லாம்—இந்தச்செய்கைகள்யாவும், உன் ஆவிக்கும்—உனது உயிருக்கும், இதலைமைக்கும்—(உனது) இந்த அதிகாரத்துக்கும், ஒழிவு அன்றோ—கேட்டைவிளைவிப்பனவல்லவோ. (எ—று)

அன்றோ—தேற்றம். ஆங்கு—அசை. என்னாவி, உன்னாவி யென்பனவபேதப்பொருளில்வந்த வாறாம்வேற்றுமைத்தொகைகள். "இவை ஒழிவன்றோ" என்பது, காரணம் காரியத்தில்வந்த உபசாரம், "ஓர்கிலை" என்பது ம்பாடம். வையம்—(பொருள்களை) வைக்குமிடம். "அவர் தம்பாலுறுகின்ற" என்பதற்கு அடியார்க்கடியவனாக இருக்கின்றவெனப்பொருள் கொள்ளினும்பொருந்தும். சிவனடியார்களிடத்துச்செல்வாயேல் அப்பொழுதேயுனக்குக்கேடு சம்பவிக்குமெனமேலே சிவபெருமான் கட்டளையிட்டிருத்தலின், "இவையெல்லாமுன்னாவிக்குமித்தலைமைக்கு மொழிவன்றோ" என்றார்.

இதுமுதற் பத்துச்செய்யுட்கள்—பெரும்பாலும் மூன்றாஞ் சீர்விளச்சீரும், ஐந்தாஞ்சீர் மாங்காய்ச்சீரும், ஒழிந்த மூன்றும்மாச்சீர்களுமாய்வந்த நெடிலடி நான்குகொண்டகலிநிலைத்துறைகள். (நெடிலடி—ஐஞ்சீரடுத்து நிற்பது.

தீதாகின்றவாசகமென்றன்செவிகேட்க
வோதாநின்றாய்மேல்வருமூற்றமுணர்கில்லாய்
பேதாய்பேதாய்நீயிவணிற்கப்பெறுவாயோ
போதாய்போதாயென்றுரைசெய்தான்புகரில்லான்.

(இ-ள்) தீது ஆகின்றவாசகம்—கொடுமையாகியவார்த்தையை, என்றன்செவிகேட்க ஓதாநின்றாய்—என்னுடைய காதுகள்கேட்கும்படியாகச்சொல்லுகின்றாய், மேல்வரும் ஊற்றம் உணர்கில்லாய்—(இதனால், உனக்கு) இனிவரப்போகின்ற கெடுதலையறிகின்றிலை, பேதாய் பேதாய்—அறிவில்லாதவனே! அறிவில்லாதவனே! நீ இவண் நிற்கப்பெறுவாயோ—நீ யிவ்விடத்தில் நிற்கத்தக்கவனாவாயோ. போதாய் போதாய் என்று உரைசெய்தான்—(கணப்பொழுதுமீண்டு நில்லாமல்) போய்விடு போய்விடென்று கூறினார். புகர் இல்லான்—குற்றமில்லாத மார்க்கண்டேயமுனீந்திரர் (எ-று)

ஓகாரம்—எதிர்மறை. ஊறு—இடையூறு. இது, அம்முச்சாரியைபெற்று, றகரவொற்றிரட்டி ஊற்றமெனநின்றது. இவண் என்பதன் கண் அண் விகுதி இடப்பொருள்குறிக்கும் ஏழாவதனுருபு. பேதாய்—ஈறுதிரிந்தவிளி. "பேதாய் பேதாய்" என்னுமடுக்கு இகழ்ச்சியினும், "போதாய் போதாய்" என்னுமடுக்கு அலட்சியத்தினும் வந்தன. வாசகம். வடமொழி.

சிவனடியார்களோடெதிர்த்துக்கடிந்து கூறல் சிவத்துரோகமென்பார், "தீதாகின்றவாசகம்" என்றும், அதனாற்பின் கண்டிக்கப்படுவையென்பார், "மேல்வருமூற்றமுணர்கில்லாய்" என்றும், இது பாவமென்பது மலையிலக்குப்போலிருக்கவும் நீ, யறியாத அஞ்ஞனாயிருக்கின்றாயென்பார், "பேதாய் பேதாய்" என்றும், சிவசந்நிதானத்துப் பாவிகணிற்கத்தகாதென்பார், "நீயிவணிற்கப்பெறுவாயோ" என்றுங்கூறினார்.

யமகணங்கள், சிவனடியாரைக்கண்டபோது, அவர் பக்கத்திலுமணுகாது தூரத்தேநின்று துதிசெய்துகொண்டுபோய்விடல்வேண்டுமென்று ஆளுடையவரசுகள் திருவாய்மலர்ந்தருளிச்செய்த, "படையும் பாசமும்பற்றிய கையினீர், அடையன் மின்னமதீசனடியரை, விடைகொளூர்தியினடியார் குழாம், புடைபுகாது நீர் போற்றியேபோமினே" இதுவுமிதுபற்றியென்க.

கேட்டான்மைந்தன்கூறியமாற்றங்கிளர்செந்தீ
யூட்டாநின்றகண்ணினன்யானச்சுறுமாற்றல்
காட்டாநின்றாய்நம்முயிர்கூற்றன்கைக்கொள்ள
மாட்டானென்றேயெண்ணினைகொல்லோவலியில்லாய்.

(இ—ள்) மைந்தன் கூறியமாற்றக்கேட்டான்—(இப்பெற்றித்தாக, சிவ பிரானது வாற்சல்விய) பாலரான மார்க்கண்டேயமுனீந்திரர் சொன்னவார்த்தையைக்கேட்டவனாகிய யமதர்மராசன், கிளர்செம் தீ உடைய கண்ணினன்—விளங்குகின்ற சிவந்தகோபாக்கினி பறக்கின்றகண்களையுடையவனாய், வலி இல்லாய்—(மார்க்கண்டேயமுனீந்திரரைநோக்கி) சற்றும் வல்லமையென்பதில்லாத குழந்தாய் நீ! யான் அச்சுறும் ஆற்றல்காட்டாநின்றாய்—நான் பயங்கரமடையும் படியானவல்லமையைக்காண்பிக்கின்றாய், நம் உயிர்—நமது உயிரை, கூற்றன்கைக்கொள்ளமாட்டான் என்று—இந்த யமன் பற்றிக்கொள்ளமாட்டான் தானென்று, எண்ணினையோ—நினைத்தாயோ. (எ—று.)

ஓகாரம்—வினாவோடெதிர்மறை. தொல்—அசை. ஏகாரம்—தேற்றம். கேட்டான்—வினையாலணையும்பெயர், முற்றெச்சமாக்கினும் பொருந்தும் கண்ணினன்—முற்றெச்சம், அச்சு—அஞ்சு என்பதன்திரிபு, நட—தனித்தன்மைப்பன்மை, "கூற்றன்" "ஓரிடம் பிறவிடந்தழுவலுமுள" என்பதனால் வந்த இடவழுவமைதி, யமனையும் வெல்லவல்ல வலிமையுடையனென்பது போதர, "மைந்தன்" என்றார், மைந்து—வலி.

தேவர், அசுரர், அரக்கராதிய வெப்பாலாருமஞ்சிப்புறந்தரும் பேராற்றலை யுடையவனானவென்னை, மானுடச்சிறுவனான நீதானா வச்சப்படுத்துபவனென்பான், "யானச்சுறுமாற்றல் காட்டாநின்றாய்" என்றான். உசக

என்றான் வானத்தேறென வார்த்தானிவனே நேர
நின்றால்வாரானென்றுநினைந்தேநெடுநீலக்
குன்றாமென்னப்பாலகன்முன்னங்கொலைவேலான்
சென்றான்பாசம்வீசுவதற்குச்சிந்தித்தான்.

(இ—ள்) என்றான்—என்றுசொல்லி, கொலைவேலான்—கொலைத்தொழிலமைந்த சூலவேலையுடையவனாகிய யமதன்மராசன், வானத்து ஏறு என ஆர்த்தான்—இடியேறுபோல ஆரவாரித்து, இவன்—இந்தச்சிறுவன், நேர் ஏ நின்றால்வாரான் என்று நினைந்து ஏ—(மாறுபாடுகொள்ளாமல்) நேர்மையாகவே (நீதியோடு) நிற்கில் வரமாட்டானென்று நினைத்து, நெடும் நீலம் குன்றாம் என்ன பாலகன் முன்னம் சென்றான்—நீண்ட நீல மலைதானென்று சொல்லும்படி மார்க்கண்டேயமுனீந்திரரது முன்னிலையிற்போய் நின்று, பாசம்வீசுவதற்கு சிந்தித்தான்—யமபாசத்தையெறிவதற்கு ஆலோசித்தான் எ-று

மேலைச்செய்யுளி"லெண்ணினையோ"வென்பதிச்செய்யுளின் 'என்றான்' என்பதனோடுமுடியும், என்றான், சென்றான்—முற்றெச்சங்கள்—என்று, ஆர்த்து, சென்று சிந்தித்தானென்க. சிவனடியாராக விருத்தலின் யாதாய் முடி

யுமோ வென்னு மெண்ண முஞ்சிறிதுண்டாயிற் றென்பது போதர, "சிந் தித்தான்" என்றார். (௨௫௦)

எறிந்தான் பாசமீர்த் திடலுற்றானிதுபோழ்தி
லறிந்தானானுமீசனையேத்தியடிநீழற்
பிறிந்தானல்லன் மற்றினியிந்தப்பெருமைமைந்தன்
மறிந்தானன்றேயென் றிமையோருமருளுற்றார்,

(இ-ள்) பாசம் எறிந்தான் ஈர்த்திடலுற்றான்—(அங்ஙனஞ் சிந்தித்த யமதன்மராசன்) பாசத்தையெறிந்து (சிவவாற்சல்லிய பாலரான மார்க்கண் டேயமுனீந்திரரது கழுத்திலிட்டு) இழுக்கத்தொடங்கினான், இது போழ்தில்—இந்தச்சமயத்தில் (அவசரத்தில்) அறிந்தான்தானும்—அதனையுணர்ந்த சிவஞானியான மார்க்கண்டேயமுனீந்திரரும், ஈசனையேத்தி—(அடியார் வேண்டிய வேண்டியாங் குற்றுழியுதவும்) மேன்மையாளரான சிவபெருமா னைத் தோத்திரஞ்செய்துகொண்டு, அடிநீழல் பிறிந்தான் அல்லன்—அவரது திருவடி நிழலைவிட்டுப் பிரியாதிருந்தனர், இமையோரும்—(அதுகண்ட) தேவர்களும், இந்த பெருமை மைந்தன்—இந்தச் (சிவானுபூதிச் செல்வனான) பெருமையுடைய சிறுவன், இனி மறிந்தான் அன்றேயென்று மருள்உற்றார் —இனி யிறந்துபோனானல்லவோ வென்று மயக்கமடைந்தார்கள். (எ-று)

மற்று—வினைமாற்று, அறிந்தான்—இரட்டுறமொழிதல். "பிரிந்தான்," என்பது அடிநோக்கி பிறிந்தானெனநின்றது, பிறிந்தானென்பதும் வழக்கெ ன்பாருமுளர், அன்றே—தோற்றம். உம்மை—உயர்வு சிறப்பு, மறிந்தான்—து ணிவும், விரைவும், பற்றிவந்தகாலவழுவமைதி' எறிந்தான்—முற்றெச்சம், மேலைச்செய்யுளிற் "சிந்தித்தான்" என்பதை முற்றெச்சமாக்கி, "எறிந்தா ன்" என்பதனோடுமுடிப்பினுமாம், போழ்து பொழுது என்பதன்மரூஉ. நீழல்-நீட்டல்விகாரம், இமையோர்—கண்ணிமையாதவர். யமன், காலபாசத் தை தமது கழுத்திலெறிந்த அவசரத்தில், மார்க்கண்டேயமுனீந்திரர், மனந் தியானிக்க, நாத்துதிகூற, லிங்கத்தைத்தழுவிக்கொண்டு சிவமயமாய் விள ங்கினரென்பதாம். (௨௫௧)

ஈர்க்கும்பாசங்கந்தரமுற்றுமிடரில்லா
மார்க்கண்டன்முன் றோன்றினனின்பால்வருதுன்பந்
தீர்க்கின்றாரீயஞ்சலையென்றேதிரையாழிக்
கார்க்கண்டத்துக்கண்ணுதலையன் கழறுற்றான்.

(இ-ள்) ஈர்க்கும்பாசம்—(யமதன்மராசன், எறிந்து) இழுக்கின்ற பாச மானது, கந்தரம் உற்றும்—(தமது) கழுத்தில் விழுந்திருந்தும், இடர் இல்

லா—(அதனுற்கிஞ்சித்தும்) ஆபத்தில்லாத, மார்க்கண்டன்முன்—மார்க்கண்டேயமுனீந்திரரது முன்பாக, திரை ஆழி கார் கண்டத்து கண்ணுதல் ஐயன்தோன்றினன்—அலைகளையுடைய பாற்கடலிற்பிறந்த நஞ்சையடக்கியதிருக்கண்டத்தையும் நெற்றிக்கண்ணையுமுடைய சிவபெருமான் பிரசன்னமாகி, நின்பால்வருதுன்பம் தீர்க்கின்றும்—(மெய்யடிமைத்திறம் பூண்டபாலன் புவைத்தபாலனே) உன்மாட்டுவருகின்றதுன்பங்களை நீக்குகின்றேம், நீ அஞ்சலை என்று—நீ பயப்பாடாதேயென்று, கழறுற்றான்—திருவாய்மலர்ந்தருளிச்செய்தனர். (எ—று)

இல்லா—ஈறுகெட்டபெயரெச்சம். தோன்றினன்—முற்றெச்சம். கார்—ஆகுபெயர். உற்று உற: எச்சத்திரிபு. கந்தரட—தலையைத்தரிப்பது. கந்தலை. ஆழி—ஆழத்தையுடையது. "ஈர்க்கும்பாசம்" என்பதற்கு இழுக்குந்தன்மையையுடைய பாசம் எனப்பொருள்கொள்ளினும் பொருந்தும்.

யமனுக்கும் வினையைக்கடிந்தருள்புரிந்து, மார்க்கண்டேயமுனீந்திரருக்கும் திருவருள்பாலிக்கும் பேரருளாளரென்பதை யடைமுகத்தான் விளக்குவாராய், "கார்க்கண்டத்துக்கண்ணுதலையன்" என்றார் நஞ்சானது அடர்த்துமேலெழுந்தபோது, அடைக்கலம்புக்க வானவர்களிடத்து மந்நஞ்சினிடத்தும் விருப்புவெறுப்பின்றி, அத்தேவர்களுக்கருளுமாறும், நஞ்சின் வெம்மையைப்போக்குமாறும், கண்டத்திலடைத்துவைத்தருள்புரிந்தவாறுபோல 'அடைக்கலம்புகுந்த மார்க்கண்டேயமுனீந்திரரிடத்தும், யமனிடத்தும் விருப்புவெறுப்பற்று, அவர்க்கருள்புரியுமாறு, யமனது நானென்னுமாணவமலத்தைக் கெடுத்தருள்புரிவரென்பது உள்ளுறை. இதனை, மேல் "மறையவன்கணும்" என்னுஞ்செய்யுளிற் காண்க. இது, கருத்துடையடையென்னுமலங்காரம். (உ௫உ)

மதத்தான்மிக்கான்மற்றிவன்மைந்தனுயிர்வாங்கப்
பதைத்தானென்றுன்னிவெகுண்டான்பதிமூன்றுஞ்
சிதைத்தான்வாமச்சேவடிதன்னாற்சிறிதுந்தி
யுதைத்தான்கூற்றன்விண்முகில்போன்மண்ணுறவீழ்ந்தான்.

(இ—ள்) பதிமூன்றும் சிதைத்தான்—(அவ்வாறுதிருவாய்மலர்ந்தருளிசெய்த) முப்புரங்களையழித்தவராகிய சிவபெருமான், மதத்தால் மிக்கான் இவன்—அகங்காரத்தால்மேற்பட்டவனாகிய இந்த யமன், மைந்தன் உயிர்வாங்க பதைத்தான் என்று உன்னி—(நமது வாற்சல்லிய பாலகனாகிய) மார்க்கண்டேயனது உயிரைக்கவரும்படியதிவிரைவுப்பட்டானென்று திருவுள்ளங்கொண்டு, வெகுண்டான்—கோபித்து, வாமம் சே அடிதன்னால்—(தமது) செம்மையான வலது திருவடியினால், சிறிது உந்தி உதைத்தான்—சற்றேநீட்

டி உதைத்தருளினார், கூற்றன்விண்முகில்போல் மண் உற வீழ்ந்தான்—(கூ
தையுண்ட யமதன்மாராசன் ஆகாயத்தின்கணுள்ள கரியமுகிலானது (பூமியி
ல்விழுதல்) போல பூமியின் கட்பொருந்தவிழுந்திறந்தான். (எ—று

மற்று—வினைமாற்று. மிக்கான், வெகுண்டான்—முற்றெச்சங்கள். செம்
மை, என்னும் பண்புப்பெயர் ஈறுகெட்டாதிநீண்டு நடுநின்ற மகரம்வகரமாய்
த்திரிந்து, சேவ், எனநின்றது. "மதத்தான் மிக்கான் இவன் உயிர்வாங்க
மைந்தன் பதைத்தான் என்று," எனமாற்றி அகங்காரத்தான் மிக்கவனாகிய
இந்த யமன் உயிரைக்கவர (அதனால்) மார்க்கண்டேயர் நடுக்கமுற்றாரென்று,
எனப்பொருள்கோடலுமொன்று. இப்பொருட்கு "வாங்க" என்பதன்கணக
ரம் காரணப்பொருட்டு.

இடப்பாதம்சத்திகூறாகலான் அதனைக்கொண்டு யமனையுதைத்தலிழுக்
காகமுடிதலின், "வாமம்" என்பதற்கு வலமெனப்பொருள்கொள்ளப்பட்ட
து. "உவா" என்னுமொருமொழி அமாவாசியை, பௌர்ணிமையென்னு
மிரண்டனையுமுணர்த்துமாறுபோல "வாமம்" என்பதும் இடம்வலமாகியவி
ரண்டனையுமுணர்த்துமென்ப. இனி, "வாமச்சேவடி" என்பதற்கு அழகிய
செம்மையான (வலது) திருவடி, எனப்பொருள்கொள்ளினும்பொருந்தும்.

விருப்புவெறுப்பற்றகடவுளையீண்டு "வெகுண்டான்" என்றதும், "தந்
தைதாய்பெற்றதத்தம் புதல்வர்கடஞ்சொலாற்றின், வந்திடாவிடினுருக்கி வ
ளாரிணலடித்துத்திய, பந்தமுமடுவெல்லாம் பார்த்திடிற்பரிவேயாகு, மிந்த
நீர் முறைமையன்றோவீசனார் முனிவுமென்றும்" என்னுஞ்சிவஞானசித்தித்
திருவிருத்தத்தின்படி, யமனை, வினையைப்போக்கியிரக்ஷிக்கும் பொருட்டுக்
கொண்டவன்பேயாகுமென்க.

யமனையுதைக்கவல்லவரென்பதும், ஓரிடத்தொருகாலத்துரக்ஷை சிக்ஷை
யாகிய விரண்டுஞ்செய்யவல்லவரென்பதும் போதர, "பதிமூன்றுஞ்சிதைத்
தான்" என்றார்.

முப்புரம் செய்தவினையாற்சிக்ஷையும் அப்புரத்திருந்த மூன்றசுரர்செய்
தபுண்ணியத்தால் ரக்ஷையுமோரே முறையிற்செய்தவரென்பதிவ்வடைக்கரு
த்து. இதனை, "இகல்பற்றின்றி, மூவரைவிடுத்துத்தொன்னாள் முப்புரம்
பொடித்தமுன்னோன்" என இந்நூலாசிரியர் மேற்கூறியவாற்றானுமுணர்க.

இதுவும் மேலையலங்காரம். (உ௫௯)

வீழுங்காலத்தம்புயனதிதின்னோர்கள்
வாழுந்தன்மைத்தெவ்வுலகென்னுமறுகுற்றார்

சூழும்வேலைபார்த்திலதண்டத்தொகையெல்லாங்
கீழும்மேலும்நெக்கனபாருங்கிழிந்தன்றே.

(இ-ள்) வீழும்காலத்து—(அவ்வாறியமராசன்) விழும்சமையத்தில், சூழும்வேலை ஆர்த்திலது—(அந்த அதிர்ச்சியினுல் பூமியைச்) சூழ்ந்துகொண்டிருக்கும் சமுத்திரம் (அடங்கி) ஒலியாதிருந்தது, கீழும் மேலும் அண்டம் தொகை எல்லாம்நெக்கன—கீழும் மேலுமாகவுள்ள அண்டகூட்டங்களனைத்தும் விண்டு உடைந்தன, பாரும் கிழிந்தன்று—பூமியும்பிளந்தது, அம்புயன் ஆதிவிண்ணோர்கள்—கமலாசனனுகிய பிரமன்முதலான தேவர்கள், எ உலகு வாழும் தன்மைத்து என்னு மறுகுற்முர்—(இனி) எந்த உலகம்வாழுந்தன்மையையுடையதென்று மனக்கலக்கமடைந்தார்கள். (எ-று)

ஏகாரம்—அசை. கிழிந்தன்று—உடன்பாட்டொருமையிறந்த காலவினைமுற்று. பார்—பார்க்கப்படுவது, பருமையையுடையது. அண்டம்—அண்டாகாரமானது. அண்டம்—முட்டை. (உருச)

பாங்காய்நின்றதானையுமூரும்பகடுந்தா
னேங்காநின்றேபார்மிசைவீழாவிறவுற்ற
தீங்காய்நின்றசெய்வினையாளர்சிதைவாகிப்
போங்காலத்திற்சேர்ந்தவர்தாமும்போகாரோ.

(இ-ள்) பாங்கு ஆய்நின்றதானையும்—(யமராசன்) பக்கமாய்ச் (சூழ்ந்து) நின்றசைனியங்களும், ஊரும்பகடும்—அவனேறிச்செலுத்தும் (வாகனமான) எருமைக்கடாவும், ஏங்காநின்று—(யமராசன்வீழ்ந்தமையைக்கண்டச்சங்கொண்டு) ஏக்கமுற்றுநின்று, பார்மிசைவீழா இறவு உற்ற—பூமியின் கண்வீழ்ந்திறந்தன, தீங்கு ஆய் நின்றசெய்வினை ஆளர்—தீமையாகவுள்ளவற்றைச்செய்யும் தீயவர்கள், சிதைவு ஆகி போம்காலத்தில்—அழிவாகிப்போகுங்காலத்தில், சேர்ந்தவர் தாமும் போகாரோ—(அவர்களை) அடுத்திருந்தவர்களுமழிவாகிப்போகமாட்டார்களா. (போயேவிடுவரென்றபடி) (எ-று)

ஓகாரம்—உடன்பாடு. இறவு, என்பதில், வு—தொழிற்பெயர் விகுதி. பகடு—எருமை ஆண்.

தீயவனுகிய யமனோடுசேர்ந்து வந்தமையின், சேனைகளும் கடாவுமிறந்தனவென்பதாம். தீயாரைச்சேர்ந்தவர்க்கும் தீமையேசம்பவிக்குமென்பதை, "தீயாரைக்காண்பதுவுந் தீதே திருவற்ற, தீயார்சொற்கேட்பதுவுந் தீதேயத், தீயார், குணங்களுரைப்பதுவுந் தீதேயவரோ, டிணங்கியிருப்பதுவுந் தீது." என்னுமவ்வைவாக்கானும், சிவனடியாராகிய அருந்தவர்க்குக்கேடுசூழக்கருதுபவர், தங்குடியோடுந்தாமுமழிந்தேவிடுவரென்பதை, "குன்றன்ன

றுன்றமதிப்பிற்குடியொடு, நின்றன்றார்மாய்வர்நிலத்து" என்னுந்தேவர்வாக்
காலுமுணர்க. இது வேற்றுப்பொருள்வைப்பென்னு மலங்காரம். (௨௫௬)

அந்தக்காலத்தெம்முயிர்காப்பானரனுண்டால்
வந்தக்கூற்றனென்செய்வனென்றுவடதொன்னூற்
சந்தப்பாவிற்போற்றுதல்செய்தேதனிநின்ற
மைந்தற்கானாவெம்பெருமானுமகிழ்வுற்றான்.

(இ-ள்) அந்த காலத்து—அந்தச்சமயத்தில், எம் உயிர் காப்பான் அரன் உண்டு—அடியேனது சீவனையிரக்ஷிக்கும்படி (பரமகருணாநிதியாகிய) சிவபெருமானிருக்கின்றனர், அ கூற்றன்வந்து என்செய்வன் என்று—(அங்ஙனமிருக்க) அந்த யமராசன்வந்து (என்னை) யாதுசெய்யக்கூடுமென்றலக்ஷியமாக நினைத்து, தொல்வடநூல் சந்தம் பாவில்போற்றுதல்செய்தே—பழமையான சமஸ்கிருதபாஷையிலியற்றிய அழகுபொருந்திய சுலோகங்களினால் தோத்திரம்பண்ணிக்கொண்டு, தனி நின்றமைந்தன் காணா—ஒப்பில்லாதவராக (தனிமையாக) நின்ற (வாற்சல்லியபாலரான) மார்க்கண்டேயரையருட்கண்ணுற்று, எம் பெருமானும் மகிழ்வு உற்றான்—(அடியேங்களுக்கெல்லாந்தலைவராகவுள்ள) சிவபெருமானுந்திருவுளக்களிப்படைந்தனர். (எ-று)

ஆல்—அசை. அந்தம் காலம் எனப்பிரித்து முடியுங்காலமாகிய இறக்குநான்றில், எனவும், அரனுண்டால், சிவபிரானுதவியாக இருந்தாலெனவும் பொருள்கொள்ளினும்பொருந்தும், இப்பொருட்கு, ஆல்—தேற்றம், காப்பான்-பானீற்றுவினையெச்சம். எம்முயிர்—அபேதப்பொருளில்வந்த ஆறாம்வேற்றுமைத்தொகை. அகரம்—பண்டறிசுட்டு. காணா, மகிழ்வுற்றானெனவினையையும். சமஸ்கிருதம் வடதிசைக்கணுள்ளதாகலின், வடநூலெனப்பட்டது. அரன்—முடிவில் எல்லாவற்றையுமழிப்பவன், மலத்தினை அழிப்பவன், உயிர்களை உயர்ந்தநிலையிற் போகச்செய்பவன். பலநாமங்களிருப்பினும் ஈண்டு "அரன்" என்னும் நாமத்தையேசாதித்தார், தன்னை, மலோபாதியினின்றும் எடுத்து சீவன்முத்தியாகிய உயர்ந்தநிலையில்வைத்தமையின்.

சிவானுபூதிச்செல்வராகிய மெய்யடியார்கள், யமனுக்கும் மற்றேதொன்றற்குங்கிஞ்சித்து மஞ்சாததிடபக்தியுடையராகலின் "எம்முயிர்காப்பானரனுண்டால் வந்தக்கூற்றனென்செய்வன்" என்றார். இதனை, "அல்லலென்செயு மருவினையென்செயுந், தொல்லைவல்வினைத் தொண்டர்தாமென்செயுந், தில்லைமாநகர்ச்சிற்றம் பலவனார்க், கெல்லையில்லதோரடிமை பூண்டேனுக்கே." என்னுந்திருநாவுக்கரசுநாயனார் திருவாக்கானும் "நாளென்செயும் வினைதானென்செயும் நமைநாடிவந்த, கோளென்செயுங் கொடுங்கூற்றென் செயுங்குமரேசரிரு, தாளுஞ்சிலம்புஞ்சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமும்

தோளுங்கடம்பு மெனக்குமுன்னேவந்து தோன்றிடினே" என்னுமருணகிரிநாதர் திருவாக்காலுமுணர்க. ஈண்டு மார்க்கண்டேயர் துதித்தசுலோகங்களே மார்க்கண்டேய அட்டகமெனவழங்கப்படுவன. (உ௬௯)

வேறு

மைந்தநீநமைவழுத்திமாசிலா
முந்துபூசனைமுயன்றதன்மையா
லந்தமில்லதோராயுணிற்கியாந்
தந்துநல்கினுமென்றுசாற்றினன்.

(இ-ள்) மைந்த நீ—(அங்ஙனங்களிப்படைந்த சிவபெருமான் மார்க்கண்டேயமுனீந்திரரையருட்கண்ணுற்று, பக்திவாய்ந்த) பாலகனே நீ, நமைவழுத்தி மாசு இலா முந்து பூசனைமுயன்றதன்மையால்—நம்மைத்தோத்திரம் பண்ணிகுற்றமில்லாத வுத்தமமான பூசையைச்செய்த தன்மையினால், நாம் நிற்கு அந்தம் இல்லது ஓர் ஆயுள் தந்து—நாம் உனக்கு அழிவில்லாத ஒப்பற்ற ஆயுளைக்கொடுத்து, நல்கினும் என்று சாற்றினன்—கிருபைபாலித்தோமென்று திருவாய்மலர்ந்தருளிச்செய்தனர். (எ-று)

நமை, யாம், நல்கினும்—தனித்தன்மைபன்மைகள். நமை—தொகுத்தல். ஆல்—ஏதுப்பொருட்டு. அந்தமில்லதோர் ஆயுள்—சிரஞ்சீவித்துவம்—தாமுவக்க, தலையன்போடாற்றும் பூசனையாகலின், மாசிலாமுந்துபூசனை என்றார்.

இதுமுதற் பதினான்குசெய்யுட்கள்—பெரும்பாலும் முதலும் மூன்றுமாகியசீர்கள் மாச்சீர்களும், இரண்டும் நான்குமாகியசீர்கள் விளச்சீர்களுமாகி வந்த அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (உ௭௦)

சாற்றுமெல்லையிற்றனதுதாளிணை
போற்றுகின்றவன் பூசைசெய்திடு
மேற்றதாணுவுக்கிடையதாகவே
கூற்றின்கூற்றுவன் குறுகுற்றனரோ.

(இ-ள்) சாற்றும் எல்லையில்—(இவ்வாறு) திருவாய்மலர்ந்தருளிச்செய்த அச்சமயத்தில், கூற்றின் கூற்றுவன்—யமனுக்கு யமனான சிவபெருமான், தனது தாள் இணைபோற்றுகின்றவன்—தமது உடையதிருவடிகளைத்துதிசெய்கின்ற மார்க்கண்டேயமுனீந்திரர், பூசைசெய்திடும் ஏற்றதாணுவுக்கு இடை ஆக—பூசைசெய்யப்பட்டதகுதிபொருந்தியலிங்கத்தின் கண்ணதாக, குறுகுற்றான்—மறைந்தருளினார். (எ-று)

அரோ, ஏ—அசைகள். அது—பகுதிப்பொருள்விகுதி, "குறுகுற்றான்" என்பதின், உறு—துணைவினை. போற்றுகின்றவன்—வினையாலணையும்பெயர்.

"கூற்றின் கூற்றுவன், எல்லையிற், குறுகுற்ற" னெனவியையும். யமனைக் கொன்றமையின், "கூற்றின் கூற்றுவன்" என்றார். காலகாலனென்பது மிது. தாணு—அசைவில்லாதது, ஊழியிலும் நிலைபெற்றிருப்பது. (உ௫௮)

மறையவன் கணுமன் னுதென் புலத்
திறையவன் கணுமிகல் பற்றின் றரோ
வறிவர் தேர்குறின் யன் செய்தன
முறையதா குமா ன்முதன் மைப்பாலதே,

(இ—ள்) மறையவன்கண் பற்றும்—பிராமணச்சிறுவராகிய மார்க்கண்டேயமுனீந்திரரிடத்தில் விருப்பும். மன்னுதென்புலத்து இறையவன்கண் இகலும்—நிலைபெற்ற தெற்குத்திக்குக்கதிபனாகிய யமதன் மனிடத்தில்வெறுப்பும், இன்று (சிவபெருமானுக்கு) இல்லை, அறிவர்தேர்குறின்-பேரறிவுடையபெரியோர்கள் ஆராய்ந்துபார்க்குமிடத்து, ஐயன்செய்தன—சிவபெருமான் (அநுக்கிரக, நிக்கிரகமாக அண்டுச்) செய்தருளியசெய்கைகள், முதன்மை பாலது முறையது ஆகும்—முதன்மைத்தன்மையான நீதியின்பாற்பட்டனவாகும்.

அரோ, ஆல், ஏ—அசைகள். தேர்குறின், என்பதின், கு—சாரியை. உறு—துணைவினை. இகல் பற்று இன்று, என்பதும், செய்தனமுறையதுமுதன்மைப்பாலது, என்பதும், ஒருமைப் பன்மைமயக்கங்கள். மறையவன்கண் பற்றும், இறையவன்கண் இகலுமெனமாறிநிற்றலால் எதிர் நிரனிறைப்பொருள்கோள். மறையவன்கண் இகல்பற்றும், இறையவன்கண் இகல்பற்றும் இன்று எனப்பொருள்கோடலுமாம். கடவுளுக்கு விருப்புவெறுப்பின்மையாதலை, "வேண்டுதல் வேண்டாமையிலான்" என்னுந் தேவர் வாக்கானுமுணர்க.

மார்க்கண்டேயமுனீந்திரருக்கு முன்னமே பூரணாயுளைக் கொடாமையின் அவரிடத்துவிருப்பும், யமனை யிதற்குமுன் னெல்லாந் தணேடியாமவிதுபொழுது தண்டித்து மீளவுயிர் கொடுத்தருளலால் அவனிடத்து வெறுப்பு மின்மையாதல் தெள்ளிதென்க. பேரறிவாளர்க்கன்றி யஃதிலார்க்கிஃதெங்ஙனம் புலப்படுமென்பார், "அறிவர்தேர்குறின்" என்றும், முழுதற்கடவுளானவர் இருவர் வினைக்கு மீடாகஅநுக்கிரக நிக்கிரக யெனவீண்டுச் செய்தன வுத்தமநீதியென்பார், "ஐயன்செய்தன முறையதாகும் முதன்மைப்பாலது" என்றுங் கூறினார்.

பதினாறுவயசுக் கண்டத்தை விலக்கினோ மென்பதற்குச் சான்றாக சிரஇன் கட்பாதமூர்த்தியைக் கண்டபோது மவரையடர்த்துப் பாசமிவீசியது காலனென்னு மாணவ மலமேயாம்; தந்தைதாயர்கள் தம்புதல்வரைத் தண்டித்து

நல்வழிப்படுத்துமாறுபோல, முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானுமிவனது நானென்னுமாணவ மலத்தைப்போக்கியருளுமாறு உதைத்துத்தண்டித்தது மிவன் மேற்கொண்டகருணையே யாமென்பதேயிதனுண்மை. இதற்கு "நிக்கிரகங்கடானுநேசத்தாலீசன்செய்வதக்கிரமத்தாற் குற்றமடித்துத்தீர்த்தச்சப்பண்ணி-யிக்கிரமத்தினாலே யீண்டறமியற்றிடென்ப-வனுக்கிரமத்தினானுமி றைசெயலருளேயென்றும்" எனவருஞ் சிவஞானசித்தித்திருவிருத்தமே சாலவுஞ்சான்றாமாறுகாண்க. "எக்கிரமத்தினாலும்" என்றார், திரோபவித்தல் சங்கரித்தலுட்பட்டசெயல்களும் அருளேயென்பதுபோதர.

இஃது சூரபன்மன் முதலியபுதல்வர்களுக்கு மயக்கநீசமூமாற் கூறியவாறு. கலிக்கூற்றென்பினும்பொருந்தும். (உருக)

நின்றமைந்தனுநித்தன்மேனியை
யொன்றுமன்பினுன்னியேயணி
கன்றிகையெனுங்கடவுளாலயஞ்
சென்றுநாதன்றாள்சென்னிசேர்த்தினான்.

(இ—ள்) நின்றமைந்தனும்—(மரணத்து நின்றுந்தப்பி, சீவன்முத்தநிலையைப்பெற்றுக்கொண்டு) நின்ற மார்க்கண்டேயமுனீந்திரரும், நித்தன்மேனியை—சிவபெருமானது அருமைத்திருவுருவை, ஒன்றும் அன்பினால் உன்னி—பொருந்திய அன்பினால்தியானஞ்செய்து, மணிகன்றிகை எனும் கடவுள் ஆலயம்சென்று—மணிகர்ணிகையென்னும் சிவாலயத்தினுட்போய், நாதன்தாள்சென்னிசேர்த்தினான்—(அங்குக் கோவில்கொண்டெழுந்தருளியிருக்கின்ற) விசுவநாதஸ்வாமியினது திருவடிகளில் தலைவைத்து வணக்கம்செய்தனர்

ஏகாரம்—அசை, தேற்றமெனினுமாம். உம்மை—சிறப்பு—எனும்—இடைக்குறை. உன்னி, சென்று, சேர்த்தினனென்க. நித்தன்—பிறப்பிறப்பற்றவன். ஒன்றும் அன்பு—நீங்காதபக்தி. தண்டாகாரமாகவீழ்ந்து பாதங்களில் தலைவைத்துவணங்கினனென்பார், "நாதன்றாள் சென்னிசேர்த்தினான்" என்றார்.

புந்திநைந்திடப்புலம்பிநாட்டநீர்
சிந்துமவேலையிற்றிளைத்துச்சாம்பிய
தந்தையன்னைதாடழுவித்தாழ்ந்திடா
முந்துமாகுலமுழுதுமாற்றினான்.

(இ—ள்) புந்திநைந்திடபுலம்பி—(தங்கள் புதல்வனுக்குயாது நேரிட்டதோவென்னுங்கவலையினால்) மனம்தளர அழுது, நாட்டம்சிந்தும் நீர் வேலையில்திளைத்து—கண்களினின்றும் சொரிகின்ற நீராகியகடலில் மூழ்கி, சாம்

பிய—வாட்டமடைந்துகொண்டிருந்த, தந்தை அன்னை—(தமனது) தந்தை தாயருடைய, தாள் தழுவி தாழ்ந்திடா—பாதங்களை (மார்க்கண்டேயமுனீந்திரர் சென்று) கட்டியணைத்து நமஸ்கரித்து, முந்தும் ஆகுலம் முழுதும் மாற்றி ஞன்—(அவர்கட்டு) முன்னரிருந்தகவலைமுழுதையும் தீர்த்தனர் எ—று)

தழ்ந்திடா—ஆகாரவீற்றுடன்பாட்டெச்சம். தந்தையன்னை உம்மைத் தொகை. புந்தி—புத்தி என்னும் வடமொழிவிகாரம். "புந்திநைந்திடபுலம்பி நாட்டநீர் சிந்துய்வேலையில் திளைத்துசாம்பி அ தந்தை அன்னை தாள் தழு வி" எனப்பிரித்து மார்க்கண்டேயருக்கேற்றி, மனங்கசிய ஆரவாரப்பட்டு ஆனந்தக்கண்ணீரில்படிந்து ஒடுக்கமாய் அந்தத்தந்தைதாயருடைய பாதங்க ளையடைந்து, எனப்பொருள்கோடலுமொன்று. புலம்பல்—ஆரவாரம்—சந்தே ஷம். சாம்புதல்—ஒடுங்குதல்—புலனடங்கல். மேலே, "முன்னர், வருத்தமுநீ ங்கிச்சிந்தைமகிழ்ந்தனர் பயந்தபேலோர்" எனக்கூறி, ஈண்டிங்ஙனங்கூறுதல் வழுவாகாதோவெனின், அப்பொழுது புத்திரன்கூறியதிடவசனத்தினலொ ருவாறு மனமகிழ்ந்து, பின்பு, அவன்மேற்கொண்ட அன்பினலும், மரணத் தைக்கடத்தலருமையாலும், தந்தைதாயர் விசனப்படுதலியல் பாகுமாகலின் வழுவாகாதென்க. (உகக)

அங்கண்சில்பகலமர்ந்து நீங்கியே
செங்கணேறுடைச்செல்வன் மல்கியே
தங்குநல்லறந் தானம்யாவையும்
பொங்குகாதலிற்போற்றன்மேயினன்.

(இ-ள்) அங்கண்சில்பகல் அமர்ந்து—(மார்க்கண்டேயமுனீந்திரர், தந் தைதாயரோடுங்கூடி) அந்தக்காசியம்பதியில் சிலநாளிருந்து, நீங்கி—(பின்பு) அப்பதியையுந் தந்தைதாயரையும்) விட்டகன்று, செம்கண்எறு உடைசெல் வன்—சிவந்தகண்களையுடைய இஷபாரூடராகிய சிவபெருமான், மல்கிதங்குகி ன்ற—பூரணமாகிவீற்றிருக்கின்ற, நல்தானம்யாவையும்—திவ்வியதலங்களையெ ல்லாம், பொங்குகாதலின் போற்றல் மேயினன்—மிக்கபேரன்பினல் வணக்க ஞ்செய்வாராயினர். (எ—று)

ஏகாரங்கள்—அசை. தானத்தைப் போற்றுவாரென்ருரேனும், தானத் துள்ள கடவுளைப்போற்றுவாரென்பது கருத்தாகக்கொள்க. விட்டுணுவாகிய இஷபமென்பார், "செங்கணேறு" என்றும், வணங்குவோர்க்குத் தருமார்த் தகாமமோட்சம் பயக்குந்தானமென்பார், "நற்றானம்" என்றும், பேரன்பில் லாதவுணக்கத்தாற் பயனில்லையென்பார், "பொங்குகாதலிற் போற்றன்மே யினன்" என்றுங் கூறினர். உகஉ)

அத்தனாலயமனைத்தும்வைகலும்
பத்தியோடுமுன்பரவியேமிகுந்
சுத்தனாகியேதொலைவிலாருயிர்
முத்தியெய்தினன்முழுதுணர்ந்துளான்.

(இ-ள்) முழுதும் உணர்ந்துளான்—எல்லாவற்றையுமொருங்கறிந்துள்ள மார்க்கண்டேயமுனிந்திரர், வைகலும்—நாள்தோறும் அத்தன் ஆலயம் அனைத்தும் பத்தியோடுமுன் பரவி—சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோவில்களையெல்லாம் அன்போடுசெந்நிதானத்து நின்று வணங்கி, மிகும்சுத்தன் ஆகி—மிக்கசித்த சுத்தியையுடையவராய், தொலைவு இல் ஆர் உயிர் முத்தி எய்தினன்—அழிவற்றதும் (கிடைத்தற்கு) அருமையானதுமான சீவன்முத்தியைப்பெற்றனர். (எ—று)

ஏகாரங்கள்—அசை. மகரம்—தொகுத்தல், முன்—இடமுன். வைகலும். என்பதன் உம்மை—தொறுப்பொருளது. அத்தன்—அகிலகாரணமானவன், மெய்ப்பொருளாயுள்ளவன். முக்தி என்னும் வடமொழி முத்தியென்றாயிற்று, முக்தி—(கருமங்களினின்று) விடுபடுவது.

சீவன் முத்தியாவது, சிவபெருமானது திருவருட்பார்வையினால், செனனமொன்றிலே உலகப்பற்றும் வினைத்தொடர்புமற்று சிவானந்தத்தையனுபவித்துக்கொண்டிருத்தல். இதனை, "பற்றற்றகண்ணே பிறப்பறுக்கும்" என்பதனாலும், "சித்தாந்தத்தேசிவன்றன் திருக்கடைக்கண் சேர்த்திச்செனனமொன்றிலே சீவன் முத்தராக—வைத்தாண்டு மலங்கழுவிஞானவாரி மடுத்தானந்தப்பாதமலர்க்கீழ்வைப்பன்" எனுபதனாலுமுணர்க. (உ௬௯)

விண்ணின்பாலுளன்விரும்பிப்போற்றுவோர்
கண்ணின்பாலுளன்கருத்தின்பாலுளன்
மண்ணின்பாலுளன்மற்றவன்செய
லெண்ணின்பாலதோவிசையின்பாலதோ.

(இ-ள்) விண்ணின்பால் உளன்—(சீவன் முத்தரான மார்க்கண்டேய முனிந்திரர்) வானுலகத்திலும் இருப்பர், விரும்பிப்போற்றுவோர், (தம்மை) விரும்பித்துதிக்கின்றவர்களுடைய, கண்ணின்பால் உளன் கருத்தின்பால் உளன்—கட்புலனுக்குந்தோற்றுவர் மனத்திற்குந்தோற்றுவர், மண்ணின்பால் உளன்—பூவுலகத்திலும் இருப்பர், அவன் செயல்—அவருடைய திருவருட்பிரசாதச்செய்கையானது, எண்ணின்பாலதோ இசையின்பாலதோ—நினைவின்கண் அடங்குமோ சொல்லின்கண் அடங்குமோ. (அடங்காதென்றபடி) எ-று

மற்று—அசை. ஓகாரங்கள்—எதிர்மறை. "எண்ணின்பாலதோ இசையின்பாலதோ" என்பதற்கு அளக்கமுடியுமோ புகழமுடியுமோ வெனப்பொருள்கூறுவாருமுளர். மனப்வாக்குக்கெட்டாமலும் நிற்பரென்பார், "எண்ணின் பாலதோ இசையின்பாலதோ" என்றார். இதனால், அவர் எங்கும் வியாபகமாக இருப்பரென்பது பெற்றாம். (உகச)

முண்டகத்திடைமுளைத்தவன்றுயில்
கொண்டவெல்லைபக்குணிக்கிலாவதெ
ணண்டநல்கியோன்றுஞ்சவாங்கவன்
கண்டகற்பமோகணக்கிலாதவே.

(இ—ள்) முண்டகத்து இடைமுளைத்தவன் துயில்கொண்ட (விட்டுணுமூர்த்தியினது நாபிக்கமலத்துத்தோன்றியபிரமா நித்திரைசெய்த, எல்லையை குணிக்கில் ஆவது என்—காலத்தை அளவைசெய்வதிற் பயனென்னை, அண்டம் நல்கியோன்—அண்டங்களைபடைத்தவராகியபிரமா, துஞ்ச—இறக்க, அவன் கண்டகற்பமோ—அந்த மார்க்கண்டேயமுனீந்திரர் (தாம் இறவாதுநின்று) கண்டுகழித்தகற்பகாலங்களோ, கண்கு இலாத—அளவிறந்தவைகள். (எ—று)

ஏகாரம்—தேற்றம். ஓகாரம்—உயர்வுசிறப்போடுதெரிநிலையும், ஆங்கு—அசை. இலாத—முற்று. துஞ்சல்—நித்திரைசெய்தல், மங்கலவழக்கால், இறத்தலைத்துஞ்சலென்றார். கற்பம்—பிரமன் ஆயுள், பிரமனுள். எல்லை—நாளையும், கற்பம்—ஆயுளையு முணர்த்தின. இந்த மார்க்கண்டேயமுனீந்திரர் அளவிறந்த பிரமர்கற்பகளைக்கண்டு கழித்தனரென்பது கருத்து.

எழுபத்தொருசதுர்யுகங்கொண்டது ஓர் மனுவந்தரம், பதினான்கு மனுவந்தரங்கொண்டது ஓர் கற்பம், அக்கற்பம் பிரமனுக்கு ஓர்நாளாகும், அந்நாள் ஆயிரங்கொண்டது பிரமனுக்கு ஓர் வருடமாகும், அவ்வருடம் நூறு கொண்டது ஓர்பிரமன் ஆயுளாகும், ஓர்பிரமன் ஆயுள்கொண்டது விட்டுணுவுக்கு ஓர்நாளாகும் என்க இதனை, "முறையே நடக்குஞ் சதுரயுகமெழுபத்தொன்று முடிந்தொழிய—னறையுமனுவந்தரமாகுமது தான் பதினான்ககன்றொழிதல்-குறைவில்கற்பமெனப்படுமாற் கற்பங்களிர்நாண்மலர்ப்பொருட்டி—னுறையுமுகநான்குடைய மறையொருவன்றனக்கோர் பகலாமால்" எனவும், 'அதுதானோராயிரங்கடந்தாலன்னோன்றனக்கோர் வருடமாம்." எனவும், "மாயோன்பகலிலோர் மறையோன்மாய்வான்," எனவும் வரும் வாயுசங்கிதைச்செய்யுட்களானு முணர்க. தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறென்னுமலங்காரம். (உகரு)

அன்னவற் றலைக்கண்செய் திடுந்
தென்னவன் னுயிர்சிதைந் துபோதலாற்
பன்னகத் திறைபரித் தபார்மிசை
மன்னுபல் லுயிர்வளர்ந் துமல்கிற்றே.

(இ-ள்) அன்னவன் தனை—அத்தகைமையுடையராகிய மார்க்கண்டேய முனீந்திரரை, அலக்கண்செய்திடும்—துன்பப்படுத்திய, தென்னவன் உயிர் சிதைந்துபோதலால்—தென்புலத்திற் கதிபனாயமராசன் உயிர் நீங்கிப்போனமையினால், பன்னகத்து இறைபரித்தபார் மிசைமன்னுபல் உயிர்—சர்ப்பராசனாகிய ஆதிசேடன் சுமக்கின்ற நிலவுலகத்துப்பொருந்தும் பலவகைத்தாய சீவவர்க்கங்கள், வளர்ந்துமல்கிற்று—அதிகரித்து நிரம்பியது

ஏகாரம்—அசை. தென்னவ ன்னுயிர்" என்பத னகரம்விரித்தல்விகாரம், "உயிர் மல்கிற்று" என்றது சாதியொருமை. போதலால்வளர்ந்து, எனவியையும். பந்நகம், பாதத்தாற்செல்லாதது. பத் ந கம்—பத்—பாதம். ந—இன்மை. கம்—ஊர்தல். (உ௬௬)

முடிவின்றாமுயிர் முற்றும் பற்பகல்
படிவின்றாகிமலியும் பான்மையாற்
படியின்மங்கையும் பரம்பொறாதுமா
லடியின்வீழ்ந்து தன்னயர்வு கூறினாள்.

(இ-ள்) முடிவு இன்று ஆம் உயிர்முற்றும்—அளவில்லாதனவாகிய சீவவர்க்கங்கள் முழுதும், பல்பகல்—அநேககாலம், மடிவு இன்று ஆகி—இறத்தலில்லாமல், மலியும்பான்மையால்—விருத்தியாய்க்கொண்டிருக்குந் தன்மையினால், படி இன்மங்கையும்—பூமிதேவியும், பரம்பொறாது—பாரத்தைச்சுமக்கமுடியாது, மால் அடியின்வீழ்ந்து—(தன் கணவராகிய) விட்டுணுமூர்த்தியினது பாதங்களில் விழுந்துவணங்கி, தன் அயர்வு கூறினாள்—தனது வருத்தத்தை முறையிட்டனள். (எ—று)

ஏகாரம்—அசை. படி இன்மங்கை, இன்—அல்வழிச்சாரியை. பான்மையால் பொறாதுகூறினாள் எனமுடிக்க. தனக்குக்கணவரும் காத்தற்றொழிற்குரியவருமாகலின், பூமிதேவி திருமாலிடத்தில் முறையிட்டனள் என்க. இவ்வாறு, மகாபாரதத்திலும், "தானவராகிமுன்னர்த் தனித் தனியிறந்தோர் யாரு—மானவராகியிம்மை வந்தனரிம்பரென்றே—தானவர் பொறைபொறாது தாரதலமென்னுஞ்செங்கண்—மானவர்க்கருளலோடு மாலுமக்குறையைநேர்ந்தான்" எனவருதல்காண்க. (உ௬௭)

கொண்டல்வண்ணனுங் குலிசபாணியும்
புண்டரீகமேற் பொலிந்தபோதனு

மண்டர்யாவருமணுகியாலமார்
கண்டன்மேவுறுங்கயிலைமேயினர்.

(இ-ள்) கொண்டல் வண்ணனும்-காளமேகம்போன்ற நிறத்தையுடையராகிய விட்டுணுமூர்த்தியும், குலிசபாணியும்-வச்சிரப்படையைப் பிடித்தகரத்தையுடையனாகிய இந்திரனும், புண்டரீகமேல்பொலிந்தபோதனும்-தாமரைபபூவின்கண் வசிக்கின்ற பிரமாவும், அண்டர்யாவரும்—(மற்றுந்) தேவர்களனைவரும், அணுகி-ஒருங்குகூடி, ஆலம் ஆர் கண்டன்மேவுறும்-நஞ்சுதங்கிய ஸ்ரீகண்டத்தையுடையராகிய சிவபெருமான்வீற்றிருக்கின்ற, கயிலைமேயினர்-திருககயிலாசகிரியை யடைந்தார்கள்      (எ-று)

கொண்டல்—(நீரைக்) கொள்ளுதல், அது முகிலுக்கு தொழிலாகு பெயர். குலிசம்—வச்சிரம்—பாணி—கை. அது இந்திரனுக்கு வேற்றுமைத்தொகைப்புறத்துப பிறந்த அன்மொழித்தொகை. போதன்—அறிவுடையவன்—அண்டர்—ஆகாயத்திருப்பவர். "ஆலமார்கண்டன்" என்றார், ஆபத்துக்காலத்தில் அடைக்கலம்புக்கோரைத்தப்பாது ரக்ஷிக்கும் கருணைவள்ளலென்பது போதர இது கருத்துடையடையென்னுமலங்காரம்.      (உகஅ)

காவியம்மலர்கடுத்தகந்தரந்
தேவுபொற்பதஞ்சென்னிசேர்த்தியே
தாவில்பங்கயச்சதுர்முகத்தனும்
பூவைவண்ணனும்போற்றன்மேயினார்.

(இ-ள்) தா இல். பங்கயம் சதுர்முகத்தனும்-குற்றமில்லாத தாமரைபபூவில்வசிக்கும் நான்கு முகங்களையுடைய பிரமாவும், பூவைவண்ணனும்-காயாம் பூவை நிகர்த்த நிறத்தையுடைய விட்டுணுமூர்த்தியும், அம்காவிமலர்கடுத்த-அழகிய கருங்குவளைப் பூவையொத்த, கந்தரம் தேவு பொன்பதம் சென்னி சேர்த்தி-ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானது பொலிந்த திருவடிகளில் (தங்கள்) தலையைவைத்து வணங்கி, போற்றல் மேயினார்-துதிசெய்வாராயினர்.      (எ-று)

ஏகாரம்—அசை. கடுத்த—உவமவுருபு. பூவை—ஆகுபெயர். கந்தரம்—தலையைத்தரிப்பது, கம்—தலை, தரம்—தரிப்பது.      (உகக)

நீலகண்டனுமிமலன்முன்னரே
சாலுமன்பொடுந்தாழ்ந்துபோற்றலு
மாலைநோக்கிநீர்வந்ததென்னென
வேணுமாற்றினனிதனைக்கூறுவான்.

(இ-ள்) நீலகண்டன் ஆம் நிமலன் முன்னர்-திருநீலகண்டரான சிவபெருமானது சந்நிதானத்தில், சாலும் அன்பொடு தாழ்ந்து போற்றலும்-அளவிறந்த பேரன்போடுவணங்கித்துதிசெய்யவும், மாலை நோக்கி நீர் வந்தது என் என-(அச்சிவபெருமான்) விட்டுணுமூர்த்தியைப் பார்த்து நீங்கள் (இங்கு) வந்தது என்னகாரணமென்று வினவியருள, ஏலும் ஆற்றினால் இதனைகூறுவான்-(அப்பொழுது விட்டுணுமூர்த்தி) பொருந்தும்படியாக இந்தவிடையைச்சொல்வாராயினர். (எ-று)

அது மேற்காண்க. ஏகாரம்-அசை. நீர்-பிரமாதிதேவர்களைபுறகப்படுத்திய பன்மை. முதற்றேவர் கலானும் காத்தற்றொழிற்குரியரா கலானும் மாலை நோக்கினரென்க. (உஎ)

வேறு.

பங்கயமிசைவருபகவனாதியா
னிங்குளதலைவர்களெவருமித்துணைத்
தங்கடமரசியறவாதுபோற்றினா
ரங்கவர்தமக்குநீயளித்தவண்ணமே.

(இ-ள்) பங்கயம் மிசைவருபகவன் ஆதி ஆ- எமது) நாபிக்கமலத்தின்கண்தோன்றிய பிரமன்முதலாக, இங்கு உள தலைவர்கள் எவரும்-இவ்வுலகத்தின்கணுள்ள அதிகாரதேவர்களனைவரும், நீ அங்கு அவர் தமக்கு அளித்தவண்ணம்-தேவரீர் அக்காலத்து அவர்களுக்குக்கொடுத்தருளியபடி, இத்துணை-இந்நாள்வரைக்கும், தங்கள் தம் அரசு இயல் தவாது போற்றினார்-தங்கள் தங்களுடைய அரசாட்சிமுறைகளைத்தவறாது பாதுகாத்துக்கொண்டுவந்தார்கள்.

ஏகாரம்-அசை. ஆக-ஆ, என ஈறுகெட்டுநின்றது. பகம்-அவாவின்மை, ஈச்சுரத்தன்மை, கீர்த்தி, செல்வம், ஞானம், வீரியம் என்னு மறுகுணம். இவ்வறுகுணங்களையுடையவன் பகவன்.

இதுமுதற் பதினைந்துசெய்யுட்கள்-பெரும்பன்மை மூன்றுஞ்சீர்மாச்சீரும், ஒழிந்த மூன்றுசீர்களும் விளச்சீர்களுமாகிவந்த அளவடி நான்குகொண்டகலிவிருத்தங்கள். (உஅக)

ஐயநீயெனக்குமுன்னளித்தகாப்பினைத்
துய்யநின்றிருவருடுணையதாகவே
வைகலும்புரிகுவன்வழாதுமற்றதற்
கெய்தியதோர்குறையிசைப்பன்கேட்டிநீ.

(இ—ள்) ஐய—சுவாமி! நீ முன் எனக்கு அளித்தகாப்பினை—தேவரீர் முற்காலத்தில் அடியேனுக்குக்கொடுத்தருளிய காத்தற்றொழிலை, நின் தூய்ய திரு அருள் துணை ஆக— நான்) தமது சுத்தமானதிருவருளைத் துணையாகக் கொண்டு, வைகலும் வழாதுபுரிகுவன்—தினந்தோறும் தருமமற்செய்வேன், அதற்கு ஓர்குறை எய்திபது-அந்தக்காத்தற்றொழிலுக்கு (இப்பொழுது) ஒரு குறைவுசம்பவித்தது, இசைப்பன் நீ கேட்டி—(அக்குறைவைச்) சொல்லுவேன் தேவரீர்கேட்டருள்வீராக. (எ—று)

ஏ, மற்று—அசைகள். அது—பகுதிப்பொருள்விகுதி. புரிகுவன்—என்பதன், கு—சாரியை (உ௭உ)

நின்பெருந் திருவருணினைகிலாமையாற்
றென்புலக்கோமகன்சிதைந்துபோயினன்
மன்பதைக்குலம்பிறவளர்ந்துமிக்கன
துன்பமுற்றனளவைசுமக்கும்பூமகள்.

(இ—ள்) நின்பெரும் திருவருள்நினைகிலாமையால்—(மார்க்கண்டேய ராகியமெய்யடியாரிடத்துவைத்த) தமது (கழிபெருஞ் சுவையோடுறுதி பயக்கும்) பெருந்திருவருளைச் சிந்திக்காததன்மையினால், தென்புலம்கோமகன் சிதைந்துபோயினன்—தென்திசைக்கதிபனான யமதன்மன் இறந்துபோனான், மன்பதை குலம் பிறவளர்ந்து மிக்கன—(கொல்லுந்தொழிற்கொருவரின்மையால்) மக்கட்பரப்பாக்கிய கூட்டமும் ஏனையபிராணிகளும் விருத்தியாகியதிகரித்தன, அவைசுமக்கும் பூமகள் துன்பம் உற்றனள்—அவைகளைச்சுமக்கின்ற பூமிதேவி (பாரமதிகப்பட்டமையால்) வருத்தமடைந்தனள். (எ—று)

கோமகன்—இருபெயரொட்டுப்பண்புத்தொகை. "யா கா பிற பிறக்கு அசைமொழி" என்னும் நன்னூல்விதிப்படி, பிற—என்பதனை அசையாக்கினுமாம் அவன், தன்வினையால் தான்இறந்தானென்பதுபோதர "சிதைந்துபோயினன்" என்றார். அதுமேற்காண்க. (உ௭௩)

தன்புடையெவற்றையுந்தாங்குகின்றவ
டுன்புறவுயிரெலாந்தோன்றித்தோன்றியே
பின்பிறவாமலேபெருகிவைகுமே
லென்படுமென்படுமெனதுகாவலே.

(இ—ள்) தன்புடை எவற்றையும் தாங்குகின்றவள் துன்பு உற—தன்கண்வைத்து எல்லாப்பொருள்களையும் சுமக்கின்றவளாகிய பூமிதேவிவருத்தமடையும்படி, உயிர் எலாம்தோன்றி தோன்றி-சீவவர்க்கங்கள் முழுதும்பிறந்து பிறந்து,பின்பு—பின்னர், இறவாமல் பெருகிவைகும் எல்—இறந்துபோகாமல்

விருத்தியாகிக்கொண்டு நிலைத்திருக்குமேயென்றால், எனதுகாவல் என்படும் என்படும்—அடியேனது காத்தல்தொழில் யாதாய்முடியும் யாதாய்முடியும். (வருத்தமாய்முடியுமென்றபடி). (எ—று)

ஏகாரங்கள்—அசைகள். அடுக்குமுன்னையது மிகுதிப்பொருளினும், பின்னையது இரக்கத்தினும்வந்தன. படை-எழனுருபு. அழித்தல்தொழில் நடைபெறுதொழியின், காத்தல்தொழில் கடைபோகாதென்பார், எனதுகாவல் என்படும் என்படும்" என்றார். (உஎச)

இறுத்திடுமரசினுக்கெவருமில்லைநீ
செறுத்திடலந்தகன்செய்ததீமையைப்
பொறுத்தருளவன்றனைப்புரிதியீங்கிது
மறுத்திடலென்றடிவணங்கிவேண்டவே.

(இ—ள்) இறுத்திடும் அரசினிக்கு எவரும் இல்லை—(சீவவர்க்கங்களை க்) கொல்லுகின்ற அதிகாரத்திற்கு (வேறு) யாருமில்லை, நீ செறுத்திடல்—தேவரீர்கோபங்கொள்ளாமல், அந்தகன் செய்ததீமையைபொறுத்தருள்—யமன் செய்தகுற்றத்தை மன்னித்தருளி. அவன் தனைபுரிதி—அவனையெழுப்பித்தந்தருளும், ஈங்கு இது மறுத்திடல்—இங்ஙனம் (அடியேன்வேண்டிய இவ்வேண்டுகோளை விலக்காதொழிக, என்று அடிவணங்கிவேண்ட—என்று (விட்டுணுமூர்த்தி, சிவபெருமானது) திருவடிகளில் வணங்கிக்குறையிரக்க.

ஏகாரம்—அசை. செறுத்திடல், பொறுத்தருள் என் பனமுற்றெச்சங்கள். அவன் தனை தீமையைபொறுத்தருள் புரிதி, எனமாற்றிபொருள்கொள்ளினும் பொருந்தும். (உஎரு)

அந்தகவெழுகெனவமலநாயகன்
முந்தருள்புரிதலுமுடிந்தகூற்றுவன்
வந்தனன்றொழுதனன்வணங்கித்தாள்பட
வுய்ந்தனனடியனென்றுணர்ந்துபோற்றினன்.

(இ—ள்) அமலன் நாயகன்—நிர்மலராகிய சிவபெருமான், அந்தகன் எழுக என முந்து அருள்புரிதலும்—யமனே (நீ உயிர்பெற்று) எழுந்திருக்கக் கடவையென்று (ஒருதிருவாக்கைக்கூறி) முதன்மையான திருவருளைப்பாலிக்கவும், முடிந்த கூற்றுவன்—(முன்பு) இறந்த யமதன்மன், வந்தனன் தொழுதனன்வணங்கி—(உயிர்பெற்றெழுந்து) வந்து கரங்களைக்குவித்து நமஸ்காரம்பண்ணி, அடியன்—அடியவனுகிய நான், தாள்பட உய்ந்தனன் என்று—(தேவரீரது) திருவடித்தாமரை படுதலால் தீவினையினின்றும் நீங்கி பேரின்பவாழ்வைப்பெற்றேனென்று சொல்லி, உணர்ந்துபோற்றினன்—களிப்படைந்து துதிசெய்தனன். (எ—று)

எழுகென—தொகுத்தல். வந்தனன், தொழுதனன்—முற்றெச்சம். தாள் படவணங்கி என இவைத்துப்பொருள் கோடலீண்டுச் சிறப்பின்று. வேண்ட, நாயகன் எழுகவென அருள் புரிதலும் என மேலைச் செய்யுளோடுகூட்டி முடிக்க. உணர்ந்துபோற்றினன் என்பதற்கு. தண்டித்தமையை யறிந்து (அச்சத்தோடு) துதித்தனனென்பினுமமையும். (உஎசு)

போற்றிடு தருமனைப் புராரி நோக்கியே
சாற்றிடுகின்றனன் றயங்கு கண்டிகை
நீற்றொடு புனைந்தெமை நினையு நீர்பாற்
கூற்றுவன் யானெனக் குறுகுவா யலே.

(இ—ள்) புரஅரி— முப்புரங்களை யழித்தவராகிய சிவபெருமான், போற்றிடு தருமனைநோக்கி சாற்றிடுகின்றனன்—(தம்மைத்) துதிசெய்கின்ற யமதன் மனைபார்த்துத்திருவாய் மலர்ந்தருளிச்செய்கின்றனர், தயங்குகண்டிகை நீற்றொடுபுனைந்து—பிரகாசிக்கின்றருத்திராக்க மாலிகையை விபூதியோடுந்தரித்து, எமைநினையும் நீரர்பால்—எம்மை அனவரதமும் தியானம்பண்ணுந்தன்மையினரான மெய்யடியார்களிடத்தில், யான்கூற்றுவன் என குறுகுவாய் அலே—யான்தான் யமனென்றுபோகாதொழிவாயாக. (எ—று)

ஏகாரம்—அசை. அலே—தொகுத்தல். புர அரி, புராரி, தீர்க்கசந்தி—அரி, அழிப்பவன். தருமன்—நீதிசெய்பவன், கண்டிகை—கண்டத்திலணியப்படுவது நானென்னு மகங்காரத்தை, மெய்யடியாரிடத்தில் காட்டாதே யென்றாரென்பதாம். (உஎஎ)

நண்ணருங்கதிபெறு நமது தொண்டரை
மண்ணுலகத்தவர் மனிதரே யென
வெண்ணலை யவர் தமையா மென்றெண்ணுதி
கண்ணுறி னன்னவர் கழலின் வீழ்தியால்.

(இ—ள்) நண் அரும் கதிபெறும் நமது தொண்டரை—அடைதற்கு அருமையாகும் வீடுபேற்றைப் பெறுதற்குரியவரான வெமது அடியார்களை, மண் உலகத்தவர் மனிதர் என எண்ணலை—பூவுலகத்தி லுள்ளவரென்றும் மானுடர்களென்றும் (அலட்சியமாக) நினையாதே, அவர் தமையாம் என்று எண்ணுதி—அந்த அடியவர்களைச் (சிவமாகிய) நாம் தானென்று சிந்தித்துக்கொள், கண் உறின் (உனது) கண்முன் சந்திப்பாராயின், அன்னவர் கழலின் வீழ்தி—அவர்களுடைய பாதங்களில் விழுந்து நமஸ்காரம் பண்ணக்கடவாய்.

ஆல்—அசை. நண்ணரும்—தொகுத்தல். ஏகாரம்—தேற்றந் தோடிழிவு சிறப்பு மனிதர்—மனுவின்வழிப்பட்டவர்.

சிவனடியார்களுக்கு, இடவிசேடமென்றும் சாதிவிசேடமென்று மில்லையென்று கூறினாரென்பதாம். இதனை, மேலே, "நாதன்றன்னையும்" என்னுஞ் செய்யுளிற் காண்க. (உஎஅ)

கண்ணியமனமொழிகாயமீறதா
வெண்ணியகருவிகளிடையதாகவே
புண்ணியமொடுபவம்புரியுமேனையர்
விண்ணொடுநிரயமேன்மேவச்செய்திநீ.

(இ—ள்) கண்ணியம் மனம் மொழி காயம் ஈறது ஆ—தகுதிபொருந்திய மனமும்வாக்கும் காயமும் முடிவாக, எண்ணியகருவிகள் இடையது ஆக—எண்ணப்பட்ட (இம்மூன்று) காரணங்களின்வழியதாக, புண்ணியம் ஒடு பவம் புரியும்—நல்வினையோடு தீவினையைச்செய்யும், ஏனையர்—(மெய்யடியாரையல்லாத) மற்றையோர்கள், விண் ஒடு நிரயம் மேல் மேவ—சொர்க்கத்தோடும் நரகத்தின்கண் சேரும்படி, நீ செய்தி—(யமனே) நீ செய்வாயாக. (எ—று)

ஏகாரம்—தேற்றம். ஒடுக்கள்—எண்ணுப்பொருளன. மேல்—ஏழனுருபு. ஆக—ஆவெனவீறுகெட்டது. கண்ணிய, எனநிறுத்தி கருதப்பட்டவெனப் பொருள்கொள்ளினுமாம். புண்ணியம் புரிபவர். விண்ணினும், பாவம்புரிவர் நிரயத்தினும்மேவ, எனவியைதலின், முறைநிரனிறைப்பொருள்கோள். மனம்வாக்குக்காயமாகிய மூன்றுமே, நல்வினை தீவினைகளுக்கேதுக்களென்க. ஈண்டுப்புண்ணியமென்றது, சொர்க்கம் முதலியமேலுலகங்களிற் சென்றிருந்துபோகங்களையனுபவிக்கும் பிறவிக்கேதுவான பொன்விலங்குபோலும் புண்ணியத்தையேயாம். (உஎகூ)

என்றருள்புரிந்துநின் படையொடேகென
மன்றமரடியிணைவணங்கிமுன்னரே
பொன்றியபகட்டொடும்பொருநர்தம்மொடுந்
தென்றிசைபுகுந்துதன்செயலின்மேவினன்.

(இ—ள்) என்று அருள்புரிந்து—என்று (இவ்வாறு) திருவாய்மலர்ந்தருளிச்செய்து, நின்படையொடு ஏகு என—உன்துபடைகளோடும் போகக்கடவையென்று (சிவபெருமான்) விடைகொடுத்தருள, மன்று அமர் அடியிணை வணங்கி—(யமதன் மன், சிவபெருமானது) கனகசபையின்கண் விரும்பித் (திருநடனம்புரிகின்ற) திருவடிகளின்கண் நமஸ்காரஞ்செய்துகொண்டு, முன்னர் பொன்றியபகட்டொடும்—முன்னமேயிறந்த எருமைக்கடாவோடும், பொருநர்தம்மொடும்—வீரர்களோடும், தென்திசைபுகுந்து தன் செயலில்மேவினன்—யமபுரத்தையடைந்து (சிவவர்க்கங்களைக்கோறலாகிய) தனது தொழிலிலிருந்தனன். (எ—று)

ஏகாரம்—தெரிநிலை, தென்திசை—ஆகுபெயர் இரட்டுறமொழிதலால் படை—சைனியமும், ஆயுதமும். பொருநர்—போர்புரிபவர். (உ௮0)

சித்தசற்புரிதருசெங்கண்மான்முதன்
மெய்த்திடுகடவுளர்முனிவர்மும்முறை
நித்தனைவணங்கினர்கயிலைநீங்கினர்
தத்தமதுறைபுளிற்சார்தன்மேயினர்.

(இ—ள்) சித்தசன் புரி தருசெம்கண்மால் முதல்—மன்மதனைப்பெற்ற சிவந்தகண்களையுடைய விட்டுணுமூர்த்திமுதலாக, மெய்த்திடுகடவுளர்—குூரங்கொண்டுநிற்கின்றதேவர்களும், முனிவர்—இருடிகளும், நித்தனைமும் முறைவணங்கினர்—சிவபெருமானை மூன்றுமுறை நமஸ்காரஞ்செய்துகொண்டு, கயிலைநீங்கினர்—கயிலாசகிரியைவிட்டகன்றுசென்று, தம் தமது உறையுளில் சார்தல்மேயினர்—தங்கள் தங்களுடைய வாசஸ் தானங்களின்கண் வீற்றிருந்தார்கள். (எ—று)

தத்தம்—வலித்தல் விகாரம். வணங்கினர், நீங்கினர்—முற்றெச்சங்கள் சித்தசன்—சித்தத்திற் பிறந்தவன் கடவுளர்—மேலானவர். முனிவர்—சனனத்தைவெறுப்பவர். (உ௮௧)

கொன்னவிலடுபடைக்கூற்றன்பண்டுபோ
லின்னமும்விளைகுவதென்கொலோவென
மன்னருள்பெற்றமார்க்கண்டன்மாக்கதை
பன்னினர்முன்னமுமடர்தற்கஞ்சுமால்.

(இ—ள் கொன் நவில்—(கண்டோர்க்கு) அச்சத்தைச்செய்யும், அடுபடை கூற்றன்—கொல்லுகின்ற (சூலம் முதலான) படைக்கலங்களையுடைய யமதன்மன் பண்டுபோல்—முன்போல, இன்னமும் விளைகுவது என்கொலோ எனு—இனிமேலும் (தனக்குச்) சமபவிக்குந்தீமையாதோவென்று நினைத்து, மன் அருள்பெற்ற—(சிரஞ்சீவித்துவமான) நிலைபெற்ற திருவருளைப் பெற்ற, மார்க்கண்டன்மாகதைபன்னினர் முன்னமும—மார்க்கண்டேயமுனிந்திரருடைய மகிமையான சரித்திரத்தைச்சொல்லுகின்றவர்களுடைய முன்னிலையிற்றானும், அடர்தற்கு அஞ்சும—போவதற்கு அச்சமடைவான். (எ—று)

ஆல்—அசை. கொல்—ஐயம்—ஓகாரம்—அச்சம். அடுபடை—வினைத்தொகை. விளைகுவது—என்பதிர், கு—சாரியை. கொன்னவில்படை அடுபடை எனத்தனித் தனியியையும். அஞ்சும்—செய்யுமென்னும் முற்று. மன் அருள்—என்பதற்குத் தலைவரான சிவபெருமானது திருவருளெனப்பொருள் கொள்ளினும்பொருந்தும். (உ௮௩)

ஆதலிற்குச்சகனருந்தவத்திலோர்
மாதுயிரளித்தனன்மால்களிற்றினைக்
காதுகைநீக்கியொண்கடவுளாக்கியே
மேதகுவிண்ணிடைமேவச்செய்தனன்.

(இ-ள்) ஆதலின்—(பிள்ளைகாள்! சரித்திரமிவ்வாறு) ஆகவே—குச்சகன்—குச்சகமுனிவர், அரும்தவத்தில் ஓர் மாது உயிர் அளித்தனன்—(செய்வதற்கு) அருமையான தவப்பயனால் (விருத்தையென்னும்) ஒரு பெண்ணினது சீவனையிரட்சித்தனா (அதுமட்டோ) மால்களிற்றினை—(தருமதத்தனென்னும் வைசியனென்பவனினவதாரமாகிய) மதமயக்கையுடைய யானையை, காதுகை நீக்கி—கொல்லுதலாகிய தொழிலைமாற்றி, ஒண்கடவுள் ஆக்கி—சிறப்புற்றதேவனாகச்செய்து, மேதகுவிண்ணிடைமேவ செய்தனன்—மேன்மைதக்கசொர்க்க நகரத்தின் கணடையும்படிசெய்துவைத்தனர். (ஏ-று)

ஏகாரம்—அசை. தவம்—ஆகுபெயர். காதுகை என்பதன்கை—தொழிற்பெயர் விகுதி. காதுகை நீக்கல், தன்னையுமேனைய வுயிர்களையுங்கொல்லாதபடிசெய்தல். (உஅரு)

உதவியமிருககண்டேயன்மாலயன்
முதலவர்புகழ்தருமுதன்மைபெற்றனன்
விதிமுறையவனருள்மிருகண்டொப்பிலோர்
புதல்வனைப்பெற்றனன்புரிந்தநோன்மையால்.

(இ-ள்) உதவியமிருககண்டேயன்—(அந்தக்குச்சகமுனிவர்) பெற்ற (புதல்வரான) மிருககண்டேயமுனிவர், (புரிந்தநோன்மையால்,—(தாம்) செய்த தவப்பயனால், மால் அயன்முதலவர் புகழ்தரும் முதன்மைபெற்றனன்—அரி பிரமாதிதேவர்கள் பாராட்டுகின்றமேன்மைத் தன்மையைப்பெற்றனர் அவன்—அந்தமிருககண்டேயமுனிவர், விதிமுறை அருள் மிருகண்டு—சாஸ்திரமுறைப்படிபெற்ற (புதல்வரான) மிருகண்டுமுனிவர், புரிந்தநோன்மையால்—(தாம்) செய்ததவப்பயனால், ஒப்பு இல் ஓர் புதல்வனைப்பெற்றனன்—ஒப்பில்லாத (மார்க்கண்டேயரென்னும்) ஒரு புத்திரரைப்பெற்றனர். (ஏ-று)

நோன்மை—ஆகுபெயர்—நோன்மையால் என்பதுமேலுங்கூட்டப்பட்டது. "விதிமுறை" புரிந்தநோன்மை எனக்கூட்டிப்பொருள் கொள்ளினும் பொருந்தும். அயன்—விட்டுணுவிடத்திற் பிறந்தவன். (உஅசு)

அப்பெருந்திருமகனுற்றநோன்பினும்
றப்பரும்விதியினைத்தனாந்துகற்றுவன்

றுப்பினை யகற்றியே தொலைவுகண் டேபின்
னெப்பொழு தத்தினு மிறப்பின்றா யினன்.

இ-ள்) அ பெருந்திருமகன்—அந்தப்பெருமை யமைந்ததிருக் குமாரராகிய மார்க்கண்டேயமுனீந்திரர், ஆற்றும் நோன்பினால்—(தாம்) செய்யும் (சிவபூசையாகிய) தவப்பயனினால், தப்பு அரும் விதியினை தணந்து—விலக்க அருமையான ஊழ்வினையைக்கடந்து, கூற்றுவன் துப்பினை அகற்றி—யமனுடைய வலிமையைக்கெடுத்து, தொலைவுகண்டு—(அவனை) இறக்கச்செய்து, பின்—பின்பு, எப்பொழுதத்தினும் இறப்பு இன்று ஆயினன்—எந்தக்காலத்திலும் மரணமில்லாதவராயிருந்தனர். (எ—று)

ஏகாரம்—அசை. நோன்பு—ஆகுபெயர். அத்து—சாரியை. எப்பொழுதினுமிறப்பின்றாதல்—அமரத்வம். அஃது சீவன்முத்தி. (உஅ௬)

மார்க்கண்டேயப்படல மூலமுமுரையும்.
முற்றுப்பெற்றன.
மார்க்கண்டேயமுனிவர் திருவடிவாழ்க.



